லேவ் தல்ஸ்தோய்

# கஸாக்குகள்

காகேஷியக் குறுநாவல்



ஓவியர்: எவ்கேனி லன்ஸேரே



ராதுகா பதிப்பகம்
மாஸ்கோ



விற்பனையாளர்கள்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்
• சென்னை

மொழிபெயர்ப்பாளர்: நா. தர்மராஜன், எம். ஏ.
வடிவமைப்பாளர்: எ. பலிக்காஷின்

**Л. Н. ТОЛСТОЙ**
КАЗАКИ
*На тамильском языке*

**L. TOLSTOY**
THE COSSACKS
*In Tamil*

© தமிழ் மொழிபெயர்ப்பு, ராதுகா பதிப்பகம், 1989
சோவியத் நாட்டில் அச்சிடப்பட்டது

ISBN 5-05-00230-0



# 1

மாஸ்கோவில் எங்கும் அமைதி நிலவியது. வண்டிச் சக்கரங்கள் பனி உறைந்த தெருவின் மீது உருண்டு செல்லும் ஓசை எப்பொழுதாவது கேட்கிறது. சன்னல்களில் இருள் கப்பியிருக்கிறது. தெரு விளக்குகள் ஏற்கெனவே அணைக்கப்பட்டு விட்டன. மாதாகோவில்களிலிருந்து மணிகளின் ஓசை காற்றிலே மிதந்து வந்து உறக்கத்தில் மூழ்கியிருக்கின்ற நகரத்தின் மீது பொங்கியெழுந்து விடியலை அறிவிக்கிறது.

தெருக்களில் ஆள் நடமாட்டம் இல்லை. எப்பொழுதாவது ஒரு பனிச்சறுக்கு வண்டி பனி கலந்த மணலைக் கிழித்துக்கொண்டு செல்கிறது. வண்டியோட்டி அடுத்த திருப்பத்தில் வண்டியை நிறுத்திப் பிரயாணிக்காகக் காத்திருக்கும் பொழுது தூங்கி விழுகிறான். ஒரு கிழவி மாதாகோவிலுக்குப் போகிறாள். அங்கே சிறிதும் பெரிதுமான மெழுகுவர்த்தி விளக்குகள் எரிந்து கொண்டிருக்கின்றன. புனிதமான தெய்வ வடிவங்களின் பொன்னிறப் பின்னணியில் அவற்றின் செந்நிற நிழல்கள் விழுகின்றன. நெடிய குளிர்கால இரவு மறைய ஆரம்பித்துவிட்டது. உழைக்கும் மக்கள் எழுந்து வேலைக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

ஆனால் பிரபுக்களுக்கு 'மாலைப் பொழுது' இன்னும் நீடிக்கிறது.

ஷெவல்யேயின் உணவு விடுதியில் ஒரு சன்னலின் மூடிய சட்டங்களின் கீழ்ப் பகுதியில் விளக்கின் வெளிச்சம் தெரிகிறது. வெளிவாயிலில் ஒரு கோச் வண்டியும் பனிச்

சறுக்கு வண்டியும் வாடகை வண்டிகளும் நெருக்கமாக நிறுத்தி வைக்கப்பட்டிருக்கின்றன. அஞ்சல் நிலையத்தைச் சேர்ந்த மூன்று குதிரைகள் பூட்டிய வண்டியும் அங்கே காத்திருக்கிறது. மேல்கோட்டினால் தன் உடலை நன்றாக மூடிய காவற்காரன் வீட்டின் மூலையில் ஒளிந்து கொள்ள முயல்பவனைப் போல உடலை ஒடுக்கி நின்று கொண்டிருக்கிறான்.

முன்னறையில் தூக்கக் கலக்கத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கின்ற வீட்டு வேலைக்காரன் "இன்னுமா பேச வேண்டும்? சீக்கிரமாக முடிக்கக் கூடாதா?" என்று மனத்துக்குள் சொல்லிக்கொள்கிறான். "நான் வேலைக்கு வரும்பொழுது எல்லாம் இப்படித்தான் தூங்காமல் உட்கார்ந்திருக்க வேண்டியிருக்கிறது!"

பக்கத்திலுள்ள சிறிய, பிரகாசமான அறையில் இரவு உணவு அருந்திக் கொண்டிருக்கின்ற மூன்று இளைஞர்களின் குரல்கள் கேட்கின்றன. காலி பாட்டில்கள், மதுக் கோப்பைகள் விருந்துணவின் மீதமிச்சங்கள் சிதறிக்கிடக்கின்ற மேசையின் எதிரில் அவர்கள் அமர்ந்திருக்கிறார்கள்.

அவர்களில் சிறு உருவமும் ஒல்லியான உடலும் கவர்ச்சியில்லாத தோற்றமும் கொண்ட ஒருவர் தன்னுடைய நண்பனை அன்பு ததும்புகின்ற, களைப்படைந்த கண்களால் பார்த்துக் கொண்டிருக்கிறார். அவருடைய நண்பன் நீண்ட பிரயாணத்தை மேற்கொள்ளப் போகிறான் என்பது வெளிப்படையாகத் தெரிந்தது.

இரண்டாவது நபர் உயரமானவர். அவர் சோபா மீது காலை நீட்டியிருந்தார்; தன்னுடைய கடிகாரத் திருகைச் சுற்றிக் கொண்டிருந்தார்.

மூன்றாவது நபர் புதிய மென்மயிர்க் கோட் அணிந்திருந்தான். அவன் அந்த அறைக்குள் முன்னும் பின்னும் நடந்து கொண்டிருந்தான். எப்பொழுதாவது நின்று தன்னுடைய மொத்தையான, சதைப் பிடிப்பான, நகங்களை கவனமாக நறுக்கியிருந்த விரல்களுக்கு நடுவில் ஒரு வாதுமைக் கொட்டையை வைத்து உடைத்துக் கொண்டிருந்தான். அவனுடைய உதடுகளில் புன்னகை தவழ்கிறது, அவனுடைய கண்கள் பளிச்சிடுகின்றன, அவனுடைய முகம் பிரகாசமாக இருக்கிறது. அவன் உணர்ச்சியுடன்

பேசிக் கொண்டிருக்கிறான், கைகளை அடிக்கடி ஆட்டு கிறான். சரியான வார்த்தைகள் கிடைக்கவில்லை; அவ னுடைய இதயத்தில் நிறைந்துள்ள சிந்தனைகளை வெளி யிடுவதற்கு அந்தச் சொற்கள் போதவில்லை என்று தோன் றுகிறது. அவன் தொடர்ச்சியாக சிரித்துக் கொண்டிருக் கிறான்.

''இப்போது நான் எல்லாவற்றையும் சொல்லத் தயார்!'' என்று பிரயாணி கூறுகிறான். ''நான் செய்தது தான் சரி என்று நியாயப்படுத்துவதற்கு நான் விரும்ப வில்லை. இந்த விவகாரத்தைப் பற்றிச் சாதாரண மக் கள் ஒரு மாதிரியாக நினைப்பதைப் போல நீயாவது நினைக்கமாட்டாய் என்று நம்புகிறேன். நான் அவளிடம் தவறாக நடந்துகொண்டேன் என்று நீ சொல்கிறாய் அல் லவா?'' என்று தன்னை நேசமாகப் பார்த்துக் கொண் டிருந்த ஒரு நண்பரை நோக்கிக் கேட்கிறான்.

''ஆம். நீ தவறு செய்துவிட்டாய்'' என்று அந்தக் குட்டையான, அழகான தோற்றம் இல்லாத மனிதர் பதிலளிக்கிறார். அவருடைய கண்கள் முன்னைக் காட் டிலும் அதிகமான களைப்பையும் நேசத்தையும் வெளி யிடுவதைப் போலத் தோன்றுகிறது.

''நீ ஏன் அப்படிச் சொல்கிறாய் என்பது எனக்குத் தெரியும்'' என்று அவன் தொடர்ந்தான். ''காதலிக்கப் படுவதிலுள்ள இன்பம் துல்லியமாகக் காதலிப்பதிலுள்ள இன்பத்தைப் போன்றதே, அந்த வாய்ப்பு மட்டும் ஒரு வருக்குக் கிடைக்குமானால் அந்த இன்பம் அவருடைய வாழ்க்கை முழுவதற்குமே போதும் என்று நீ நினைக் கிறாய்.''

''ஆம், அது போதும், நண்பனே! அது ஒரு அவசியம் என்பதைக் காட்டிலும் சற்று அதிகமானது'' என்று அந்தக் குட்டையான, அழகான தோற்றம் இல்லாத மனிதர் கண்களைச் சிமிட்டிக்கொண்டு கூறினார்.

''ஆனால் ஒரு நபர் அத்தகைய காதலுக்குத் திருப்பிக் காதலிக்க முடியாதிருப்பது ஏன்?'' என்று பிரயாணி சிந் தனையில் ஊறிய குரலில், தன்னுடைய நண்பரை அனு தாபத்துடன் பார்த்துக்கொண்டு கேட்டான். ''காதலிப் பதா? அது ஒரு நபருடைய சித்தத்தின் முடிவு அல்ல. இதற்கு மேல் என்னால் போக முடியவில்லையே என்

பதை நீ உணர்கின்ற பொழுது காதலிக்கப்படுவது துரதிர்ஷ்டம், துரதிர்ஷ்டம், ஓ! அட கடவுளே!'' அவன் திடீரென்று கையை வேகமாக ஆட்டினான். ''இவை எல்லாமே பகுத்தறிவுக்குப் பொருத்தமான முறையில் நடைபெறுமானால்—ஆனால் எல்லாமே ஏறுமாறாக. நாம் விரும்புவதைப் போலன்றி தான் தோன்றித் தனமாக அல்லவா நடக்கிறது. இந்தப் பெண்ணின் காதலை நான் கள்ளத்தனமாகப் பெற்றதாகத் தோன்றுகிறது. நீ கூட அப்படித்தானே நினைக்கிறாய். அதை மறுக்காதே, உன்னால் அப்படி நினைக்காமலிருக்க முடியாது. என்னுடைய வாழ்க்கையில் எத்தனையோ முட்டாள்தனமான, அருவருப்பான காரியங்களை நான் செய்திருக்கிறேன். ஆனால் இந்த ஒரு காரியத்தைப் பற்றி மட்டும் நான் வருத்தப்படவில்லை, என்னால் வருத்தப்பட முடியாது. இதை நீ நம்புவாயா? நான் ஆரம்பத்திலிருந்து கடைசி வரை என்னை ஏமாற்றவில்லை, அவளையும் ஏமாற்றவில்லை. ஒரு சமயத்தில் நான் கடைசியில் காதலிக்கப் போவதாக நினைத்தது உண்மையே; ஆனால் அது தவறு; அதற்கு நான் பொறுப்பல்ல என்பதை சீக்கிரமாகப் புரிந்துகொண்டேன். மனிதர்கள் இப்படிக் காதலிப்பதில்லை, இந்த இடத்தில் நிற்கவேண்டும் என்பதைப் புரிந்துகொண்டேன். ஆனால் அவள் மேலும் தொடர்ந்தாள். என்னுடைய இயலாமைக்கு என்னைக் குறை சொல்ல முடியுமா? அதற்கு மேல் நான் என்ன சொல்ல முடியும்?''

''சரி. எல்லாம் முடிந்துவிட்டதே!'' என்று அவனுடைய நண்பர் தூக்கத்தைத் தடுப்பதற்காகப் புகைத்தபடியே கூறினார். ''ஒன்று மட்டும் தெளிவாகிவிட்டது. நீ ஒருபோதும் காதலிக்கவில்லை. காதலின் அர்த்தம் உனக்குச் சிறிதளவு கூடத் தெரியாது.''

மென்மயிர்க் கோட் அணிந்திருந்த அந்த இளைஞன் மேலும் ஏதோ சொல்லத் துடித்தான், தன்னுடைய கைகளினால் தலையைப் பிடித்துக்கொண்டான். ஆனால் தன் மனத்தில் இருந்ததைச் சொல்லாமல் நிறுத்திக் கொண்டான்.

''ஆம்! நீ சொல்வது சரிதான்! நான் ஒருபோதும் காதலிக்கவில்லைதான். ஆனால் நான் காதலிக்க விரும்புகிறேன். அந்த விருப்பம் மற்ற எந்த விருப்பத்தைக்

காட்டிலும் முனைப்பாக இருக்கிறது! இன்னொன்று, அப்படிப்பட்ட காதல் சாத்தியமா என்ற கேள்வியைக் கேட்க விரும்புகிறேன். அதில் அறைகுறையான, அதிருப்திகரமான ஏதோ ஒன்று இருக்கிறது. சரி. இனி பேசுவதால் என்ன பயன்? என் வாழ்க்கை முழுவதுமே நான் சரியான பாதையில் நடக்கவில்லை, சரியான பாதையில் நடக்கவில்லை. நீ சொல்வதைப் போல இப்பொழுது எல்லாமே முடிந்துவிட்டது. எனக்கு ஒரு புதிய வாழ்க்கை பிறந்து கொண்டிருக்கிறது என்று தோன்றுகிறது.''

''நீ மீண்டும் சரியான பாதையில் நடக்கமாட்டாய்'' என்றார் சோபாவின் மீது படுத்துக்கொண்டு கடிகாரத் திருகைச் சுற்றிக் கொண்டிருந்த உயரமான மனிதர்; ஆனால் அவர் கூறியது அந்தப் பிரயாணியின் காதில் விழவில்லை.

''காகசசுக்குப் போவதை நினைக்கும் பொழுது எனக்கு ஒரே சமயத்தில் வருத்தமும் மகிழ்ச்சியும் ஏற்படுகிறது'' என்று அவன் தொடர்ந்து பேசினான். ''ஏன் வருத்தப்படுகிறேன்? காரணம் தெரியவில்லை.''

பிறகு அந்தப் பிரயாணி மற்ற விஷயங்களை ஒதுக்கித் தன்னைப்பற்றிப் பேச ஆரம்பித்தான். அது அவனுக்குச் சுவாரசியமாக இருந்ததைப் போல மற்றவர்களுக்குச் சுவாரசியமளிக்கவில்லை என்பதை அவன் கவனிக்கவில்லை. ஒரு மனிதனுடைய உடல் முழுவதும் ஆன்மிக பரவசம் ஏற்படுகின்ற தருணத்தில் அவனிடம் அதிகமான செருக்கு ஏற்படுவதைப் போல மற்ற சமயங்களில் ஒருபோதும் இருப்பதில்லை. அவனைப் போல மிகவும் அழகான், சுவாரசியமான பொருள் உலகத்திலேயே கிடையாது என்று அந்தத் தருணத்தில் அவனுக்குத் தோன்றுகிறது.

''திமீத்ரி அவர்களே! வண்டியோட்டி இனியும் காத்திருக்கமாட்டான்! குதிரைகள் பன்னிரண்டு மணிக்கே தயாராகிவிட்டன. இப்பொழுது மணி நான்கு ஆகிவிட்டது'' என்று அந்த நேரத்தில் அறைக்குள் வந்த இளம் சேவகன் கூறினான். அவன் ஆட்டுத் தோல் கோட் அணிந்து கம்பளித் துண்டினால் கழுத்தை மூடியிருந்தான்.

திமீத்ரி தன்னுடைய வன்யூஷாவை உற்றுப்பார்த்தான். அவனுடைய கம்பளித் துண்டில், அவனுடைய கம்

பளி வைத்த பூட்சுகளில், அவனுடைய தூக்கக்கிறக்கமான முகத்தில் புதிய வாழ்க்கையை, கடுமையான உழைப்பு, துன்பம் மற்றும் சுறுசுறுப்பை நோக்கி ஒரு குரல் தன்னை அழைப்பதைப் போல அவனுக்குத் தோன்றியது.

''இந்தத் தடவை நிச்சயமாக விடை கொடுத்துவிட்டேன்!'' என்று அவன் கோட்டில் மாட்டப்படாதிருந்த பொத்தானை மாட்ட முயற்சி செய்துகொண்டு கூறினான்.

பொறுமையில்லாத வண்டியோட்டிக்குக் கூடுதலாகப் பணம் கொடு என்று அங்கே தெரிவிக்கப்பட்ட ஆலோசனையைக் காதில் வாங்கிக்கொள்ளாமல் அவன் தொப்பியை அணிந்துகொண்டு அந்த அறையின் நடுவில் நின்றான். இளம் நண்பர்கள் மறுபடியும் ஒருவரையொருவர் முத்தமிட்டுக் கொண்டார்கள். சிறிது நேர இடைவெளிக்குப் பிறகு மூன்றாவது தடவையாக முத்தமிட்டுக் கொண்டார்கள். திமீத்ரி என்று அழைக்கப்பட்ட நபர் மேசையின் அருகே சென்று கோப்பையைத் தூக்கி ஷாம்பேன் மதுவைக் குடித்தான். அழகான தோற்றம் இல்லாத நண்பரின் கையைப் பிடித்தான். அவன் முகத்தில் செந்நிறம் படர்ந்தது.

''இல்லை, நான் சொல்ல வேண்டும்... நான் உன்னிடம் சொல்லத்தான் வேண்டும், உன்னிடம் நான் மறைக்கமாட்டேன், ஏனென்றால் நான் உன்னை நேசிக்கிறேன். நீ அவளைக் காதலிக்கிறாயல்லவா? நான் எப்பொழுதுமே அப்படித்தான் நினைத்தேன்... சரிதானே?''

''ஆம்'' என்று அந்த நண்பர் இன்னும் அதிகமான அன்பு நிறைந்த புன்சிரிப்புடன் ஒத்துக்கொண்டார்.

''ஒருவேளை...''

''விளக்குகளை அணைக்கச் சொல்கிறார்கள்'' என்று தூங்கிவழிந்து கொண்டு வந்த வேலைக்காரன் கூறினான். அவர்களுடைய உரையாடலின் கடைசிப் பகுதியை அவன் கேட்டபடியால் இந்தக் கனவான்கள் ஏன் ஒரே விஷயத்தைப் பற்றியே பேசிக் கொண்டிருக்கிறார்கள் என்று வியப்படைந்தான். ''யார் பெயரில் பில் போட வேண்டும்? உங்கள் பெயரிலா?'' யாரிடம் பேச வேண்டும் என்று முன்பே அறிந்தவனைப் போல அந்த உயரமான இளைஞரிடம் கேட்டான்.

''ஆம். பில் எவ்வளவு?'' என்று அந்த உயரமான இளைஞர் கேட்டார்.

''இருபத்தாறு ரூபிள்.''

அந்த உயரமான இளைஞர் சிறிது நேரம் மௌனமாக இருந்தார்; ஆனால் ஆட்சேபம் சொல்லாமல் பில்லைப் பைக்குள் திணித்துக்கொண்டார்.

இதற்கிடையில் மற்ற இரண்டு நண்பர்களும் தங்களுடைய சொந்த விவகாரங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

''போய்வா, அருமை நண்பனே!'' என்று நேசமான கண்களுடன் அழகான தோற்றம் இல்லாதவர் கூறினார்.

அவர்கள் இருவருடைய கண்களிலும் கண்ணீர்த் துளிகள் திரண்டன. அவர்கள் வாசற்படிக்கு வந்தார்கள்.

''இதோ, பார்!'' என்று அந்தப் பிரயாணி முகம் சிவக்க அந்த உயரமான இளைஞரிடம் திரும்பிக் கூறினான். ''ஷெவல்யேயின் பில்லுக்கு நீ பணம் கொடுத்து விட்டுப் பிறகு எனக்கு எழுது.''

''சரி'' என்று அடுத்தவர் கையுறைகளை மாட்டிக் கொண்டு கூறினார். அவர்கள் படிகளில் இறங்கிக் கொண்டிருந்தபொழுது சிறிதும் எதிர்பாராத முறையில் பேசினார்: ''உன்னைப் பற்றி நான் மிகவும் பொறாமைப்படுகிறேன்!''

அந்தப் பிரயாணி பனிச் சறுக்கு வண்டியில் உட்கார்ந்து மென்மயிர்க் கோட்டை இழுத்து உடலைப் போர்த்திக்கொண்டான். ஆனால் அந்தக் கடைசி வார்த்தைகளைக் கேட்டதும், ''ஓ! அப்படியானால் என்னுடன் புறப்படு'' என்று சொல்லிவிட்டு பனிச் சறுக்கு வண்டியில் அவருக்கு இடமளிப்பதற்காகத் தள்ளி உட்கார்ந்தான். அவன் குரல் தழதழத்தது.

ஆனால் அவர் ''போய்வா, திமீத்ரி! கடவுள் உன்னைக் காப்பாற்றுவார்...'' என்று கூறினார். அவன் இயன்ற அளவு சீக்கிரமாகப் புறப்படவேண்டும் என்பதைத் தவிர மற்றெந்த விருப்பமும் இல்லாதபடியால் அவர் தன்னுடைய வாக்கியத்தை முடிக்கவில்லை.

அவர்கள் மௌனமாக இருந்தார்கள். பிறகு அவர்களில் ஒருவர் ''போய்வா'' என்று விடை கொடுத்தார். ''வண்டியை ஓட்டு!'' என்று ஒரு குரல் ஒலித்தது. வண்டியோட்டி குதிரைகளைச் சொடுக்கினான்.

''யெலிஸார்! வண்டியைக் கொண்டுவா!'' என்று அங்கே நின்று கொண்டிருந்த நண்பர்களில் ஒருவர் உத்தர விட்டார். வண்டியோட்டிகளும் கோச் வண்டிக்காரனும் சுறுசுறுப்படைந்து கடிவாளங்களைச் சொடுக்கினார்கள். உறைந்து போயிருந்த சக்கரங்கள் பனிக்கட்டியின் மீது உருண்டன.

''அருமையான இளைஞன் அந்த ஒலேனின்'' என்று அந்த இளைஞர்களில் ஒருவர் கூறினார். ''ஆனால் காகசசுக்குப் போவதென்றால், அதிலும் யுங்கெராகப்* போவதென்றால் எவ்வளவு விசித்திரம்! எனக்குக் காசு கொடுத்தால்கூட நான் போகமாட்டேன். நாளைக்கு கிளப்புக்கு வருகிறாயல்லவா?''

''ஆம்.''

நண்பர்கள் பிரிந்து சென்றார்கள்.

வெப்பம் அதிகமாக இருப்பதைப் போல பிரயாணிக்குத் தோன்றியது. அவனுடைய மென்மயிர்க் கோட் உடலைச் சுட்டது. அவன் பனிச் சறுக்கு வண்டியின் அடிப்பகுதியில் உட்கார்ந்துகொண்டு மேல் கோட்டைக் கழற்றிப் போட்டான். வாடகைக்கு அமர்த்தப்பட்டிருந்த மூன்று குதிரைகளும் பிடரிமயிரைச் சிலிர்த்துக் கொண்டு இருளில் ஒரு தெருவிலிருந்து மற்றொரு தெருவுக்கு, அவன் ஒருபோதும் பார்த்திராத வீடுகளைக் கடந்து ஓடின. நீண்ட பிரயாணங்களை முன்னிட்டுப் புறப்படுபவர்கள் மட்டுமே இந்தத் தெருக்களின் வழியாகப் போயிருப்பார்கள் என்று ஒலேனினுக்குத் தோன்றியது. அவனைச் சுற்றிலும் எங்கும் இருள், நிசப்தம், சோகம் நிலவியது. அவனுடைய உள்ளத்தில் நினைவுகள், காதல், விசாரங்கள், மகிழ்ச்சியான கண்ணீர்த் துளிகள் நிறைந்திருந்தன...

## 2

''நான் காதலிக்கிறேன்! மிகவும் காதலிக்கிறேன்! அருமையான நண்பர்கள்! நல்லது!'' அவன் இந்தச் சொற்

---

* யுங்கெர்—பிரபுக் குடும்பத்தைச் சேர்ந்த இளைஞருக்கு இராணுவத்தில் அளிக்கப்படுகின்ற கீழ்நிலைப் பதவி. (மொ-ர்.)

களைத் திரும்பத் திரும்ப உச்சரித்தான், கண்ணீர் விட்டு அழ வேண்டும் என்பதைப் போல ஒரு அழுத்தமான உணர்ச்சி அவனிடம் ஏற்பட்டது. ஆனால் எதைக் கருதி அழ வேண்டும் அல்லது அந்த அருமையான நண்பர்கள் யார் அல்லது அவன் யாரைக் காதலிக்கிறான் என்பதைப் பற்றி மிகத் தெளிவான கருத்து அவனிடம் கிடையாது.

அவன் அவ்வப்பொழுது ஏதாவதொரு வீட்டை உற்றுப்பார்த்தான், அப்படி விசித்திரமான முறையில் அதை ஏன் கட்டினார்கள் என்று ஆச்சரியப்பட்டான்; அவனுக்கு முற்றிலும் அந்நியர்களான வண்டியோட்டியும் வன்யூஷாவும் அவனுக்கு மிகவும் அருகில் ஏன் வந்து கொண்டிருக்கிறார்கள், குதிரைகள் உறைந்து போன கடிவாள வாரைச் சுண்டியிழுத்த பொழுது தன்னைப் போலவே அவர்களும் ஏன் ஆடிக்கொண்டும் குலுக்காட்டம் போட்டுக்கொண்டும் வருகிறார்கள் என்று மறுபடியும் ஆச்சரியப்பட்டான். அவன் மறுபடியும் கூறினான்:

''அருமையான நண்பர்கள்! நான் காதலிக்கிறேன்!'' என்று சொல்லிவிட்டு ''எவ்வளவு பொருத்தம்! பிரமாதம்!'' என்று கூட அவன் சேர்த்துக் கூறினான்.

ஏன் இப்படிப் பேசினோம் என்று அவனே இப்பொழுது ஆச்சரியப்பட்டான். ''நான் குடிமயக்கத்தில் இருக்கிறேனா? அப்படி இருக்குமா?'' என்று தன்னையே கேட்டுக்கொண்டான்.

ஒலேனின் இரண்டு பாட்டில் ஷாம்பேன் மதுவைக் குடித்திருந்தான் என்பது உண்மைதான், ஆனால் அந்த மதுவினால் மட்டும் அவனுக்குக் கிளர்ச்சி ஏற்படவில்லை. அவன் நகரத்தை விட்டுப் புறப்படுவதற்கு முன்னர் அவனிடம் கூச்சத்துடன்—ஒருவேளை தற்செயலாகக் கூட—சொல்லப்பட்ட பாசம் நிறைந்த சொற்கள் எல்லாவற்றையும் அவன் நினைத்துக்கொண்டான். நண்பர்களுடைய கரங்களின் இளஞ்சூடான ஸ்பரிசத்தை, பார்வைகளை, சொற்களைக் காட்டிலும் அர்த்தமுள்ள மௌனங்களை, 'போய்வா, திமீத்ரி!' என்று பனிச்சறுக்கு வண்டியில் உட்கார்ந்திருக்கும் பொழுது தன்னுடைய நண்பர் கூறிய குரலின் தொனியை அவன் நினைத்துக்கொண்டான். அவன் தன்னுடைய உறுதியான கபடின்மையை நினைத்துப் பார்த்தான்.

அவை எல்லாமே அவனுடைய உள்ளத்தை உருக்கின. அவன் நகரத்தை விட்டுப் புறப்படுவதற்கு முன்னர் அவனுடைய நண்பர்களும் உறவினர்களும் மட்டுமன்றி, அவனிடம் அலட்சியமாக இருந்தவர்கள் மட்டுமன்றி, அவனிடம் நெருக்கமில்லாதவர்கள், நட்புணர்ச்சியில்லாதவர்கள் கூட, அவர்கள் அனைவருமே திடீரென்று ஒரு மனதாக முடிவு செய்திருப்பதைப் போல அவனிடம் இன்னும் அதிகமான பாசத்தைக் கொட்டியதைப் போல, அவன் பாவமன்னிப்பறைக்கு அல்லது மரணத்தைச் சந்திப்பதற்குப் போவதாகக் கருதி அவனை மன்னிப்பதைப் போல இருந்தது.

''நான் காகசசிலிருந்து திரும்பிவரமாட்டேன் என்பது என்னுடைய விதியாக இருக்கலாம்'' என்று அவன் தனக்குள் சொல்லிக்கொண்டான். அவனுடைய இதயம் தன்னுடைய நண்பர்களுக்காக, அவர்களைத் தவிர இன்னும் ஒருவருக்காகவும் நிரம்பிவழிவதைப் போல அவனுக்குத் தோன்றியது. அவனிடம் தன்னிரக்க உணர்ச்சி மேலிட்டது.

ஆனால் இப்படி அவனுடைய ஆன்மாவை மென்மைப்படுத்திச் சிறப்பித்தது, அவனுடைய உதடுகள் வரை தாமாகவே வந்துவிட்ட சிந்தனையற்ற சொற்களைத் தடுப்பதைத் தடை செய்து இத்தகைய மனநிலையை அவனிடம் உருவாக்கியது நண்பர்களிடம் அவன் கொண்டிருந்த அன்பு அல்ல, ஏதோ ஒரு பெண்ணிடம் அவனுக்கு ஏற்பட்ட காதலுமல்ல, ஏனென்றால் அவன் ஒருபோதும், அதாவது இதுவரை காதல் வயப்படவில்லை. அவன் தன் மீது கொண்டிருந்த காதலே, தன் இதயத்தில் இடம் பெற்றிருந்த நல்லவை எல்லாவற்றின் மீதும் (அவன் இதயத்தில் நல்லவை தவிர வேறு ஒன்றுமே இல்லை என்று இப்பொழுது அவனுக்குத் தோன்றியது) அவனுடைய நல்லார்வமிக்க நம்பிக்கை நிறைந்த இளம் காதலே அதைச் செய்தது. அதுவே அவனைக் கண்ணீர் வடிக்கச் செய்தது, அவன் தொடர்பில்லாத சொற்களைப் பேசும்படி செய்தது.

ஒலேனின் ஒரு இளைஞன்; படிப்பை முடிக்காமலேயே பல்கலைக்கழகத்தை விட்டு வெளியே வந்தவன். அவன் ஒருபோதும் அலுவலகத்தில் வேலை செய்யவில்லை

(எதோ ஒரு அரசாங்க இலாகாவில் அவனுடைய பெயரை மட்டும் பதிவு செய்திருந்தான்). தனக்குக் கிடைத்த பரம் பரைச் சொத்தில் பாதியை ஊதாரித்தனமாக செலவிட்டிருந்தான். அவனுக்கு இப்பொழுது இருபத்து நான்கு வயதாகிறது என்றாலும் இதுவரை எந்தப் பதவியிலும் சேரவில்லை, எந்த வேலையும் செய்யவில்லை. மாஸ்கோ நகரத்தின் உயர்சமூகத்தில் 'இளைஞன்' என்று வர்ணிக்கப்படுகின்ற ஒருவனாக அவன் இருந்தான்.

ஒலேனின் தன்னுடைய பதினெட்டாவது வயதிலிருந்து எவ்விதமான கட்டுப்பாடும் சிறிது கூட இல்லாதவனாக இருந்தான். ருஷ்யாவில் நாற்பதுகளின் போது பணக்கார இளைஞர்களுக்கு, குறிப்பாக, குழந்தைப் பருவத்தில் பெற்றோர்களை இழந்த இளைஞர்களுக்கே உரிய சுதந்திரத்துடன் அவன் இருந்தான். எவ்விதமான கட்டுத்தளைகளும்—உடலியலானவையோ அல்லது தார்மிக ரீதியானவையோ—அவனைத் துன்புறுத்தவில்லை. அவன் விரும்பியபடி நடந்துகொள்ள முடியும், எந்தத் தேவையும் அவனுக்குக் கிடையாது, தன்மீது யாருக்கும் உரிமை இருப்பதாக அவன் அங்கீகரிக்கவில்லை. அவன் குடும்பம், நாடு, மதம், தேவை ஆகியவற்றினால் கட்டுப்படுத்தப்படாதவன். அவனுக்கு எதிலும் நம்பிக்கை இல்லை. அவன் எல்லாவற்றையுமே நிராகரித்தான்.

ஆனால் எல்லாவற்றையும் நிராகரித்தாலும் அவன் வாட்டம் நிறைந்த, வாழ்க்கையில் சோர்வுற்ற, தர்க்க ரீதியான இளைஞனாக இருக்கவில்லை. மாறாக அவன் எப்பொழுதும் உணர்ச்சிகளினால் தூண்டப்பட்டவனாக இருந்தான். காதல் என்பது பொய் என்று அவன் வாதம் புரிவான்; ஆனால் ஒரு அழகான இளம் பெண்ணைப் பார்த்து விட்டால் போதும், அவனால் தன்னுடைய உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்த முடியாது. பதவி, பட்டம் என்பவை முட்டாள்தனம் என்று அவன் நெடுங்காலமாகக் கருதிவந்தான். ஆனால் ஒரு நடன நிகழ்ச்சியில் கோமகன் சேர்கிய் தன்னிடம் வந்து முகஸ்துதியாக சில வார்த்தைகளைப் பேசியபொழுது அவன் தன்னையறியாமலே மகிழ்ச்சி அடைந்தான்.

அவன் உணர்ச்சிகளுக்கு இடம் கொடுப்பவன் என்றாலும் அவை கட்டு மீறிப்போவதற்கு அனுமதிக்கமாட்

டான். ஏதாவதொரு புதிய விருப்பத்தின் விளைவாக அவன் ஏதாவதொரு காரியத்தில் ஈடுபடுவதுண்டு. ஆனால் அதில் கடுமுயற்சியும் போராட்டமும் வாழ்க்கையுடன் அற்பமான போராட்டம் ஏற்படப் போகின்றன என்று அவன் சந்தேகிக்க ஆரம்பித்தவுடனே அவன் அந்த உணர்ச்சி அல்லது விவகாரத்திலிருந்து தன்னை வேக மாக விடுவித்துக் கொள்வதற்கும் தன்னுடைய சுதந்தி ரத்தை மறுபடியும் பெறுவதற்கும் இயல்பாகவே முயல் வான்.

அவன் இப்படி உயர்சமூக வாழ்க்கைக்கு, அரசுப் பணிக்கு, தன்னுடைய பண்ணையை மேற்பார்வையிடு வதற்கு, சங்கீத ரஸனைக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொள்ளத் தொடங்கியிருந்தான். அவன் ஒரு காலத்தில் சங்கீதத்தை முழுநேரத் தொழிலாக மேற்கொள்ளலாமா என்று கூட ஆர்வத்துடன் சிந்தித்ததுண்டு. அவன் சில பெண்களைக் காதலிக்கின்ற சோதனைகளில் ஈடுபட்ட தும் உண்டு, எனினும் காதலில் என்னவோ அவனுக்கு முழு நம்பிக்கை இல்லை.

மனிதனுடைய வாழ்க்கையில் ஒரே ஒரு தடவை மட் டுமே இருக்கின்ற இளமைச் சக்தி அனைத்தையும்—அது அறிவின் சக்தியல்ல, இதயத்தின், கல்வியின் சக்தியல்ல, ஆனால் அதைப் புத்தம் புதிய ஊக்கம் என்றுதான் கூற வேண்டும், ஒரு தடவை இழந்துவிட்டால் ஒருக்காலும் அதைத் திரும்பப் பெற இயலாது, மனிதன் தன்னுடைய விருப்பத்தின்படி தனக்கு சிறப்பாகத் தோன்றுகின்ற முறையில் தன்னை உருவாக்கிக் கொள்வதற்கு, தன்னு டைய இதயத்தின் விருப்பத்தின்படி உலக முழுவதையும் அமைப்பதற்கு மனிதனுக்கு ஒரு தடவை மட்டுமே வழங் கப்படுகின்ற வாய்ப்பு—கலைத்துறை அல்லது விஞ்ஞா னம், பெண்ணிடம் காதல் அல்லது செய்முறை நடவ டிக்கை ஆகியவற்றில் எதில் ஈடுபடுத்துவது என்ற குழப் பத்தில் அவன் சிக்கியிருந்ததுண்டு.

இத்தகைய ஊக்கமில்லாத மனிதர்கள் இருக்கிறார் கள் என்பது உண்மையே. அவர்கள் வாழ்க்கையினுள் நுழைகின்ற பொழுதே தம்மீது மாட்டப்படுகின்ற முதல் கடிவாளத்தை ஏற்றுக் கொள்கிறார்கள், தம்முடைய வாழ்க்கையின் இறுதிக் காலம் வரை அடக்கத்துடன்

உழைக்கிறார்கள். ஆனால் ஒலேனின் இளமையின் இந்த வலிமையான தெய்விகத்தன்மையை, ஒரே விருப்பத்தில், ஒரே சிந்தனையில் மூழ்கிவிடுகின்ற இந்த சக்தியை, விரும்புவதற்கும் அதை நிறைவேற்றிக் கொள்வதற்கும், ஏன் அல்லது எதற்காக என்று கேள்வி கேட்காமல் எந்த முடிவில்லாத பள்ளத்திற்குள் தலைகீழாகக் குதிப்பதற்கும் உரிய இந்த சக்தி தன்னிடம் நிறைந்திருப்பதை மிகவும் வலிமையாக உணர்ந்திருந்தான். அந்த உணர்ச்சி அவனிடம் இருந்தது, அவன் அதைப்பற்றி அகந்தை கொண்டிருந்தான். அதனால் அவன் மகிழ்ச்சியடைந்தது அவனுக்கே தெரியாது. இது வரையிலும் அவன் தன்னிடம் மட்டுமே அன்பு வைத்திருந்தான். அது தவிர்க்க முடியாததே, ஏனென்றால் அவன் தன்னிடமிருந்து நன்மையைத் தவிர வேறு எதையும் எதிர்பார்க்கவில்லை. தன்னைப் பற்றிய கற்பனைகளை அவன் இன்னும் இழந்துவிடவில்லை.

அவன் இப்பொழுது மாஸ்கோவை விட்டுப் பிரிந்து சென்று கொண்டிருந்தபொழுது, ஒரு இளைஞன் தான் செய்த தவறுகளை அங்கீகரித்துக்கொண்டு, தான் சரியான பாதையைப் பின்பற்றவில்லை, முந்திய செயல்கள் அனைத்தும் குறிவழிப்பட்டவை அல்ல, அற்பமானவையே, சரியான முறையில் வாழவேண்டும் என்னும் விருப்பம் கூட இதுவரை தனக்குத் தோன்றவில்லை, ஆனால் இப்பொழுது, முன்னர் வழக்கமாகத் தங்கியிருந்த இடங்களை விட்டுப் பிரிகின்றபொழுது, ஒரு புதிய வாழ்க்கை ஆரம்பமாகிறது, அதில் தன்னுடைய பழைய தவறுகளை, தன்னுடைய பழைய விசாரங்களைத் தவிர்க்க முடியும், மகிழ்ச்சி தவிர வேறு ஒன்றும் ஏற்படாது என்று திடீரென்று ஒத்துக்கொள்கின்ற ஆனந்தமான இளமை மனநிலையில் அவன் இருந்தான்.

ஒருவர் நீண்ட பிரயாணத்தில் புறப்படுகின்றபொழுது, குதிரைகள் இரண்டு அல்லது மூன்று முறை மாற்றப்பட்ட பிறகும் கூட, அவர் புறப்பட்ட அந்த இடத்திலேயே கற்பனை பின் தங்கிவிடுவதும் பிறகு திடீரென்று சாலையில் பயணம் செய்கின்ற முதல் காலைப்பொழுதில் சேருமிடத்தை நோக்கி முன்னே பாய்வதும் எதிர்காலத்தைப் பற்றிக் கற்பனைக் கோட்டைகளை நிர்மாணிக்க

ஆரம்பிப்பதும் வழக்கமானதே. ஒலேனினும் அப்படியே நடந்து கொண்டான்.

அவன் நகரத்தின் எல்லைகளைக் கடந்து, பனி மூடிய அகன்ற வயல்களைப் பார்த்தவுடனே, தனிமையுணர்ச்சியில் திளைத்தான். அவன் மென்மயிர்க் கோட்டைத் தன் உடலைச் சுற்றி நன்கு வைத்துக்கொண்டு பனிச்சறுக்கு வண்டியின் அடிப்பகுதியில் வசதியாகக் கால்களை நீட்டித் தூங்கினான். நண்பர்களின் பிரிவுபசாரம் அவனிடம் ஆழமான கிளர்ச்சியை ஏற்படுத்தியிருந்தது; கடந்த குளிர் பருவத்தின் போது மாஸ்கோவில் அவன் கலந்து கொண்ட எல்லா நிகழ்ச்சிகளையும் அவன் மனம் சிந்திக்கத் தொடங்கியது. அங்கே நடைபெற்ற சம்பவங்கள் குழப்பமான எண்ணங்கள், விசாரங்களுடன் கலந்து அவனுடைய கற்பனையில் சித்திரங்களாகத் திரளத் தொடங்கின.

அவன் விடை பெற்றுவந்த நண்பரை, அவர்களுடைய உரையாடலில் இடம்பெற்ற அந்த இளம்பெண்ணுடன் அவருடைய உறவுகளைப் பற்றி நினைத்துக்கொண்டான். அந்த இளம்பெண் ஒரு பணக்காரி. ''அவள் என்னைக் காதலிக்கிறாள் என்பது அவனுக்குத் தெரியும். அப்படியும் அவளைக் காதலிப்பதற்கு அவனால் எப்படி முடிந்தது?'' என்று அவன் தன்னைக் கேட்டுக்கொண்டான். அவன் மனத்தில் கீழ்த்தரமான சந்தேகங்கள் தோன்றின. ''மனிதர்களுடைய நோக்கங்களைத் துருவி ஆராய்ந்தால் அவர்கள் மிகவும் மோசமானவர்களே. ஆனால் நான் ஒருபோதும் மெய்யாகவே காதலிக்காதது ஏன்?'' அக் கேள்வி அவனுக்கு முன்னால் உருவெடுத்து நின்றது. ''நான் ஒருபோதும் காதல் வயப்படவில்லை என்று அவர்கள் எல்லோருமே சொல்கிறார்கள். நான் காதலிக்க முடியாதவனா? அப்படி இருக்குமா?''

அவன் முன்பு காதலித்த பெண்களைப் பற்றி நினைக்கத் தொடங்கினான். அவன் முதன் முதலாக உயர்சமூக வாழ்க்கைக்குள் நுழைந்த பொழுது நடைபெற்ற ஒரு சம்பவத்தை நினைவு கூர்ந்தான். அவனுடைய நண்பர்களில் ஒருவனுடைய சகோதரி அவள். அவன் அவளுடன் மேசைக்குப் பக்கத்தில் உட்கார்ந்து மாலைப் பொழுது முழுவதையும் கழித்ததுண்டு. அந்த மேசை விளக்கின்

ஒளி சித்திரத்தையல் செய்து கொண்டிருக்கும் அவளுடைய மெலிதான விரல்கள், அவளுடைய அழகான, மென்மையான முகத்தின் கீழ்ப் பகுதியின் மீது விழும். தங்களுடைய முடிவில்லாத உரையாடல்களை, தன்னுடைய மனக்குழப்பத்தை, தடுமாற்றத்தை, தன்னுடைய கூச்சத்தைப் போக்குவதற்குத் தொடர்ச்சியாக முயற்சி செய்ததை அவன் நினைவு கூர்ந்தான். ஏதோ ஒரு குரல் அவன் காதிற்குள் **இந்தப் பெண் அல்ல, இந்தப் பெண் அல்ல** என்று தொடர்ச்சியாக முணுமுணுத்துக் கொண்டிருந்தது. ஆம். அந்தப் பெண் அல்ல என்று பின்னர் நிரூபிக்கப் பட்டது உண்மையே.

பிறகு அவன் ஒரு நடன நிகழ்ச்சியை, அதில் அழகு மிக்க டி... என்னும் பெயருள்ள பெண்ணுடன் சேர்ந்து நடனமாடியதை நினைத்துக் கொண்டான். ''அந்த மாலைப்பொழுதில் நான் எவ்வளவு ஆழமாகக் காதல் வயப்பட்டேன்! எவ்வளவு ஆனந்தம்! மறு நாள் காலையில் கண் விழித்து நான் இன்னும் சுதந்திரமானவனே என்பதை உணர்ந்தபொழுது எனக்கு எவ்வளவு வேதனை, எவ்வளவு எரிச்சல் ஏற்பட்டது! காதல் என்னை விட்டு விலகிப்போவது ஏன்? காதல் ஏன் என்னைத் தனது இதயச் சிறையில் அடைக்கவில்லை?'' என்று அவன் தன்னைக் கேட்டுக்கொண்டான். ''இல்லை. காதல் என்று ஒன்றுமே இல்லை! அடுத்த வீட்டில் வசித்த அந்த இளம் பெண், தான் நட்சத்திரங்களைக் காதலிப்பதாக என்னிடமும் துப்ரோவினிடமும் பிரபுக்கள் தலைவரிடமும் சொல்வாளே—அவளும் **அந்தப் பெண் அல்ல.**''

பிறகு அவன் தன்னுடைய கிராமப் பண்ணையை நிர்வகிப்பதில் தன்னுடைய புதிய சோதனையை நினைத்துக்கொண்டான். அதிலும் தன்னைப் பாராட்டிக் கொள்வதற்கு ஒரு விஷயமும் இல்லை என்று மறுபடியும் கருதினான். அவன் காகசசுக்குப் போவதைப் பற்றி அவர்கள் அதிகம் பேசுவார்களா என்ற கேள்வி அவனுடைய மனத்தில் தோன்றியது. ஆனால் அவர்கள் என்று அவன் யாரைக் குறிக்கிறான் என்பதைப் பற்றி அவனுக்கே தெளிவான கருத்து இல்லை. இந்தச் சிந்தனைக்குப் பிறகு மற்றொரு சிந்தனை தொடர்ந்தது; அவன் முகத்தைச் சுளித்துக் கொண்டு தெளிவில்லாத ஒலிகளை எழுப்பி

னான். தன்னுடைய தையற்காரனான காபேலுக்குத் தர வேண்டிய அறுநூற்று எழுபத்தியெட்டு ரூபிள்களையும் நினைத்துக்கொண்டான். இன்னும் ஒரு ஆண்டு பொறுத் துக்கொள் என்று தான் கேட்டுக் கொண்ட பொழுது கூறிய சொற்களையும் அந்தத் தையற்காரனின் முகத்தில் தோன்றிய திகைப்பையும் தலைவிதிப்படியான பணிவை யும் கூட நினைத்துப்பார்த்தான்.

''அட கடவுளே! அட கடவுளே!'' என்று அவன் திரும்பத் திரும்பக் கூறினான்; தன்னுடைய கண்களைச் சிமிட்டிக் கொண்டு அந்த மகிழ்ச்சி அளிக்காத சிந்த னையை விரட்ட முயன்றான். ''இவ்வளவுக்குப் பிறகும் கூட அவள் என்னைக் காதலித்தாள்'' என்று அன்று மாலையில் தாங்கள் பேசிக்கொண்டிருந்த இளம்பெண் ணைப் பற்றி நினைத்தான். ''ஆம். நான் அவளைத் திருமணம் செய்து கொண்டிருந்தால் கடனிலிருந்து தப் பித்திருப்பேன்; ஆனால் இப்பொழுது தையற்காரனுக் குப் பணம் தர வேண்டும், நான் எழுதித்தந்த கடன் பத்திரம் வசீலியெவிடம் இருக்கிறது.'' அவளுடைய வீட்டை விட்டு வந்ததும் நேராக கிளப்புக்குச் சென்று அங்கே திரு. வசீலியெவுடன் சீட்டு விளையாடிய கடைசி மாலைப் பொழுதை அவன் திரும்ப எண்ணிப் பார்த்தான். இன்னும் ஒரு ஆட்டம் விளையாடலாம் என்று அவன் கெஞ்சியதையும் அவனுடைய எதிரி ஆண வமாக மறுத்ததையும் அவன் நினைத்துக்கொண்டான். ''ஒரு வருடம் சிக்கனமாக இருந்தால் எல்லாக் கட னையும் தீர்த்துவிடுவேன்—தொலையட்டும்...'' அவன் இப்படித் தனக்கு உறுதியளித்துக் கொண்டாலும் தன் னுடைய கடன்களை மறுபடியும் கூட்டிப் பார்க்கவும், அவற்றை கொடுத்துத் தீர்க்க வேண்டிய காலத்தவணை களையும் எவ்வளவு காலத்துக்குள் தீர்க்க இயலும் என் பதையும் அவன் கணக்குப் போடத் தொடங்குகிறான். ''மொரேலிடம் பாக்கி நிற்கிறது, ஷெவல்யேயிடமும் பாக்கி இருக்கிறது.'' மொரேலிடம் பாக்கித்தொகைக் குக் காரணமான அந்த முழு இரவை அவன் நினைத்துப் பார்க்கிறான். பீட்டர்ஸ்பர்க்கிலிருந்து வந்த சக்கரவர்த்தி யின் உதவியாளரான சாஷ்கா பி..., பெருமகன் டி... மற்றும் முக்கியமான ஒரு முதிய கனவான் நாடோடிப்

பெண்களடங்கிய குழுவின் கலை நிகழ்ச்சியை நடத்திய தால் அந்தச் செலவு ஏற்பட்டது...

''அவர்களிடம் அவ்வளவு அதிகமான சுய திருப்தி இருந்தது ஏன், அப்படி ஒரு சிறந்த குழுவில் இடம் பெறு வது பெரிய கௌரவம் என்று அகம்பாவத்துடன் சொல் கிறார்கள், எந்தத் தகுதியைக் கொண்டு அந்தக் குழு அமைக்கப்படுகிறது என்று நான் ஆச்சரியப்படுகிறேன். அவர்கள் சக்கரவர்த்தியின் பணிக் குழுவில் இருப்பது தான் அதற்குக் காரணமா? மற்ற எல்லோரும் முட்டாள் கள், முரடர்கள் என்று கருதுவதைப் போல அவர்கள் கேவலமாகப் பார்ப்பதே முற்றிலும் அருவருப்பைக் கொடுக்கிறதே! நான் அவர்களுடன் சேருவதற்குச் சிறி தும் விரும்பவில்லை என்பதை வெளிப்படையாகவே அவர்களுக்குக் காட்டிவிட்டேன். எனினும் கர்னலும் சக் கரவர்த்தியின் உதவியாளருமான சாஷ்கா பி...யைப் போன்ற கனவான்களுடன் நான் மிக நெருக்கமாகப் பழ கியது என்னுடைய மேலாளரான அந்திரேயின் மனத்தில் நன்கு பதிந்திருக்கும்... மேலும் அன்று மாலையில் நான் குடித்த அளவுக்கு வேறு ஒருவரும் குடிக்கவில்லை. அந்த நாடோடிகளுக்குப் புதுசாக ஒரு பாட்டு சொல்லிக் கொடுத்தேன். அவர்கள் எல்லோரும் கவனமாகக் கேட் டார்கள். நான் பலவித முட்டாள்தனமான காரியங் களைச் செய்திருப்பதாக வைத்துக்கொண்டால் கூட நான் உள்ளூர மிகவும் தகுதியுள்ள இளைஞனே'' என்று அவன் நினைத்தான்.

மறுநாள் காலையில் ஒலேனின் மூன்றாவது தபால் நிலையத்தில் இருந்தான். அவன் தேநீர் அருந்தினான். தன்னுடைய சிப்பங்களையும் பெட்டிகளையும் வன்யூஷா அடுக்கிவைப்பதற்கு உதவி செய்தான். பிறகு அறிவு, ஒழுங்குமுறை, வசதி ஆகிய அனைத்துடனும் பொருந் திய முறையில் தன்னுடைய உடைமைகள் எங்கே வைக் கப்பட்டிருக்கின்றன—அவனுடைய பணம் எங்கே வைக் கப்பட்டிருக்கிறது, அவனிடம் எவ்வளவு பணம் இருக் கிறது—என்று அறிந்தவனாக அவன் பனிச்சறுக்கு வண்டி யில் உட்கார்ந்தான். முக்கியமான ஆவணங்களை உடனே எடுத்துக் காட்டுவதற்கு வசதியாகக் கையில் வைத்துக் கொண்டான். எல்லாமே மிகவும் செப்பமாக வைக்கப்

பட்டிருப்பதாக அவனுக்குத் தோன்றியபடியால் இதயம் நிறைந்த மகிழ்ச்சியில் பூரித்தான். அந்த நீண்ட பயணம் ஒரு நிரந்தரமான மகிழ்வுச் சுற்றுலாவைப் போலத் தோன்றியது.

அன்று காலைப்பொழுதிலும் பகற்பொழுதில் பாதியிலும் அவன் கணக்குப் போடுவதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தான்: எத்தனை வெர்ஸ்டாக்கள்* தூரம் பிரயாணம் செய்திருக்கிறான், அடுத்த தபால் நிலையத்துக்கு, அடுத்த நகரத்துக்கு இன்னும் எவ்வளவு தூரம் போக வேண்டும், மதிய உணவுக்கு முன்னர், தேநீருக்கு முன்னர் இன்னும் எவ்வளவு தூரம் போக வேண்டும், ஸ்தாவ்ரபல் என்ற ஊர் இன்னும் எவ்வளவு தொலைவிலிருக்கிறது, ஏற்கெனவே கடந்து வந்திருக்கின்ற பகுதி பிரயாணத்தின் மொத்த தூரத்தில் எத்தனை பகுதி. பிறகு தன்னிடம் எவ்வளவு பணம் இருக்கிறது, செலவழித்தது எவ்வளவு, தன்னுடைய கடன்கள் எல்லாவற்றையும் தீர்ப்பதற்கு எவ்வளவு பணம் வேண்டும், தன்னுடைய ஊதியத்திலிருந்து ஒவ்வொரு மாதமும் தனக்கென்று எவ்வளவு செலவழிக்க முடியும் என்பதைக் கணக்கிட்டான். மாலை நேரத்தில் அவன் தேநீர் குடித்தபொழுது மாஸ்கோவிலிருந்து ஸ்தாவ்ரபலுக்கு உள்ள மொத்த தூரத்தில் பதினொன்றில் ஏழு பகுதிகளை இன்னும் பிரயாணம் செய்ய வேண்டும், தன்னுடைய சொத்தில் அரைக்கால் பகுதி கடனுக்குச் சமம், ஆகவே ஏழு மாத காலம் மிகவும் சிக்கனமாக இருந்தால் கடன்களைத் தீர்க்க முடியும் என்று கணக்கிட்டான். இப்படி தன் மனத்தை அமைதிப்படுத்திய பிறகு அவன் மென்மயிர்க் கோட்டினால் தன் உடலைப் போர்த்திக்கொண்டு பனிச் சறுக்கு வண்டியில் காலை நீட்டி மீண்டும் உறக்கத்திலாழ்ந்தான்.

அவனுடைய கற்பனை இந்தத் தடவை காகசசில் அவன் என்ன எதிர்பார்க்கலாம் என்பதை சித்திரிப்பதற்குத் தொடங்கியது. எதிர்காலத்தைப் பற்றி அவனுடைய

---

* வெர்ஸ்டா என்பது ஒரு கிலோமீட்டர் தூரத்துக்குச் சமமான பழைய ருஷ்ய நீட்டலளவை. (மொ-ர்.)

கனவுகள் எல்லாம் அமலாத்-பெக்கைப்* போன்ற வீரர்கள், செர்கேஷியப் பெண்கள், மலைகள், மலைப் பிளவுகள், பயங்கரமான நீரோட்டங்கள், மற்றும் பேரபாயங்களைப் பற்றிய காட்சிகளுடன் பின்னிப் பிணைந்திருந்தன. இவை எல்லாவற்றிலும் தெளிவாக, திட்டவட்டமானதாக ஒன்றுமில்லை; ஆனால் இந்த அறிந்துகொள்ள முடியாத எதிர்காலத்தில் கவர்ச்சித்து இழுக்கின்ற புகழும் அச்சுறுத்துகின்ற மரணமும் அவனுடைய ஆர்வத்தைத் தூண்டுபவையாக இருந்தன. அவன் ஒரு சமயத்தில் கேள்விப்பட்டிராத வீரத்துடனும் வியக்கத்தக்க ஆற்றலுடனும் எண்ணற்ற மலைக்குடியினரைக் கொன்று வெற்றி கொள்வதாகக் கற்பனை செய்தான்; மறு சமயத்தில் தன்னை ஒரு மலைக்குடிமகனாகவும் ருஷ்யர்களை எதிர்த்துத் தங்களுடைய சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்குத் தன்னுடைய நாட்டு மக்களுடன் சேர்ந்து போர்புரிவதாகவும் கற்பனை செய்து கொண்டான்.

ஆனால் இந்தச் சித்திரத்தில் இதர பகுதிகளை அவன் பூர்த்தி செய்யத் தொடங்கியவுடனே அவனுடைய பழைய மாஸ்கோ நண்பர்கள் அந்தப் பகுதிகளில் தோன்றினார்கள். சாஷ்கா பி... ருஷ்யர்களுடன் அல்லது மலைக்குடியினருடன் சேர்ந்துகொண்டு அவனுக்கு எதிராகச் சண்டை போடுவதாகத் தோன்றியது. அவனுடைய தையற்காரன் காபேல் கூட ஏதோ புரிந்துகொள்ள முடியாத விதத்தில் வெற்றியாளருக்குரிய விழாக்களில் பங்கெடுத்தான். இதற்கிடையில் அவன் தன்னுடைய முந்திய அவமதிப்புகள், பலவீனங்கள், தவறுகள் ஆகியவற்றை நினைவு கூர்ந்தால் அதற்கும் கூட ஒரு ஆனந்தமான பகுதி இருந்தது. அங்கே மலைகள், நீரோட்டங்கள், செர்கேஷியப் பெண்கள், பேராபத்துகளுக்கு நடுவில் அத்தகைய தவறுகளை மறுபடியும் செய்ய முடியாது என்பது தெளிவு. அவன் தன்னுடைய ஆன்மாவின் சன்னிதானத்தில் தன் தவறுகளை ஒத்துக் கொண்டிருக்கிறான்; அவை நிரந்தரமாக மன்னிக்கப்பட்டுவிட்டன.

எதிர்காலத்தைப் பற்றி அந்த இளைஞனுடைய கருத்

---

* அமலாத்-பெக்—பெஸ்தூஷெவ்-மர்லீன்ஸ்கி எழுதிய 'அமலாத்-பெக்' என்னும் நாவலின் கதாநாயகன். (ப-ர்.)

துக்களில் மிகவும் அற்புதமான கனவு ஒன்று தொடர்ச்சியாகத் தோன்றுகிறது. அது ஒரு பெண்ணைப் பற்றிய கனவு. அவனுடைய கற்பனையில் அவள் இப்பொழுது மலைகளுக்கு மத்தியில் செர்கேஷிய அடிமையின் வேடத்தில் தோன்றுகிறாள்: ஒல்லியான உருவம், நீண்ட சடை, ஆழமான, தன்னை முழுமையாக ஒப்படைக்கின்ற கண்கள். மலைகளுக்கு நடுவில் தனித்திருக்கும் குடிசையை அவன் பார்க்கிறான்; அதன் கதவின் அருகில் அவள் நிற்கிறாள், அவன் தன்னிடம் திரும்பவர வேண்டும் என்று அவள் காத்திருக்கிறாள், எதிர்பார்த்திருக்கிறாள். அவன் களைத்துப் போய், உடல் தூசியில், இரத்தத்தில் தோய்ந்து, புகழில் உயர்ந்து வருகிறான். அவளுடைய முத்தம், அவளுடைய தோள்கள், அவளுடைய இனிய குரல், அவளின் தன்னொப்படைப்பை நினைத்து அவன் வியக்கிறான். அவள் அழகு நிறைந்தவள், ஆனால் பண்படுத்தப்படாதவள், கட்டுப்படுத்த முடியாதவள், ஒப்பனை இல்லாதவள். நீண்ட குளிர்கால மாலைப் பொழுதுகளில் அவன் அவளுடைய கல்வியின் முதற் பாடங்களைப் போதிக்கிறான். அவள் கெட்டிக்காரி, கருத்துக்களை வாங்கிக் கொள்ளக்கூடியவள், இயல்பான திறமை உடையவள்; அறிவின் இன்றியமையாத எல்லாத் தேவைகளுக்கும் வேகமாகத் தன்னை சரிப்படுத்திக் கொள்கிறாள். ஏன் அப்படி இருக்கக் கூடாது? புதிய மொழியைக் கற்பதில், பிரெஞ்சு மொழிப் பேரிலக்கியங்களைப் படிப்பதில், அவற்றைப் புரிந்து கொள்வதில் அவளுக்கு அதிகமான திறமையுண்டு, உதாரணமாக 'பாரிஸ் நகரத்துக் கூனன்' என்னும் நாவலை அவள் நிச்சயமாக ரசிக்கக் கூடியவள். பிரெஞ்சு மொழியில் பேசுவது அவளுக்கு சுலபமாகக் கூட இருக்கும்; வரவேற்புக் கூடங்களில் அவள் மிகவும் உயர்ந்த வட்டாரத்தைச் சேர்ந்த எந்தப் பெண்ணைக் காட்டிலும் கூடுதலான இயற்கையான மேன்மையைக் காட்ட முடியும். அவளால் எளிமையாக, வன்மையாக, உணர்ச்சிகரமாகப் பாடமுடியும்.

''அடச்சீ! குப்பை!'' என்று அவன் தனக்குள் சொல்லிக்கொண்டான். அதே சமயத்தில் அவர்கள் ஒரு தபால் நிலையத்துக்கு வந்து சேர்ந்தார்கள். தன்னுடைய சாமான்களை ஒரு பனிச்சறுக்கு வண்டியிலிருந்து மற்றொன்றுக்கு

அவன் மாற்ற வேண்டும், வண்டியோட்டிகள் வோட்கா குடிப்பதற்குப் பணம் கொடுக்க வேண்டும். ஆனால் சற்று முன்னர் அவன் குப்பை என்று ஒதுக்கிய அதே பழைய கற்பனைகள் அவன் மனத்தில் மீண்டும் நிறைந்தன. அவன் மீண்டும் செர்கேஷியப் பெண்களைப் பற்றி நினைக்கத் தொடங்கினான்; அவன் பெரும் புகழுடன் ருஷ்யாவுக்குத் திரும்புகிறான், சக்கரவர்த்தியின் உதவியாளராகிறான், அழகான பெண்ணை மனைவியாக அடைகிறான்.

''காதல் என்று ஒன்று இருப்பதாக நான் நம்ப வில்லை'' என்று தனக்குத் தானே பேசினான். ''பட்டங்கள் என்பவையெல்லாம் குப்பை... அந்த அறுநூற்று எழுபத்தியெட்டு ரூபிள்களைப் பற்றி என்ன சொல்கிறாய்?.. ஒரு மாகாணத்தைக் கைப்பற்றி விட்டால் என்னுடைய வாழ்க்கை முழுவதற்கும் தேவையானதைக் காட்டிலும் அதிகமான செல்வம் எனக்குக் கிடைக்காதா?.. ஆனால் அந்த செல்வத்தை எனக்கு மட்டுமே உபயோகிப்பது சரியல்ல. அதை நான் பகிர்ந்து கொள்ள வேண்டும். யாருடன்? காபேலுக்கு அறுநூற்று எழுபத்தியெட்டு ரூபிள்கள் தர வேண்டும், மற்றவற்றைப் பின்னால் பார்த்துக்கொள்ளலாம்...''

இப்பொழுது தெளிவில்லாத காட்சிகளால் அவனுடைய சிந்தனை முற்றிலும் குழம்பிப்போகிறது, வன்யூஷாவின் குரலும் வண்டியோட்டம் தடைப்படுகின்ற உணர்வும் மட்டுமே அவனுடைய ஆரோக்கியமான இளமையின் உறக்கத்தைத் தடைசெய்கின்றன. அவன் அடுத்த தபால் நிலையத்தில் மயக்கத்தில் தள்ளாடிக்கொண்டு ஒரு புதிய பனிச் சறுக்கு வண்டியில் ஏறுகிறான். அவன் பிரயாணம் தொடர்கிறது.

மறுநாள் காலையில் அதே செயல் நடைபெறுகிறது —அதே தபால் நிலையங்கள், அதே தேநீர், சுறுசுறுப்பாக ஓடுகின்ற அதே குதிரைகள், வன்யூஷாவுடன் அதே சுருக்கமான உரையாடல்கள், மாலைப்பொழுதில் அதே தெளிவில்லாத காட்சிகள், இரவு முழுவதும் அதே ஆரோக்கியமான இளமையின் உறக்கம்.

# 3

ஒலேனின் ருஷ்யாவின் மையத்திலிருந்து எவ்வளவு அதிகமான தூரம் சென்றானோ அந்த அளவுக்கு அவனுடைய நினைவுகள் எல்லாம் விலகிச் சென்றன; அவன் காகசசுக்கு நெருங்கி வந்த அளவுக்கு அவன் அதிக விளையாட்டுப் பண்புடையவனாக மாறினான். ஒரேயடியாகப் போய்விடுவது, ஒருபோதும் திரும்பாதிருப்பது, மறுபடியும் உயர்வட்டாரங்களில் ஒருபோதும் தலைகாட்டாதிருப்பது என்ற சிந்தனை அவன் மனத்தில் திரும்பத் திரும்ப ஏற்பட்டது. ''இங்கே நான் பார்க்கின்ற இந்த மனிதர்கள் மக்கள் அல்ல. அவர்களில் ஒருவருக்காவது என்னைத் தெரியாது, நான் மாஸ்கோவில் பழகிய உயர்வட்டாரத்தில் அவர்களில் ஒருவர்கூட இருந்திருக்க முடியாது, என்னுடைய கடந்த காலத்தைப் பற்றியும் தெரிந்திருக்க முடியாது.''

அவன் பிரயாணத்தின் போது நாகரிகமில்லாத பிறவிகள் மத்தியிலிருந்த பொழுது இதுவரை ஏற்படாத உணர்ச்சி, கடந்த கால வாழ்க்கையிலிருந்து விடுதலையடைந்து விட்ட உணர்ச்சி, அவனுக்கு ஏற்பட்டது; மாஸ்கோவில் தன்னுடைய பழைய நண்பர்களை அவன் மக்கள் என்று சொல்வதுண்டு, ஆனால் இவர்களை அவன் கனவில் கூட அப்படிச் சொல்லமாட்டான். அவர்களிடம் முரட்டுத்தனம் எவ்வளவு அதிகமாக இருந்ததோ, நாகரிக வாழ்க்கையின் குணாம்சங்கள் எவ்வளவு குறைவாக இருந்தனவோ, அந்த அளவுக்கு அவனுடைய சுதந்திர உணர்ச்சி அதிகரித்தது.

அவன் ஸ்தாவ்ரபல் வழியாகச் செல்லவேண்டிய அவசியம் ஏற்பட்ட பொழுது அவன் மனம் கலங்கியது. கடைப் பெயர்கள் எழுதப்பட்டிருந்த பலகைகள்—அவை பிரெஞ்சு மொழியில் கூட எழுதப்பட்டிருந்தன—கோச் வண்டிகளில் அமர்ந்து சென்ற சீமாட்டிகள், சதுக்கத்தில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த வண்டிகள், மரங்கள் வளர்ந்திருந்த நெடுஞ்சாலை, நெடுஞ்சாலையில் உலாவியவாறு வழிச்செல்வோரை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த கோட்டும் தொப்பியும் அணிந்த கனவான்—இவையனைத்தும் அவனிடம் அதிருப்தியை ஏற்படுத்தின.

''இவர்களில் சிலருக்கு என்னுடைய நண்பர்களைத் தெரிந்திருக்குமோ?'' அவன் மறுபடியும் கிளப்பை, தையற்காரனை, சீட்டுகளை, உயர்சமூக உல்லாசிகளை நினைத்துக் கொண்டான்...

அவன் ஸ்தாவ்ரபலைக் கடந்து வெகு தூரம் வந்துவிட்டான்; ஆகவே அவன் மனநிலையில் முன்னேற்றத்தை உணர்ந்தான். அங்கே சூழ்நிலை மனிதர் நடமாட்டமின்றி அழகாக இருந்தது. இன்னும் சிறப்பானது என்னவென்றால் சித்திரத்தைப் போல, போர்க் குணமுடையதாக இருந்தது. ஒலேனினுடைய இதயம் மேன்மேலும் மென்மை அடைந்தது. கஸாக்குகள், வண்டியோட்டிகள், தபால் நிலைய அதிகாரிகள் எல்லோரும் சூதுவாதில்லாதவர்கள் என்று அவன் கருதினான்; அவர்களைக் கபடமற்ற முறையில் கேலி செய்யலாம் அல்லது உரையாடலாம்; வர்க்க வேற்றுமைகளைப் பற்றி சிறிதும் சிந்திக்க வேண்டியதில்லை என்று அவனுக்குத் தோன்றியது. அவர்கள் எல்லோரும் மொத்த மனித இனத்தைச் சேர்ந்தவர்கள். ஒலேனின் தன்னையறியாமலே அதை நேசித்தான். அவர்கள் எல்லோரும் அவனிடம் நட்புணர்ச்சியுடன் நடந்துகொண்டார்கள்.

அவர்கள் தோன் கஸாக்குகளின் பிரதேசத்தைக் கடப்பதற்கு முன்பே பனிச்சறுக்கு வண்டிக்குப் பதிலாகச் சக்கர வண்டியை வைத்துக் கொண்டார்கள்; ஸ்தாவ்ரபலைக் கடந்ததும் வெப்பம் அதிகரித்தபடியால் ஒலேனின் மென்மயிர்க் கோட்டை அதன் பிறகு அணியவில்லை. அவன் வசந்த காலத்தைச் சந்தித்தான். ஒலேனினுக்கு அது மகிழ்ச்சியான திடீர் வியப்பாக இருந்தது.

அவர்கள் இரவு நேரத்தில் தபால் நிலையத்தை விட்டுப் போகவேண்டாம் என்று எச்சரிக்கை செய்தார்கள். மாலை நேரம் வந்தபொழுது ஆபத்தான பிரதேசத்துக்குள் இருப்பதாகச் சொல்லத் தொடங்கினார்கள். வன்யூஷா சிறிது கலவரமடைய ஆரம்பித்தான். குண்டு போடப்பட்ட துப்பாக்கி உடனே சுடுவதற்குத் தயாராக இருந்தது. இது ஒலேனினை இன்னும் விளையாட்டுத்தனமாக மாற்றியது. ஒரு தபால் நிலையத்தில் அதன் மேலாளர் சமீபத்தில் நெடுஞ்சாலையில் நடைபெற்ற கொலையைப் பற்றிய பயங்கரமான கதையைக் கூறினார்.

அவர்கள் ஆயுதங்கள் வைத்திருந்த மனிதர்களைச் சந்திக்க ஆரம்பித்தார்கள்.

''இது தான் ஆரம்பம்!'' என்றான் ஒலேனின். பலர் அவனிடம் வர்ணித்த பனி மூடிய மலைகளைப் பார்க்க வேண்டும் என்று அவன் துடிக்கத் தொடங்கினான். ஒரு சமயத்தில் மாலைப்பொழுதை நெருங்கிக் கொண்டிருந்த பொழுது நொகாய்* வண்டியோட்டி மேகங்களுக்கு மேலே தெரிந்த மலைகளைத் தன்னுடைய சவுக்கினால் சுட்டிக்காட்டினான். ஒலேனின் ஆர்வத்துடன் உற்றுப் பார்க்கத் தொடங்கினான்; ஆனால் அப்பொழுது இருள் கவிந்து கொண்டிருந்தது, மேகங்கள் பாதி மலைகளை மறைத்தன. சாம்பல், வெள்ளை நிறங்களில் சுருள் சுருளாக ஏதோ ஒன்றை ஒலேனின் பார்த்தான். அந்த மலைகளைப் பற்றி அவன் அதிகமாகப் படித்திருக்கிறான், கேள்விப்பட்டிருக்கிறான், ஆனால் அவன் எவ்வளவுக்கு முயற்சி செய்தபோதிலும் அந்த மலைகளில் அழகான அம்சம் எதையுமே பார்க்க இயலவில்லை. மலைகளும் மேகங்களும் முற்றிலும் ஒரே மாதிரியாக இருக்கின்றன; பனி மூடிய மலைகளின் பிரத்யேகமான அழகைப் பற்றித் தன்னிடம் சொல்லப்பட்டதெல்லாம் பாஹின்** இசை அல்லது பெண்ணிடம் காதலைப் போலக் கற்பனையே. அவற்றில் அவனுக்கு நம்பிக்கை கிடையாது, ஆகவே அவன் மலைகளைப் பற்றி ஏங்குவதை நிறுத்திக்கொண்டான்.

ஆனால் மறுநாள் அதிகாலையில் சக்கரவண்டிக்குள் அடித்த குளிர்காற்று அவனை எழுப்பியது. அவன் அலட்சியத்தோடு வெளியே பார்த்தான். காற்று வியக்கத்தக்க விதத்தில் தெளிவாக இருந்தது. அவன் திடீரென்று பரிசுத்தமான வெள்ளை மலைத் திரள்களை, அவற்றின் மென்மையான வளைவுகளை, நெடுந்தூரத்துக்கு அப்பாலுள்ள நீல வானத்தின் பின்னணியில் மலைச்சிகரங்களின் அற்புதமான, பூரணத்துவமுடைய, மென்மையான உருவரைகளைக் கண்டான். முதல் பார்வைக்கு அவனிட

---

* ஸ்டெப்பிகளில் வ த்த தார்த்தாரியர்கள் நொகாய் மக்கள் என்று சொல்லப்பட்டார்கள். (மொ-ர்.)

** பாஹ் யோகன் செபஸ்தியான் *(1685—1750)*—ஜெர்மானிய இசை மேதை. (மொ-ர்.)



மிருந்து இருபது தப்படிகள் தூரத்திற்குள் அவை இருப்பதைப் போலத் தோன்றியது. தனக்கும் மலைகளுக்கும் வானத்துக்கும் இடையிலிருந்த முழுத்தூரத்தையும் மலைகளின் எல்லா கம்பீரத்தையும் அவன் புரிந்துகொண்ட பொழுது, அந்த அழகின் நிரந்தரத்தை அவன் உணர்ந்த பொழுது, அது வெறும் கற்பனையோ, கனவோ என்று கலங்கினான். விழித்துக்கொள் என்று அவன் தன்னை உலுக்கினான். ஆனால் அந்த மலைகள் அங்கே முன்னர் பார்த்த மாதிரியாகவே இருந்தன.

''அது என்ன? அது என்ன, சொல்!'' என்று அவன் வண்டியோட்டியைக் கேட்டான்.

''அதுவா? மலைகள்'' என்று நொகாய் வண்டியோட்டி அலட்சியமாக பதிலளித்தான்.

''நானும் அவற்றைத்தான் அதிக நேரம் பார்த்துக் கொண்டிருந்திருக்கிறேன். எவ்வளவு அழகு! அவை மிகவும் அழகாயில்லையா? இதை வீட்டில் உள்ளவர்களிடம் சொன்னால் என்னை நம்பமாட்டார்கள்'' என்றான் வன்யூஷா.

மூன்று குதிரைகளும் சமதளமான சாலையில் வேகமாக ஓடியபொழுது மலைகளும் அடிவானம் நெடுகிலும் ஓடி வருவதைப் போலத் தோன்றியது. மலைகளின் இளஞ் சிவப்பான சிகரங்கள் சூரியோதயத்தின் ஒளியில் பிரகாசித்துக் கொண்டிருந்தன. மலைகள் ஒலேனினுடைய மனத்தில் முதலில் வியப்புணர்ச்சியையும் பின்னர் பேரானந்தத்தையும் மட்டுமே ஏற்படுத்தின; பின்னர் கறுப்பு நிற மலைகள் ஒன்றின் மீதொன்றாக அடுக்கி வைக்கப்பட்டதைப் போன்று இல்லாமல் ஸ்டெப்பி நிலத்திலிருந்து முளைத்து செங்குத்தாக மேலே உயர்ந்து வளர்ந்து

நின்ற, சங்கிலித்தொடர் போல வரிசையாக இருந்த பனி மூடிய மலைகளை அவன் பார்த்தபொழுது, அவற்றின் அழகைப் படிப்படியாக ஆழ்ந்து ரசிக்கத் தொடங்கினான்; அவன் மலைகளை **உணர்ந்தான்.**

அந்தத் தருணத்திலிருந்து அவன் பார்த்த எல்லாம், அவன் சிந்தித்த எல்லாம், அவன் உணர்ந்த எல்லாம் மலைகளின் புதிய, கடுமையான கம்பீரத்தைப் பெற்றன. மாஸ்கோவைப் பற்றிய அவனுடைய நினைவுகள், காகசசைப் பற்றிய அவனுடைய பழைய கற்பனைகள் எல்லாமே மறைந்தன, அவை ஒருபோதும் திரும்பவில்லை.

''வாழ்க்கை ஆரம்பமாகிறது'' பெருமிதம் நிறைந்த ஏதோ ஒரு குரல் அவன் காதுக்குள் பேசியதைப் போலத் தோன்றியது. சாலை, வெகு தூரத்துக்கு அப்பாலிருக்கின்ற, இப்பொழுது கண் பார்வைக்குத் தென்பட்ட தேரெக் ஆற்றின் உருவரை, கஸாக்குகளின் கிராமங்கள், மக்கள் ஆகிய எல்லாமே இனிமேல் அற்பமானவையாக அவனுக்குத் தோன்றவில்லை. அவன் வானத்தை நோக்குகிறான், மலைகளை நினைக்கிறான்; தன்னை, வன்யூஷாவை நோக்குகிறான், மீண்டும் மலைகளை நினைக்கிறான்.

இதோ இரண்டு கஸாக்குகள் குதிரையின் மீது சவாரி செய்து கொண்டு வருகிறார்கள்; அவர்களுடைய துப்பாக்கிகள் முதுகில் தொங்கிக் கொண்டு இருக்கின்றன, பழுப்பு நிறக் கால்களும் சாம்பல் நிறக் கால்களும் இணைந்து கலக்கும் விதத்தில் குதிரைகள் ஓடி வந்தபொழுது துப்பாக்கிகள் தாள லயத்துடன் அசைந்தாடின; ஆனால் மலைகள்... தேரெக் ஆற்றுக்கு அப்பால் ஏதோ ஒரு மலைக் கிராமத்திலிருந்து புகை மேலே எழும்பி வந்து கொண்டிருந்தது; ஆனால் மலைகள்... சூரியன் உச்சியிலிருந்து நாணற் புதர்கள் மத்தியில் வளைந்து செல்கின்ற ஆற்றின் மீது பிரகாசிக்கிறது; ஆனால் மலைகள்... கஸாக்குகளின் கிராமத்திலிருந்து ஒரு வண்டி வருகிறது; அழகான பெண்கள், இளம் பெண்கள் போய்க் கொண்டிருக்கிறார்கள்; ஆனால் மலைகள்... அப்ரேக்குகள் ஸ்டெப்பி நிலத்தில் பாய்ந்தோடிக் கொண்டிருக்கிறார்கள்; நான் வந்து கொண்டிருக்கிறேன், அவர்களைப் பற்றி எனக்கு அச்சமில்லை, என்னிடம் துப்

பாக்கியும் வலிமையும் இளமையும் இருக்கிறது; ஆனால் மலைகள்...

## 4

தேரெக் ஆறு நெடுகிலும் எண்பது வெர்ஸ்டாக்கள் வரை கிரேபென் கஸாக்குகளின் கிராமங்கள் சிதறிக் கிடந்தன. இப்பிரதேசம் அதன் நில அமைப்பில் மட்டு மன்றி மக்கள் தொகையிலும் ஒரே சீரான தன்மை உடையதாக இருந்தது. கஸாக்குகளை மலைக்குடியினரிட மிருந்து பிரிக்கின்ற தேரெக் ஆறு கலங்கலாகவும் வேக மாகவும் ஆனால் அகன்ற, சமதளமான நீரோட்டமாக ஓடுகிறது; அது சாம்பல் நிற மணலைத் தாழ்வான, நாணற்புதர் நிறைந்த வலது கரையில் தொடர்ச்சியாகக் கொண்டு சேர்க்கிறது; நூறு ஆண்டுகள் பழைய ஓக் மரங் கள், அழுகிப் போன சினார் மரங்கள், புதர்களின் சிக் குப்பட்ட வேர்களைக் கொண்ட செங்குத்தான, ஆனால் உயரமில்லாத இடது கரையை அரித்துச் செல்கிறது.

வலது கரையில் ருஷ்யாவின் ஆட்சிக்கு உட்பட்ட ஆனால் இன்னும் அமைதியில்லாத மலைக்குடியினரின் கிராமங்கள் இருந்தன; இடது கரையில், ஆற்றிலிருந்து அரை வெர்ஸ்டா தூரத்தில், ஏழு அல்லது எட்டு வெர்ஸ் டா இடை வெளிவிட்டு கஸாக்குகளின் கிராமங்கள் இருந் தன. பழைய காலத்தில் இக்கிராமங்களில் பெரும்பான் மையும் ஆற்றின் கரையிலேயே அமைந்திருந்தன. ஆனால் ஒவ்வொரு ஆண்டும் மலையிலிருந்து மேன்மேலும் வடக்கு நோக்கிப் போய்க் கொண்டிருக்கின்ற தேரெக் ஆறு அவற்றை அரித்தழித்துவிட்டது. இப்பொழுது பழைய இடிபாடுகள், தோட்டங்கள், காட்டு திராட்சைக் கொடி கள் பின்னியிருக்கின்ற பேரி மரங்கள், போப்லார் மரங் கள், ஈச்ச மரங்கள் மட்டுமே கண்களுக்குத் தென்படுகின் றன. அங்கே இப்பொழுது யாரும் வசிப்பதில்லை. இத் தகைய இடங்களுக்கு வழக்கமாக வருகின்ற மான்கள், ஓநாய்கள், முயல்கள், காட்டுக்கோழிகள் மணலில் பதித்த சுவடுகள் மட்டுமே வாழ்க்கையின் அறிகுறிகளாக இருக் கின்றன.

காட்டின் வழியாக ஒரு நேர்பாதை ஒரு கஸாக்குகளின் கிராமத்திலிருந்து மற்றொரு கிராமத்துக்குச் செல்கிறது.

அப்பாதை நெடுகிலும் கஸாக்குகள் காவல் செய்கின்ற இராணுவ நிலையங்கள் அல்லது காவல் நிலையங்கள் இருக்கின்றன. காவல் நிலையங்களுக்கு இடையில் போர் வீரர்கள் காவல் செய்கின்ற காவல் பரண்கள் இருக்கின் றன. சுமார் எழுநூறு கஜம் அகலமுள்ள வளமான, குறு கிய காட்டுநிலப் பகுதி மட்டுமே கஸாக்குகளின் ஆட் சிக்கு உட்பட்டிருக்கிறது.

நொகாய் அல்லது மஸ்தோக் ஸ்டெப்பி என்று சொல் லப்படுகின்ற மணற்பகுதி வடக்கில் ஆரம்பித்து நெடுந் தூரம் வரை சென்று துர்க்மேனிய, அஸ்த்ரஹான் மற் றும் கிர்கிஸ்-கைஸான் ஸ்டெப்பிகளுடன் போய்ச் சேர் கிறது. அது எந்த இடத்தில் சேர்கிறது என்பது கடவு ளுக்குத்தான் தெரியும். தெற்கில் தேரெக்கைக் கடந்து மகா செச்னியா, கோச்கலிக் மலைத்தொடர், கறுப்பு மலைகள் அமைந்திருக்கின்றன. அவற்றையடுத்து இன் னும் ஒரு பாறை மலைத்தொடர், கடைசியில் காற்று மண்டலத்தில் உயரமாக எழுந்துள்ள பனி மூடிய மலை கள் இருக்கின்றன. அவற்றில் இதுவரை மனிதன் கால் வைக்கவில்லை.

வளமான காட்டுநிலப் பகுதியில் எல்லா விதமான தாவரங்களும் வளர்கின்றன. அங்கே நினைவுக்கு எட் டாத காலத்திலிருந்து போர்க்குணமுடைய, அழகான, செல்வந்தர்களான ருஷ்ய மக்கள் வசித்து வருகிறார்கள். கிரேபென் கஸாக்குகள் என்னும் பெயருள்ள அந்த ருஷ் யர்கள் 'பழைய நம்பிக்கை'யைப்* பின்பற்றுகிறார்கள்.

நெடுங்காலத்துக்கு முன்னர் 'பழைய சமயவாதிகள்' எனப்பட்ட அவர்களுடைய முன்னோர்கள் ருஷ்யாவிலி ருந்து தப்பியோடி தேரெக் ஆற்றுக்கு அப்பால் கிரேபென் அதாவது மகா செச்னியாவின் மலைகளின் முதலா வது தொடரில் வசித்த செச்செசன் மக்கள் மத்தியில் குடியேறினார்கள். இந்தக் கஸாக்குகள் தமது புதிய அண்டை அயலாரான செச்செசன் மக்களுடன் திருமண

---

* பழைய நம்பிக்கை—17ஆம் நூற்றாண்டில் ருஷ்யா வில் சமயப் பிளவு ஏற்பட்ட பிறகு தோன்றிய சமய இயக் கம்; பழைய சமய வழிபாட்டு முறைகளைப் பாதுகாப் பதற்கு முற்பட்டது. (ப-ர்.)

உறவுகளை வைத்துக்கொண்டார்கள்; மலைக்குடியினருடைய பழக்கவழக்கங்கள், வாழ்க்கை முறை, பண்புகளைக் கடைப்பிடித்தார்கள்; ஆனால் அங்கும் கூட பண்டைக்கால ருஷ்ய மொழியையும் தங்களுடைய தூய்மையைப் பற்றிய பழைய நம்பிக்கையையும் பாதுகாத்துக் கொள்வதில் வெற்றியடைந்தார்கள். ஜார் பயங்கர இவான் தேரெக் ஆற்றுக்கு வந்ததாகவும் மலைத்தொடர் முகட்டில் வசித்த கஸாக்குகளின் முதியவர்களைத் தன்னைச் சந்திக்குமாறு அழைத்து ஆற்றின் ருஷ்யக் கரையிலிருந்து நிலத்தை அவர்களுக்கு வழங்கி, சமாதானமாக வாழ வேண்டும் என்று பணித்ததாகவும் அவர்கள் தனக்கு விசுவாசமாக இருக்க வேண்டும் அல்லது தங்களுடைய நம்பிக்கையை மாற்றிக்கொள்ள வேண்டும் என்று கோரமாட்டேன் என்று வாக்குறுதியளித்ததாகவும் அவர்கள் மத்தியில் இன்னும் பாதுகாக்கப்பட்டு வருகின்ற பழங்கதை தெரிவிக்கிறது.

இக்காலத்தில் கஸாக்குகள் மலைக்குடியினருடன் சில பொதுவான அம்சங்களைக் கொண்டிருக்கின்றனர். சுதந்திர தாகம், சோம்பேறித்தனம், வழிப்பறி செய்தல், போர்க்குணம் ஆகியவை அவர்களுடைய முக்கியமான குணாம்சங்களாகும். ருஷ்யா அவர்கள் மீது பாதகமான முறையில் மட்டுமே தாக்கம் செலுத்துகிறது. தேர்தல்களில் நிர்ப்பந்தத்தைப் பிரயோகித்தல், மாதாகோவில் மணிகளை அகற்றல், வீடுகளில் படைவீரர்களுக்குத் தங்குமிடம் அளிக்குமாறு கட்டாயப்படுத்துதல் ஆகியவை கடைப்பிடிக்கப்படுகின்றன. கஸாக்கு, தன்னுடைய சகோதரனைக் கொன்ற வீரமான மலைக்குடிமகனைக் காட்டிலும் தன்னுடைய கிராமத்தைப் பாதுகாப்பதற்காக அங்கே குடியமர்த்தப்பட்டிருந்த, ஆனால் குடிசை முழுவதும் புகையிலைப் புகையின் நெடியைப் பரப்புகின்ற ஜாரின் படைவீரனையே அதிகமாக வெறுத்தான். அவன் தன்னுடைய மலைக்குடி எதிரியை மதித்தான்; ஆனால் அந்நிய ஒடுக்குமுறையாளன் என்று அவன் கருதிய படைவீரனை வெறுத்தான். ருஷ்ய விவசாயி இரண்டுங்கெட்ட பிறவி, காட்டுத்தனமானவன், இகழ்வதற்குக் கூடத் தகுதியற்றவன் என்று கஸாக்கு கருதினான். ஊர் ஊராகச் செல்கின்ற வியாபாரி அல்லது சிறிய ருஷ்ய குடியேறி

எனப்படுபவர்களில் அந்த ரகத்தைப் பார்க்க முடியும். கஸாக்கு செர்கேஷியனைப் போல உடையணிவதை மிகவும் உயர்ந்த நாகரிகபாணி என்று கருதுகிறான். அவன் மலைக்குடியினரிடமிருந்து தனக்குச் சிறந்த ஆயுதங்களை வாங்குகிறான்; தனக்கு வேண்டிய சிறந்த குதிரைகளை அவர்களிடமிருந்து வாங்குகிறான் அல்லது திருடுகிறான். வீரம் நிறைந்த இளம் கஸாக்கு தன்னுடைய தார்த்தாரிய மொழியறிவைப் பற்றிப் பெருமைப்படுகிறான்; அவன் குடித்துக் கும்மாளம் போடுகின்ற பொழுது தன்னுடைய சகோதரனிடம் கூட தார்த்தாரிய மொழியில் பேசுகிறான்.

எனினும் குறைவான எண்ணிக்கையைக் கொண்டுள்ள இந்தக் கிறிஸ்துவ மக்கள், உலகத்தின் சிறிய மூலையில் அடைத்துவைக்கப் பட்டிருப்பவர்கள், அரை நாகரிக நிலையிலுள்ள முகமதிய இனங்கள் மற்றும் படைவீரர்களால் சூழப்பட்டிருப்பவர்கள் மிகவும் உயர்ந்த பண்பாட்டைப் பெற்றிருப்பதாகத் தங்களைக் கருதுகிறார்கள்; கஸாக்கு ஒருவன் மட்டுமே மனிதன் என்ற பெயருக்குத் தகுதியுள்ளவன் என்று நினைத்துக்கொண்டு மற்ற எல்லோரையும் வெறுக்கிறார்கள். கஸாக்கு தன்னுடைய நேரத்தில் பெரும்பகுதியைக் காவல் நிலையங்கள், படையெடுப்புகள், வேட்டையாடுதல், மீன் பிடித்தல் ஆகியவற்றில் கழிக்கிறான். அவன் மிகவும் அபூர்வமாகவே வீட்டில் வேலை செய்வான். எப்பொழுதாவது கிராமத்தில் தங்கினால் அது விதிவிலக்காகவே இருக்கும். ஆனால் அங்கே தங்கியிருக்கின்றபொழுது அவன் உல்லாசமாகத்தான் இருப்பான். ஒயின் கஸாக்குகள் எல்லோரிடமும் இருக்கின்ற பொதுச் சரக்காகும். மயக்கம் வருகின்ற வரை குடிப்பது சர்வப்பொதுவான குணம் என்று சொல்வதைக் காட்டிலும், அது ஒரு சடங்கு, அதை நிறைவேற்றாமலிருப்பது கடமை தவறுதல் எனக் கருதப்படும் என்றுதான் கூற வேண்டும்.

பெண் தனக்கு சுகவாழ்க்கை அளிக்கின்ற கருவி என்று கஸாக்கு கருதுகிறான். அவளுக்குத் திருமணம் ஆகாதிருக்கின்றவரை அவள் உல்லாசமாக இருக்க அனுமதிக்கப்படுகிறாள்; ஆனால் அவள் மனைவி ஆனதுமே இளம் பருவத்தின் இன்பங்களை ஒதுக்கிவிட்டுக் கணவனுடைய

சுகத்துக்காகக் கடைசி நாள் வரையிலும் கூட உழைக்க வேண்டும். அவள் தனக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும், உழைக்க வேண்டும் என்று அவன் வலியுறுத்துகின்ற பொழுது முற்றிலும் கீழை நாட்டுக்காரனாகவே நடந்து கொள்கிறான்.

இத்தகைய நிலைமையின் விளைவாகப் பெண்கள் கீழ்ப்படிந்திருப்பதாகத் தோன்றினாலும் உடலியலிலும் தார்மீகரீதியிலும் ஆற்றல்மிக்கவர்களாக வளர்ச்சியடைகிறார்கள். கீழை நாடுகள் எல்லாவற்றிலும் இருப்பதைப் போல மேற்கு நாடுகளில் இருப்பதைக் காட்டிலும் குடும்ப விவகாரங்களில் ஒப்பிட முடியாத அளவுக்கு அதிகமான செல்வாக்கும் முக்கியத்துவமும் உடையவர்களாக இருக்கிறார்கள். சமூகத்திலிருந்து அவர்களை ஒதுக்கிவைத்தல், கடுமையான உடல் உழைப்புக்கு அவர்களைப் பழக்கப்படுத்தல் ஆகியவை குடும்ப விவகாரங்களில் அவர்களுக்கு இன்னும் கூடுதலான அதிகாரத்தையும் ஆதிக்கத்தையும் அளிக்கின்றன. அந்நியர்களுக்கு முன்னால் தன்னுடைய மனைவியிடம் அன்பாகப் பேசுவது அல்லது வம்பளப்பது தரக்குறைவானது என்று கருதுகின்ற கஸாக்கு அவளுடன் தனித்திருக்கின்ற பொழுது அவளுடைய மேன்மையை உணராமலிருக்க முடியவில்லை. அவனுடைய வீடு முழுமையும், பண்ணை முழுமையும், குடித்தனம் முழுமையும் அவள்தான் உருவாக்கினாள்; அவளுடைய உழைப்பு, முயற்சிகளினால் மட்டுமே அவை நிலைத்திருக்கின்றன. ஒரு கஸாக்கு உடலுழைப்புச் செய்வது தரக்குறைவானது, நொகாய் உழைப்பாளி அல்லது பெண்ணுக்கு மட்டுமே அது உரிய தொழில் என்று அவன் பிடிவாதமாகக் கருதினாலும், தனக்கு சுகமளிக்கின்ற ஒவ்வொன்றும், அவன் தன்னுடையது என்று சொல்லிக்கொள்கின்ற ஒவ்வொன்றும் அந்த உடலுழைப்பின் பலன், தனக்குச் சொகுசான வாழ்க்கையைத் தருகின்ற எல்லாவற்றையும் அகற்றக் கூடிய சக்தி தன்னுடைய தாயாரிடம் அல்லது தன் பண்ணையடிமை என்று கருதுகின்ற தன் மனைவியிடம் உள்ளது என்பதை அவன் மங்கலாக உணர்ந்திருக்கிறான்.

மேலும் ஆணுக்குரிய கடும் உழைப்பைத் தொடர்ச்சியாகச் செய்தல், பெண்களிடம் ஒப்படைக்கப்பட்டிருக்

கின்ற கடமைகள் கிரேபென் கஸாக்குப் பெண்களுக்கு ஒரு தனிவகையான, சுதந்திரமான இயல்பைக் கொடுத்தன; அவர்களிடம் உடல்பலம், நிதான புத்தி, மன உறுதி, நிலையுறுதி ஆகியவற்றைக் குறிப்பிடத்தக்க அளவில் வளர்ப்பதற்கு உதவியிருக்கின்றன. பெண்களில் பெரும்பான்மையினர் ஆண்களைக் காட்டிலும் பலசாலிகளாக, புத்திசாலிகளாக, நல்ல வளர்ச்சியடைந்தவர்களாக, அழகானவர்களாக இருக்கிறார்கள்.

பரிசுத்தமான செர்கேஷிய முகம் வடதிசைப் பெண்ணின் அகன்ற, வலிமையான உடலமைப்புடன் குறிப்பிடத்தக்க முறையில் இணைந்திருப்பதால் கிரேபென் கஸாக்குப் பெண்கள் தனிவகையான அழகுள்ளவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் வழக்கமாக செர்கேஷிய உடை அதாவது தார்த்தாரிய சட்டை, பெஷ்மெத் அல்லது நீண்ட மேலங்கி, சுவ்யாக்கி என்று சொல்லப்படுகின்ற காலணி அணிந்திருக்கிறார்கள்; ஆனால் ருஷ்ய முறையில் தலையில் துணியைக் கட்டிக்கொள்கிறார்கள். சுத்தமான, அழகான உடைகளை அணிதல், குடிசைகளை அலங்காரம் செய்தல் அவர்களுடைய வாழ்க்கையின் பிரிக்க முடியாத அம்சங்களாக இருக்கின்றன. ஆண்களுடன் உறவுகளில் மாதர், குறிப்பாக இளம் பெண்கள், வரைமுறையில்லாத சுதந்திரத்தைப் பெற்றிருக்கிறார்கள்.

நவம்லீன்ஸ்கயா கிராமம் கிரேபென் கஸாக்குகளின் ஆதிக் குடியிருப்பு என்று கருதப்படுகிறது. ஆதி கிரேபென் கஸாக்குகளின் பழக்கவழக்கங்களும் மரபுகளும் மற்ற இடங்களைக் காட்டிலும் இங்குதான் பாதுகாக்கப்பட்டிருக்கின்றன. இந்த கிராமத்துப் பெண்களின் அழகு காகசஸ் முழுவதிலும் எப்பொழுதுமே பிரபலமாக இருந்திருக்கிறது. கஸாக்குகள் பெரும்பாலும் தங்களுடைய திராட்சைத் தோட்டங்கள் மற்றும் பழத் தோட்டங்கள், தர்ப்பூசணிப் பழம் மற்றும் சுரைக்காய் பயிர் செய்கின்ற நிலத்துண்டுகள், மீன் பிடித்தல் மற்றும் வேட்டையாடுதல், சோளம் மற்றும் தினை வயல்கள் மற்றும் யுத்தக் கொள்ளைகள் ஆகியவற்றில் கிடைப்பதைக் கொண்டு வாழ்கிறார்கள்.

அந்த கிராமம் தேரெக்கிலிருந்து மூன்று வெர்ஸ்டாக்கள் தொலைவில் இருக்கிறது; அடர்த்தியான காடு தே



ரெக்கிலிருந்து அதைப் பிரிக்கிறது. கிராமத்தின் முக்கிய மான பாதையின் ஒரு பகுதியில் ஒரு சிற்றாறு இருக்கிறது; மறு பகுதியில் பசுமையான திராட்சைத் தோட்டங்களும் பழத் தோட்டங்களும் இருக்கின்றன. அவற்றுக்கு அப் பால் நொகாய் ஸ்டெப்பியின் மணற்தேரிகளைப் பார்க்க முடியும்.

கிராமத்தைச் சுற்றி மண் கோட்டையும் முள்வேலி யும் இருக்கின்றன. ஒவ்வொரு தெருவின் முடிவிலும் உயரமான தூண்களுக்கு இடையில் அமைக்கப்பட்டுள்ள விசாலமான கதவுகள் இருக்கின்றன. நாணல் வேயப்பட்ட குறுகலான கூரை அக்கதவுகளைப் பாதுகாக்கிறது. கதவு களுக்கு அருகில் மரப் பலகை மேடையில் ஒரு அவலட் சணமான பீரங்கி நிறுத்தப்பட்டிருக்கிறது. கஸாக்குகள் எங்கோ ஒரு இடத்தில் அடைந்த வெற்றியின் சின்னம் அது. இராணுவ உடை, தொப்பி அணிந்து துப்பாக்கியை வைத்துக் கொண்டிருக்கிற கஸாக்கு கதவுகளுக்குப் பக் கத்தில் காவல் செய்வதை சில சமயங்களில் பார்க்க லாம்; சில சமயங்களில் அவன் இருக்கமாட்டான். அவன் அந்த வழியாகச் செல்கின்ற அதிகாரிக்கு சில சமயங்களில்

சரியான இராணுவ முறையில் மரியாதை செய்வான், சில சமயங்களில் அப்படி மரியாதை செய்ய மறந்துவிடுவான்.

கதவின் மேலே உள்ள கூரையின் கீழ் ஒரு வெள்ளைப் பலகை தொங்குகிறது. அதில் கறுப்பு வர்ணத்தில் பின் வருமாறு எழுதப்பட்டிருக்கிறது:

| |
|---|
| 266 வீடுகள் |
| 897 ஆண்கள் |
| 1012 பெண்கள் |

பூமிக்கு மேலே இரண்டு அல்லது மூன்று அடித் தூண் களின் மீது கஸாக்குகளின் வீடுகள் கட்டப்பட்டிருக்கின் றன. உயரமான மோட்டு உத்தரங்களில் நாணல் கூரை அழகாக அமைக்கப்பட்டிருக்கும். வீடுகள் புதியவையாக இல்லாவிட்டால் கூட அவை விதிவிலக்கில்லாமல் சுத்தமாக வும் நல்ல முறையிலும் பராமரிக்கப்பட்டிருக்கும். அகன்ற வீதிகளிலும் பாதைகளிலும் விஸ்தாரமான மனைக்கட் டில் அமைக்கப்பட்டிருக்கின்ற வீடுகள் வசதியாக இருப் பதுடன் கவர்ச்சிகரமாகத் தோற்றமளிக்கின்றன.

பல வீடுகளின் வேலிகளுக்குப் பின்னால் பிரகாசமான, அகன்ற சன்னல்களுக்கு முன்பாக கரும்பச்சை நிறப் போப்லார் மரங்கள், மென்மையான, பிரகாசமான இலை களைக் கொண்ட மரங்கள் வளர்க்கப்படும், அவற்றில் நறுமணம் கமழ்கின்ற வெண்ணிற மலர்கள் பூத்திருக் கும்; சூரியகாந்தியில் பிரகாசமான மஞ்சள் நிறப் பூக்கள் பூத்திருக்கும்; பட்டாணி, திராட்சைக் கொடிகளின் இலை கள் கொம்புகளைச் சுற்றிவரும்.

அகன்ற சதுக்கத்தில் இரண்டு அல்லது மூன்று கடை களைப் பார்க்கலாம். அவற்றில் துணிகள், விதைகள், பச்சைப் பட்டாணிக் காய்கள், கேக்குகள் ஆகியவை இருக் கும். உயரமான வேலி மற்றும் தொன்மையான போப் லார் மரங்களின் வரிசைக்குப் பின்னால் மற்ற வீடுகளைக் கீழே நோக்கிப் பார்த்தபடி மரப்பலகைச் சன்னல்கள் உள்ள கர்னலின் வீடு இருக்கும்.

சாதாரண நாட்களில், குறிப்பாகக் கோடைகாலத் தில் தெருக்களில் பொதுவாக ஆட்கள் இருக்கமாட்டார்

கள். கஸாக்குகள் காவலுக்கும் படையெடுப்புகளுக்கும் போய்விட்டார்கள்; முதியவர்கள் வேட்டைக்கு அல்லது மீன் பிடிக்க அல்லது காய்கறித் தோட்டங்களில் அல்லது பழத் தோட்டங்களில் பெண்களுக்கு உதவி செய்வதற் குச் சென்றிருப்பார்கள். அதிகமான முதுமைத் தளர்ச்சி யுற்றவர்கள், குழந்தைகள், நோயாளிகள் மட்டுமே வீடு களில் இருப்பார்கள்.

## 5

அது மிகவும் அழகான மாலைநேரம். காகசசில் மட்டுமே அத்தகைய அழகான மாலைப்பொழுதுகளைப் பார்க்க முடியும். சூரியன் மலைகளுக்குப் பின்னால் மறைந்துவிட்ட போதிலும் இன்னும் வெளிச்சம் இருந்தது. வானத்தின் மூன்றிலொரு பகுதியில் அந்திப் பொழுதின் செவ்வொளி பரவியிருந்தது; மலைகளின் மங்கலான வெண்திரள்கள் அந்திப் பொழுதின் பிரகாசத்தைத் தெளி வாக எடுத்துக்காட்டின. அபூர்வமான, அமைதியான காற்று; நெடுந் தொலைவிலிருந்து வருகின்ற ஒலிகள் காற்றில் மிதந்து வந்தன. ஸ்டெப்பியின் ஊடே பல வெர்ஸ்டாக்கள் தூரத்துக்கு மலைகளின் நீண்ட நிழல் விழுந்தது.

எங்குமே, ஸ்டெப்பியில், ஆற்றுக்கு அப்பால், பாதை நெடுகிலும் நடமாட்டமில்லை. அவ்வப்பொழுது குதிரை களில் யாரும் வந்தால் உடனே காவல்நிலையக் கஸாக்கு களும் மாலைக் கிராமத்திலிருந்து செச்சென்களும் வியப் பும் ஆர்வமும் மேலிடப் பார்க்கிறார்கள்; இங்கே வரு கின்ற சந்தேகத்துக்குரிய நபர்கள் யாராக இருக்கும் என்று ஊகிப்பதற்கு முயல்கிறார்கள். மாலைப்பொழுது நெருங்கியவுடனே மக்கள் ஒருவருக்கொருவர் அச்சத் துடன் தங்களுடைய வீடுகளை நோக்கிச் செல்கிறார்கள். மனிதர்களைக் கண்டு அஞ்சாத காட்டு விலங்குகளும் கொடும் பறவைகளும் மட்டுமே இந்தப் பிரதேசத்தில் சுதந்திரமாகத் திரிகின்றன. சூரியன் மறைவதற்கு முன்பே, தோட்டங்களில் வேலை செய்து கொண்டிருந்த கஸாக் குப் பெண்கள் வீடுகளுக்குத் திரும்புகிறார்கள்; அவர்கள்

சிரித்துப் பேசிக்கொண்டு வேகமாக நடக்கிறார்கள்; அப் பிரதேசத்தின் எல்லாப் பகுதிகளையும் போல பழத் தோட்டங்களிலும் ஓசையடங்குகிறது.

ஆனால் தெருக்கள் இந்த நேரத்தில் மிகவும் பரபரப் பாகக் காணப்படுகின்றன. மக்கள் எல்லாத் திசைகளி லிருந்தும் கால்நடையாக, குதிரையின் மீது, கடகடக் கின்ற இரண்டு சக்கரவண்டிகளில் கிராமத்தை நோக்கி வந்து கொண்டிருக்கிறார்கள். இளம்பெண்கள் பாவாடை முனையை மேலே சொருகிக்கொண்டு, கையில் மிலாறு டன் உல்லாசமாக அரட்டையடித்துக் கொண்டு கால் நடைகளைப் பார்க்கக் கதவுகளை நோக்கி வேகமாகச் செல்கிறார்கள். ஸ்டெப்பியிலிருந்து கால்நடைகள் தூசி யும் கொசுக்களும் மேகத்தைப் போலப் பின்தொடர வரு கின்றன. அவை கூட்டம் கூட்டமாக கிராம வெளிக் கதவுக்குப் பக்கத்தில் நின்றன. வயிறு பெருத்த பசுக் களும் பெண் எருமைகளும் தெருக்களில் இங்குமங்கும் செல்கின்றன. பிரகாசமான நிறங்களில் சட்டை அணிந் துள்ள கஸாக்குப் பெண்கள் அவற்றுக்கு ஊடே நடமாடிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய நறுக்கான பேச் சுக்களும் கலீரென்ற சிரிப்பும் கூச்சலும் கால்நடைகளின் கனைப்பொலியுடன் கலந்து கேட்கின்றன.

அதோ காவல் நிலையத்திலிருந்து விடுமுறையில் வந் துள்ள கஸாக்கு ஆயுதத்துடன் குதிரையில் வருகிறான். அவன் ஒரு குடிசையை நோக்கிச் சென்று சன்னலில் டக் டக்கென்று தட்டிவிட்டு அதன்மீது குனிந்து நிற்கிறான். உடனே ஒரு அழகிய இளம்பெண்ணின் முகம் தெரிகிறது. அவர்களுடைய குதூகலமான, பாசமான உரையாடல் கேட்கிறது.

அதோ ஒரு நொகாய் உழைப்பாளி. அவன் கந்த லான உடையணிந்திருக்கிறான்; கன்னத்தில் எலும்புகள் துருத்திக் கொண்டு வெளியே தெரிகின்றன. அவன் ஸ்டெப்பியிலிருந்து நாணல் தட்டைகளை வெட்டிக் கொண்டு வருகிறான். அவனுடைய வண்டியை கஸாக் குக் காப்டனுடைய வீட்டின் நன்றாகப் பெருக்கப்பட்ட அகன்ற முற்றத்துக்குள் ஓட்டிவந்து நிறுத்துகிறான். காளைகளின் கழுத்திலிருந்து நுகத்தடியை அகற்றுவதற் குக் குனியும்பொழுது அவை தலைகளை ஆட்டுகின்றன.

பிறகு அவன் தன்னுடைய எசமானருடன் தார்த்தாரிய மொழியில் சில வார்த்தைகளைப் பேசுகிறான்.

தெருவின் குறுக்கே அநேகமாக அதன் அகலத்துக்கு ஒரு பெரிய குட்டை இருக்கிறது. நெடுங்காலமாகவே அங்கே செல்வர்கள் பாதையிலிருந்து விலகிச்சென்று வேலிகளை கவனமாகப் பிடித்துக் கொண்டு அதைக் கடக்க வேண்டும். குட்டையின் ஓரத்தில் ஒரு கஸாக்குப் பெண் காலணி இல்லாமல் முதுகில் விறகுகளைக் கட்டிக்கொண்டு வருகிறாள். அவள் தன்னுடைய வெண்மையான கணுக்கால்களுக்கு மேலே மிகவும் உயரமாகப் பாவாடையைத் தூக்குகிறாள். அவளுக்குப் பக்கத்தில் குதிரையில் திரும்பி வந்து கொண்டிருந்த கஸாக்கு வேட்டைக்காரன் அவளைக் கேலி செய்கிறான்: ''இன்னும் மேலே தூக்கு, வெட்கமில்லாத பெண்ணே!'' என்று சொல்லிவிட்டு அவளைக் குறிபார்ப்பதைப் போல துப்பாக்கியை நீட்டுகிறான். அந்த இளம்பெண் குழப்பமடைந்து தூக்கிய பாவாடையைக் கீழே விடுகிறாள், விறகுக் கட்டும் பொத்தென்று கீழே விழுகிறது.

ஒரு முதிய கஸாக்கு நாள் முழுவதும் மீன் பிடித்த பிறகு தன்னுடைய காற்சட்டையை மேலே தூக்கிச் சொருகி, நரைத்த முடியுள்ள மார்பைத் திறந்து காட்டியவாறு வீட்டுக்குத் திரும்புகிறான். அவனுடைய தோளில் தொங்கும் வலையில் வெள்ளி நிற மீன்கள் நிறைய இருக்கின்றன; அவை இன்னும் உயிருடன் துடித்துக் கொண்டிருக்கின்றன. அவன் சுறுக்கு வழியில் போவதற்காக அடுத்த வீட்டுக்காரருடைய உடைந்த வேலிக்குள் குனிந்து நுழைகிறான். அப்பொழுது அவன் மேல் கோட்டு ஒரு முள்ளில் சிக்கிக் கிழிந்துவிடுகிறது.

அதோ ஒரு கிழவி ஒரு காய்ந்து போன கிளையை இழுத்துக் கொண்டு வருகிறாள். தெருவின் முனையில் கோடரியால் வெட்டுகின்ற சத்தத்தின் எதிரொலி கேட்கிறது. குழந்தைகள் தெருவில் எங்கே சமதளமான இடங்கள் இருக்கின்றனவோ அங்கெல்லாம் பம்பரங்களைச் சுழற்றி விளையாடுகின்றபொழுது உச்ச ஸ்தாயியில் கூச்சல் போடுகிறார்கள். சிறிதளவு தூரம் நடப்பதைக் குறைப்பதற்காகப் பெண்கள் வேலிகளைக் கடந்து போய்க் கொண்டிருப்பதைப் பார்க்க முடியும். எல்லாப்

புகைபோக்கிகளிலிருந்தும் எரிகின்ற எருவின் காரமான புகை வெளிவருகிறது. இரவின் நிசப்தத்துக்கு முன்பாக ஏற்படுகின்ற அதிகமான சுறுசுறுப்பை ஒவ்வொரு முற்றத்திலும் பார்க்க முடிகிறது.

பாட்டி உலீத்கா கஸாக்குப் படை உதவி லெப்டினென்ட் மற்றும் பள்ளி ஆசிரியருடைய மனைவி. அவளுடைய மகள் மார்யானா தெருவில் விரட்டிக்கொண்டு வருகிற கால்நடையை எதிர்பார்த்துக்கொண்டு உலீத்கா மற்ற பெண்களைப் போல வெளிவாயிலில் நிற்கிறாள். அவள் திட்டிவாசல் கதவைத் திறந்தவுடனே உடலெல்லாம் கொசுக்கள் மொய்த்துக் கொண்டிருக்கின்ற ஒரு பெரிய பெண் எருமை கனைத்துக்கொண்டு கொல்லைக்குள் ஓடுகிறது. அந்த எருமைக்குப் பின்னால் பருத்த பசுக்கள் பெரிய கண்களில் எசமானியின் கௌரவத்தை அங்கீகரிப்பதைப் போல மெதுவாக உள்ளே நுழைகின்றன; உடலின் இரு பக்கங்களையும் வாலைக் கொண்டு சோம்பலாகத் தடவுகின்றன. ஒல்லியான, அழகு மிக்க மார்யானா கொல்லைக்குள் நுழைந்து மிலாறைக் கீழே போட்டுவிட்டுக் கதவை மூடுகிறாள்; மாடுகளைப் பிரித்து அவற்றின் தனிக் கொட்டில்களில் அடைப்பதற்குத் துள்ளிக்குதித்து ஓடுகிறாள்.

''பிசாசுச் சனியனே! பூட்சுகளைக் கழற்று, அவற்றைப் பழசாக்கிவிட்டாய்...'' என்று அவள் தாயார் கத்துகிறாள்.

'பிசாசுச் சனியன்' என்று தன்னைச் சொல்வதைப் பற்றி மார்யானா சிறிதும் வருத்தப்படவில்லை. அவள் இச்சொற்களை ஒருவிதமான முகஸ்துதி என்று கருதுகிறாள். அவள் குதூகலத்துடன் தன்னுடைய வேலையைச் செய்கிறாள். அவள் முகத்தைச் சுற்றி துணியைக் கட்டியிருக்கிறாள்; இளஞ்சிவப்பு நிறத்தில் சட்டையும் பச்சை நிறத்தில் பெஷ்மெத்தும் அணிந்திருக்கிறாள். கொழுத்த, பெரிய கால்நடைகள் ஏற்கெனவே ஓடி நுழைந்த கொட்டிலுக்குள் அவள் மறைகிறாள். அவள் ஒரு பெண் எருமையுடன் பேசுகின்ற அன்பான குரல் மட்டுமே கேட்கிறது: ''அசையாமலிருக்க மாட்டாயா? இதோ, அப்படி நில், அம்மா!..''

சற்று நேரத்துக்குப் பிறகு அந்த இளம் பெண் தன்

னுடைய தாயாருடன் கொட்டிலிலிருந்து பால் பதனிடு மிடத்துக்குச் செல்கிறாள். இருவரும் இரண்டு பெரிய மண் சாடிகளில் பாலைத் தூக்கிக்கொண்டு போகிறார்கள்; அது அன்று மாலையில் கறந்த பால். சீக்கிரத்தில் அந்தக் குடிசையின் களிமண் புகைபோக்கியிலிருந்து எருவை எரிக்கும் புகை வந்து கொண்டிருக்கிறது. தயிராக்குவதாக பால் உடனே சூடாக்கப்பட்டது. அந்த இளம்பெண் சுறு சுறுப்பாக அடுப்பை கவனித்துக் கொண்டிருக்கின்றபொழுது அந்த முதிய தாயார் மீண்டும் வெளிவாயிலுக்குச் செல்கிறாள்.

கிராமத்தில் ஏற்கெனவே அந்திப் பொழுதாகிவிட்டது. காய்கறிகள், கால்நடை ஆகியவற்றின் வாடை மற்றும் எருவின் மூச்சடைக்கின்ற புகை காற்றில் நிறைந்திருக்கின்றன.

கஸாக்குப் பெண்கள் எரிந்து கொண்டிருக்கும் கந்தைகளை வைத்துக்கொண்டு தெருவில் அங்குமிங்கும் போய்க் கொண்டிருக்கிறார்கள். கொல்லையில் கால்நடை மூச்சுவிட்டுக்கொண்டு நிதானமாக அசை போடுகின்ற சத்தம் கேட்கிறது. தெருக்களிலும் சுற்றுவட்டகைகளிலும் பெண்கள், குழந்தைகளின் குரல்கள் மட்டுமே கணீரென்று ஒலிக்கின்றன. அன்று வேலை நாள். ஆண் குடி மயக்கத்தில் பேசுகின்ற குரலைக் கேட்பது அபூர்வமே.

ஓர் உயரமான, வயதான கஸாக்குப் பெண் கந்தையைக் கையில் பிடித்துக்கொண்டு எதிர்வீட்டிலிருந்து தெருவின் குறுக்கே நடந்து வருகிறாள். அவள் பாட்டி உலீத்காவிடம் நெருப்புக் கேட்கிறாள்.

''அம்மா! வேலை முடிந்துவிட்டதா?'' என்று முதலில் ஆரம்பிக்கிறாள்.

''என் மகள் அடுப்பை கவனித்துக் கொண்டிருக்கிறாள். ஏன்? உனக்கு நெருப்பு வேண்டுமா?'' என்று பாட்டி உலீத்கா தான் உதவி செய்யமுடியும் என்ற பெருமையுடன் கேட்டாள்.

இரண்டு முதிய பெண்களும் சேர்ந்து வீட்டுக்குள் போகிறார்கள். பாட்டி உலீத்காவின் கைகள் முரடானவை; சிறிய பொருட்களைக் கையாள்வதில் பழக்கமில்லாதபடியால் அரிய தீப்பெட்டியை உறையிலிருந்து எடுக்கும்பொழுது அவளுடைய கைகள் நடுங்குகின்றன

(காகசசில் தீப்பெட்டிகள் அபூர்வப் பொருட்கள்). அங்கே வந்தவள் சற்று நேரம் வம்பளக்கின்ற வெளிப்படையான உத்தேசத்துடன் படியின்மீது உட்காருகிறாள்.

''என்ன அம்மா, உன் கணவன் பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பவில்லையா?'' என்று கேட்கிறாள்.

''ஆமாம், எப்பொழுதும் சின்னப் பிள்ளைகளுக்கு போதித்துக் கொண்டிருக்கிறார். திருவிழாவுக்கு வருவதாக எழுதியிருக்கிறார்'' என்று பாட்டி உலீத்கா பதிலளிக்கிறாள்.

''அவர் அறிவாளி. நல்ல காரியங்களைச் செய்கிறார்.''

''ஆமாம். அது உண்மைதான்.''

''என்னுடைய லுக்காஷ்கா எல்லைக் காவல் நிலையத்தில் இருக்கிறான். அவனுக்கு விடுமுறை கிடைக்கவில்லையாம்.'' இந்தத் தகவல் பாட்டி உலீத்காவுக்குப் புதிய செய்தியல்ல என்பது வந்திருக்கின்ற பெண்ணுக்குத் தெரியும். எனினும் அவளால் அதைச் சொல்லாமல் இருக்க முடியவில்லை. ஏனென்றால் புதிதாகக் கஸாக்குப் படையில் சேர்ந்திருக்கின்ற தன்னுடைய லுக்காஷ்காவைப் பற்றி அவள் ஏதாவது சொல்ல வேண்டும். துணை லெப்டினென்டின் மகள் மார்யானாவை அவனுக்கு மணமுடிக்க வேண்டும் என்னும் விருப்பத்தை அவள் மறைக்கவில்லை.

''அவன் எல்லைக் காவல் நிலையத்தில் தங்க வேண்டுமா?''

''ஆமாம். திருவிழாவுக்குப் பிறகு அவன் வீட்டுக்கு வரவில்லை. சில நாட்களுக்கு முன்பு ஃபோமுஷ்கின் மூலம் அவனுக்குச் சில சட்டைகள் கொடுத்தனுப்பினேன். அவன் நன்றாக இருப்பதாக அவன் சொன்னான். அதிகாரிகளுக்கு அவனைப் பிடித்திருக்கிறதாம். அவர்கள் அப்ரேக்குகளைத் தேடிக் கொண்டிருக்கிறார்களாம். லுக்காஷ்கா சந்தோஷமாக இருக்கிறான் என்று சொன்னான்''.

''அப்படியானால் நல்லது!'' என்றாள் துணை லெப்டினென்டின் மனைவி. ''அவன் உர்வான் ஆயிற்றே.''

ஒரு சிறுவன் தண்ணீரில் மூழ்கிக் கொண்டிருந்தபொழுது லுக்காஷ்கா துணிச்சலாகத் தண்ணீரில் குதித்து

அவனைக் காப்பாற்றினான். அதிலிருந்து அவனுக்கு உர்வான் அதாவது காப்பாற்றுபவன் என்று பட்டப்பெயர் வைத்து விட்டார்கள். லுக்காஷ்காவின் தாயாருக்குப் பிடித்தமான ஏதாவதொன்றைப் பேச வேண்டும் என்பதற்காகப் பாட்டி உலீத்கா இந்தப் பெயரை உபயோகித்தாள்.

''எல்லாம் கடவுள் கருணைதான். அவன் நல்ல பையன், வீரமானவன், எல்லோருக்கும் அவனைப் பிடிக்கிறது'' என்றாள் லுக்காஷ்காவின் தாயார். ''அவனுக்குக் கல்யாணம் முடிந்துவிட்டால் நான் திருப்தியுடன் செத்துப் போவேன்.''

''இந்தக் கிராமத்தில் பெண்களுக்குப் பஞ்சமா?'' என்று பாட்டி உலீத்கா சாமர்த்தியமாகக் கேட்டாள். தீப்பெட்டியை உறைக்குள் சொருகுகின்ற முயற்சியில் அவளுடைய வளைந்த விரல்கள் தடுமாறின.

''பெண்கள் நிறைய இருக்கிறார்கள், அம்மா, நிறைய இருக்கிறார்கள்'' என்று லுக்காஷ்காவின் தாயார் தலையை ஆட்டிக் கொண்டே கூறுகிறாள். ''உன் மகள் மார்யானா இருக்கிறாளே, இந்தப் பிரதேசம் முழுவதிலும் சலித்தாலும் அவளைப் போன்ற பெண் கிடைக்காது.''

பாட்டி உலீத்கா அவளுடைய உள்நோக்கத்தைப் புரிந்துகொண்டாள். லுக்காஷ்காவை அவள் விரும்பினாலும் அவன் முன்னுக்கு வரக்கூடிய கஸாக்கு என்று கருதினாலும் இப்பொழுது பேச்சை மாற்றுவதற்கே அவள் விரும்பினாள். முதலாவதாக, அவள் துணை லெப்டினென்டின் மனைவி, பணக்காரி; ஆனால் லுக்காஷ்கா வெறும் கஸாக்கின் மகன். அவனுடைய தகப்பனார் இறந்து விட்டார். இரண்டாவதாக, அவள் தன்னுடைய மகளை இவ்வளவு சீக்கிரமாகப் பிரிவதற்கு விரும்பவில்லை. ஆனால் முக்கியமான காரணம் என்னவென்றால், நடைமுறை பேச்சை மாற்றுபடி வலியுறுத்தியது.

''அப்புறம்...'' என்று அவள் விழிப்புடனும் ஜாக்கிரதையுடனும் பதிலளித்தாள். ''மார்யானாவும் வளர்ந்து கொண்டிருக்கிறாள். அவளுக்கு கல்யாணம் செய்வதைப் பற்றி எதிர்காலத்தில் முடிவு செய்யவேண்டும்.''

''நான் கல்யாணத் தரகர்களை அனுப்பி வைக்கிறேன். ஆமாம். அவர்களை அனுப்பி வைக்கிறேன்.

தோட்டத்தில் அறுவடை முடிந்த பிறகு நாங்கள் முறைப்படிக் கேட்க வருகிறோம்'' என்றாள் லுக்காஷ்காவின் தாயார். ''நாங்கள் இலியா அவர்களிடம் பேசுவோம்.''

''இதில் இலியாவுக்கு என்ன இருக்கிறது?'' என்று பாட்டி உலீத்கா காட்டமாகக் கூறினாள். ''என்னிடம் தான் பேசவேண்டும். ஆனால் அதற்கு இப்பொழுது அவசரமில்லை.''

உலீத்காவின் முகத்தில் அகம்பாவத்தைப் பார்த்த லுக்காஷ்காவின் தாயார், இன்னும் பேசுவது உசிதமல்ல என்று முடிவுசெய்கிறாள். அவள் தீக்குச்சியை உரசி கந்தையைப் பற்றவைக்கிறாள். ''மறுத்துவிடாதே, அம்மா, நான் சொன்னதை மறக்கவேண்டாம். நான் போய்வருகிறேன். வீட்டில் அடுப்பைப் பற்றவைக்க வேண்டும்'' என்று புறப்படுகின்றபொழுது கூறினாள்.

அவள் படிகளிலிருந்து இறங்கி தெருவுக்கு வந்து எரிந்து கொண்டிருந்த தீப்பந்தத்தைக் காட்டியபொழுது மார்யானாவை அங்கே சந்தித்தாள். அவள் லுக்காஷ்காவின் தாயாருக்கு வணக்கம் செலுத்தினாள்.

''ராணி மாதிரி இருக்கிறாள். திறமையாக வேலை செய்வாள்'' என்று அந்த அழகான பெண்ணைப் பார்த்து மனத்தில் சொல்லிக்கொண்டாள். ''இன்னும் வளரவேண்டுமாமே! எதற்காக? இதுதான் கல்யாணம் செய்யவேண்டிய பருவம். நல்ல குடும்பத்தைச் சேர்ந்த கணவன் கிடைக்க வேண்டும். லுக்காஷ்காதான் அவளுக்கு ஏற்ற கணவன்.''

பாட்டி உலீத்கா வேறு எண்ணங்களைக் கொண்டிருந்தாள். ஆனால் உள்ளூற அவளுடைய இதயம் கனத்தது. மார்யானா கூப்பிடுகின்ற வரை அவள் நிலைப்படியிலேயே அசையாமல் உட்கார்ந்திருந்தாள்.

## 6

அந்த கிராமத்தைச் சேர்ந்த ஆண்கள் படையெடுப்புகளில் அல்லது எல்லைக் காவல் நிலையங்களில் தங்களுடைய நேரத்தைக் கழித்தார்கள். அந்த இரண்டு கிழவிகளும் கிராமத்தில் எந்த லுக்காஷ்காவைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்களோ, அவன் சூரியன் மறை

வதற்குச் சற்று முன்பாக தேரெக்கின் கரை மீது அமைந் திருக்கின்ற நீஷ்னி-பிரதோத்ஸ்கி காவல் நிலையத்தின் காவல் பரணில் நின்று கொண்டிருந்தான். அவன் கம்பி யின் மீது சாய்ந்து கண்களைச் சுருக்கிக்கொண்டு ஒரு சமயத்தில் தேரெக்கிலிருந்து வெகு தூரத்துக்கு அப்பா லும் மறு சமயத்தில் கீழே குனிந்து தன்னுடைய தோழர் களான கஸாக்குகளையும் பார்த்தான்; ஆனால் அவர் களுடன் பேசுவதற்கு எந்த விஷயமும் இல்லாதபடியால் அவன் அபூர்வமாகவே உரையாடினான்.

சூரியன் பனி மூடிய மலைத்தொடர்களை ஏற் கெனவே நெருங்கிக் கொண்டிருந்தது. வெண்மையான மலைச் சிகரங்கள் சுருள் சுருளான மேகங்களுக்கு மேலே தெரிந்தன. மலைத் தொடர்களின் அடியில் மிதந்து கொண்டிருந்த மேகங்கள் மேன்மேலும் கறுப்பாக மா றின. தெளிவான மாலைக்காற்று அகன்ற காட்சி வரிசை களைத் திறந்து வைப்பதைப் போலத் தோன்றியது. அடர்த்தியான காட்டிலிருந்து புத்திளம் குளிர்ச்சி வந்தது; ஆனால் அந்தக் காவல் நிலையத்தில் இன்னும் வெப் பம் இருந்தது. வம்பளந்து கொண்டிருந்த கஸாக்குகளின் குரல்கள் தெளிவாகவும் பலமாகவும் கேட்டன; அக் குரல்கள் காற்றில் தொங்குவதைப் போலத் தோன்றியது. வேகமாக ஓடி வந்த பழுப்பு நிறத் தேரெக் அசைக்க முடியாத கரைகளிலிருந்து நேரே வளைந்து அதன் தடுக்க முடியாத நீருடன் உருண்டு சென்றது. ஆற்றில் அப் பொழுது தண்ணீர் குறையத் தொடங்கியிருந்தது. கரை யின் ஓரங்களிலும் ஆழமில்லாத இடங்களிலும் ஈர மணல் பழுப்புச் சாம்பல் நிறத்தில் காணப்பட்டது. காவல் நிலையத்துக்கு எதிரேயிருந்த கரையில் நடமாட்டமில்லை. ஆற்றுக்கும் மலைகளுக்கும் இடையில் குட்டையான நாணற்செடிகள் மட்டுமே வளர்ந்திருக்கின்ற பகுதிகள் முடிவே இல்லாதபடி காணப்பட்டன. கீழ்க்கரையின் ஒரு பகுதியில் சாய்வாகப் பார்த்தால் செச்சென் கிராமத்தின் களிமண் வீடுகளையும் அவற்றின் தட்டையான கூரை களையும் புனல் வடிவப் புகைபோக்கிகளையும் காண முடியும். காவல் பரணின் உயரத்திலிருந்து பார்க்கும்பொ ழுது கஸாக்கின் கூர்மையான கண்கள் மாலைப் பொழு தின் புகையை ஊடுருவி வெகுதூரத்துக்கு அப்பாலுள்ள

கிராமத்தில் இங்குமங்கும் போய்க் கொண்டிருந்த பெண்கள் அணிந்திருந்த நீலம் மற்றும் சிவப்பு நிற உடைகளைப் பார்க்கமுடியும்.

எதிரிகளான அப்ரேக்குகள்* எந்த நேரத்திலும் அக்கரையிலிருந்து ஆற்றைக் கடந்து தங்களைத் தாக்க வரக்கூடும் என்று கஸாக்குகள் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்றாலும், அந்த மே மாதத்தில் தேரெக் நெடுகிலும் உள்ள காடுகள் மிகவும் அடர்த்தியாக இருக்கின்றபடியால் ஒரு நபர் அவற்றைக் கடந்து வருவது மிகவும் கடினம், ஆற்றில் தண்ணீர் குறைந்திருப்பதால் அநேகமாக எந்த இடத்தில் வேண்டுமானாலும் அதைக் கடக்க முடியும் என்றாலும், அப்ரேக்குகள் எட்டு நபர்களைக் கொண்ட ஒரு குழுவாக தேரெக்கைக் கடந்து வருவதற்குத் தயாரிப்புகளைச் செய்து கொண்டிருக்கிறார்கள் என்று ஒற்றர்கள் தெரிவித்திருப்பதாகவும் ஆகவே அதிகமான கவனத்துடன் இருக்க வேண்டும் என்று எல்லாக் காவல் நிலையங்களுக்கும் கர்னல் அனுப்பிய சுற்றுக் கடிதத்தை ஒரு கஸாக்கு முன்னோடி குதிரையில் வேகமாக வந்து இரண்டு நாட்களுக்கு முன்பு தான் கொடுத்தான் என்றாலும், எல்லையிலிருந்த காவல் நிலையங்களில் விசேஷமான எச்சரிக்கை நடவடிக்கை எதையுமே மேற்கொண்டிருப்பதைப் பார்க்க முடியவில்லை.

கஸாக்குகள் தங்களுடைய வீடுகளில் இருப்பதைப் போல அங்கே இருந்து கொண்டிருந்தார்கள். ஒருவர் மீன் பிடித்தார். அடுத்தவர் குடித்துக் கொண்டிருந்தார். மற்றொருவர் வேட்டையாடிக் கொண்டிருந்தார். அவர்களுடைய குதிரைகள் மீது சேணம் பூட்டப்படவில்லை; அவர்களுடைய ஆயுதங்கள் கைகளில் இல்லை. அன்றைய தினத்துக்குப் பொறுப்பான கஸாக்குக்குச் சொந்தமான குதிரையின் மீது மட்டுமே சேணம் பூட்டப்பட்டிருந்தது. அக்குதிரையின் மூன்று கால்கள் மடக்கிக் கட்டப்பட்டுக் காட்டின் ஓரம் நெடுகிலும் புல்மேய அனுமதிக்கப்பட்டி

---

* செச்சென்கள் ஜாரின் ஆட்சியை எதிர்த்தபடியால் அவர்கள் அப்ரேக்குகள் என்று கூறப்பட்டார்கள். அவர்கள் திருடுவதற்கு அல்லது கொள்ளையடிப்பதற்காக ஆற்றின் அக்கரையிலிருந்து ருஷ்யப் பிரதேசத்துக்குள் வருவதுண்டு. **(லேவ் தல்ஸ்தோய் எழுதிய குறிப்பு.)**

ருந்தது. காவல் செய்து கொண்டிருந்த கஸாக்கு மட்டும் இராணுவ உடை அணிந்து துப்பாக்கியும் வாளும் வைத் திருந்தான்.

உயரமான, ஒல்லியான தோற்றமுடைய ஒரு கஸாக்கு சார்ஜென்ட்—அவருடைய முதுகு மிகவும் நீளம், கால் களும் கைகளும் குட்டையானவை—குடிசைத் திண்ணை யின் மீது உட்கார்ந்திருந்தார். அவர் அணிந்திருந்த பெஷ் மெத்தில் பொத்தான்கள் மாட்டப்படவில்லை. அவர் தலைவருக்குரிய அலாதியான சோம்பலையும் சலிப்பை யும் வெளிக் காட்டியபடிக் கண்களை மூடியிருந்தார். அவர் தலை ஒரு கையிலிருந்து மறுகைக்குச் சாய்ந்து கொண்டிருந்தது.

ஒரு முதிய கஸாக்கு—அவன் பெரிய தாடியில் சாம் பல் நிறமும் கறுப்பு நிறமும் கலந்திருந்தன—கறுப்புத் தோல் வாரினால் சுற்றிக் கட்டப்பட்ட சட்டையைத் தவிர வேறு எதையும் அணியாமல் ஆற்றங்கரையில் படுத் திருந்தான். தேரெக் ஒரே மாதிரியாகக் கலங்கலாகச் சுழன்றோடுவதைச் சோம்பலாகப் பார்த்துக் கொண் டிருந்தான். அங்கேயிருந்த மற்றவர்கள் எல்லோரும் வெப் பத்தினால் களைத்துப் போயிருந்தார்கள். அவர்கள் உட லில் பாதியளவு மட்டுமே உடையணிந்திருந்தார்கள். ஒரு நபர் கரையின் ஓரத்தில் நின்று சட்டையைத் துவைத்துக் கொண்டிருந்தார். இன்னொருவர் ஒரு ஜோடிக் கடிவா ளத்தைப் பின்னிக் கொண்டிருந்தார். மூன்றாவது நபர் ஆற்றங்கரையின் சூடேறிய மணலில் உடலை நீட்டிப் படுத்துக்கொண்டு ஒரு பாட்டை முணுமுணுத்துக் கொண் டிருந்தார். ஒரு கஸாக்கின் நீளமான முகம் சூரிய வெப்பத் தினால் கறுத்துப்போயிருந்தது. அந்த நபர் மிதமிஞ் சிக் குடித்துவிட்டு குடிசைச் சுவரின் ஓரமாகப் படுத் திருந்தார். இரண்டு மணி நேரத்துக்கு முன்பு அங்கே நிழல் இருந்தது; ஆனால் இப்பொழுது கண்ணைக் கூசவைக் கின்ற சூரியனின் சாய்வான கதிர்கள் அங்கே நேரடியாக விழுந்து கொண்டிருந்தன.

காவல் பரணின் மீது நின்று கொண்டிருந்த லுக்காஷ் கா உயரமானவன், அழகான இளைஞன், இருபது வயது ஆனவன், தன் தாயாரைப் போன்ற அதே தோற்றமுடை யவன். இளமையின் அவலட்சணம் எப்படி இருந்தாலும்

அவனுடைய முகமும் மொத்த உடலமைப்பும் உடல் மற்றும் ஆன்மாவின் மிகச் சிறப்பான பலத்தை எடுத்துக்காட்டின. அவன் சமீபத்தில்தான் படையில் சேர்ந்தவன். எனினும் அவனுடைய முகத்தின் கம்பீரமும் அவனுடைய தோரணையிலிருந்த தடுமாற்றமில்லாத உறுதியும் கஸாக்குகளுக்கும் பொதுவாக எப்பொழுதும் ஆயுதங்களை வைத்திருக்கின்ற பழக்கத்தைக் கொண்ட மனிதர்களுக்குமே உரிய போர்க்குணம் மற்றும் இறுமாப்பான தோரணையைப் பெறுவதில் அவன் ஏற்கெனவே வெற்றியடைந்து விட்டான் என்பதை எடுத்துக்காட்டின. அவன் ஒரு கஸாக்கு, அவன் தன்னை மிகவும் உயர்வாக மதிக்கிறான் என்பது தெளிவாகத் தெரிந்தது. அவன் அணிந்திருந்த பெரிய செர்கெஸ்கா* சில இடங்களில் கிழிந்திருந்தது. அவன் மலைக்குடியினரைப் போல தொப்பியைக் கோணலாக அணிந்திருந்தான். அவன் காற்பட்டை முழங்கால்களுக்குக் கீழே தளர்வாக முடிச்சுப் போடப்பட்டிருந்தது. அவன் சாதாரண உடை தான் அணிந்திருந்தான். ஆனால் செச்சென் ஜிகித் அல்லது வீரனைப் பின்பற்றுவதால் கஸாக்குகளுக்கே உரித்தான அழகுடன் அவன் உடலில் ஒட்டியிருந்தது.

உண்மையான ஜிகித் கிழிந்த உடை அல்லது பொருந்தாத உடையைப் பற்றிச் சிறிதும் கவலைப் படமாட்டான்; ஆனால் தன்னுடைய ஆயுதங்கள் மிகவும் சிறந்தவையாக இருக்கவேண்டும் என்பதில் மட்டும் அக்கறையோடிருப்பான். ஆனால் அவனுடைய கிழிந்த, கந்தல் உடைகளும் ஆயுதங்களும் அவனுக்கு மட்டுமே தெரிந்த முறையில் பொருத்தமாகப் பிணைக்கப்பட்டிருந்தன. அந்த முறை வேறு எவருக்கும் தெரியாது. அத் தோற்றம் கஸாக்கு அல்லது மலைக்குடிமகனுடைய கவனத்தைக் கவர்கிறது. லுக்காஷ்காவிடம் இந்த உண்மையான ஜிகித்தின் வெளித்தோற்றம் இருந்தது. அவன் வாளின் மீது கைகளை வைத்துக் கொண்டு கண்களைச் சுருக்கிக் கொண்டு வெகு தூரத்துக்கு அப்பாலிருந்த கிராமத்தை உற்றுப்பார்த்துக் கொண்டிருந்தான். அவன் முகத்தின் உறுப்புகளைத் தனித்தனியாகப் பார்த்தால் அவன் அழ

---

* செர்கெஸ்கா—காகேஷிய மேல்கோட்டு. (மொ-ர்.)

கானவன் என்று கூறமுடியாது. ஆனால் அவனுடைய சிறப்பான உடலமைப்பு, அறிவார்ந்த முகம், கறுமை யான புருவங்களை மொத்தமாகப் பார்க்கும்பொ ழுது, ''வீரமான இளைஞன்!'' என்று ஒவ்வொருவரும் தன்னையறியாமலே சொல்வோம்.

''அந்த கிராமத்தின் வீடுகளிலிருந்து அதிகமான பெண்கள் வெளியே வந்து கொண்டிருப்பது ஏன்?'' என்று அவன் கூர்மையான குரலில், தன்னுடைய பிரகாசமான, வெண்மை நிறப் பற்களைச் சோம்பலுடன் துழாவியபடி யே கேட்டான். அவன் குறிப்பாக யாரையும் பார்த்துப் பேசவில்லை.

கீழே காலை நீட்டிப் படுத்திருந்த நஸார்கா உடனே தலையைத் தூக்கி பதிலளித்தான்:

''அவர்கள் தண்ணீர் கொண்டுவருவதற்குப் போக லாம்.''

''துப்பாக்கியால் சுட்டு அவர்களை பயமுறுத்தி வே டிக்கை பார்க்கலாமா?'' என்று லுக்காஷ்கா சிரித்துக் கொண்டு கேட்டான். ''அவர்கள் சிதறி ஓடும்பொழுது ஒரே குழப்பமாக இருக்குமல்லவா?''

''அவ்வளவு தூரம் உன்னால் சுட முடியாது.''

''அப்படியா! சரியாக அவர்களுக்குப் பின்னால் கூட என்னால் சுடமுடியும். பொறு, அவர்களுடைய திருவிழா வரட்டும். நான் கிரேய்-கானைப் பார்த்து அவருடன் பீர் சாப்பிடப் போகிறேன்.'' என்று லுக்காஷ்கா கூறி விட்டு தன்னைச் சுற்றிப் பறந்து கொண்டிருந்த கொசுக் களைக் கோபத்தோடு விரட்டினான்.

புதரில் ஏற்பட்ட சலசலப்பு கஸாக்குகளின் கவனத் தை இழுத்தது. உடலில் புள்ளிகள் நிறைந்த கலப்பின நாய் மூக்கை பூமியில் நீட்டி மோப்பம் பிடித்துக்கொண்டு, முடியில்லாத வாலை ஆட்டிக்கொண்டு காவல் நிலை யத்தை நோக்கி ஓடிவந்தது. அது அந்த வட்டாரத்தில் வேட்டையாடுகின்ற யெரோஷ்கா மாமனுடைய நாய் என்பதை லுக்காஷ்கா கண்டுகொண்டான். சிறிது நேரத் தில் அவர் புதர்களை விலக்கிக்கொண்டு வருவதைப் பார்த்தான்.

யெரோஷ்கா மாமா மாபெரும் உடலமைப்புக் கொண்ட கஸாக்கு. பெரிய, வெள்ளி போன்று வெண்

மையான தாடி, அகன்ற தோள்கள் மற்றும் மார்பு உடையவர். ஆனால் அவருடைய வலிமையான உறுப்புகள் ஒன்றுக்கொன்று பொருத்தமாக அமைந்திருந்தபடியால் அவருடன் உவமை சொல்வதற்கு யாருமே இல்லாத அந்தக் காட்டில் அவருடைய உடல் மிகவும் பெரியதாகத் தோன்றவில்லை.

அவர் கிழிந்து போன முரட்டு மேல் கோட்டை அணிந்திருந்தார். கோட்டில் கீழ்ப்பகுதியை மடக்கி இடுப்பில் சொருகியிருந்தார். கால்களில் முரட்டுத் தோல் செருப்புகளைக் கயிற்றினால் கட்டியிருந்தார். கசங்கிப் போன வெள்ளைத் தொப்பியை அணிந்திருந்தார். ஒரு தோளில் பறவை வேட்டைக் கருவியும் பருந்துகளைச் சிக்க வைப்பதற்குக் காட்டுக் கோழியைக் கட்டிவைத்த சாக்கும் தொங்கின. மறு தோளில் அவர் கொன்ற காட்டுப் பூனை தோல்பட்டையில் தொங்கியது. அவருடைய இடைவாரில் பிணைக்கப்பட்டிருந்த பையில் துப்பாக்கிக் குண்டுகள், வெடி மருந்து, ரொட்டி, கொசுக்களை விரட்டுவதற்குக் குதிரை வால், கிழிந்து போன, இரத்தக் கறை படிந்த உறையில் பெரிய குத்துவாள் மற்றும் அவர் கொன்ற இரண்டு காட்டுச் சேவல்கள் இருந்தன. அவர் காவல் நிலையத்தை அடைந்ததும் நின்றார்.

''ஏய், லியாம்!'' என்று அவர் உரத்த குரலில் நாயை அதட்டினார். அக்குரலின் எதிரொலி காட்டில் வெகு தூரம் வரை கேட்டது. கஸாக்குகள் ப்லீந்தா என்று சொல்கின்ற அவருடைய மிகப்பெரிய துப்பாக்கியைத் தோளுக்கு மாற்றிக்கொண்டு அவர் தொப்பியைத் தூக்கினார்.

''வணக்கம், எல்லோரும் நல்லா இருக்க வேண்டும்! ஏய்!'' என்று களிப்பான, சக்திவாய்ந்த குரலில் கஸாக்குகளை நோக்கிப் பேசினார். அவர் குரல் ஆற்றின் அக்கரையில் யாரோ ஒருவருடன் பேச முயற்சிப்பதைப் போல எந்த முயற்சியும் இல்லாமலே பலமாகக் கேட்டது.

''வணக்கம், மாமா! வணக்கம்!'' என்று எல்லாத் திசைகளிலிருந்தும் கஸாக்குகளின் உற்சாகமிக்க இளம் குரல்கள் கேட்டன.

''என்ன பார்த்தீர்கள்? சொல்லுங்கள்!'' என்று மாமன் யெரோஷ்கா தன்னுடைய அகன்ற, சிவந்த நெற்றி

யிலிருந்து வழிந்த வியர்வையை மேல்கோட்டின் கையி னால் துடைத்துக்கொண்டே உரத்த குரலில் கேட்டார்.

''மாமா! அதோ தெரிகின்ற சினார் மரத்தில் எவ் வளவு பெரிய பருந்து இருக்கிறது, தெரியுமா? மாலைப் பொழுதானவுடன் அது கீழே வருகிறது'' என்று நஸார்கா கண்ணைச் சிமிட்டிக்கொண்டு காலையும் தோளையும் உதறியபடியே கூறினான்.

''உண்மையா?'' என்று அந்தக் கிழவர் நம்பிக்கை யில்லாமல் கேட்டார்.

''உண்மை, மாமா! நீங்கள் இங்கே காத்திருந்து பார்த்தால் தெரியும்'' என்று நஸார்கா சிரித்தபடியே வற்புறுத்தினான். அவன் சிரித்தபொழுது மற்ற கஸாக்கு களும் சிரித்தார்கள்.

அந்த வேடிக்கைக்காரன் எந்தப் பருந்தையும் பார்க்க வில்லை. மாமன் யெரோஷ்கா தங்களைப் பார்க்க வரு கின்ற ஒவ்வொரு தடவையும் அவரைக் கேலிசெய்து ஏமாற்றுவது அந்தக் காவல் நிலையத்தைச் சேர்ந்த இளம் கஸாக்குகளின் நெடுங்காலப் பழக்கம்.

''முட்டாள்! ஏன் இப்படிப் பொய் சொல்கிறாய்?'' என்று லுக்காஷ்கா காவல் பரணிலிருந்து நஸார்காவை அதட்டினான்.

நஸார்கா உடனே அமைதியில் மூழ்கினான்.

''பார்ப்பதால் ஏதேனும் பலன் கிடைக்குமென்றால் நான் பார்க்கத் தயார்'' என்று அந்தக் கிழவர் பதிலளித்த பொழுது அங்கேயிருந்த எல்லா கஸாக்குகளும் மிகவும் திருப்தி அடைந்தார்கள். ''நீங்கள் எங்காவது காட்டுப் பன்றிகளைப் பார்த்தீர்களா?''

''காட்டுப் பன்றிகளைப் பார்ப்பதென்ன சுலபமா? அதற்கு எங்கே நேரமிருக்கிறது?'' என்று கேட்டார் சார் ஜென்ட். பேச்சை வேடிக்கையாக மாற்றுவதற்கு ஒரு சந் தர்ப்பம் கிடைத்ததைப் பற்றி அவருக்கு மிகவும் திருப்தி. அவர் குப்புறப் படுத்துக்கொண்டு தன்னுடைய நீண்ட முதுகை இரண்டு கைகளாலும் சொரிந்தார். ''நாங்கள் அப்ரேக்குகளைப் பிடிக்கவேண்டும். மாமா! அப்ரேக்கு களைப் பற்றி எதுவும் கேள்விப் பட்டீர்களா?'' என்று அவர் தொடர்ந்தார். ஏதோ ஒரு காரணத்துக்காகக் கண்

களைச் சிமிட்டி உறுதியான வெள்ளை நிறப் பல் வரிசையைக் காட்டினார்.

''அப்ரேக்குகளைப் பற்றியா?'' என்று அந்தக் கிழவர் திருப்பிக் கேட்டார். ''இல்லை. நான் அவர்களைப் பற்றி எதுவும் கேள்விப்படவில்லை. உங்களிடம் சிவப்பு ஒயின் இருக்கிறதா? எனக்கு ஒயின் கொடு, நல்லவனே. நான் களைத்துப் போய் விட்டேன். நிஜமாக. எனக்கு அவகாசம் கொடு, புதிதாகக் கொன்ற பன்றி இறைச்சி கொண்டுவந்து தருகிறேன்: உறுதியாகச் சொல்கிறேன். சரி. ஒயின் கொடு.''

''இங்கே வேட்டைக்குக் குறிபார்க்க விரும்புகிறீர்கள், அப்படியா?'' என்று அவருடைய வேண்டுகோள் காதில் விழாததைப் போல சார்ஜென்ட் தொடர்ந்து பேசினார்.

''நான் ஒரு ராத்திரி காத்திருந்து பார்க்க விரும்புகிறேன்'' என்று மாமன் யெரோஷ்கா பதிலளித்தார். ''திருவிழாவுக்குத் தோதாகக் கிடைக்கலாம் அல்லவா? என்ன அகப்பட்டாலும் உனக்கு ஒரு பங்கு தருகிறேன், உண்மை!''

''மாமா, மாமா!'' என்று காவல் பரணிருந்து லுக்காகத்தினான். அவன் என்ன சொல்ல விரும்புகிறான் என்று கேட்பதற்காக எல்லா கஸாக்குகளும் தலையை உயர்த்தினார்கள். ''மேல் ஓடைக்குப் போங்கள். அங்கே காட்டுப் பன்றிகள் கூட்டமாகத் திரிகின்றன. நான் பொய் சொல்லவில்லை. உண்மை! சில நாள் முன்பு நம் கஸாக்கு ஒருவன் ஒரு காட்டுப் பன்றியைச் சுட்டான். நான் சொல்வது முற்றிலும் உண்மை'' என்று அவன் தோளில் துப்பாக்கியைச் சரி செய்து கொண்டு பேசினான். அவன் வேடிக்கையாகப் பேசவில்லை என்பதை அவன் குரல் நிரூபித்தது.

''உர்வான் லுக்காஷ்கா இங்கே இருக்கிறானா?'' என்று அந்தக் கிழவர் தலையை உயர்த்திப் பார்த்தபடி கேட்டார். ''அவன் எங்கே அதைச் சுட்டான்?''

''நீங்கள் அதை கவனிக்கவில்லையா? நான் மிகவும் சின்னவன்தானே! மாமா, ஓடைக்குப் பக்கத்தில்'' என்று அவன் அக்கறையுடன் தலையை ஆட்டிக் கொண்டு தொடர்ந்து பேசினான். ''நாங்கள் ஓடை வழியாகப் போய்க் கொண்டிருந்தோம். திடீரென்று புதர்களிலிருந்து

பெரிய சத்தம் கேட்டது. ஆனால் என்னுடைய துப்பாக்கி உறையில் இருந்தது. இலியாஸ்கா அதைப் பார்த்துச் சுட்டான்... ஆம், மாமா! நான் அந்த இடத்தைக் காட்டுகிறேன். அது அதிக தூரத்தில் இல்லை. கொஞ்சம் பொறுங்கள். எனக்கு பன்றிகள் நடமாடுகிற எல்லாப் பதைகளும் தெரியும். மோசெவ் மாமா!'' என்று அவன் சார்ஜென்டைப் பார்த்து உறுதியான, அநேகமாகக் கண்டிப்பான குரலில் பேசினான். ''காவல் மாற்றவேண்டிய நேரம் வந்துவிட்டது!'' அவன் ஆணையை எதிர்பார்க்காமலேயே தன்னுடைய துப்பாக்கியை எடுத்துக் கொண்டு காவல் பரணிலிருந்து கீழே இறங்க ஆரம்பித்தான்.

''கீழே வா'' என்று சார்ஜென்ட் மிகவும் தாமதமாகவே ஆணையிட்டார். ''குர்க்கா! அடுத்துப் போக வேண்டியது நீ தானே?'' என்று சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டு கேட்டார். ''அப்படியானால், போ!'' பிறகு அந்த வேட்டைக்கார முதியவர் பக்கமாகத் திரும்பிப் பேசினார்: ''உங்கள் லுக்காஷ்கா பெரிய நிபுணனாகி விட்டான். அவன் உங்கள் உதாரணத்தைப் பின்பற்றப் போகிறான். அவனை வீட்டுக்குள் வைத்திருக்க முடியாது. அன்றைக்கு ஒரு பன்றியைக் கொன்றுவிட்டான்.''

## 7

சூரியன் முன்பே மறைந்துவிட்டது. இரவின் நிழல்கள் காட்டிலிருந்து வேகமாக வந்து கொண்டிருந்தன.

கஸாக்குகள் காவல் நிலையத்தில் தங்களுடைய கடமையை முடித்துவிட்டுத் தங்களுடைய இரவு உணவைப் பெறுவதற்கு வீட்டில் கூடியிருந்தார்கள். அந்தக் கிழவர் மட்டும் பருந்தை எதிர்பார்த்து சினார் மரத்தின் கீழ் உட்கார்ந்து கொண்டு கயிற்றினால் கட்டப்பட்டிருந்த காட்டுக் கோழியைச் சுண்டிக்கொண்டிருந்தார். பருந்து மரத்திலேயே உட்கார்ந்திருந்தது. கோழியால் அதைக் கவரமுடியவில்லை. லுக்காஷ்கா முட்புதரில் காட்டுக் கோழிகள் வருகின்ற பாதையில் கண்ணிகள் வைத்துக் கொண்டிருந்தான். அவன் அவசரப்படவில்லை. அவன் ஒன்றன் பின் ஒன்றாகப் பாட்டுக்களைப் பாடிக் கொண்டிருந்தான். அவன்

உயரமான உருவத்தையும் பெரிய கைகளையும் கொண்டவனாக இருந்தாலும் முரட்டு வேலையோ, நயமான வேலையோ, எந்த வேலையாக இருந்தாலும் அவன் நன்றாகச் செய்து முடிக்கக் கூடியவன் என்பது தெளிவாகத் தெரிந்தது.

''ஏய், லுக்காஷ்கா! கஸாக்குகள் இரவு உணவு சாப்பிடப் போய்விட்டார்கள்.'' நஸார்காவின் கீச்சுக்குரல் சில அடிகள் தூரத்திலிருந்த முட்புதரிலிருந்து கேட்டது.

நஸார்கா உயிருள்ள காட்டுச் சேவலைக் கம்புக் கூட்டில் வைத்து, முட்களை விலக்கிக்கொண்டு வெளியே வந்து பாதையில் நின்று கொண்டிருந்தான்.

''ஓ!'' என்று லுக்காஷ்கா பாட்டை நிறுத்திவிட்டுக் கத்தினான். ''அந்தப் பறவையை எங்கே பிடித்தாய்? நான் வைத்த கண்ணியில் தான் அது சிக்கியிருக்க வேண்டும்...''

நஸார்காவுக்கு லுக்காஷ்காவின் வயதுதான் இருக்கும். அந்த வசந்த காலத்தின் போதுதான் அவன் படையில் சேர்த்துக் கொள்ளப்பட்டிருந்தான்.

அவன் அவலட்சணமாக, மெலிவாக, சிறிய உருவத்துடன் இருந்தான். அவனுடைய கீச்சுக்குரல் காதைத் துளைக்கும். அவன் லுக்காஷ்காவை அடுத்திருந்ததுடன் அவனுடைய நண்பனாகவும் இருந்தான்.

லுக்காஷ்கா தார்த்தாரியனைப் போலப் புல்லின் மீது உட்கார்ந்து கண்ணி வைத்துக் கொண்டிருந்தான்.

''யார் வைத்த கண்ணி என்று எனக்குத் தெரியாது. ஒருவேளை நீ வைத்த கண்ணியாக இருக்கலாம்.''

''குழிக்குப்பின்னால், சினார் மரத்துக்குப் பக்கத்தில் தானே? நிச்சயமாக நான் வைத்த கண்ணிதான். நேற்று மாலையில் வைத்தேன்.''

அவன் எழுந்து பிடிப்பட்ட காட்டுச் சேவலைப் பார்த்தான். அந்தப் பறவை பயத்தில் தன்னுடைய கரு நீல நிறத் தலையை நீட்டிக் கண்களை உருட்டியது. அவன் தன் கையினால் அதன் தலையைத் தடவிக் கொடுத்தான், அதைக் கைகளினால் பிடித்துத் தூக்கினான்.

''நாம் இந்தத் தடவை அதை நறுக்கிப் புலவு தயாரிக்க வேண்டும். நீ அதைக் கொன்று இறகுகளைப் பிடுங்கு.''

''நாமே சாப்பிடலாமா அல்லது சார்ஜென்டுக்குக் கொடுப்போமா?''

''அவருக்குக் கொடுப்பதற்குப் போதுமானதாக இருக்கும்.''

''எனக்கு அதைக் கொல்ல பயமாக இருக்கிறது'' என்றான் நஸார்கா.

''அப்படியானால் என்னிடம் கொடு.''

லுக்காஷ்கா தன்னுடைய குத்துவாளின் அடியிலிருந்த கத்தியை உருவி அந்தப் பறவையின் கழுத்தை வேகமாக நறுக்கினான். அந்தப் பறவை துடித்தது; ஆனால் அது தன்னுடைய இறக்கைகளை விரிப்பதற்குள் அதன் உயிரற்ற தலை இரத்தம் கொட்டியபடியே பூமியில் விழுந்தது.

''இப்படித்தான் நறுக்க வேண்டும்!'' என்று சொல்லிக் கொண்டு லுக்காஷ்கா பறவையைக் கீழே போட்டான். ''ருசியான புலவு தயாரிக்கலாம்.''

நஸார்கா அதைப் பார்த்து நடுங்கினான்.

''லுக்காஷ்கா, கேள்! அந்தப் பேய் நம்மைப் பதுங்கிடத்துக்கு அனுப்பப் போகிறானாம்'' என்று சொல்லிக் கொண்டு காட்டுச் சேவலைத் தூக்கினான். அவன் 'பேய்' என்று சார்ஜென்டைத் தான் குறிப்பிட்டான். ''அவன் ஃபோமுஷ்கினை சிவப்பு ஒயின் கொண்டுவர அனுப்பியிருக்கிறான். இந்தத் தடவை அவன் போயிருக்க வேண்டும். நாம் ஒவ்வொரு இரவும் போக வேண்டியிருக்கும்! அவன் எப்பொழுதும் நம்மையே அனுப்புகிறான்.''

லுக்காஷ்கா சீட்டியடிக்கத் தொடங்கினான்; அவன் காவல் நிலையத்தை நோக்கி நடந்தான்.

''அந்தக் கயிற்றைக் கொண்டுவா!'' என்று அவன் திரும்பிப் பார்த்துக் கத்தினான்.

நஸார்கா அப்படியே செய்தான்.

''நான் அவனிடம் சொல்லப் போகிறேன். சத்தியமாக சொல்லப் போகிறேன்'' என்று நஸார்கா மேலும் பேசினான். ''நாம் போகமாட்டோம் என்று அவனிடம் சொல்வோம். நாம் களைத்துப்போய் விட்டோம், அவ்வளவு தான். நீ அவனிடம் சொல்லிவிடு. நீ சொன்னால் அவன் கேட்பான். எதற்காகப் போகணும்?''

''நீ ஏன் இப்படி உறுமுகிறாய்?'' என்று லுக்காஷ்கா

கேட்டான். அவன் வேறு எதைப் பற்றியோ நினைத்துக் கொண்டிருக்க வேண்டும். ''என்ன உளறல்! நம் கிராமத்தில் இருந்து அவன் நம்மை இரவு வேலைக்கு அனுப்பினால் அது கஷ்டமே. கிராமத்தில் உல்லாசமாக இருக்க முடியும். இங்கே காவல் நிலையத்தில் இருப்பதற்கும் பதுங்கிடத்துக்குப் போவதற்கும் என்ன வேறுபாடு? இரண்டும் ஒன்றுதான். நீ என்ன ஆளப்பா?..''

''நீ கிராமத்துக்குப் போகிறாயா?''

''நான் திருவிழாவுக்குப் போகிறேன்.''

''உன்னுடைய துனாய்கா ஃபோமுஷ்கினைச் சேர்த்துக் கொண்டிருக்கிறாள் என்று குர்க்கா சொல்கிறான்'' என்று நஸார்கா திடீரென்று கவடில்லாமல் பேசினான்.

''அவள் நாசமாய்ப் போகட்டும்!'' என்று சீறினான் லுக்காஷ்கா. அவனுடைய வரிசையான வெண்மை நிறப் பற்கள் தெரிந்தன; ஆனால் அவன் சிரிக்கவே இல்லை. ''எனக்கு இன்னொருத்தி கிடைக்க மாட்டாள் என்று நினைக்கிறாயா?''

''குர்க்காதான் இதைச் சொன்னான்: அவன் அவள் வீட்டுக்குப் போயிருந்தானாம்; அவள் கணவன் வெளியில் போயிருக்கிறான். ஃபோமுஷ்கின் அங்கே உட்கார்ந்து கொண்டு பணியாரம் சாப்பிட்டுக் கொண்டிருந்திருக்கிறான். குர்க்கா சிறிது நேரம் உட்கார்ந்திருந்து விட்டுத் திரும்பிவிட்டான். வருகிற பொழுது நின்று சன்னலுக்குக் கீழே காதை வைத்துக் கேட்டிருக்கிறான். 'அந்தச் சனியன் போய்விட்டானா? கண்ணே, இன்னொரு பணியாரம் சாப்பிடுங்கள்' என்று அவள் பேசியதைக் கேட்டிருக்கிறான். 'இன்றைக்கு இங்கேயே படுத்துக்கொள்ளுங்கள்' என்று சொல்லியிருக்கிறாள். குர்க்கா சன்னலுக்குப் பின்னால் நின்றுகொண்டு, 'அடி சக்கை' என்றான்.''

''நீ பொய் சொல்கிறாய்!''

''கடவுள் சத்தியமாக உண்மையைச் சொல்கிறேன்.''

லுக்காஷ்கா சற்று நேரம் பேசாமலிருந்தான்.

''அவளுக்கு இன்னொரு காதலன் கிடைத்து விட்டான் என்றால், பிசாசு அவளைக் கொண்டு போகட்டும். இங்கே பெண்களுக்குப் பஞ்சமில்லையே. நானும் அவளைப் பற்றி அலுத்துக் கொண்டுதானிருந்தேன்.''

''நீ மகா சூரனப்பா!'' என்றான் நஸார்கா. ''நீ



*துணை லெப்டினென்டின் மகள் மார்யானா மீது கண் வைத்திருக்கிறாய். அவள் இன்னும் யாருடனும் சுற்ற வில்லை, அப்படித்தானே?''*

*லுக்காஷ்கா முகத்தைச் சுளித்தான். ''மார்யானா வா? எனக்கு எல்லாப் பெண்களும் ஒன்றுதான்!''*

*''நீ அவளுடன் நெருங்கிப் பழக முயற்சி செய்வது நல்லது...''*

*''நீ அப்படியா நினைக்கிறாய்? கிராமத்தில் போது மான பெண்கள் இருக்கவில்லையா?''*

*லுக்காஷ்கா மீண்டும் சீட்டியடிக்கத் தொடங்கினான்; கிளைகளிலிருந்து இலைகளைப் பறித்தபடியே காவல் நிலையத்துக்குச் சென்றான். ஒரு புதரைக் கடந்தபொ ழுது அவன் திடீரென்று நின்று, கத்தியை உருவி அவன் கவனத்தை ஈர்த்த ஒரு வழவழப்பான, நீண்ட குச்சியை வெட்டினான். ''இது நல்ல செறிகோலாகப் பயன்படும்'' என்று சொல்லிக்கொண்டு அந்தக் குச்சியைக் காற்றில் சுழற்றி ஓசை எழுப்பினான்.*

*கஸாக்குகள் குடிசையில் மெருகிடப்பட்ட வராந்தா வில் தாழ்வான தார்த்தாரிய மேசையைச் சுற்றிலும் மண் தரையின் மீது உட்கார்ந்துகொண்டு இரவு உணவைச் சாப்பிட்டுக்கொண்டிருந்தார்கள். பதுங்கிடத்துக்கு அடுத்த*

படியாக யார் போக வேண்டும் என்று அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். குடிசையின் திறந்த வாயிலில் நின்று கொண்டிருந்த சார்ஜென்டிடம் ''இன்றிரவுக்கு யாரை அனுப்பப் போகிறீர்கள்?'' என்று ஒரு கஸாக்கு கேட்டான்.

''இந்தத் தடவை யார் போக வேண்டும்?'' என்று சார்ஜென்ட் முணுமுணுத்தார். ''புர்லாக் மாமாவுக்கு முடிந்துவிட்டது, ஃபோமுஷ்கினும் போய்விட்டான்'' என்று அவர் சற்றுத் தயக்கத்துடன் பேசினார். ''உங்களில் யார் போகிறீர்கள்? சரி, நீயும் நஸார்காவும் போங்கள்'' என்று அவர் லுக்காஷ்காவைப் பார்த்துக் கூறினார். ''யெர்குஷோவும் கூடப் போகட்டும். அவன் தூக்கத்தில் குடிமயக்கம் போயிருக்கும்.''

''நீங்கள் நாள் முழுவதும் குடிமயக்கத்தில் இருக்கிறீர்கள்'' என்று நஸார்கா தணிந்த குரலில் கூறினான்.

கஸாக்குகள் சிரித்தார்கள்.

குடிசைச் சுவருக்குப் பக்கத்தில் குடிமயக்கத்தில் படுத்திருந்த கஸாக்குதான் யெர்குஷோவ். அவர்கள் பேசிக் கொண்டிருந்த அதே தருணத்தில் அவன் வாயிலில் நின்று கண்களைத் தேய்த்துக் கொண்டிருந்தான்.

லுக்காஷ்கா எழுந்து போய்த் தன்னுடைய துப்பாக்கியை சரி செய்யத் தொடங்கினான்.

''முடிந்த அளவுக்கு சீக்கிரமாகப் புறப்படுங்கள். இரவுச் சாப்பாடு முடிந்தவுடனே புறப்படுங்கள்'' என்றார் சார்ஜென்ட். அவர் யாரும் கருத்துத் தெரிவிப்பதற்காகக் காத்திருக்காமல் கதவைப் படீரென்று சாத்தினார். கஸாக்குகளின் கீழ்ப்படிதல் உணர்ச்சியில் அவருக்கு நம்பிக்கையில்லை என்பது வெளிப்படையாகத் தெரிந்தது. ''மேலேயிருந்து விசேஷ உத்தரவு வராதிருந்தால் நான் உங்களை அனுப்பமாட்டேன். லெப்டினென்ட் எந்த நிமிடத்திலும் இங்கே வரலாம். மேலும் எட்டு அப்ரேக்குகள் ஆற்றைக் கடந்து வரப்போவதாகச் சொல்கிறார்கள்'' என்று அவர் முணுமுணுத்துக் கொண்டார்.

''நாம் போகவேண்டியதுதான்'' என்றான் யெர்குஷோவ். ''அதுதான் உத்தரவு! இந்த மாதிரி நேரங்களில் அதிகாரிகளின் உத்தரவுகளுக்குக் கீழ்ப்படிய வேண்டும். புறப்படுவோம்.''

இதற்கிடையில் லுக்காஷ்கா பெரிய கோழிக்கறித் துண்டை இரண்டு கைகளிலும் எடுத்து வாய்க்கு முன்னால் வைத்துக்கொண்டு ஒரு சமயத்தில் சார்ஜென்டையும் மறுசமயத்தில் நஸார்காவையும் பார்த்துக் கொண்டிருந்தான். அங்கே நடப்பவற்றைப் பற்றி அவன் முற்றிலும் அலட்சியமாக இருப்பதாகத் தோன்றியது. அவர்கள் இருவரையும் பார்த்துச் சிரித்தான்.

கஸாக்குகள் பதுங்கிடத்துக்கு இன்னும் புறப்படாதிருக்கும் பொழுது இரவுமுதல் மரத்தடியில் வீணாக உட்கார்ந்து கொண்டிருந்த யெரோஷ்கா மாமா விளக்கு மங்கலாக எரிந்து கொண்டிருந்த வராந்தாவுக்குள் நுழைந்தார்.

''பசங்களா'' என்று அவர் கனத்த குரலில் பேசியது அந்தத் தாழ்வான அறையில் எதிரொலித்து மற்ற குரல்களை அமுக்கியது. ''நான் உங்களுடன் வருகிறேன். நீங்கள் செச்சென்களைத் தேடுங்கள். நான் பன்றிகளைத் தேடுகிறேன்.''

## 8

யெரோஷ்கா மாமாவும் மூன்று கஸாக்குகளும் காகேஷிய மென்மயிர் மேல்கோட்டுகள் அணிந்து தோளில் துப்பாக்கிகளை மாட்டிக் கொண்டு புறப்பட்ட பொழுது ஏற்கெனவே நன்றாக இருட்டியிருந்தது; அவர்கள் பதுங்கிப் பார்ப்பதற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட இடத்துக்குத் தேரெக் ஓரமாக நடந்து சென்றார்கள். அங்கே செல்வதற்கு நஸார்காவுக்கு சிறிதும் விருப்பமில்லை. ஆனால் லுக்காஷ்கா அவனை உரத்த குரலில் கூப்பிட்டான். இருவரும் சீக்கிரமாகத் தயாரித்துக்கொண்டு புறப்பட்டார்கள். அவர்கள் சிறிது தூரம் மௌனமாக நடந்தபிறகு, பள்ளத்திலிருந்து திரும்பி நாணற் புதர்களின் மத்தியில் வெளியில் தெரியாத ஒரு ஒற்றையடிப் பாதையில் தேரெக் ஓரமாக நடந்து சென்றார்கள். வெள்ளம் வடிகின்ற பொழுது விட்டுச் சென்ற பெரிய, கறுப்பு மரக்கட்டை கரையின் அருகே கிடந்தது. அதைச் சுற்றியிருந்த நாணற் செடிகள் அப்பொழுதுதான் நசுங்கியிருந்தன.

''இங்கே பதுங்கியிருந்து பார்க்கலாமா?'' என்றான் நஸார்கா.

''நல்ல இடம்தான்'' என்று லுக்காஷ்கா பதிலளித்தான். ''நீ இங்கே காத்திரு. நான் சீக்கிரத்தில் வந்து விடுகிறேன். மாமாவுக்குப் பாதையைக் காட்ட விரும்புகிறேன்.''

''இது மிகவும் சிறந்த இடம். யாரும் நம்மைப் பார்க்க முடியாது; ஆனால் நாம் எல்லாவற்றையும் பார்க்கமுடியும்'' என்றான் யெர்குஷோவ். ''நாம் இங்கே உட்காருவோம். இது மிகச் சிறந்த இடம்!''

நஸார்காவும் யெர்குஷோவும் தங்களுடைய காகேஷிய மென்மயிர் மேல்கோட்டுகளைக் கீழே விரித்துப் போட்டு மரக்கட்டைக்குப் பின்னால் வசதியாக உட்கார்ந்து கொண்டார்கள். லுக்காஷ்கா யெரோஷ்கா மாமாவுடன் புறப்பட்டுச் சென்றான்.

''அந்த இடம் இதற்குப் பக்கத்தில்தான், மாமா,'' என்று அந்தக் கிழவருக்கு முன்னால் ஓசைப்படுத்தாமல் நடந்தபடியே அவன் கூறினான். ''அவை எந்த இடத்துக்குப் போயிருக்கும் என்று உங்களுக்குக் காட்டுகிறேன். அந்த இடம் எனக்கு மட்டுமே தெரியும், மாமா.''

''எனக்குக் காட்டு. நீ ஒரு அருமையான இளைஞன், லுக்கா,'' என்று அந்தக் கிழவரும் மெல்லிய குரலில் பதிலளித்தார்.

அவர்கள் சில தப்படிகள் நடந்துசென்ற பிறகு லுக்காஷ்கா நின்று ஒரு குட்டைக்குப் பக்கத்தில் சென்றான், சீட்டியடித்தான்.

''அவை தண்ணீர் குடிப்பதற்கு இங்கே தான் வந்தன. இதைப் பாருங்கள்'' என்று புதிய கால்தடங்களைச் சுட்டிக்காட்டி, அநேகமாகக் காதுகேட்காதபடித் தணிந்த குரலில் பேசினான்.

''கிறிஸ்து காப்பாற்றட்டும்'' என்றார் அந்தக் கிழவர். ''அந்தக் கிழட்டுப் பன்றி இப்போது பள்ளத்துக்கு அப்பால் உள்ள குழியில் உடலைச் சொரிந்திருக்கிறது'' என்று தொடர்ந்து பேசினார். ''நீ திரும்பிப் போ, நான் இங்கே காத்திருக்கிறேன்.''

லுக்காஷ்கா தன்னுடைய காகேஷிய மென்மயிர் மேல்கோட்டைச் சரி செய்து கொண்டு கரை ஓரமாகத் தனியே திரும்பி, ஒரு சமயத்தில் இடது பக்கத்தில் சுவரைப் போல வளர்ந்திருந்த நாணற் புதர்களையும் மறு

சமயத்தில் கரையின் கீழ் ஓடிக் கொண்டிருந்த தேரெக்கையும் வேகமாகப் பார்த்தபடியே நடந்தான்.

''யார் சொல்ல முடியும்? ஒருவேளை அவனும் கூட காத்துக் கொண்டிருக்கிறானோ அல்லது பக்கத்தில் எங்காவது பதுங்கியிருக்கிறானோ?'' என்று லுக்காஷ்கா தனக்குள் பேசிக்கொண்டான்; 'அவன்' என்று செச்செனைக் குறித்தான்.

ஆற்றில் திடீரென்று முண்டிக்கொண்டு தண்ணீரை வாரியிறைக்கின்ற பேரோசையைக் கேட்டு அவன் திடுக்கிட்டான். அவன் கை துப்பாக்கியைப் பிடித்தது. கரையிலிருந்து ஒரு காட்டுப் பன்றி மூச்சிறைக்க ஓடிவந்தது. அந்தக் கறுப்பு உருவம் கணநேரத்தில் தண்ணீரின் பிரகாசமான மேற்பரப்பை விலக்கிக்கொண்டு நாணற் செடிகளுக்குள் புகுந்து மறைந்தது. லுக்கா வேகமாகத் துப்பாக்கியைக் கெட்டித்துக்கொண்டு அதைக் குறிபார்த்தான். ஆனால் அவன் சுடுவதற்குள் காட்டுப் பன்றி புதர்களுக்குள் மறைந்துவிட்டது. அவன் எச்சிலைத் திரட்டிக் கோபத்துடன் துப்பி விட்டு நடந்தான். அவன் பதுங்கிடத்தை நெருங்கியவுடன் மறுபடியும் நின்று லேசாகச் சீட்டியடித்தான். அந்தச் சமிக்கைக்குப் பதில் கேட்டது. அவன் தன்னுடைய தோழர்களுடன் சேர்ந்து கொண்டான்.

நஸார்கா உடலை நன்றாகப் போர்த்திக்கொண்டு ஏற்கெனவே உறங்கிவிட்டான். யெர்குஷோவ் குத்துக்காலிட்டு உட்கார்ந்திருந்தான். அவன் சற்று விலகிக்கொண்டு லுக்காஷ்கா உட்காருவதற்கு இடம் கொடுத்தான்.

''இங்கே உட்காருவது வேடிக்கையாக இருக்கிறது. உண்மையாகவே இது நல்ல இடம்தான். நீ அவருக்கு இடத்தைக் காட்டினாயா?'' என்று அவன் கேட்டான்.

''அந்த இடத்தைக் காட்டினேன்'' என்று லுக்காஷ்கா தன் மேல்கோட்டைத் தரையில் விரித்தபடியே கூறினான். ''ஆனால் நான் ஒரு பெரிய பன்றியை ஆற்றிலிருந்து கிளப்பிவிட்டேன். நிச்சயமாக அந்தப் பன்றியைத்தான் நான் பார்த்திருக்க வேண்டும்! அது போட்ட சத்தம் உனக்குக் கேட்டிருக்குமே?''

''ஆம். ஏதோ ஒரு காட்டு மிருகம் பெருஞ்சத்தம் போடுவது கேட்டது. அது காட்டு மிருகம்தான் என்

பதை நான் ஒரே நிமிடத்தில் தெரிந்து கொண்டேன்! 'லுக்காஷ்கா அந்த மிருகத்துக்கு பயமேற்படுத்தியிருக்க வேண்டும்' என்று மனத்தில் சொல்லிக்கொண்டேன்'' என்று யெர்குஷோவ் மேல்கோட்டை உடலில் போர்த்திக் கொண்டு கூறினான். ''நான் கொஞ்ச நேரம் தூங்கு கிறேன்'' என்று அவன் தொடர்ந்தான். ''சேவல் கூவிய பிறகு என்னை எழுப்பு; ஏனென்றால் நமக்குள் ஏதாவ தொரு முறை இருக்கவேண்டும். நான் தூங்கப் போகி றேன், பிறகு நீ தூங்கலாம், நான் காவல் காக்கிறேன். அது தான் சரியான காவலாகும்.''

''நன்றி. எனக்குத் தூங்க விருப்பம் இல்லை'' என்று லுக்காஷ்கா பதிலளித்தான்.

இரவு கறுப்பாக, இளஞ்சூடாக, அமைதியாக இருந் தது. வானத்தில் ஒரு பகுதியில் மட்டுமே நட்சத்திரங் கள் பிரகாசித்துக் கொண்டிருந்தன. மலைகளைத் தொட் டுக் கொண்டிருந்த ஒரு பெரிய மேகம் வானத்தின் பெரும் பகுதியை மறைத்திருந்தது. அந்தக் கறுப்பு நிற மேகம் மலைகளுடன் ஒன்று கலந்து அப்பொழுது காற்றடிக்க வில்லை என்ற போதிலும் தள்ளி, தள்ளி மெதுவாகப் போய்க் கொண்டிருந்தது. அதன் வளைவான முனைகள் நட்சத்திரங்கள் நிறைந்திருந்த அகன்ற வானத்தில் தெளி வாகத் தெரிந்தன.

கஸாக்குக்கு முன்னால் தேரெக் ஆறும் மங்கலான தொலைவும் மட்டுமே தெரிந்தன. அவனுக்குப் பின்னா லும் இரண்டு பக்கங்களிலும் நாணற் புதர்களின் வட்ட மான சுவர் இருந்தது. இந்த நாணற் செடிகள் காரண மில்லாமல் எப்பொழுதாவது வளைந்து ஒன்றின் மீது ஒன்று உராய்ந்து 'சலசலப்பேற்படுத்த ஆரம்பிக்கும். கீழேயிருந்து நோக்கும் பொழுது, அசைந்து கொண்டி ருந்த நாணற் செடிகளின் தலைகள் வானத்தில் மேகத் தினால் மறைக்கப்படாத பகுதியின் பின்னணியில் மரங் களின் மெல்லிறகுக் கிளைகளைப் போலத் தோன் றின.

ஆற்றில் நீரோட்டம் அதிகரித்துக் கொண்டிருந்த கரை அவனுக்கு முன்னால் அவனுடைய காலடியில் இருந் தது. தொலைவில் பிரகாசமாக ஓடிவந்து கொண்டிருந்த பழுப்பு நிறத் தண்ணீர் மணல் திட்டுகள் மீது மோதி

ஓசையுண்டாக்கியது. இன்னும் தொலைவில் அதே தண்ணீரும், கரையும் மேகமும் தனித்துப் பிரிக்க முடியாத இருளில் ஒன்றுகலந்தன. தண்ணீரின் மேற்பரப்பில் நீளமான, கறுப்பு நிழல்கள் தெரிந்தன. அவை ஆற்றில் மிதந்து வருகின்ற மரக்கட்டைகள் என்று கஸாக்கின் அனுபவம் நிறைந்த கண்கள் தெரிவித்தன. எப்பொழுதாவது மின்னலடிக்கின்ற பொழுது கறுப்புக் கண்ணாடியைப் போலத் தண்ணீர் அதைப் பிரதிபலிக்கும், அந்த மின்னல் எதிர்ப்பக்கத்தில் சரிந்து கொண்டிருந்த கரையின் உருவரையைப் பளிச்சென்று எடுத்துக்காட்டியது.

நாணற் செடிகளின் முணுமுணுப்பு, கஸாக்குகளின் குறட்டை ஒலி, கொசுக்களின் ரீங்காரம், நீரோட்டத்தின் சலசலப்பு ஆகிய இரவின் பல்வேறு ஓசைகளில் வெகுதூரத்திலிருந்து கேட்கின்ற துப்பாக்கி வேட்டு, தண்ணீரால் அரிக்கப்பட்ட கரை சரிந்து விழுகின்ற சத்தம், பெரிய மீன் துள்ளிவிழுகின்ற ஓசை, அடர்த்தியான காட்டில் ஏதோ ஒரு காட்டு மிருகம் செய்கின்ற சத்தம் ஆகியவை திரும்பத் திரும்பக் குறுக்கிட்டன. தேரெக் வழியாக ஒரு ஆந்தை பறந்து வந்தது; அதன் இறக்கைகளின் இரண்டு அசைவுகளுக்கு இடையில் அவற்றை ஒன்று சேர்த்துத் தவறாமல் ஓசை எழுப்பியது. கஸாக்குகளின் தலைக்கு மேலே வந்ததும் அது காட்டை நோக்கித் திரும்பி ஒரு மரத்துக்கு மேலே வட்டம் போட்டது, தன்னுடைய இறக்கைகளை ஒன்று சேர்த்து இன்னும் வேகமாக ஆட்டியது, பிறகு ஒரு பழைய சினார் மரத்தில் காலூன்றி நிற்பதற்கு நெடுநேரம் வரை முயற்சி செய்தது.

வழக்கத்துக்கு மாறான ஓசை ஒவ்வொரு முறை கேட்கும்பொழுதும் கவனம் நிறைந்த கஸாக்கு வீரன் தன் காதுகளைக் கூர்மையாக்கிக் கொண்டு கேட்பான், கண்களைச் சுருக்கிப் பார்ப்பான்; அவன் விரல்கள் துப்பாக்கியைத் தொடும்.

இரவு நேரத்தின் பெரும்பகுதி முடிந்துவிட்டது. மேற்குத் திசையை நோக்கிப் போய்விட்ட கறுப்பு மேகம் தன்னுடைய ஒழுங்கற்ற முனைகளின் கீழிருந்த தெளிவான, நட்சத்திரங்கள் நிறைந்த வானத்தை இப்பொழுது வெளியே காட்டியது; மலைகளுக்கு மேலே தங்க நிலா

வின் பொய்க் கொம்புகள் பளிச்சென்று பிரகாசித்தன. குளிர்ச்சி பரவத் தொடங்கியது.

நஸார்கா விழித்துக்கொண்டு சில வார்த்தைகளை முணுமுணுத்தான்; பிறகு மறுபடியும் தூங்க ஆரம்பித்தான். லுக்காஷ்கா அலுப்படைந்து எழுந்து நின்றான், குத்துவாளின் கீழேயிருந்த கத்தியை உருவினான், ஒரு குச்சியைச் செறிகோலாக செதுக்கத் தொடங்கினான். செச்சென்கள் மலைகளில் எப்படி வசிக்கிறார்கள், அவர்களது வீரர்கள் இக்கரைக்கு எப்படி வரப் போகிறார்கள், அவர்கள் கஸாக்குகளைப் பற்றி அஞ்சாதிருப்பது எப்படி, அவர்கள் வேறு ஏதாவதொரு இடத்தில் ஆற்றைக் கடக்க முடியுமா என்பதைப் பற்றிய எண்ணங்கள் அவன் மனத்தில் நிறைந்திருந்தன. அவன் தன் உடலை நீட்டி ஆற்றை உற்றுப்பார்த்தான்; ஆனால் பார்வைக்கு ஒன்றுமே தெரியவில்லை.

பின்னர் அவன் ஆற்றையும் மங்கிய நிலவொளியில் தண்ணீருக்கு மேலே தெளிவில்லாதபடித் தோற்றமளிக்கின்ற அக்கரையையும் பற்றி கவனத்தைக் குறைத்து செச்சென்களைப் பற்றிச் சிந்திப்பதை நிறுத்திக்கொண்டான், தன்னுடைய தோழர்களைத் தூக்கத்திலிருந்து எழுப்புவதற்கு நேரம் வராதா, கிராமத்துக்குப் போகின்ற நாள் வராதா என்று துடித்துக் கொண்டிருந்தான். கிராமத்தைப் பற்றி எண்ணியதும் தன்னுடைய துனாய்காவை நினைத்துக்கொண்டான். அவளை நினைத்ததும் கசப்பு கலந்த உணர்ச்சி ஏற்பட்டது.

பொழுது புலர்ந்து விட்டது என்னும் அறிகுறிகள் காணப்பட்டன. ஆற்றின் மீது வெள்ளி நிற மூடுபனி எழும்பத் தொடங்கியது. அவனைச் சுற்றி இளம் கழுகுகள் இறக்கைகளை ஆட்டிக்கொண்டு ஓசை எழுப்பின. கடைசியாக, வெகுதூரத்துக்கு அப்பாலிருந்த கிராமத்தில் முதற் சேவல் கூவுகின்ற சத்தம் கேட்டது, அதைத் தொடர்ந்து இரண்டாவது சேவல் அதிக நேரம் தெளிவாகக் கூவியது. பிறகு மற்ற சேவல்கள் எல்லாத் திசைகளிலிருந்தும் பதிலளித்துக் கூவின.

''அவர்களை எழுப்புவதற்கு நேரம் வந்துவிட்டது'' என்று நினைத்தான் லுக்காஷ்கா. அவன் செறிகோலைத் தயாரித்து முடித்துவிட்டான்; அவனுடைய கண்கள் கனத்

திருக்கின்ற மாதிரி உணர்ந்தான். அவன் தன்னுடைய தோழர்களை நோக்கித் திரும்பி எந்தக் கால்கள் யாருடையவை என்று கண்டுபிடிப்பதற்கு முயற்சி செய்து கொண்டிருந்தான்; ஆனால் தேரெக்கின் அக்கரையில் ஏதோ ஒன்று பொத்தென்று விழுந்ததைப் போன்று திடீரென்று அவனுக்குத் தோன்றியது. அவன் மறுபடியும் பிறைநிலா இன்னும் தொங்கிக் கொண்டிருந்த மலைகளின் பிரகாசமான அடிவானத்தை உற்றுப்பார்த்தான். அவன் அக்கரையை, ஆற்றின் ஓரத்தை உற்றுப்பார்த்தான். தண்ணீரில் மிதந்து வந்து கொண்டிருந்த மரக்கட்டைகள் இப்பொழுது தெளிவாகத் தெரிந்தன. தேரெக்கும் மரக்கட்டைகளும் அசையாமல் இருக்கும்பொழுது தான் நகர்ந்து கொண்டிருப்பதாக அவனுக்குத் தோன்றியது. ஆனால் அந்த பிரமை ஒரேயொரு கணம்தான் இருந்தது. அவன் மறுபடியும் கவனமாகப் பார்க்கத் தொடங்கினான்.

கறுப்பு நிறக் கிளையுடன் கூடிய ஒரு பெரிய மரக்கட்டை விசேஷமாக அவனுடைய கவனத்தை ஈர்த்தது. அந்த மரக்கட்டை உருளாமல் அல்லது திசை திரும்பாமல் ஆற்றில் மிதந்து வந்து கொண்டிருந்தது விசித்திரமாக இருந்தது. அது நீரோட்டத்தில் மிதக்கவில்லை, ஒரு மணல் திட்டை நோக்கி ஆற்றின் குறுக்கே வருகிறது என்று கூட அவனுக்குத் தோன்றியது. லுக்காஷ்கா கழுத்தை நீட்டிக்கொண்டு அதன் இயக்கத்தை ஆர்வத்துடன் கவனித்தான். அந்த மரக்கட்டை அந்த மணல் திட்டில் மோதி நின்றது, பிறகு தனித்தன்மையான முறையில் அசைந்தது. அந்த மரக்கட்டையின் பின்புறத்தில் ஒரு கையைப் பார்த்ததாக லுக்காஷ்காவுக்குத் தோன்றியது.

''என்னுடைய சொந்த முயற்சியில் ஒரு அப்ரேக்கைச் சுடுவதற்கு ஒரு சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்திருக்கிறது'' என்று அவன் துப்பாக்கியை எடுத்தான். அதற்கு நிலைகாலை உறுதியாக ஆனால் அவசரமாக அமைத்து, துப்பாக்கிக் குழாயை அதன் மீது வைத்தான். அவன் சப்தம் செய்யாமல் துப்பாக்கிக் குதிரையைப் பின்னே இழுத்துத் தன் மூச்சை அடக்கிக்கொண்டு மரக்கட்டையை நோக்கிக் குறிபார்க்கத் தொடங்கினான்.

''அவர்களை எழுப்ப வேண்டாம்'' என்று அவன் நினைத்தான். ஆனால் அவனுடைய இதயம் மார்புக்குள் கட்டுமீறித் துடித்தபடியால் அவன் திடுக்கிட்டு உற்றுக் கேட்டான். அந்த மரக்கட்டை திடீரென்று உருண்டது, மறுபடியும் தண்ணீரில் சலசலப்பை ஏற்படுத்திக்கொண்டு இக்கரையை நோக்கி வந்து கொண்டிருந்தது.

''குறி தப்பிவிடக் கூடாது!'' என்று நினைத்தான். அதோ! மரக்கட்டையின் முன்பக்கத்தில் ஒரு மலைக் குடிமகனுடைய தலை நிலாவின் மங்கிய ஒளியில் தென் பட்டது. அவன் அந்தத் தலைக்கு நேரே துப்பாக்கியைக் குறிபார்த்தான். அந்தத் தலை மிகவும் அருகில், துப் பாக்கிக் குழாயின் முனையில் இருப்பதைப் போல அவ னுக்குத் தோன்றியது. அவன் துப்பாக்கிக் குழாய்க்கு மேலே பார்த்தான். ''ஆம்! அது ஒரு அப்ரேக் தான்'' என்று மகிழ்ச்சியுடன் நினைத்தான். திடீரென்று ஒரு முழங்காலை மடித்து உட்கார்ந்துகொண்டு துப்பாக்கி யை மறுபடியும் சரியாக அமைத்துக்கொண்டு எதிரியைக் குறிபார்த்தான். அந்த நீண்ட குழாயினால் தொடக் கூடிய தூரத்தில் எதிரி இருப்பதைப் போல அநேகமாகத் தோன்றியது. பிறகு குழந்தைப் பருவத்திலிருந்து தனக் குப் பழக்கமான கஸாக்கு மரபின்படி ''கடவுளே காப் பாற்றுங்கள்!'' என்று உச்சரித்துவிட்டு துப்பாக்கி விசை யைத் தட்டினான்.

நாணல் தட்டைகள் மீதும் ஆற்றின் மீதும் கண நேரத்துக்குக் கண்ணைப் பறிக்கும் வெளிச்சம் பிரகாசித் தது. கீச்சென்ற, சுருக்கமான வேட்டுச் சத்தம் ஒலித் தது. அந்த ஓசை ஆற்றில் நெடுந்தூரம் வரை சென்று எங்கோ ஒரு இடத்தில் கர்ச்சனை செய்தது. மரக் கட்டை இனிமேல் நீரோட்டத்தின் குறுக்கே மிதந்து வர வில்லை, ஆனால் ஆடிக்கொண்டும் வளைந்துகொண்டும் மிதந்து சென்றது.

''அவனைப் பிடி!'' என்று யெர்குஷோவ் கத்தினான். அவன் துப்பாக்கியைப் பிடித்துக்கொண்டு பதுங்கியிருந்த மரக்கட்டைக்குப் பின்னாலிருந்து சிறிதளவு எழுந்தான்.

''வாயை மூடு, பிசாசே!'' என்று லுக்காஷ்கா பற் களைக் கடித்துக்கொண்டு முணுமுணுத்தான். ''அப்ரேக்கு கள்!''

''யாரைச் சுட்டாய்?'' என்று கேட்டான் நஸார்கா. ''யாரைச் சுட்டாய், லுக்காஷ்கா?''

லுக்காஷ்கா பதிலளிக்கவில்லை. அவன் துப்பாக்கியை மறுபடியும் கெட்டித்த பிறகு ஆற்றில் மிதந்து வந்த மரக் கட்டையைப் பார்த்துக் கொண்டிருந்தான். அது சிறிது தூரம் போய் ஒரு மணல் திட்டில் மோதி நின்றது. அதன் அடியிலிருந்து ஏதோ ஒரு பெரிய உருவம் தண்ணீரில் அசைவதைப் போலத் தோன்றியது.

''எதைச் சுட்டாய்? ஏன் சொல்லாதிருக்கிறாய்?'' என்று கஸாக்குகள் வற்புறுத்தினார்கள்.

''அப்ரேக்குகள்! உனக்கு எத்தனை தடவை சொல்லு வேண்டும்?'' என்று சீறினான் லுக்கா.

''எங்களிடம் எதற்காகப் பிதற்றுகிறாய்? உன் துப் பாக்கி தற்செயலாக வெடித்துவிட்டதா?..''

''நான் ஒரு அப்ரேக்கைச் சுட்டேன்! அதோ பார்! அதைத்தான் சுட்டேன்!'' என்று பதிலளித்தான் லுக் காஷ்கா. அவனுடைய பதட்டத்தில் அவன் குரல் மாறுத லடைந்தது. அவன் துள்ளிக் குதித்தான். ''ஒரு நபர் ஆற் றின் குறுக்கே நீந்திவந்து கொண்டிருந்தான்...'' என்று அவன் மணல் திட்டைச் சுட்டிக்காட்டினான். ''நான் தான் அவனைச் சுட்டுக் கொன்றேன். அங்கே பாருங் கள்!''

''பொய் சொல்லாதே!'' என்று யெர்குஷோவ் கண் களைத் துடைத்தபடியே பேசினான்.

லுக்காஷ்கா யெர்குஷோவின் தோளைப் பிடித்து ஆவேசமாகத் தன்னை நோக்கி இழுத்தபொழுது அவன் வலி தாங்காமல் முனகினான். ''இது பொய்யா? அதோ பார்! அங்கே பார்!''

லுக்காஷ்கா சுட்டிக்காட்டிய திசையில் அவன் பார்த்த பொழுது அந்த உடலைக் கண்டதும் அவன் தொனி மாறியது.

''ஓ! இன்னும் அதிகமானவர்கள் இருப்பார்கள் என்று நான் உறுதியாகச் சொல்கிறேன்'' என்று அவன் அச்சத் துடன் கூறிவிட்டுத் தன்னுடைய துப்பாக்கியைத் தேட ஆரம்பித்தான். ''அந்த நபர் முதலில் நீந்தி வந்திருக் கிறான். ஒருவேளை அவர்கள் ஏற்கெனவே இங்கே வந் திருக்கலாம். ஒருவேளை அவர்கள் அக்கரையில் பக்கத்தில்

இருக்கலாம். அப்படித்தான் இருக்கும் என்று நான் உறுதியாகச் சொல்கிறேன்.''

லுக்காஷ்கா தன்னுடைய இடைவாரின் கொக்கியைத் தளர்த்திவிட்டுத் தன்னுடைய செர்கெஸ்காவைக் கழற்றத் தொடங்கினான்.

''நீ எங்கே போகிறாய்? முட்டாளே!'' என்று யெர்குஷோவ் அதட்டினான். ''உன்னுடைய வாழ்க்கையைப் போக்கிக்கொள்வதற்கு ஏன் விரும்புகிறாய்? அவன் செத்துப் போயிருந்தால் ஓடப் போவதில்லை. எனக்குச் சிறிது வெடி மருந்து கொடு. உன்னிடம் இருக்கிறதா? நஸார்கா! நீ காவல் நிலையத்துக்கு வேகமாகப் போ; ஆனால் கரை ஓரமாகப் போகாதே. அவர்கள் உன்னைக் கொன்றுவிடுவார்கள். அது நிச்சயம்.''

''என்ன! நான் தனியாகப் போக வேண்டுமா? நீயே போய்க்கொள்'' என்று நஸார்கா சிடுசிடுப்பாகக் கூறினான்.

லுக்காஷ்கா இதற்குள் செர்கெஸ்காவைக் கழற்றிவிட்டு ஆற்றின் கரைக்குப் போய்விட்டான்.

''ஏய்! அது ஆபத்து! நான் சொல்வதைக் கேள்!'' என்று துப்பாக்கியில் வெடி மருந்தைக் கெட்டித்துக்கொண்டு யெர்குஷோவ் கூறினான். ''அவன் நகரவில்லை, பார். அதைப் புரிந்துகொள்: சீக்கிரத்தில் விடிந்துவிடும்; நாம் காவல் நிலையத்துக்குத் தகவல் தெரிவிப்போம். நஸார்கா! சீக்கிரமாகப் புறப்படு! நீ சரியான கோழை! கோழைத்தனத்தை விடு, சொல்கிறேன்.''

''லுக்காஷ்கா! நீ எப்படி அவனைக் கொன்றாய் என்பதைச் சொல்.''

லுக்காஷ்கா தண்ணீரில் குதிப்பதைப் பற்றிய முடிவை மாற்றிக்கொண்டான்.

''காவல் நிலையத்துக்கு வேகமாகப் போங்கள். நான் இங்கே காத்திருக்கிறேன். குதிரை ரோந்துப்படையை அனுப்பும்படி கஸாக்குகளிடம் சொல்லுங்கள். அவர்கள் ஆற்றைக் கடந்து இக்கரைக்கு வந்துவிட்டார்கள் என்றால் நாம் உடனே அவர்களைப் பிடித்துவிட வேண்டும்!''

''அவர்கள் நழுவிவிடலாம் என்று நான் சொல்கிறேன்'' என்று யெர்குஷோவ் எழுந்தபடியே கூறினான். ''ஆம். நாம் அவர்களைப் பிடித்தாக வேண்டும்.''

யெர்குஷோவும் நஸார்காவும் எழுந்து நின்று சிலு வைக் குறியிட்டுக் கொண்டார்கள். அவர்கள் காவல் நிலையத்தை நோக்கிப் புறப்பட்டார்கள்; ஆற்றங்கரை வழியாகப் போகாமல், காட்டுப் பாதையில் முட்புதர் களை விலக்கிக்கொண்டு நடந்தார்கள்.

''லுக்காஷ்கா! நீ அசையக் கூடாது'' என்று யெர்கு ஷோவ் கூறினான். ''இல்லையென்றால் அவர்கள் உன் னைக் கூடக் கொன்றுவிடுவார்கள். ஜாக்கிரதை! உன்னை எச்சரிக்கிறேன்.''

''நீ போ! என்ன செய்யவேண்டும் என்று எனக்குத் தெரியும்.'' லுக்காஷ்கா இப்படி பதிலளித்துவிட்டு மரக் கட்டைக்குப் பின்னால் உட்கார்ந்து துப்பாக்கியைச் சரி பார்த்துக் கொண்டிருந்தான்.

அவன் அங்கே தனியாக உட்கார்ந்திருந்தான்; மணல் திட்டைப் பார்த்துக்கொண்டு கஸாக்குகள் வருகின்ற சத் தம் கேட்கிறதா என்று கவனித்துக் கொண்டிருந்தான். ஆனால் காவல் நிலையம் வெகு தூரத்தில் இருந்தது. அவனோ பொறுமையின்றித் தவித்தான். செத்துப்போன அப்ரேக்குடன் வந்த நபர்கள் தப்பியோடிவிடலாம் என்று அவனுக்குத் தோன்றியது. முந்திய மாலைப் பொழுதில் காட்டுப் பன்றி தப்பிவிட்ட சமயத்தில் ஏற்பட்ட அதே எரிச்சல் உணர்ச்சி இப்பொழுது அவனிடம் ஏற்பட்டது. அவன் ஒரு சமயத்தில் இந்தப் பக்கத்திலும் மறு சமயத் தில் அடுத்த பக்கத்திலும் யாராவது தோன்றுகிறார் களா என்று துடிதுடிப்புடன் பார்த்துக் கொண்டிருந் தான்; துப்பாக்கியை நிலைக்காலில் வைத்துக்கொண்டு சுடுவதற்குத் தயாராக இருந்தான். அவனைக் கொல்லக் கூடிய சந்தர்ப்பம் ஏதேனும் இருப்பதாக அவன் சிறிதும் நினைக்கவில்லை.

## 9

பொழுது புலர்ந்ததும் அப்ரேக்கின் உடல் முழுவதும் இப்பொழுது தெளிவாகத் தெரிந்தது; அந்த உடல் மணல் திட்டின் மீது தண்ணீரில் அசைந்தபடி கிடந்தது.

திடீரென்று அந்த கஸாக்குக்குச் சற்று தூரத்தில் நாணல்கள் சலசலத்தன, காலடிச் சத்தம் கேட்டது, நாணல் முனைகள் ஒடிந்தன. கஸாக்கு சுடுவதற்குத் தயா

ரானான். ''கடவுளே காப்பாற்றுங்கள்!'' என்று மீண்டும் உச்சரித்தான். துப்பாக்கியை ஆயத்தம் செய்தபொழுது காலடிச் சத்தம் நின்றுவிட்டது.

''ஏய்! கஸாக்குகளா! உங்கள் மாமாவைச் சுட்டு விடாதீர்கள்'' என்று கலவரமடையாத கனத்த குரல் ஒலித்தது. யெரோஷ்கா நாணல்களை விலக்கிக்கொண்டு நேரடியாக அவனுக்கு முன்னால் வந்தார்.

''கடவுளே! நான் அநேகமாக உங்களைக் கொன்றிருப்பேன்!'' என்று லுக்காஷ்கா கூறினான்.

''நீ எதைச் சுட்டாய்?'' என்று அந்தக் கிழவர் கேட்டார்.

அந்தக் கிழவரின் உரத்த குரல் காடுகளிலும் ஆற்றின் மீதும் எதிரொலித்து அந்த இரவின் நிசப்தத்தையும் அந்தக் கஸாக்கைச் சூழ்ந்திருந்த மர்மத்தையும் திடீரென்று தகர்த்தது. அது திடீரென்று தெளிவாகவும் பிரகாசமாகவும் மாறிவிட்டதைப் போலத் தோன்றியது.

''நீங்கள் ஒன்றுமே பார்க்கவில்லையா, மாமா! நான் ஒரு காட்டு மிருகத்தைக் கொன்றேன்'' என்று லுக்காஷ்கா துப்பாக்கி விசையை மெல்லக் கீழே விட்டுப் போலியான நிதானத்துடன் எழுந்தான்.

அந்தக் கிழவர் இப்பொழுது நன்றாகத் தெரிந்த அப்ரேக்கின் முதுகை அசையாமல் பார்த்தார்; ஆற்றுத் தண்ணீர் அந்த உடலைத் தொட்டு ஓடிக்கொண்டிருந்தது.

''அவன் மரக்கட்டையைப் பிடித்துக்கொண்டு நீந்தி வந்து கொண்டிருந்தான். நான் அவனைப் பார்த்து விட்டேன்... பிறகு சுட்டேன்... அங்கே பாருங்கள். அதோ! அவன் நீலக் கால்சட்டை அணிந்திருக்கிறான்; அவன் துப்பாக்கியைப் போட்டு விட்டான்... தெரிகிறதா, என்ன?'' என்று லுக்காஷ்கா உணர்ச்சியுடன் கூறினான்.

''என்னைக் குருடன் என்றா நினைத்தாய்?'' என்று அந்தக் கிழவர் சீறினார். அவர் முகத்தில் சிந்தனையும் கடுமையும் கலந்து தோன்றின. ''நீ ஒரு ஜிகித்தைக் கொன்றுவிட்டாய்'' என்று அவர் கூறினார். அவர் குரல் இரக்கத்தை வெளிப்படுத்துகின்ற மாதிரி தோன்றியது.

''நான் இங்கே உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருந்தேன். அக்கரையில் கறுப்பாக ஏதோ ஒன்று தெரிந்தது.

நான் மறுபடியும் பார்த்தேன். ஒரு நபர் ஆற்றில் குதிப் பதைப் போல இருந்தது. என்ன விசித்திரம்! ஒரு மரக் கட்டை, மிகப்பெரிய கட்டை மிதந்து வந்து கொண் டிருந்தது. ஆனால் அது நீரோட்டத்துடன் மிதந்து வர வில்லை. ஆற்றின் குறுக்கே வந்து கொண்டிருந்தது. மரக் கட்டையின் பின்புறத்தில் ஒரு தலை தெரிவதைப் பார்த் தேன். என்ன விசித்திரம்? நான் குறிபார்த்தேன். ஆனால் நாணற்புல்கள் மறைத்தபடியால் எதையும் பார்க்க முடிய வில்லை. நான் எழுந்து நின்றேன். அந்த ராஸ்கல் காதில் விழுந்திருக்க வேண்டும். ஏனென்றால் அவன் மணல் திட்டில் பதுங்கிக் கொண்டு சுற்றுமுற்றும் பார்த் தான். 'தப்புக் கணக்குப் போடாதே. நீ தப்பமுடியாது' என்று நினைத்தேன். அவன் பதுங்கிக் கொண்டு சுற்று முற்றும் பார்த்தான். (அவனைப் பார்த்த பொழுது என் குரல்வளையை நெறிப்பதைப் போல எனக்கு இருந்தது!) நான் என்னுடைய துப்பாக்கியைத் தயாராக வைத்துக் கொண்டேன். சிறிதும் அசையாமல் அவனுக்காகக் காத் திருந்தேன். சிறிது நேரத்துக்குப் பிறகு அவன் மறுபடியும் நீந்த ஆரம்பித்தான். அவன் நீந்திக் கொண்டு நிலா வெளிச்சத்துக்கு வந்தபொழுது அவன் முதுகு எனக்குத் தெரிந்தது. 'கடவுளே காப்பாற்றுங்கள்!' என்று சொல்லி விட்டுச் சுட்டேன். துப்பாக்கிப் புகையின் நடுவே அவன் தத்தளிப்பதைப் பார்த்தேன். அவன் முனகினான். அல் லது அப்படி எனக்குத் தோன்றியிருக்கலாம். 'கடவுள் புண்ணியத்தினால் நான் அவனைக் கொன்றுவிட்டேன்!' என்று நினைத்தேன். அவன் மணல் திட்டை அடைந்த பொழுது அவன் உருவம் தெளிவாகத் தெரிந்தது. அவன் எழுந்து நிற்பதற்கு முயற்சி செய்தான், ஆனால் அதற்கு வேண்டிய பலமில்லை. அவன் தள்ளாடினான், தள்ளாடிக் கீழே விழுந்தான். இப்பொழுது எல்லாவற்றையும் தெளிவாகப் பார்க்க முடிகிறது. அதோ! அவன் நகர வில்லை. அநேகமாக அவன் செத்துப் போய்விட்டான். கஸாக்குகள் காவல் நிலையத்துக்குப் போயிருக்கிறார்கள். அந்த கோஷ்டியைச் சேர்ந்த மற்றவர்கள் தப்பிவிடக் கூடாதல்லவா!''

''அவர்களால் மற்றவர்களைப் பிடிக்க முடியாது!'' என்று அந்தக் கிழவர் கூறினார். ''இப்பொழுது அவர்கள்

ரொம்ப தூரம் போயிருப்பார்கள்.'' அவர் மறுபடியும் வருத்தத்துடன் தலையை ஆட்டினார்.

அந்த நேரத்தில் உரத்த பேச்சுச் சத்தமும் உலர்ந்த சுள்ளிகள் மிதிபட்டுச் சடசடவென்று முறிகின்ற ஒலியும் கரையோரமாகக் கேட்டன. கஸாக்குகள் குதிரைச் சவாரி செய்துகொண்டும் கால்நடையாக வந்து கொண்டிருப்பதும் தெரிந்தது.

''அவர்கள் படகு கொண்டு வருகிறார்களா?'' என்று லுக்காஷ்கா பலமாகக் கத்தினான்.

''நீ வீரன்டா, லுக்கா! அவனை ஆற்றங்கரைக்குக் கொண்டுவா'' என்று ஒரு கஸாக்கு கத்தினான்.

லுக்காஷ்கா படகுக்குக் காத்திராமல் தன் உடைகளைக் கழற்றத் தொடங்கினான். அவன் கண்கள் அந்த உடலையே பார்த்துக் கொண்டிருந்தன.

''பொறு, நஸார்கா படகைக் கொண்டுவருகிறான்'' என்று சார்ஜென்ட் கூறினார்.

''முட்டாள்! அவன் இன்னும் உயிரோடிருக்கிறானோ, என்னவோ? ஒருவேளை பாசாங்கு கூடச் செய்யலாம். உன் குத்துவாளைக் கையில் பிடித்துக்கொள்'' என்று இன்னொரு கஸாக்கு கூறினான்.

''உன் புத்திமதி போதும்'' என்று கூறியபடியே லுக்கா தன்னுடைய கால்சட்டையைக் கழற்றிக் கீழே போட்டான். அவன் உடைகளைக் கழற்றுவதற்கு அதிக நேரமாகவில்லை. பிறகு அவன் சிலுவைக் குறி செய்துவிட்டு ஒரே துள்ளலில் தண்ணீருக்குள் குதித்தான். அவன் உடல் முழுவதும் நனைந்துவிட்டது. அவன் தன்னுடைய வெண்மையான கரங்களை நீட்டித் தண்ணீரில் வீசி ஒவ்வொரு வீச்சுக்கும் தண்ணீருக்கு மேலே முதுகை உயர்த்தி நீரோட்டத்தின் குறுக்கே அந்த அப்ரேக்கின் உடல் கிடந்த மணல் திட்டை நோக்கி நீந்திச் சென்றான். கஸாக்குகள் கோஷ்டியாகக் கரையில் நின்றுகொண்டு பல குரல்களில் பெருஞ் சத்தத்துடன் பேசிக் கொண்டிருந்தார்கள். அப்ரேக்குகளைத் தேடி மூன்று நபர்கள் சுற்று வழியில் குதிரை மீது செல்லத் தொடங்கினார்கள். ஆற்றின் திருப்பத்தில் படகு வந்து கொண்டிருப்பது தெரிந்தது. லுக்காஷ்கா மணல் திட்டுக்கு வந்துசேர்ந்து அந்த உடலைக் குனிந்து பார்த்தான். அவன் இரண்டு அல்லது

மூன்று தடவைகள் அதைத் திருப்பிப் போட்டான். ''அவன் செத்துப் போய்விட்டான், சந்தேகமில்லை!'' என்று உரத்த குரலில் கூறினான்.

அந்த செச்செனுடைய தலையில் குண்டு பாய்ந்திருந் தது. அவன் நீல நிறத்தில் கால்சட்டை, சட்டை, செர் கெஸ்கா அணிந்திருந்தான். துப்பாக்கியும் குத்துவாளும் முதுகில் கட்டப்பட்டிருந்தன. எல்லாவற்றுக்கும் மேலாக, லுக்காஷ்காவை முதலில் ஏமாற்றிய பெரியமரக்கிளை யும் அவன் உடலுடன் கட்டப்பட்டிருந்தது.

செச்செனுடைய பிணம் படகில் கரைக்குக் கொண்டு வரப்பட்டு, அடர்த்தியாக வளர்ந்திருந்த புல்தரையின் மீது வைக்கப்பட்டது. கஸாக்குகள் அந்தப் பிணத்தைச் சுற்றி வட்டமாக நின்று கொண்டிருந்தபொழுது ''கெண் டை மீன் அகப்பட்டுவிட்டது!'' என்று அவர்களில் ஒரு வன் கூறினான்.

''மிகவும் மஞ்சளாக இருக்கிறானே!'' என்று வியந் தான் இன்னொருவன்.

''அவர்களைத் தேடி நம்முடைய ஆட்கள் எங்கே போயிருக்கிறார்கள்? ஒருவேளை எல்லோரும் அக்கரைக் குப் போயிருக்கவேண்டும். இவன் அவர்களுக்கு முன் னால் வந்திருக்கிறான். இல்லாவிட்டால் இப்படி நீந்தி வந்திருக்க மாட்டான். ஒருவன் தன்னந்தனியாக ஏன் நீந்திவர வேண்டும்?'' என்றான் மூன்றாவது நபர்.

''இவன் நரித்தனம் உள்ளவனாக இருக்க வேண்டும். அதனால் தான் மற்றவர்களை முந்திக் கொண்டு வந் திருக்கிறான். அநேகமாக இவன் உண்மையான ஜிகித்'' என்று லுக்காஷ்கா ஏளனமாகப் பேசினான். அவன் தன் னுடைய ஈர உடைகளிலிருந்து தண்ணீரைப் பிழிந்து கொண்டிருந்தான். கரையில் நின்று கொண்டிருந்த பொ ழுது குளிர்ச்சியினால் அவனுடைய உடல் நடுங்கியது. ''அவன் தாடி ஒழுங்காகக் கத்தரிக்கப்பட்டு, சாயம் பூசப் பட்டிருக்கிறது.''

''அவனுடைய முதுகிலுள்ள பையில் ஒரு கோட்டு இருக்கிறது. அது இல்லாவிட்டால் இன்னும் சுலபமாக நீந்தியிருப்பான்'' என்றான் ஒருவன்.

''லுக்காஷ்கா! நான் சொல்வதைக் கேள்'' என்று சார்ஜென்ட் அப்ரேக்கினுடைய குத்துவாளையும் துப்

பாக்கியையும் கையில் எடுத்துக்கொண்டு பேசினார். ''நீ குத்துவாளையும் கோட்டையும் வைத்துக்கொள். ஆனால் துப்பாக்கியை எனக்குக் கொடு. நான் அதற்காக உனக்கு மூன்று வெள்ளி ரூபிள்கள் கொடுக்கிறேன். காற்றுப் புழை வாய் சுத்தமாக இருக்கிறது'' என்று துப்பாக்கிக் குழியில் காற்றை ஊதியபடியே கூறினார். ''அதை ஒரு நினைவுச் சின்னமாக வைத்துக்கொள்ள நான் விரும்புகிறேன்.''

லுக்காஷ்கா பதில் சொல்லவில்லை. இந்த வேண்டு கோள் அவனுக்கு அதிருப்தியைக் கொடுத்தது; ஆனால் அதை மறுக்கவே முடியாது என்பது அவனுக்குத் தெரியும்.

''இதைப் பார்! பிசாசு! உதவாக்கரைக் கந்தல்'' என்று முகத்தைச் சுளித்துக்கொண்டு கூறிவிட்டு அந்தச் செர்கேஷியக் கோட்டை தரையின் மீது ஓங்கி வீசினான். ''இது நல்ல கோட்டு அல்ல. இது மோசமான கந்தல் துணி.''

''காட்டுக்குப் போகும் பொழுது அதை அணிந்து கொள்ளலாம்'' என்று கூறினான் ஒருவன்.

''மோசெவ்! நான் வீட்டுக்குப் போக வேண்டும்'' என்றான் லுக்காஷ்கா. அவனுக்கு ஏற்பட்ட எரிச்சலை மறந்துவிட்டதாகவும் மேலதிகாரியின் வேண்டுகோளைத் தனக்குச் சாதகமாகத் திருப்புவதற்கு அது நல்ல சந்தர்ப் பம் என்று கருதியதாகவும் தோன்றியது.

''சரி. நீ போகலாம்!''

''அந்தப் பிணத்தைக் காவல் நிலையத்துக்குக் கொண்டு வாருங்கள்'' என்று சார்ஜென்ட் கஸாக்குகளுக்கு உத்தர விட்டார். அவர் அந்தச் சமயத்திலும் தனக்குக் கிடைத்த பரிசுப் பொருளை ஆராய்ந்து கொண்டிருந்தார். ''பிணத் தின் மீது சூரிய வெளிச்சம் படாமலிருப்பதற்காக ஒரு கொட்டகை அமைக்க வேண்டும். ஒருவேளை பணம் கொடுத்து பிணத்தை மீட்பதற்கு அவர்கள் மலைகளி லிருந்து வரலாம்.''

''இன்னும் அவ்வளவு வெப்பமில்லை'' என்று ஒரு வன் கூறினான்.

''ஆனால் நரிகள் தின்றுவிடக்கூடும். அது நன்றாக இருக்காது'' என்று ஒரு கஸாக்கு பதிலளித்தான்.

''காவலுக்கு ஏற்பாடு செய்வோம். அவர்கள் பணம்

கொடுத்து மீட்பதற்கு வருவார்கள். ஏதாவது ஆகிவிட்டால் அது மோசம்.''

''சரி, லுக்காஷ்கா! உன் விருப்பப்படி செய், ஆனால் நம்ம பையன்களுக்கு ஒரு வாளி ஒயின் ஊத்து'' என்று சார்ஜென்ட் சிரித்தபடியே கூறினார்.

''ஆமாம். அது தான் பழக்கம்'' என்று கஸாக்குகள் ஆமோதித்தார்கள். ''கடவுள் அவனுக்கு பெரிய அதிர்ஷ்டத்தைக் கொடுத்திருக்கிறார். அவன் இன்னும் எதையும் பார்க்கவில்லை, ஆனால் ஒரு அப்ரேக்கைக் கொன்று விட்டான்.''

''குத்துவாளையும் கோட்டையும் வாங்கிக் கொள்ளுங்கள். கூடுதலாகப் பணம் கொடுங்கள். அவன் கால்சட்டையையும் சேர்த்துத் தருகிறேன். சரிதானா? அது எனக்குப் பத்தாது. அவன் ஒரு ஒல்லிப் பிசாசு'' என்றான் லுக்காஷ்கா.

ஒரு கஸாக்கு அந்தக் கோட்டை ஒரு வெள்ளி ரூபிளுக்கு வாங்கினான். இன்னொருவன் இரண்டு வாளி ஒயினுக்குக் குத்துவாளை வாங்கினான்.

''நண்பர்களே! எல்லோரும் நன்றாகக் குடியுங்கள். ஒரு வாளி ஒயின் தருகிறேன். நானே அதை கிராமத்திலிருந்து கொண்டுவருகிறேன்'' என்றான் லுக்காஷ்கா.

''இந்தக் கால்சட்டையை வெட்டி பெண்களுக்குக் கைக்குட்டைகள் தைத்தால் என்ன?'' என்று கேட்டான் நஸார்கா.

கஸாக்குகள் எல்லோரும் படீரென்று சிரித்தார்கள்.

''சிரிப்பு போதும்'' என்றார் சார்ஜென்ட். ''பிணத்தத் தூக்கிக் கொண்டு வாருங்கள். பிணத்தை வீட்டுக்கு ஏன் கொண்டுவர வேண்டும்?''

''ஏன் சும்மா இருக்கிறீர்கள்? பிணத்தைத் தூக்குங்கள்'' என்று லுக்காஷ்கா உத்தரவிடுகின்ற குரலில் பேசினான். கஸாக்குகள் பிணத்தைத் தொட விரும்பவில்லை என்றாலும் தளகர்த்தரின் உத்தரவை நிறைவேற்றுவதைப் போல அவனுடைய கட்டளைக்குப் பணிந்தார்கள்.

அவர்கள் அந்தப் பிணத்தைச் சில காலடிகள் தூரம் தூக்கிச் சென்றபிறகு கால்கள் மடங்கிய நிலையில் படுத்

திருப்பதைப் போல அதை வைத்துச் சிறிது நேரம் மௌன மாக நின்றார்கள்.

நஸார்கா பிணத்தின் அருகில் சென்று அதனுடைய நெற்றிப் பொட்டிலிருந்த வட்டமான, இரத்தம் உறைந் திருந்த குண்டு துவாரம் செய்திருந்த இடத்தையும் முகத் தையும் பார்ப்பதற்காகப் பின்னால் தொங்கிக் கொண் டிருந்த தலையை மேலே நிமிர்த்தினான்.

''சரியான இடத்தில் சுட்டிருக்கிறாய்! நேராக அவன் மூளைக்குப் போயிருக்கிறது!'' என்றான். ''அடையாளம் தெரியாமற் போகக்கூடிய ஆபத்து இல்லை. அவனுடைய ஆட்கள் பார்த்தவுடன் அடையாளம் கண்டுகொள்வார் கள்.''

மற்றவர்கள் பேசுவதற்கு விஷயமில்லாமல் சும்மா இருந்தார்கள். மௌன தேவதை கஸாக்குகள் மீது தன் னுடைய இறக்கைகளை விரித்தது.

சூரியன் இப்பொழுது பிரகாசமாகத் தோன்றிவிட் டது, அதன் முறிந்த கதிர்கள் பனித்துளி தூங்கிக் கொண் டிருந்த பசும் புல்தரையில் கோலமிட்டன. சற்று தூரத் தில் பாய்ந்து கொண்டிருந்த தேரெக் முணுமுணுத்தது. உறக்கம் கலைந்து விழித்துக் கொண்டிருந்த காட்டில், எல்லாப் பக்கங்களிலும் காட்டுச் சேவல்கள் காலைப் பொழுதை வரவேற்று ஒன்றுக்கொன்று மகிழ்ச்சியோடு கூவின.

கஸாக்குகள் செத்துப்போனவனைச் சுற்றி அமைதி யாக, அசையாமல் நின்றுகொண்டு அவனைப் பார்த் தார்கள். அந்த பழுப்பு நிறத்தைக் கொண்ட உடலில் நீலநிறக் கால்சட்டை மட்டுமே இருந்தது, தண்ணீரின் ஈரம் அதை இன்னும் அடர்த்தியான நிறமாக மாற்றி யிருந்தது. குழிவான வயிற்றைச் சுற்றி இடைவார் இறுக்க மாகக் கட்டப்பட்டிருந்தது. அந்த உடல் சரியான அள வாக, அழகாக இருந்தது. சதைப் பிடிப்பான கரங்கள் மார்பு எலும்புகளுக்குப் பக்கத்தில் விறைத்துக் கிடந் தன. நன்றாக மொட்டை அடிக்கப்பட்டு வெளிர் நீல நிறத்திலிருந்த அவனுடைய உருண்டையான தலை, நெற்றிப் பொட்டிலிருந்த இரத்தக் கறைக் காயத்துடன் பின்னால் வளைந்திருந்தது. சூரிய வெளிச்சத்தில் கறுத் துப்போன, வழவழப்பான நெற்றி, முடி வளரத்

தொடங்கிய இடத்தில் துலாம்பரமாகத் தெரிந்தது. கண்ணாடி போன்ற திறந்த கண்கள், அவற்றில் ஆழமாக அமைந்திருந்த கண்ணின் மணிகள் எங்கோ பார்ப்பதைப் போல மேலே சொருகியிருந்தன. கத்தரித்துவிடப்பட்ட செம்பட்டை நிற மீசைக்குள் பாதி மறைந்து கொண்டிருந்த மெலிதான, வளைந்த உதடுகள் சுமுகமான, நுட்பமான முறையில் இன்னும் சிரித்துக் கொண்டிருப்பதைப் போலத் தோன்றின. சின்ன மணிக்கட்டுகளில் செம்பட்டை முடி வளர்ந்திருந்தது. விரல்கள் வளைந்திருந்தன, விரல் நகங்களின் மீது லேசான சிகப்பு வர்ணம் தடவப்பட்டிருந்தது.

லுக்காஷ்கா இன்னும் உடை அணிந்து கொள்ளவில்லை. அவன் உடலிலிருந்து தண்ணீர் சொட்டிக் கொண்டிருந்தது. அவன் கழுத்து வழக்கமாக இருப்பதைக் காட்டிலும் அதிகச் சிவப்பாகவும் அவன் கண்கள் அதிகப் பிரகாசமாகவும் இருந்தன. அவனுடைய அகன்ற கன்ன எலும்புகள் நடுங்கிக் கொண்டிருந்தன. அவனுடைய அழகான, ஆரோக்கியமான உடலிலிருந்து லேசான ஆவி குளிர்ந்த காலைக் காற்றில் கலந்தது.

''இவனும் மனிதனாக இருந்தான்!'' என்று அந்த அப்ரேக்கை வெளிப்படையாகப் பாராட்டுகின்ற முறையில் அவன் கூறினான்.

''ஆம்! நீ அவனிடம் சிக்கியிருந்தால் அவன் உனக்கு இரக்கம் காட்டியிருக்க மாட்டான்'' என்று ஒரு கஸாக்கு பதிலளித்தான்.

மௌன தேவதை அந்த இடத்திலிருந்து விலகிச் சென்றது. கஸாக்குகள் பேசிக்கொண்டே புறப்பட்டார்கள். இரண்டு நபர்கள் கொட்டகை அமைப்பதற்குக் கிளைகளை வெட்டச் சென்றார்கள். மற்றவர்கள் காவல் நிலையத்தை நோக்கி அவசரமில்லாமல் நடந்தார்கள். லுக்காவும் நஸார்காவும் வீட்டுக்குப் போவதற்குத் தயாரிப்புகளைச் செய்வதற்கு அவசரமாகப் புறப்பட்டார்கள்.

அரை மணி நேரத்துக்குப் பிறகு அந்த இரண்டு இளம் கஸாக்குகளும் தங்கள் வீட்டுக்குப் போய்க் கொண்டிருந்தார்கள். அவர்கள் போகிற வழியில் ஓயாமல் பேசிக் கொண்டிருந்தார்கள். கிராமத்துக்கும் தேரெக்

குக்கும் இடையிலுள்ள அடர்த்தியான காட்டை ஓட்டமும் நடையுமாகக் கடந்தார்கள்.

''நான் உன்னை அனுப்பினேன் என்று சொல்லாதே. அவள் கணவன் வீட்டில் இருக்கிறானா என்பதைப் பார்த்து வா'' என்று லுக்கா கூறினான்.

''நான் யாம்கா வீட்டுக்குப் போகிறேன். இன்று கொண்டாட வேண்டியது தானே?'' என்று நஸார்கா அடக்கமாகக் கேட்டான்.

''இன்று களியாட்டம் போடவில்லை என்றால் பிறகு எப்பொழுது?'' என்று லுக்கா பதிலளித்தான்.

இரண்டு கஸாக்குகளும் கிராமத்தை அடைந்தவுடன் மிதமிஞ்சிக் குடித்துவிட்டு மாலை நேரம் வரை தூங்குகின்ற எண்ணத்துடன் படுக்கைகளில் விழுந்தார்கள்.

## 10

மேலே வர்ணிக்கப்பட்ட சம்பவங்கள் நடைபெற்ற மூன்றாவது நாளன்று காகேஷியக் காலாட்படை ரெஜிமென்டைச் சேர்ந்த இரண்டு பிரிவுகள் நவம்லீன்ஸ்கயா கிராமத்தில் தங்கியிருப்பதற்கு வந்தன.

ஏற்கெனவே சதுக்கத்தின் நடுவில் படைப் பிரிவின் சாமான் வண்டிகள் குதிரைகள் கழற்றப்பட்டு நிறுத்தி வைக்கப் பட்டிருந்தன. சமையற்காரர்கள் பள்ளத்தைத் தோண்டிவிட்டு சில வீட்டுக் கொல்லைகளுக்குப் போய் அங்கே கிடந்த மரக்கட்டைகளை எடுத்துக்கொண்டு வந்தார்கள். அவர்கள் உணவு தயாரிப்பதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தார்கள். சார்ஜென்டுகள் ஆட்களை எண்ணிக் கொண்டிருந்தார்கள். வண்டியோட்டிகள் குதிரைகளைக் கட்டுவதற்கு தரையில் முளைகளை அடித்துக் கொண்டிருந்தார்கள். தங்குமிட ஒதுக்கீட்டுப் பிரிவினர் சொந்த வீட்டுக்காரர்களைப் போல அதிகாரிகளுக்கும் வீரர்களுக்கும் தங்குமிடங்களை ஒதுக்கிக் கொண்டு தெருக்களில், சந்துகளில் போய்வந்து கொண்டிருந்தார்கள்.

பச்சை நிறத் தளவாடப் பெட்டிகள் வரிசையாக வைக்கப்பட்டிருந்தன. படைப் பிரிவுகளைச் சேர்ந்த



வண்டிகளும் குதிரைகளும் நின்று கொண்டிருந்தன. கெட்டில்களில் உணவு கொதித்துக் கொண்டிருந்தது. காப்டனும் லெப்டினென்டும் சார்ஜென்ட் ஒனிஸிமும் வந்தார்கள்.

அந்தப் படைவரிசை அந்தக் கிராமத்துக்கு வந்திருந்தது. படைப் பிரிவுகள் அங்கே தங்கியிருக்க வேண்டுமென்று உத்தரவிடப்பட்டிருப்பதாகச் சொல்லப்பட்டது. ஆகவே படைப் பிரிவுகள் தங்கள் வீடுகளில் தங்கியிருந்தன.

படைவீரர்களுக்கு இவற்றைப் பற்றி அக்கறையில்லை. அவர்களுடைய எண்ணிக்கை சரிப்பார்க்கப்பட்டதும் படைவீரர்கள் களைப்புடன், உடலில் தூசியுடன் தேனீக்கூட்டத்தைப் போல தெருக்களிலும் சதுக்கங்களிலும் மொய்க்கிறார்கள். கஸாக்குகள் தங்களிடம் நேசபாவத்தைக் காட்ட வில்லை என்பதை அவர்கள் உறுதியாக அலட்சியம் செய்கிறார்கள். அவர்கள் இரண்டு

மூன்று பேர்களைக் கொண்ட குழுக்களாக கேலிப் பேச்சும் துப்பாக்கி உரசலுமாக வீடுகளுக்குள் நுழைகிறார்கள், தங்களுடைய துப்பாக்கிகள் மற்றும் மேல்கோட்டுகளைத் தொங்கவிடுகிறார்கள், பைகளைத் திறந்து சாமான்களை எடுத்து வைக்கிறார்கள், பெண்களைக் கேலி செய்கிறார்கள்.

உணவு தயாரித்துக் கொண்டிருந்த இடத்தைச் சுற்றி ஒரு பெரிய கோஷ்டி நிற்கிறது. அவர்கள் பற்களுக்கு இடையில் புகைக் குழாய்களை வைத்துக்கொண்டு தகிக்கின்ற வானத்தில் புகை மேலே எழும்புவதையும் வெண் மேகங்களைப் போல மிதந்து செல்வதையும் அல்லது நெருப்பு தெளிவான காற்றில் உருக்கிய கண்ணாடியைப் போல ஒளிர்வதையும் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். கஸாக்கு ஆண்களும் பெண்களும் தங்களுடைய வாழ்க்கை முறையில் ருஷ்யர்களிடமிருந்து முற்றிலும் வேறுபடுவதால் அவர்களைப் பற்றி வேடிக்கையாகப் பேசிக் கொண்டிருக்கிறார்கள்.

ஒவ்வொரு வீட்டின் சுற்றுவட்டகையிலும் படைவீரர்களைப் பார்க்க முடியும். அவர்களுடைய கணீரென்ற சிரிப்பும் தங்களுடைய வீடுகளைப் பாதுகாக்க முயல்கின்ற, அவர்களுக்குத் தண்ணீர் அல்லது பாத்திரம் தர மறுக்கின்ற பெண்களின் காட்டமான, கோபக் குரல்களும் கேட்கின்றன. சிறுவர்களும் சிறுமிகளும் இந்த மனிதர்களை இதற்கு முன்னர் பார்த்திராதபடியால் அவர்களுடைய ஒவ்வொரு செயலையும் அச்சத்துடனும் திகைப்புடனும் பார்த்தபடியே இருக்கிறார்கள், அல்லது வெகு தூரத்தில் அவர்களுக்குப் பின்னால் வந்து கொண்டிருக்கிறார்கள். கஸாக்கு முதியவர்கள் வீடுகளிலிருந்து வெளியே வந்து திண்ணைகளில் உட்காருகிறார்கள், படைவீரர்களின் சந்தடியைத் துக்கத்துடன் அமைதியாகப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அவை எல்லாவற்றையும் வெறுப்பதைப் போல, அவற்றின் விளைவைப் பற்றி அலட்சியமாக இருப்பவர்களைப் போலத் தோற்றமளிக்கிறார்கள்.

காகசஸ் படையில் கடந்த மூன்று மாதங்களாக யுங்கெராகச் சேர்த்துக் கொள்ளப்பட்டிருக்கின்ற ஒலேனினுக்கு

கிராமத்திலேயே மிகவும் சிறந்த வீடுகளில் ஒன்றில் தங்குவதற்கு இடம் தரப்பட்டிருக்கிறது. அது துணை லெப்டினென்டின் அதாவது பாட்டி உலீத்காவின் வீடு.

''இந்த இடத்தில் நாம் என்ன செய்யப்போகிறோமோ, திமீத்ரி அவர்களே?'' என்று வன்யூஷா மூச்சிறைக்க ஒலேனினைக் கேட்டான். ஒலேனின் கிரோஸ்னயாவில் வாங்கிய கபர்தா குதிரைமீது ஐந்து மணி நேரம் சவாரி செய்துவிட்டுப் புதிய இருப்பிடத்தின் சுற்றுவட்டகைக்குள் அப்பொழுதுதான் மகிழ்ச்சியுடன் நுழைந்தான்.

''ஏன் கவலைப்படுகிறாய், வன்யூஷா?'' என்று ஒலேனின் பதிலுக்கு அவனிடம் கேட்டபிறகு தன்னுடைய குதிரையைத் தடவிக் கொடுத்த படியே வன்யூஷாவை மகிழ்ச்சியாகப் பார்த்தான். வன்யூஷா கலைந்திருந்த தலை முடியுடன், சோர்வடைந்த முகத்தில் வியர்வை வழிய, வண்டியில் ஏற்றி வந்த சாமான்களை எடுத்து வைத்துக் கொண்டிருந்தான்.

ஒலேனின் முற்றிலும் வேறு மனிதனாகத் தோன்றினான். நன்கு மழிக்கப்பட்ட கன்னங்களுக்குப் பதிலாக அரும்பு மீசையும் குறுந்தாடியும் வைத்திருந்தான். களிக்கூத்துகளில் இரவு நேரங்களைக் கழிப்பவர்களுக்குரிய வெளிறிய, சீக்கான தோற்றத்துக்குப் பதிலாக அவன் கன்னங்களும் நெற்றியும் பின்னங்காதுகளும் புதுமலர்ச்சியான செம்பவள நிறத்தைப் பெற்றிருந்தன. அவன் புத்தம்புதிய, சுத்தமான கறுப்புக் கோட்டுக்குப் பதிலாக அழுக்கேறிய வெண்மை நிற, அகன்ற பின்மடிப்புகளைக் கொண்ட செர்கெஸ்காவை அணிந்திருந்தான்; கையில் துப்பாக்கி வைத்திருந்தான். சூரிய ஒளியில் கறுத்துப் போன அவனது கழுத்தைச் சுற்றி பெஷ்மெத்தின் சிவப்புக் காலர் இருந்தது. அவன் செர்கேஷிய முறையில் உடையணிந்திருந்தான்; ஆனால் அந்த உடையைச் சரியாக அணியவில்லை. அவன் ஒரு ஜிகித் அல்ல, ருஷ்யன் என்பது பார்த்தவுடனே எல்லோருக்கும் தெரியும். எல்லாம் சரியாகத் தான் இருந்தது என்றாலும் எல்லாம் தப்பாகவே தோற்றமளித்தது. ஆனால் ஆரோக்கியம், ஆனந்தம், சுயதிருப்தியில் அவனுடைய உடல் முழுவதும் பூரித்திருந்தது.

''இதைப் பார்த்து நீங்கள் அதிகமாகச் சிரிக்கலாம்;

ஆனால் நீங்கள் இவர்களுடன் பேசிப்பாருங்கள். இவர்கள் உங்களை அருகில் வருவதற்கு விடமாட்டார்கள். அத்துடன் அவ்வளவுதான். இவர்களிடமிருந்து நீங்கள் ஒரு வார்த்தைகூடப் பிடுங்க முடியாது. இவர்கள் எவ்வித ருஷ்யர்களும் அல்ல!'' என்று சொல்லிவிட்டு வன்யூஷா ஒரு இரும்பு வாளியைக் கோபத்தோடு வாசலில் விட்டெறிந்தான்.

''நீ கிராமத் தலைவரிடம் புகார் செய்திருக்க வேண்டும்.''

''அவரை எங்கே பார்ப்பதென்று எனக்குத் தெரியவில்லை'' என்று வன்யூஷா எரிச்சலுடன் கூறினான்.

''உன்னை இந்த அளவுக்கு அவமதித்தது யார்?'' என்று ஒலேனின் சுற்றிப்பார்த்துக் கொண்டு கேட்டான்.

''இவர்களைப் பிசாசு பிடித்துக் கொள்ளட்டும்! வீட்டுக்காரன் இங்கே இல்லை. மீன் பிடிக்க வாரணைக்குப் போய்விட்டான் என்று சொல்கிறார்கள். கிழவி ஒரு பேய். கடவுள்தான் நம்மைக் காப்பாற்ற வேண்டும்!'' என்று வன்யூஷா தலையைப் பிடித்துக்கொண்டு கூறினான். ''நாம் இந்த இடத்தில் எப்படித் தான் வசிக்கப் போகிறோமோ எனக்குத் தெரியவில்லை. இவர்கள் தார்த்தாரியர்களைக் காட்டிலும் மோசமாக இருக்கிறார்கள். அட கடவுளே! இவர்களைக் கிறிஸ்துவர்கள் என்று சொல்கிறார்களே! இவர்களுடன் ஒப்பிட்டால் தார்த்தாரியன் ஒரு கனவானே. 'அவர் வாரணைக்குப் போயிருக்கிறார்' என்கிறார்கள். வாரணை என்றால் என்ன என்று தெரியவில்லை!'' என்று வன்யூஷா திரும்பிக்கொண்டு புலம்பினான்.

''அப்படியானால் அவர்கள் நம்முடைய கிராமவாசிகளைப் போல இல்லையென்று சொல்கிறாய்'' என்று ஒலேனின் அவனைக் கேலி செய்வதைப் போலக் கேட்டான். அவன் குதிரையிலிருந்து கீழே இறங்கவில்லை.

''தயவு செய்து குதிரையிலிருந்து இறங்குங்கள்'' என்று வன்யூஷா கூறினான். புதிய வாழ்க்கை அவனை முற்றிலும் நிலைகுலையச் செய்து விட்டது; ஆனால் அவன் விதிக்குப் பணிந்து நடப்பவன்.

''வன்யூஷா! அப்படியானால் அவர்கள் தார்த்தாரியர்களைக் காட்டிலும் மோசம் என்கிறாயா?'' என்று

ஒலேனின் குதிரையிலிருந்து கீழே இறங்கி, தன்னுடைய கையினால் குதிரைச் சேணத்தைத் தடவிக் கொடுத்த படியே கேட்டான்.

''நீங்கள் நன்றாகச் சிரியுங்கள்! சிரிப்பதற்கு நிறைய இருக்கிறது'' என்று வன்யூஷா எரிச்சலாகக் கூறினான்.

''பொறு, கோபப்படாதே, வன்யூஷா,'' என்று ஒலேனின் இன்னும் முறுவலித்துக் கொண்டே கூறினான். ''இந்த வீட்டுக்காரர்களைப் போய்ப் பார்த்துவிட்டு வருகிறேன். நீ காத்திரு. நான் எல்லாவற்றையும் சரியாக்கி விடுகிறேன். பிறகு நாம் எவ்வளவு வசதியாக இருக்கிறோம் என்பதை நீயே பார்ப்பாய்! அதற்குள் இப்படிக் கவலைப்படாதே.''

வன்யூஷா பதிலளிக்கவில்லை; ஆனால் கண்களைச் சிமிட்டிக் கொண்டு தன்னுடைய எசமானரை வெறுப்புடன் பார்த்துவிட்டுத் தலையை ஆட்டினான். வன்யூஷா ஒலேனினை வெறும் எசமானராக மட்டுமே பார்த்தான். ஒலேனின் வன்யூஷாவை வெறும் வேலைக்காரனாக மட்டுமே கருதினான். அவர்கள் இருவரும் நண்பர்கள் என்று யாராவது ஒருவர் அவர்களிடம் சொல்லியிருந்தால் அவர்கள் இருவருமே மிகவும் ஆச்சரியமடைந்திருப்பார்கள். ஆனால் அவர்கள் உணராவிட்டாலும் அவர்களிருவரும் நண்பர்கள்.

வன்யூஷா பதினொரு வயதுச் சிறுவனாக இருந்த பொழுது ஒலேனின் வீட்டில் வேலைக்குச் சேர்ந்தான். அப்பொழுது ஒலேனினுக்கும் அநேகமாக அதே வயது தான். ஒலேனினுக்குப் பதினைந்து வயதானபொழுது ஒரு சமயத்தில் அவன் வன்யூஷாவுக்குப் பாடம் சொல்லித் தந்தான், பிரெஞ்சு மொழியைப் படிக்கக் கற்பித்தான் வன்யூஷா அந்தச் சாதனையைப் பற்றி மிகவும் பெருமைப் பட்டான். இப்பொழுதுகூட அவன் உற்சாகமாக இருக்கின்ற சமயத்தில் பிரெஞ்சுச் சொற்களைக் கலந்து பேசுவான். அப்படிச் செய்கின்ற பொழுது அவன் முட்டாளைப் போலச் சிரிப்பான்.

ஒலேனின் அந்த வீட்டின் படிக்கட்டுகளில் ஏறி வாயிற் கதவைத் திறந்தான். கஸாக்குப் பெண்கள் வழக்கமாக வீட்டில் அணிகின்ற இளஞ்சிவப்புச் சட்டையை அணிந்து கொண்டு அங்கேயிருந்த மார்யானா கதவின் பக்கத்தி

லிருந்து அச்சத்துடன் துள்ளிக் குதித்தாள்; அவள் சுவரை மிகவும் நெருங்கி நின்றுகொண்டு தார்த்தாரிய உடையின் அகலமான கைப்பகுதியில் தன்னுடைய முகத்தின் கீழ்ப் பகுதியை மறைத்துக் கொண்டாள்.

ஒலேனின் கதவை இன்னும் அகலமாகத் திறந்தபொழுது வராந்தாவிலிருந்த மங்கிய ஒளியில் அந்த இளம் கஸாக்குப் பெண்ணின் உயரமான, நன்கமைந்த வடிவத்தைக் கண்டான். மெல்லிய சீட்டி உடையில் முழுப் பொலிவுடன் எடுப்பாகத் தெரிந்த கன்னிச் செழுமையை, தன்னைக் குழந்தையின் அச்சத்துடனும் கட்டுக்கடங்காத வியப்புடனும் மாறாமல் பார்த்த அழகான, கறுப்பு நிறக் கண்களை இளைஞனின் வேகமான, ஆர்வமிக்க அக்கறையுடன் பார்க்கும்படி அவன் தடுக்கவியலாதபடி தூண்டப் பட்டான்.

''இவள் ஒரு அழகி!'' என்று ஒலேனின் தனக்குள் சொல்லிக் கொண்டான். ''இவளைப் போல இன்னும் பலர் இருப்பார்கள்'' என்ற எண்ணம் அவன் மனத்தில் அடுத்தபடியாக ஏற்பட்டது. அவன் கதவைத் திறந்து அறைக்குள் நுழைந்தான். பாட்டி உலீத்காவும் அதே மாதிரியாக ஒற்றை உடையணிந்து குனிந்து தரையைப் பெருக்கிக் கொண்டிருந்தாள். அவள் முதுகு அவனுக்கு எதிரே இருந்தது.

''வணக்கம், பாட்டி! என்னுயை தங்குமிடத்தைப் பற்றிப் பேச வந்திருக்கிறேன்...'' என்று அவன் ஆரம்பித்தான்.

அந்த கஸாக்குக் கிழவி நிமிராமலேயே அவளுடைய கண்டிப்பான ஆனால் அழகான முகத்தைத் திருப்பி அவனைப் பார்த்தாள்.

''நீ எதற்கு வந்திருக்கிறாய்? எங்களைக் கேவலப் படுத்த விரும்புகிறாயா? உனக்குப் பாடம் கற்பிப்பேன்! கறுப்புக் கழிச்சல் உன்னைக் கொண்டு போகட்டும்!'' என்று அவள் கத்தினாள். அவள் கண்களைச் சாய்த்து புதிதாக வருகையளித்த நபரைப் பார்த்துக் கோபத்துடன் முகத்தைச் சுளித்தாள்.

ஒலேனின் சேர்ந்திருந்த காகேஷிய வீரப் படை உழைத்துத் தேய்ந்து போனது. அந்தப் படை எல்லா இடங்களிலும், குறிப்பாக யுத்தத்தில் தங்களுடைய

ஒலேனின் குதிரையிலிருந்து கீழே இறங்கி, தன்னுடைய கையினால் குதிரைச் சேணத்தைத் தடவிக் கொடுத்த படியே கேட்டான்.

''நீங்கள் நன்றாகச் சிரியுங்கள்! சிரிப்பதற்கு நிறைய இருக்கிறது'' என்று வன்யூஷா எரிச்சலாகக் கூறினான்.

''பொறு, கோபப்படாதே, வன்யூஷா,'' என்று ஒலே னின் இன்னும் முறுவலித்துக் கொண்டே கூறினான். ''இந்த வீட்டுக்காரர்களைப் போய்ப் பார்த்துவிட்டு வரு கிறேன். நீ காத்திரு. நான் எல்லாவற்றையும் சரியாக்கி விடுகிறேன். பிறகு நாம் எவ்வளவு வசதியாக இருக் கிறோம் என்பதை நீயே பார்ப்பாய்! அதற்குள் இப்படிக் கவலைப்படாதே.''

வன்யூஷா பதிலளிக்கவில்லை; ஆனால் கண்களைச் சிமிட்டிக் கொண்டு தன்னுடைய எசமானரை வெறுப் புடன் பார்த்துவிட்டுத் தலையை ஆட்டினான். வன்யூஷா ஒலேனினை வெறும் எசமானராக மட்டுமே பார்த்தான். ஒலேனின் வன்யூஷாவை வெறும் வேலைக்காரனாக மட் டுமே கருதினான். அவர்கள் இருவரும் நண்பர்கள் என்று யாராவது ஒருவர் அவர்களிடம் சொல்லியிருந்தால் அவர் கள் இருவருமே மிகவும் ஆச்சரியமடைந்திருப்பார்கள். ஆனால் அவர்கள் உணராவிட்டாலும் அவர்களிருவரும் நண்பர்கள்.

வன்யூஷா பதினொரு வயதுச் சிறுவனாக இருந்த பொழுது ஒலேனின் வீட்டில் வேலைக்குச் சேர்ந்தான். அப்பொழுது ஒலேனினுக்கும் அநேகமாக அதே வயது தான். ஒலேனினுக்குப் பதினைந்து வயதானபொழுது ஒரு சமயத்தில் அவன் வன்யூஷாவுக்குப் பாடம் சொல்லித் தந்தான், பிரெஞ்சு மொழியைப் படிக்கக் கற்பித்தான் வன்யூஷா அந்தச் சாதனையைப் பற்றி மிகவும் பெருமைப் பட்டான். இப்பொழுதுகூட அவன் உற்சாகமாக இருக் கின்ற சமயத்தில் பிரெஞ்சுச் சொற்களைக் கலந்து பேசு வான். அப்படிச் செய்கின்ற பொழுது அவன் முட்டாளைப் போலச் சிரிப்பான்.

ஒலேனின் அந்த வீட்டின் படிக்கட்டுகளில் ஏறி வாயிற் கதவைத் திறந்தான். கஸாக்குப் பெண்கள் வழக்கமாக வீட்டில் அணிகின்ற இளஞ்சிவப்புச் சட்டையை அணிந்து கொண்டு அங்கேயிருந்த மார்யானா கதவின் பக்கத்தி

லிருந்து அச்சத்துடன் துள்ளிக் குதித்தாள்; அவள் சுவரை மிகவும் நெருங்கி நின்றுகொண்டு தார்த்தாரிய உடையின் அகலமான கைப்பகுதியில் தன்னுடைய முகத்தின் கீழ்ப் பகுதியை மறைத்துக் கொண்டாள்.

ஒலேனின் கதவை இன்னும் அகலமாகத் திறந்தபொழுது வராந்தாவிலிருந்த மங்கிய ஒளியில் அந்த இளம் கஸாக்குப் பெண்ணின் உயரமான, நன்கமைந்த வடிவத்தைக் கண்டான். மெல்லிய சீட்டி உடையில் முழுப் பொலிவுடன் எடுப்பாகத் தெரிந்த கன்னிச் செழுமையை, தன்னைக் குழந்தையின் அச்சத்துடனும் கட்டுக்கடங்காத வியப்புடனும் மாறாமல் பார்த்த அழகான, கறுப்பு நிறக் கண்களை இளைஞனின் வேகமான, ஆர்வமிக்க அக்கறையுடன் பார்க்கும்படி அவன் தடுக்கவியலாதபடி தூண்டப் பட்டான்.

''இவள் ஒரு அழகி!'' என்று ஒலேனின் தனக்குள் சொல்லிக் கொண்டான். ''இவளைப் போல இன்னும் பலர் இருப்பார்கள்'' என்ற எண்ணம் அவன் மனத்தில் அடுத்தபடியாக ஏற்பட்டது. அவன் கதவைத் திறந்து அறைக்குள் நுழைந்தான். பாட்டி உலீத்காவும் அதே மாதிரியாக ஒற்றை உடையணிந்து குனிந்து தரையைப் பெருக்கிக் கொண்டிருந்தாள். அவள் முதுகு அவனுக்கு எதிரே இருந்தது.

''வணக்கம், பாட்டி! என்னுயை தங்குமிடத்தைப் பற்றிப் பேச வந்திருக்கிறேன்...'' என்று அவன் ஆரம்பித்தான்.

அந்த கஸாக்குக் கிழவி நிமிராமலேயே அவளுடைய கண்டிப்பான ஆனால் அழகான முகத்தைத் திருப்பி அவனைப் பார்த்தாள்.

''நீ எதற்கு வந்திருக்கிறாய்? எங்களைக் கேவலப் படுத்த விரும்புகிறாயா? உனக்குப் பாடம் கற்பிப்பேன்! கறுப்புக் கழிச்சல் உன்னைக் கொண்டு போகட்டும்!'' என்று அவள் கத்தினாள். அவள் கண்களைச் சாய்த்து புதிதாக வருகையளித்த நபரைப் பார்த்துக் கோபத்துடன் முகத்தைச் சுளித்தாள்.

ஒலேனின் சேர்ந்திருந்த காகேஷிய வீரப் படை உழைத்துத் தேய்ந்து போனது. அந்தப் படை எல்லா இடங்களிலும், குறிப்பாக யுத்தத்தில் தங்களுடைய

தோழர்களான கஸாக்குகளால் சிறப்பாக வரவேற்கப் படும் என்று அவன் நினைத்திருந்தான். ஆகவே அங்கே கிடைத்த வரவேற்பு அவனிடம் குழப்பத்தை ஏற்படுத் தியது. தான் பயந்துவிட்டதாக நினைக்கக் கூடாது என் பதற்காக அவன் அங்கே தங்கியிருப்பதற்கு வாடகை கொடுக்க உத்தேசிப்பதை விளக்கத் தொடங்கினான். ஆனால் அவன் பேசுவதற்கு அந்தக் கிழவி சந்தர்ப்பம் கொடுக்கவில்லை.

''நீ எதற்காக வந்திருக்கிறாய்? உன்னை மாதிரிக் கழிசடைகள் யாருக்கு வேண்டும்? சவரம் செய்த மூஞ்சி யைப் பார்! என் புருஷன் வரட்டும், அவர் உன்னை சரி யாகக் கவனித்துக்கொள்வார். உன் கேடுகெட்ட பணம் எனக்கு வேண்டாம். நாங்கள் பணத்தைப் பார்க்காதவர் கள் என்று நினைக்கிறாயா? வீடு முழுவதும் புகையிலைப் புகையின் நாற்றத்தைப் பரப்பிவிட்டு அதற்குப் பரிகார மாகப் பணத்தைக் கொடுக்க நினைக்கிறாயா? இவ்வளவு திமிரா? உன் இருதயத்தைச் சுட்டுப் பொசுக்க!..'' என்று அந்தக் கிழவி அவன் பேச்சில் குறுக்கிட்டுக் கூக்குரலிட் டாள்.

''ஒருவேளை வன்யூஷா சொன்னது சரிதான்!'' என்று அவன் நினைத்தான். ''தார்த்தாரியன் எவ்வளவோ தே வலை'' என்று நினைத்துக்கொண்டு அவன் அங்கிருந்து புறப்பட்டான். பாட்டி உலீத்காவின் வசவுகள் இன்னும் கேட்டுக் கொண்டிருந்தன.

அவன் வெளியேறியபொழுது எதிர்பாராத விதத்தில் மார்யானா அவனுக்கு மிகவும் நெருக்கமாக வாசலைக் கடந்து ஓடினாள். அவள் இன்னும் அந்த இளஞ்சிவப்புச் சட்டையை மட்டுமே அணிந்திருந்தாள். ஆனால் அவளது முகத்தைச் சுற்றி வெள்ளை நிறத் துணி கட்டப்பட் டிருந்தது. படிகளில் ஓடியபொழுது காலணி அணியாத அவளுடைய பாதங்கள் கடகடவென்று ஓசை எழுப்பின. அவள் வேகமாக ஓடினாள், பிறகு திடீரென்று நின்றாள், கண நேரம் அந்த இளைஞனைத் தன்னுடைய மகிழ்ச்சி நிறைந்த கண்களால் பார்த்தாள். பின்னர் அந்த வீட்டின் வெளிப்புற மூலைக்கு ஓடி மறைந்துவிட்டாள்.

அந்த அழகிய பெண்ணின் உறுதியான, இளமைமிக்க நடை, பிரகாசித்த கண்களின் கூச்சமான பார்வை,

நொசிவான வடிவம் ஒலேனினுடைய மனத்தில் மிகவும் வன்மையாகப் பதிந்தது.

''இவள்தான் அந்தப் பெண்! இவளாகத்தான் இருக்க வேண்டும்'' என்று அவன் தனக்குள் சொல்லிக்கொண் டான். அந்த இருப்பிடப் பிரச்சினையைப் பற்றிய அனைத் தையும் மறந்தவனாக, இன்னும் மார்யானாவை மனத்தில் நினைத்தவனாக அவன் வன்யூஷாவைப் பார்க்கச் சென் றான்.

''இப்படி கட்டுக்கடங்காத பெண்ணை நீங்கள் எப் பொழுதாவது பார்த்துண்டா?'' என்று வன்யூஷா அவ னிடம் கேட்டான். அவன் சாமான்களைப் பிரிப்பதில் இன்னும் மும்முரமாக ஈடுபட்டிருந்தான்; ஆனால் அவன் கோபம் தணிந்திருந்தது. ''இந்தப் பெண் சரியான குதி ரைக்குட்டி!'' என்று அவன் உற்சாகம் நிறைந்த உரத்த குரலில் பட்டென்று சிரித்துக்கொண்டு கூறினான்.

## 11

அந்தக் குடும்பத் தலைவர் மீன் பிடித்து விட்டு மாலை நேரத்தில் வீட்டுக்குத் திரும்பினார். தங்குமிடம் கொடுப்பதற்கு வாடகை கிடைக்கும் என்பதை அறிந்த வுடன் அவர் தனது மனைவியை சமாதானப்படுத்தி விட்டு வன்யூஷாவின் கோரிக்கைகளை நிறைவேற்றினார்.

வெகு சீக்கிரத்தில் அந்தப் புதிய வீடு துப்புரவு செய் யப்பட்டது. எல்லாம் ஒழுங்குமுறைப்படி வைக்கப்பட் டன. கணவனும் மனைவியும் குளிர்கால வீட்டில் தங்கிக் கொண்டார்கள். மாதத்துக்கு மூன்று வெள்ளி ரூபிள்கள் வாடகைக்கு அந்த யுங்கெர் கூட்டடுப்பு இல்லாத குடிசை யில் தங்கிக்கொள்ள அனுமதி அளிக்கப்பட்டது. ஒலே னின் சிறிது உணவருந்தி விட்டு சற்று நேரம் உறங்கி னான். மாலைப்பொழுதில் உறங்கியெழுந்து, முகத்தைக் கழுவி, உடைகளைத் துவைத்துவிட்டு உணவருந்தினான். பிறகு சிகரெட்டைப் பற்றவைத்துக்கொண்டு தெருவுக்கு நேராக இருந்த சன்னலுக்குப் பக்கத்தில் உட்கார்ந்தான்.

வெப்பம் ஓரளவுக்குத் தணிந்திருந்தது. செதுக்கப் பட்ட மோட்டு உத்தரத்தைக் கொண்ட குடிசையின்

சாய்வான நிழல் புழுதி நிறைந்த தெருவின் குறுக்கே தெரிந்ததுடன் எதிர் வீட்டின் கீழ்ப்பகுதியிலும் தென் பட்டது. நாணல்களால் வேயப்பட்ட எதிர் வீட்டின் சாய் வான கூரை மறைகின்ற சூரியனுடைய கதிர்கள் பட்டுப் பிரகாசித்தது. காற்று மேன்மேலும் குளிர்ச்சியடைந்து கொண்டிருந்தது. கிராமம் அமைதியாக இருந்தது. எல் லாப் படைவீரர்களுக்கும் தங்குமிடங்கள் ஏற்பாடு செய் யப்பட்டிருந்தன. படைவீரர்கள் இப்பொழுது நிதான மடைந்திருந்தார்கள். கால்நடை இன்னும் ஓட்டிவரப் படவில்லை. கிராம மக்கள் இன்னும் தோட்டங்களில் வேலை செய்து கொண்டிருந்தார்கள்.

ஒலேனினுடைய இருப்பிடம் அநேகமாக கிராமத்தின் கடைசியில் இருந்தது. தேரெக்குக்கு அப்பால் வெகு தூரத்தில், ஒலேனின் வந்த அதே திசையில், செச்னியா மலைகளில் அல்லது குமீத்ஸ்கி சமவெளியில் எப்பொழு தாவது குண்டுகள் வெடிக்கும் சத்தம் கேட்டது. மூன்று மாதப் பாடி வாழ்க்கைக்குப் பிறகு ஒலேனின் உற்சாக மாக இருந்தான். சோப் தடவிக் கழுவிய முகம் குளிர்ச்சி யாகவும் புதுமலர்ச்சியுடனும் இருந்தது. படையெடுப்பின் அழுக்கும் களைப்பும் மறைந்து அவனுடைய கட்டுமஸ் தான உடல் சுத்தமாகவும் அமைதியாகவும் இருந்தது. உறுப்புகள் அனைத்தும் நன்றாக ஓய்வெடுத்து விட்டபடி யால் வீறமைதியுடனும் வலிமையுடனும் இருந்தன.

அவன் மனமும் தெளிவாக, கவலைகளிலிருந்து விடு பட்டதாக இருந்தது. அவன் படையெடுப்பில் நடை பெற்ற சம்பவங்களை, அவனுக்கு ஏற்பட்ட ஆபத்து களை நினைவுபடுத்திக் கொண்டான். ஆபத்துகள் ஏற் பட்டபொழுது தான் நல்ல முறையில் நடந்துகொண்ட தாக, மற்றவர்களைப் போலவே துணிகரமாக இருந்த தாகக் கருதினான்; வீரமிக்க காகேஷியப் படைவீரர் களின் 'குடும்பத்தில்' தானும் சேர்த்துக் கொள்ளப்பட் டிருப்பதை நினைத்துப் பார்த்தான். மாஸ்கோவைப் பற்றி நினைத்தபொழுது... மாஸ்கோவா? அது எங்கே இருக் கிறது? கடவுளுக்குத்தான் தெரியும்! அவனுடைய பழைய வாழ்க்கை துடைத்தழிக்கப்பட்டு விட்டது; முற்றிலும் புதிய வாழ்க்கை பிறந்துவிட்டது; இப்புதிய வாழ்க்கை யில் இதுவரை அவன் தவறு செய்யவில்லை. இங்கே,

புதிய மனிதர்களுக்கு மத்தியில் புதிய மனிதன் என்ற முறையில் அவன் புதிய பெயர், நல்ல பெயர் பெற முடியும். காரணமில்லாமல் வாழ்க்கையை அனுபவிக்கின்ற இளமையின்பத்தை அவன் உணர்ந்தான்; அந்த வீட்டுக்குப் பக்கத்திலிருந்த நிழலில் சிறுவர்கள் பம்பரங்களைச் சுழற்றி விளையாடிக் கொண்டிருந்ததை சன்னல் வழியாகப் பார்த்தபொழுது அல்லது தனக்கு ஒதுக்கப்பட்ட புதிய வீட்டைப் பார்த்தபொழுது அந்த கிராமத்தில் தன்னுடைய புதிய வாழ்க்கை எவ்வளவு சுகமாக இருக்கிறது என்று சிந்தித்தான். அவன் மலைகள், வானம் இருந்த திசையில் பார்த்தபொழுது அவனுடைய நினைவுகள், கனவுகள் ஆகியவற்றுடன் இயற்கையின் கம்பீரத்தைப் பற்றிய கடுமையான உணர்வும் கலந்திருந்தது. அவன் முதலில் மாஸ்கோவை விட்டுப் புறப்பட்ட பொழுது எதிர்பார்த்த முறையில் அங்கே அவனுடைய வாழ்க்கை ஆரம்பமாகவில்லை; அவன் எதிர்பார்த்ததைக் காட்டிலும் மிகவும் சிறப்பாக இருந்தது. அவனுடைய சிந்தனைகள், உணர்ச்சிகள் எல்லாவற்றுக்கும் மலைகள், மலைகள், மலைகளே பின்னணியாக இருந்தன.

''அவன் ஒரு பெண் நாயை முத்தமிட்டுவிட்டான்! அவன் கூஜாவை நக்கிவிட்டான்! யெரோஷ்கா மாமா ஒரு பெண் நாயை முத்தமிட்டுவிட்டான்!'' என்று குழந்தைகள் திடீரென்று கூச்சல் போட்டார்கள். அவர்கள் சன்னலுக்குக் கீழே பம்பரங்களைச் சுழற்றிவிட்டு தெருவின் முனைக்கு ஓடினார்கள். ''அவன் ஒரு பெண் நாயை முத்தமிட்டு விட்டான்! அவன் குத்துவாளை விற்றுக் குடித்துவிட்டான்!'' என்று சிறுவர்கள் ஒன்று சேர்ந்து கூச்சல் போட்டு விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

அவர்கள் யெரோஷ்கா மாமாவைப் பார்த்து சத்தம் போட்டார்கள். துப்பாக்கி தோளில் தொங்க, இடைவாரில் காட்டுக் கோழிகள் தொங்க, அவர் வேட்டைக்குப் போய்விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தார்.

''அது நான் செய்த பாவம்'' என்று அவர் கைகளை அகலமாக ஆட்டிக்கொண்டு அந்தத் தெருவின் இரண்டு பக்கங்களிலுமிருந்த சன்னல்களைப் பார்த்தபடியே பதிலளித்தார். ''நான் பெண் நாயை விற்றுக் குடித்துவிட்டேன். அது நான் செய்த பாவம்'' என்று அவர் மறுபடி

யும் கூறினார். அவர் கோபமடைந்திருந்தாலும் சிறுவர்களின் விளையாட்டில் பங்கு கொள்வதைப் போலப் பாசாங்கு செய்தார்.

சிறுவர்கள் அந்த முதிய வேட்டைக்காரரிடம் நடந்து கொண்ட முறை ஒலேனினுக்கு ஆச்சரியமாக இருந்தது. ஆனால் அவர்கள் யெரோஷ்கா மாமா என்று அழைத்த பெரியவருடைய உறுதியான, அறிவார்ந்த முகமும் திடகாத்திரமான உடலும் அவனுக்கு இன்னும் ஆச்சரியத்தைக் கொடுத்தன.

''தாத்தா, கஸாக்கு! இங்கே வா'ங்கள்'' என்று ஒலேனின் அவரைக் கூப்பிட்டான். ''இங்கே வா'ங்கள்.''

அந்தக் கிழவர் சன்னல் பக்கமாகப் பார்த்தார், சிறிது நின்றார்.

''மாலை வணக்கம், தகுதிமிக்க நண்பரே!'' என்று தன் தலையிலிருந்து தொப்பியைத் தூக்கிக்கொண்டு கூறினார்.

''மாலை வணக்கம், தகுதிமிக்க நண்பரே! அந்தச் சின்ன ராஸ்கல்கள் உங்களைப் பார்த்து ஏன் கூச்சல் போடுகிறார்கள்?'' என்று அவன் கேட்டான்.

யெரோஷ்கா மாமா சன்னலுக்குப் பக்கத்தில் ந் தார்.

''அவர்கள் இந்தக் கிழவனுடன் விளையாடுகிறார்கள். அது ஒன்றுமில்லை. எனக்கு அவர்களைப் பிடிக்கிறது. கிழட்டு மாமாவுடன் வேண்டிய அளவுக்கு விளையாடட்டும்'' என்று அவர் கண்ணியமான முதியவர்கள் வழக்கமாகப் பேசுகின்ற உறுதியான, ஒத்திசைவான குரலில் பதிலளித்தார். ''நீ படையின் தளகர்த்தரா?''

''இல்லை. நான் ஒரு யுங்கெர். அந்தக் காட்டுக் கோழிகளை எங்கே கொன்றீர்கள்?'' என்று ஒலேனின் கேட்டான்.

''இந்த மூன்று காட்டுக் கோழிகளைக் காட்டில் சுட்டேன்'' என்று அந்தக் கிழவர் பதிலளித்தார். அவருடைய அகன்ற முதுகு சன்னலுக்கு எதிராகத் திருப்பப்பட்டிருந்தது. அந்த மூன்று காட்டுக் கோழிகளின் தலைகளும் அவரது இடைவாரில் கட்டித் தொங்கவிடப்பட்டிருந்தன. அவற்றிலிருந்து வழிந்த இரத்தம் அவருடைய செர்கெஸ்காவைக் கறைப்படுத்தியிருந்தது. ''நீ இன்னும்

பார்க்கவில்லையா?'' என்று அவர் கேட்டார். ''உனக்குப் பிடித்திருந்தால் ஒரு சோடியை எடுத்துக்கொள்.'' அவர் சன்னல் வழியாக இரண்டு காட்டுக் கோழிகளை நீட்டினார். ''உனக்கு வேட்டையாடுவதில் விருப்பமா?'' என்று அவர் மேலும் அக்கறையுடன் விசாரித்தார்.

''ஆமாம். படையெடுப்பின் போது நான்கு காட்டுக் கோழிகளைச் சுட்டேன்.''

''நான்கா? அப்படியானால் அது மிகவும் அதிகம் தான்!'' என்று அந்தக் கிழவர் கிண்டலாகப் பேசினார். ''நீ குடிப்பது உண்டா? சிவப்பு ஒயின் பிடித்திருக்கிற தா?''

''பிடிக்காமலென்ன? குடிப்பதென்றால் எனக்குப் பிரியம்.''

''நீ வாட்டசாட்டமான இளைஞன்! நாம் நண்பர்களாக வேண்டும்'' என்றார் யெரோஷ்கா மாமா.

''உள்ளே வா'ங்கள்'' என்றான் ஒலேனின். ''சிவப்பு ஒயினை ருசி பார்ப்போம்.''

''நான் உள்ளே வருகிறேன். காட்டுக் கோழிகளை வாங்கிக்கொள்'' என்றார் அந்தக் கிழவர்.

அந்தக் கிழவருக்கு ஒலேனினை மிகவும் பிடித்துவிட்டது, அவனுடைய விருந்தினராகச் சென்று குடிப்பதனால் தனக்கு எச்செலவும் ஏற்படாது, ஆகவே அவனிடம் ஒரு சோடிக் காட்டுக் கோழிகளைக் கொடுப்பது நல்ல ஆரம்பம் என்பதை உடனே அறிந்துகொண்டார் என்பதை அந்தக் கிழவருடைய முகம் தெளிவாக எடுத்துக்காட்டியது.

அடுத்த நிமிடத்தில் யெரோஷ்கா மாமாவின் உருவம் குடிசை வாயிலில் தோன்றியது. அந்தக் கிழவரின் உண்மையான உருவத்தையும் கட்டுமஸ்தான உடலையும் ஒலேனின் முதல் தடவையாக உணர்ந்தான். அடர்த்தியான, முற்றிலும் வெள்ளை நிறத் தாடியில் சட்டம் பிடிக்கப்பட்டதைப் போன்றிருந்த அவருடைய சிவப்பு நிற முகத்தில் முதுமை மற்றும் கடுமையான வாழ்க்கையின் சுருக்கங்கள் ஆழமாகக் கோடுகளைப் பதித்திருந் தன.

அவருடைய கால்கள், கரங்கள், தோள்களின் தசைகள் அவரைக் காட்டிலும் மிகவும் குறைந்த வயதுடைய

இளைஞனிடம் மட்டுமே இருக்கக் கூடிய முறையில் உருண்டு திரண்டு உறுதியாக அமைந்திருந்தன. அவர் தலையில் குட்டையான முடிக்குக் கீழே ஆழமான தழும்புகள் தென்பட்டன. அவருடைய பெரிய சதைப்பிடிப்பான கழுத்தில் காளை மாட்டைப் போல மடிப்புகள் விழுந்திருந்தன. பொட்டுகளைக் கொண்ட அவருடைய கரங்கள் கன்றிப் போய்க் காயமடைந்திருந்தன.

அவர் இயல்பாகவும் வேடிக்கையாகவும் வாயிலைக் கடந்தார், துப்பாக்கியைக் கழற்றி ஒரு மூலையில் வைத்தார், வேகமாகக் கண்களைச் சுழற்றி அறையில் இருந்த பொருள்களைப் பார்த்து மதிப்பிட்டார். தன்னுடைய முரட்டுத் தோல் காலணிகளின் ஓசை கேட்காதபடி நடந்து அறையின் நடுவே வந்தார். அவர் உடலில் ஒயின் வோட்கா, வெடி மருந்து, உறைந்த இரத்தம் ஆகியவற்றின் காட்டமான, ஆனால் வெறுக்கமுடியாத நெடி அடித்தது.

யெரோஷ்கா மாமா தெய்வ வடிவத்தை நோக்கி வணங்கினார், தாடியைத் தடவிச் சரிப்படுத்திக் கொண்டார்; பிறகு நேரே ஒலேனினிடம் வந்து தன்னுடைய தடிமனான, அழுக்குக் கரத்தை நீட்டினார்.

''கொஷ்கில்டு!'' என்றார் அவர். ''இது தார்த்தாரியர்கள் சொல்கின்ற வாழ்த்து. 'உங்கள் நலம் பெருக வேண்டும்' அல்லது 'துன்பமின்றி வாழவேண்டும்' என்பது அதன் அர்த்தம்.''

''கொஷ்கில்டு! எனக்குத் தெரியுமே'' ஒலேனின் தன் கையை அவரிடம் நீட்டியவாறு பதிலளித்தான்.

''உனக்கு ஒன்றும் தெரியவில்லை! எங்கள் மரபுமுறைகள் உனக்குத் தெரியவில்லை, முட்டாளே!'' என்றார் யெரோஷ்கா மாமா. அவர் அவனைக் கண்டிப்பதைப் போலத் தலையை ஆட்டினார். ''யாராவது 'கொஷ்கில்டு' என்று கூறினால் 'அல்லா ரஸி பொ ஸுன்' என்று நீ சொல்ல வேண்டும். 'ஆண்டவன் உன்னைக் காப்பாற்றுவார்' என்று அதற்கு அர்த்தம். அவ்வாறு சொல், அப்பனே. 'கொஷ்கில்டு' என்று அதற்கு பதில் சொல்லக் கூடாது. நான் அதைப் பற்றியெல்லாம் உனக்குச் சொல்லித் தருகிறேன். ஒரு காலத்தில் ருஷ்யன் இலியா மொஸேயிச் இங்கே வசித்தான். நானும் அவனும் நெருங்கிய

நண்பர்கள். அவன் நல்லவன், குடிகாரன், திருடன், வேட்டைக்காரன். ஓ! மிகச் சிறந்த வேட்டைக்காரன். அவனுக்கு எல்லாவற்றையுமே சொல்லிக் கொடுத்தேன்.''

''நீங்கள் எனக்கு என்ன கற்பிக்கப் போகிறீர்கள்?'' என்று ஒலேனின் கேட்டான். அந்தக் கிழவரைப் பற்றி அவனுக்கு மேன்மேலும் அதிகமான அக்கறை ஏற்பட்டது.

''நான் உன்னை வேட்டைக்குக் கூட்டிச் செல்கிறேன், உனக்கு மீன் பிடிப்பதற்குக் கற்றுத் தருகிறேன், செச்சென்களை உனக்குக் காட்டுகிறேன். உனக்கு ஒரு அழகான பெண் வேண்டுமென்றால் நான் ஏற்பாடு செய்கிறேன். நான் அப்படிப்பட்ட ஆளாக்கும், வாடிக்கையான ஜோக்கர்!'' கிழவர் சிரித்தார். ''நான் உட்காரலாமா, அப்பனே! எனக்குக் களைப்பாக இருக்கிறது. கர்கா?'' என்று அவர் கேள்வி பாவனையுடன் கூறினார்.

''கர்கா என்றால் என்ன அர்த்தம்?'' என்று ஒலேனின் கேட்டான்.

''ஜார்ஜிய மொழியில் 'நல்லது' என்று அர்த்தம். அதை எப்பொழுதும் சொல்வது என்னுடைய பழக்கம். அது என்னுடைய பொதுவழக்குச் சொல், எனக்குப் பிடித்தமான சொல்—கர்கா. நான் அதைச் சொல்லும் பொழுது கேலிசெய்கிறேன் என்று அர்த்தம். அப்பனே! யாரையாவது வெளியே அனுப்பி சிவப்பு ஒயின் வாங்கி வரச் சொல்கிறாயா? உன்னிடம் வேலைக்காரன் இருக்கிறானா? இவன் பெயர் இவானா?'' என்று அந்த முதிய வேட்டைக்காரர் கேட்டார். ''உங்களுடைய ஆட்கள் எல்லோருக்கும் இவான் என்று தானே பெயர். உன் வேலைக்காரனுடைய பெயர் இவானா?''

''ஆமாம். அவன் பெயர் இவான். வன்யூஷா! வீட்டுக்காரியிடமிருந்து சிவப்பு ஒயின் வாங்கிக் கொண்டுவா.''

''இவான், வன்யூஷா—எல்லாம் ஒன்றுதான். உங்களுடைய வீரர்கள் எல்லோருக்கும் இவான் என்று ஏன் பெயர் வைக்கிறீர்கள்? இவான்!'' என்று சொல்லிக் கொண்டு கிழவர் அந்தப் பெயரைத் திரும்பத் திரும்ப உச்சரித்தார். ''இளைஞனே! கவனம்! திறந்த மிடாவிலிருந்து ஒயினை ஊற்றிக் கொண்டுவா. ஆ! இந்த கிராமத்திலேயே சிறந்த சிவப்பு ஒயின் இந்த வீட்டில் கிடைக்

கும். ஆனால் ஒரு குவார்ட் ஒயினுக்கு முப்பது கோபெக்கு களுக்கு மேல் தராதே, அந்தக் கிழவிச் சனியனுக்கு அதிகமாகப் பணம் வாங்குவதென்றால் மிகவும் சந்தோஷம். எங்கள் ஆட்கள் எல்லோரும் உதவாக்கரை, முட்டாள்கள்'' என்று வன்யூஷா போன பிறகு யெரோஷ்கா மாமா அவனிடம் நம்பிக்கையைக் காட்டுகின்ற குரலில் பேசினார். ''அவர்கள் உங்களை மனிதர்கள் என்றே சொல்வதில்லை. நீங்கள் தார்த்தாரியர்களைக் காட்டிலும் மோசமானவர்கள் என்று அவர்கள் நினைக்கிறார்கள். ருஷ்யர்கள் கடவுள் பக்தியில்லாதவர்கள் என்று கருதுகிறார்கள். நீ படைவீரனாக இருந்தாலும் ஒரு மனிதன் என்று நான் நினைக்கிறேன். உன்னுடைய உடலில் நல்ல ஆன்மா இருக்கிறது. என்னுடைய முடிவு சரிதானா? இலியா மொஸேயிச் நல்ல வீரனாக இருந்தான். அவன் எப்படிப்பட்ட தங்கமான ஆள் தெரியுமா? நான் சொல்வது சரிதானா, அப்பனே? எங்கள் மக்கள் என்னை விரும்பாமலிருப்பதற்கு அது ஒரு காரணம். ஆனால் நான் அதைப் பற்றிக் கவலைப்படவில்லை. நான் வேடிக்கையானவன். எனக்கு எல்லோரையும் பிடிக்கும். என்னுடைய பெயர் யெரோஷ்கா! இதுதான், அப்பனே!''

அந்தக் கிழவர் அந்த இளம் ருஷ்யனுடைய தோளில் செல்லமாகத் தட்டினார்.

## 12

இதற்கிடையில் வீட்டைப் பராமரிக்கின்ற ஏற்பாடுகளை முறைப்படுத்தி வெற்றி கண்டிருந்த வன்யூஷா படையைச் சேர்ந்த நாவிதனால் முடியலங்காரம் செய்யப்பட்டிருந்தான். அவன் இப்பொழுது மிகவும் சுமுகமான மனநிலையில் இருந்தான். அவன் ஏதோ ஒரு வகையான காட்டு மிருகத்தைப் பார்ப்பதைப் போல யெரோஷ்கா மாமாவை கவனமாக, ஆனால் சிறிதும் இன்முகமில்லாமலே பார்த்தான்; அவர் அறையில் நடந்த கால்தடங்களைப் பார்த்துத் தலையை ஆட்டினான். பெஞ்சுக்குக் கீழேயிருந்து இரண்டு காலி பாட்டில்களை எடுத்துக் கொண்டு வீட்டு எசமானியைப் பார்க்கச் சென்றான்.

''உங்களுக்கு மிகவும் வணக்கம், பெண்களே!'' இனிமையாக நடந்து கொள்ளவேண்டும் என்று தீர்மானித்

தவனைப் போல வன்யூஷா பேசினான். ''சிவப்பு ஒயின் வாங்கிவருமாறு என் எசமானர் என்னை அனுப்பினார். தயவு செய்து இந்த பாட்டில்களில் ஊற்றிக் கொடுங்கள்.''

பாட்டி உலீத்கா பதிலளிக்கவில்லை. மார்யானா சிறிய தார்த்தாரியக் கண்ணாடிக்கு முன்பாக நின்றுகொண்டு தலையில் கட்டப்பட்டிருந்த துணியை சரிசெய்து கொண்டிருந்தாள். அவள் எதுவும் பேசாமல் வன்யூஷாவை அலட்சியமாகப் பார்த்தாள்.

''நான் பணம் தருகிறேன், பெண்களே!'' என்று சொல்லிக்கொண்டு வன்யூஷா தன் பையிலிருந்த சில்லறைக் காசுகளைக் குலுக்கினான். ''நீங்கள் மரியாதை அளித்தால் நாங்களும் மரியாதையாக நடந்து கொள்வோம்'' என்று அவன் தொடர்ந்து கூறினான். ''அது தான் சிறந்த முறை.''

''உனக்கு எவ்வளவு வேண்டும்?'' என்று பாட்டி உலீத்கா வெடுக்கென்று கேட்டாள்.

''ஒரு குவார்ட்டு.''

''மகளே! அவன் கேட்பதை ஊற்றிக்கொடு'' என்று பாட்டி உலீத்கா தன் மகளிடம் கூறினாள். ''திறந்த மிடாவிலிருந்து ஊற்றிக்கொடு, பெண்ணே!''

அந்தப் பெண் சாவியையும் கண்ணாடிக் கூஜாவையும் தூக்கிக்கொண்டு வன்யூஷா பின்தொடர அறையிலிருந்து புறப்பட்டாள்.

''இங்கே பாருங்கள். அந்தப் பெண் யார் என்று தயவு செய்து சொல்லுங்கள்'' என்று சன்னலைக் கடந்து சென்ற மார்யானாவைச் சுட்டிக்காட்டி அந்த இளைஞன் கேட்டான்.

அந்தக் கிழவர் கண்ணைச் சிமிட்டிக்கொண்டு ஒலேனினைத் தன் முழங்கையினால் இடித்தார்.

''பொறு'' என்று சொல்லிவிட்டு அவர் சன்னலுக்கு வெளியில் தலையை நீட்டிப் பார்த்தார். ''க்கும்-க்கும்'' என்று செறுமிக்கொண்டு ஓசை எழுப்பினார். ''மார்யானா! ஏய்! மார்யானா கண்ணே! என்னைக் காதலி! நான் வேடிக்கையானவன்'' என்று அவர் ஒலேனினிடம் குசுகுசுவென்று பேசினார்.

அந்தப் பெண் தன் கைகளை ஒரே சீராகவும் சுறு

சுறுப்பாகவும் ஆட்டிக்கொண்டு கஸாக்குப் பெண்களுக்கே உரித்தான துள்ளுநடையில் சன்னலைக் கடந்து சென்றாள். அவள் தன்னுடைய தலையைத் திருப்பாமல் நீண்ட இமைகளின் அடியில், கரிய கண்களினால் அந்தக் கிழவரை நிதானமாகப் பார்த்தாள்.

''என்னிடம் அன்பாக இரு. உனக்கு மகிழ்ச்சி ஏற்படும்!'' என்று ஒலேனினை நோக்கிக் கண்களைச் சிமிட்டிக்கொண்டும் கேள்வி கேட்பதைப் போலப் பார்த்துக் கொண்டும் யெரோஷ்கா பேசினார். ''நான் நல்லவன், வேடிக்கையானவன்'' என்று அவர் தொடர்ந்து பேசினார். ''அவள் ராணி மாதிரி இருக்கிறாள், அல்லவா?'' என்றார்.

''அவள் பேரழகி'' என்று ஒலேனின் கூறினான். ''அவளை இங்கே கூட்டி வா'ங்கள்.''

''வேண்டாம்!'' என்றார் அந்தக் கிழவர். ''அவள் லுக்காஷ்காவை திருமணம் செய்து கொள்ளப் போகிறாள். லுக்கா கஸாக்கு வீரன், ஜிகித். ஒரு நாள் அல்லது இரண்டு நாட்களுக்கு முன்னர் அவன் ஒரு அப்ரேக்கைக் கொன்றான். உனக்கு இன்னும் நல்ல பெண்ணாகப் பார்க்கிறேன். பட்டு உடைகள், வெள்ளி நகை அணிந்திருக்கிற பெண்ணாகப் பார்க்கிறேன். நான் வாக்குறுதி அளித்தால் அதை நிச்சயமாக நிறைவேற்றுவேன். ஒரு சிறந்த அழகியை உனக்குக் கொண்டுவருகிறேன்.''

''பெரியவரே! நீங்கள் இப்படிப் பேசலாமா?'' என்று கேட்டான் ஒலேனின். ''அது பாவச் செயல் என்பது உங்களுக்குத் தெரியாதா?''

''பாவமா? பாவம் எங்கே இருக்கிறது?'' என்று உறுதியுடன் சொன்னார் கிழவர்.''அழகான பெண்ணைப் பார்ப்பது பாவமா? அவளுடன் சுற்றுவது பாவமா? அவளைக் காதலிப்பது பாவமா? உங்கள் நாட்டில் அப்படிக் கருதுகிறீர்களா? இல்லை, அப்பனே, அது பாவமல்ல, நம்மைக் காக்கும் கடவுட்பேறு அது. கடவுள் உன்னைப் படைத்தார், அந்தப் பெண்ணையும் படைத்தார். எல்லாவற்றையுமே அவர்தான் படைத்தார், என் அப்பனே! ஆகவே ஒரு அழகான பெண்ணைப் பார்ப்பது பாவமல்ல. ஏனென்றால் அவள் காதலிக்கப்படுவதற்காக, அனுபவித்து ஆனந்தமடைவதற்காகப் படைக்கப்பட்ட

வள். இது தான் என்னுடைய கருத்து, அப்பனே!''

வீட்டு முற்றத்தின் வழியாக மிடாக்கள் வைக்கப் பட்டிருந்த இருண்ட, குளிர்ச்சியான கொட்டகைக்குள் நுழைந்த மார்யானா வழக்கமான பிரார்த்தனையுடன் ஒரு மிடாவின் அருகில் சென்று ஒயினை எடுத்தாள். கத வின் அருகில் நின்று கொண்டிருந்த வன்யூஷா அவளைப் பார்த்து முறுவலித்தான். அவள் சட்டை மட்டுமே அணிந்திருந்ததும் அந்தச் சட்டை பின்புறத்தில் இறுக்க மாகவும் முன்புறத்தில் தொள தொளவென்றிருந்ததும் அவனுக்கு மிகவும் வேடிக்கையாக இருந்தது. அவள் அரை ரூபிள் நாணயங்களை மாலையாகக் கட்டி அதைக் கழுத்தில் அணிந்திருந்தது இன்னும் அதிக வேடிக்கையாக இருந்தது. இது ருஷ்யர்களுக்கு மாறான பழக்கமாக இருக் கிறது, அவர்கள் இந்தப் பெண்ணைப் பார்த்தால் அதிக மாக நகைப்பார்கள் என்று அவன் நினைத்தான். ''இந் தப் பெண் மிகவும் அழகாக இருக்கிறாள்'' என்று அவன் தனக்குள் கொச்சையான பிரெஞ்சு மொழியில் சொல்லிக் கொண்டான். ''எசமானரிடம் இந்தப் பெண்ணைப் பற் றிச் சொல்லவேண்டும்.''

''எதற்காக அப்படியே நின்று கொண்டிருக்கிறாய், பிசாசே!'' என்று அந்தப் பெண் திடீரென்று அதட்டினாள். ''கண்ணாடிக் கூஜாவைக் கொடு.''

கண்ணாடிக் கூஜாவில் குளிர்ச்சியான, சிகப்பு ஒயினை நிறைத்தபிறகு மார்யானா அதை வன்யூஷாவிடம் நீட்டி னாள்.

''பணத்தை அம்மாவிடம் கொடு'' என்று அவள் காசை நீட்டிய கையைப் பின்னால் தள்ளியபடியே கூறி னாள்.

வன்யூஷா படீரென்று சிரித்தான்.

''ஏன் கோபமடைகிறாய், பெண்ணே?'' என்று அவன் சாந்தமாகக் கூறிவிட்டு அந்தப் பெண் மிடாவை மூடு கின்றவரை காத்திருந்தான்.

அவள் சிரிக்கத் தொடங்கினாள்.

''உங்களுக்குப் பண்பாக நடக்கத் தெரியாதா?''

''எசமானரும் நானும் மிகவும் பண்புடையவர்கள்'' என்று வன்யூஷா உறுதியாக பதிலளித்தான். ''நாங்கள் மிகவும் பண்புடன் நடந்து கொள்வதால் இதற்கு முன்பு

நாங்கள் வசித்த எல்லா இடங்களிலும் அவர்களுக்கு எங்களைப் பிடித்திருந்தது. அவர் ஒரு பிரபு.''

அந்தப் பெண் நின்று அக்கறையுடன் கேட்டாள்.

''உன் எசமானருக்குத் திருமணம் ஆகி விட்டதா?''

''இல்லை! என்னுடைய எசமானர் இளைஞர், திருமணமாகாதவர். ஏனென்றால் பிரபுக்கள் இளைஞர்களாக இருக்கும் பொழுது திருமணம் செய்து கொள்ள முடியாது'' என்று வன்யூஷா ஆசிரியரைப் போல விளக்கினான்.

''அப்படியா? ஒரு ஆண் எருமை மாதிரி தடித்துப் போகிறார், ஆனால் திருமணம் செய்து கொள்ள முடியாத அளவுக்கு இளைஞராகக் கருதப்படுவாராக்கும்! அவர் உங்கள் எல்லோருக்கும் தலைவரா?'' என்று அவள் கேட்டாள்.

''என் எசமானர் ஒரு யுங்கெர். அதாவது அவர் இன்னும் அதிகாரி ஆகவில்லை. ஆனால் அவர் ஒரு ஜெனரலைக் காட்டிலும் முக்கியமானவர். அவர் பெரிய மனிதர். ஏனென்றால் எங்கள் கர்னல் மட்டுமல்ல, ஜார் சக்கரவர்த்திக்கே அவரைத் தெரியும்'' என்று வன்யூஷா பெருமிதத்துடன் விளக்கினான். ''இராணுவத்தில் இருக்கின்ற மற்ற ஏழைகளைப் போன்றவர்களல்ல நாங்கள். அவர் தகப்பனார் ஒரு செனட்டர். அவரிடம் ஆயிரத்துக்கும் அதிகமான பண்ணையடிமைகள் இருந்தார்கள். எங்களுக்கு ஆயிரக்கணக்கில் ரூபிள் அனுப்புகிறார்கள். அதனால் எல்லா இடங்களிலும் எங்களை விரும்புகிறார்கள். சில சமயங்களில் ஒரு காப்டனிடம் கூடப் பணம் இருக்காது. பிறகு பதவி எதற்கு?..''

''வெளியே வா. நான் கதவைப் பூட்ட வேண்டும்'' என்று அந்தப் பெண் குறுக்கிட்டுப் பேசினாள்.

வன்யூஷா ஒயினை எடுத்துக்கொண்டு போய் ஒலேனினிடம் கொடுத்து விட்டு அந்தப் பெண் அழகாக இருக்கிறாள் என்று கொச்சையான பிரெஞ்சு மொழியில் கூறினான். உடனே அசட்டுத்தனமாகச் சிரித்தபடியே வெளியே புறப்பட்டான்.

## 13

இதற்கிடையில் கிராமத்தின் சதுக்கத்தில் படையின் அந்தி முரசை முழங்கிக் கொண்டிருந்தார்கள். கிராம

மக்கள் தங்களுடைய வேலைகளை முடித்து விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தார்கள். கால்நடைகள் கிராமக் கதவுகளின் அருகில் கனைத்துக்கொண்டு நின்றன; தங்க நிற மேகத்தைப் போலத் தூசியை எழுப்பிக் கொண்டிருந் தன. கன்னியர்களும் பெண்களும் தங்களுடைய கால் நடைகளை வீட்டுக்கு விரட்டிக்கொண்டு தெருக்களிலும் சுற்றுவட்டகைகளிலும் சுறுசுறுப்பாகப் போய்க் கொண் டிருந்தார்கள். சூரியன் தொலை தூரத்திலிருந்த பனி படர்ந்த மலைத் தொடர்களுக்குப் பின்னால் பூரணமாக மறைந்துவிட்டது. பூமி நெடுகிலும் வானம் நெடுகிலும் லேசான நீல நிறத்தில் நிழல் கப்பியது. இருள் மூடிக் கொண்டிருந்த தோட்டங்களின் மேலே நட்சத்திரங்கள் இலசாக சுடர்விடத் தொடங்கியிருந்தன. கிராமத்தில் ஓசைகள் அடங்கிக் கொண்டிருந்தன. கஸாக்குப் பெண் கள் கால்நடைகளின் பாலைக் கறந்து முடித்த பிறகு தெரு மூலைகளுக்கு வந்து திண்ணைகளில் கூடி உட்கார்ந்து முலாம் பழ விதைகளைக் கொறித்தார்கள். இரண்டு பசுக்கள் மற்றும் ஒரு பெண் எருமையின் பாலைக் கறந்து முடித்திருந்த மார்யானா சில பெண்கள், கன்னியர்கள், ஒரு முதிய கஸாக்கைக் கொண்ட கோஷ்டியில் சேரு வதற்குப் புறப்பட்டாள்.

அவர்களுடைய பேச்சு அப்ரேக் கொல்லப்பட்ட சம் பவத்துக்குத் திரும்பியது. கஸாக்கு அந்தக் கதையைச் சொல்லிக் கொண்டிருந்தார். பெண்கள் கேட்டுக் கொண் டிருந்தார்கள்; எப்பொழுதாவது கேள்விகள் கேட்டார் கள்.

''அவனுக்குப் பெரிய பரிசு கொடுப்பார்கள் அல் லவா?'' என்று ஒரு கஸாக்குப் பெண் கேட்டாள்.

''அவர்கள் கொடுக்கவேண்டும். அவனுக்கு சிலுவைப் பதக்கம் கிடைக்கும் என்று சொல்லிக்கொள்கிறார்கள்.''

''அந்த மோசெவ் அவனை அவமதிக்க விரும்பிய தாகச் சொல்கிறார்கள். அப்ரேக்கின் துப்பாக்கியை அவன் எடுத்துக் கொண்டானாம். கிஸ்லியாரில் இருக்கும் அதி காரிகளுக்கு எல்லா விஷயமும் தெரியுமாம்.''

''அந்த மோசெவ் ஒரு அற்பன்!''

''லுக்காஷ்கா ஊருக்கு வந்திருப்பதாகச் சொல் கிறார்கள்'' என்றாள் ஒரு இளம் பெண்.

''அவனும் நஸார்காவும் யாம்காவின் வீட்டில் குடித்துக் கும்மாளம் போட்டுக் கொண்டிருக்கிறார்களாம். அவர்கள் அரை வாளி மதுவை அப்படியே குடித்துவிட்டார்களாம்.''

யாம்கா திருமணமாகாத கஸாக்குப் பெண், ஒழுக்கங்கெட்டவள். அவள் சாராயக் கடை வைத்திருக்கிறாள்.

''உர்வானுக்கு எவ்வளவு அதிர்ஷ்டம்!'' என்று யாரோ கூறினார்கள். ''அவன் உண்மையாகவே உர்வான்தான்! சந்தேகமில்லை, அவன் சிறந்த இளைஞன்! புத்திசாலி, ரொம்பத் திறமையுள்ளவன், நியாயமானவன். அவன் தகப்பனார் கிர்யாக்கும் அப்படிப்பட்டவர். அப்பாவைப் போலவே மகன். கிர்யாக் கொல்லப்பட்ட பொழுது கிராமம் முழுவதுமே அவருக்காக அழுதது... அதோ பார். அவர்கள் வந்து கொண்டிருக்கிறார்கள்'' என்று பேசிக் கொண்டிருந்தவள் தெருவில் தங்களை நோக்கிவந்து கொண்டிருந்த மூன்று கஸாக்குகளைச் சுட்டிக்காட்டினாள். ''அவர்களுடன் யெர்குஷோவும் சேர்ந்து குடித்திருக்கிறான்! அவன் மிடாக் குடிகாரனாயிற்றே!''

லுக்காஷ்கா, நஸார்கா மற்றும் யெர்குஷோவ் அந்தப் பெண்களை நோக்கி வந்தார்கள். அவர்கள் அரை வாளி மதுவைக் குடித்திருந்தார்கள். அவர்களுடைய முகங்கள், குறிப்பாக அந்த கஸாக்கு முதியவருடைய முகம் வழக்கத்தைக் காட்டிலும் அதிகச் சிவப்பாக இருந்தன. யெர்குஷோவ் சத்தமாக சிரித்துக்கொண்டு தள்ளாடி நடந்து நஸார்காவின் விலாவில்குத்தி க்கொண்டு வந்தான்.

''பெண்களே! ஏன் பாடாமலிருக்கிறீர்கள்?'' என்று யெர்குஷோவ் அந்தப் பெண்களை உரத்த குரலில் கேட்டான். ''நீங்கள் பாடுங்கள். எங்களுக்கு இன்று கொண்டாட்டம்.''

''இன்று எப்படி இருக்கிறீர்கள்? இன்று எப்படி இருக்கிறீர்கள்?'' என்று அவர்களை வரவேற்ற படியே அந்தப் பெண்கள் கேட்டார்கள்.

''பாட்டா? ஏன்? இன்றைக்குத் திருவிழாவா? இல்லையே! நீ கழுத்துவரை குடித்திருக்கிறாய், நீயே பாடு'' என்று ஒரு பெண் கூறினாள்.

யெர்குஷோவ் வெடிச் சிரிப்புச் சிரித்துவிட்டு நஸார்காவைக் குத்தினான். ''நீ பாடு! அப்புறம் நான் பாடுகிறேன். நான் நன்றாகப் பாடுவேன், தெரியுமா?''

''அழகிகளே! நீங்கள் எல்லோரும் தூங்கி விட்டீர்களா?'' என்று நஸார்கா கேட்டான். ''நாங்கள் ஒரு விசேஷத்தைக் கொண்டாடுவதற்காக எல்லைக் காவல் நிலையத்திலிருந்து வந்திருக்கிறோம். லுக்காஷ்காவுக்கு நிறைய அதிர்ஷ்டம் வரவேண்டுமென்று குடித்துவிட்டு வருகிறோம்.''

லுக்காஷ்கா அந்த கோஷ்டியை நெருங்கி மெதுவாகத் தன்னுடைய மென்மயிர் தொப்பியை மேலே தூக்கிக்கொண்டு, அந்தப் பெண்களுக்கு முன்புறத்தில் நின்றான். அவனுடைய அகன்ற கன்னங்களும் கழுத்தும் சிவந்திருந்தன. அவன் தணிந்த குரலில் திடமான முறையில் பேசிக்கொண்டு அங்கே நின்றான். ஆனால் அவனுடைய செயல்களின் மெதுவான மற்றும் உறுதியான தன்மையில், வீறமைதியில் நஸார்காவின் சலசலப்பையும் துறுதுறுப்பையும் காட்டிலும் அதிகமான உயிர்த்துடிப்பும் சக்தியும் இருந்தன. வாலை உயர்த்திக் கனைத்த பிறகு கால்கள் பூமியில் பிணைக்கப்பட்டதைப் போல அசையாமல் நிற்கின்ற பொலி குதிரையை அவன் நினைவு படுத்தினான். லுக்காஷ்கா பெண்களுக்கு முன்னால் அமைதியாக நின்றான். அவன் கண்களில் களியாட்டம் நிறைந்திருந்தது. அவன் அதிகமாகப் பேசவில்லை. ஒரு சமயத்தில் குடிமயக்கத்திலிருந்த தன்னுடைய தோழர்களையும் மறு சமயத்தில் அந்தப் பெண்களையும் பார்த்தான். மார்யானா அந்த மூலைக்கு வந்தபொழுது அவன் மெதுவாகத் தொப்பியை மேலே தூக்கினான், சிறிது பின்னால் நகர்ந்தான். பிறகு அவளுக்கு எதிரே சென்று ஒரு காலைச் சிறிதளவு அகற்றிக்கொண்டு, இடைவாருக்குள் பெருவிரல்களை நுழைத்துக்கொண்டு, குத்துவாளைத் திருகிக்கொண்டு நின்றான். மார்யானா அவனுடைய வணக்கத்துக்கு பதிலளிக்கின்ற முறையில் தன்னுடைய தலையை மெதுவாகத் தாழ்த்தினாள். அவள் திண்ணையில் உட்கார்ந்துகொண்டு தன்னுடைய மார்பில் ஒளித்து வந்த முலாம் பழ விதைகளை எடுத்துக்கொடுத்தாள். லுக்காஷ்கா தன்னுடைய கண்களைத் திருப்பாமல் அவளை

யே பார்த்துக் கொண்டிருந்தான், பற்களுக்கு இடையில் விதையை உடைத்து ஓட்டைக் கீழே துப்பினான். மார் யானா அந்த கோஷ்டியில் சேர்ந்தபொழுது எல்லோ ரும் பேசாமலிருந்தார்கள்.

''அதிக நேரம் இங்கே இருப்பதற்கு வந்திருக்கிறார் களா?'' என்று ஒரு பெண் அங்கே நிலவிய அமைதியைக் குலைத்தபடியே கேட்டாள்.

''அதிகாலை வரைக்கும்தான்'' என்று லுக்காஷ்கா கம்பீரமான முறையில் பதிலளித்தான்.

''அப்படியா! கடவுள் உனக்கு இன்னும் அதிகமான அதிர்ஷ்டத்தைக் கொடுக்கட்டும்'' என்று அந்த முதிய கஸாக்கு கூறினார். ''நான் மகிழ்ச்சி அடைவதாக இப் பொழுதுதான் சொல்லிக்கொண்டிருந்தேன்.''

''நானும் மகிழ்ச்சி அடைகிறேன்'' என்று குடிமயக் கத்திலிருந்த யெர்குஷோவ் சிரித்துக்கொண்டு கூறினான். ''இங்கே சில புது நபர்கள் இருக்கிறார்கள் போலத் தெரி கிறது'' என்று சொல்லியபடி அங்கே போய்க் கொண் டிருந்த ஒரு படைவீரரைச் சுட்டிக்காட்டினான். ''படை வீரர்கள் வோட்கா நன்றாக இருக்கும். எனக்கு அது பிடிக்கும்!''

''அந்தப் பிசாசுகளில் மூன்றை எங்களிடம் அனுப்பி யிருக்கிறார்கள்'' என்று ஒரு கஸாக்குப் பெண் கூறி னாள். ''என் புருஷன் கிராமத் தலைமையகத்துக்குப் போனார், ஆனால் அதை மாற்ற முடியாது என்று சொல் கிறார்களாம்.''

''ஆ! அதனால் உனக்குக் கஷ்டமா?'' என்றான் யெர் குஷோவ்.

''அவர்கள் புகையிலையுடன் சேர்த்து எல்லாவற்றை யும் புகைத்துவிடுகிறார்களா?'' என்று மற்றொரு கஸாக் குப் பெண் கேட்டாள். ''வாசலுக்கு வந்து அவர்கள் எவ்வளவு வேண்டுமானாலும் புகை பிடிக்கட்டும், ஆனால் வீட்டுக்குள் புகை பிடிப்பதை நாங்கள் அனுமதிக்க மாட் டோம். கிராமத் தலைவர் தலையிட்டால் கூட நான் அதை அனுமதிக்க மாட்டேன். அப்புறம் அந்தப் பிசாசு கள் திருடவும் செய்வார்கள். கிராமத் தலைவர் ஜாரின் படைவீரர்கள் சிலரைத் தன் வீட்டில் தங்குவதற்குக் கூட்டிக்கொண்டு போகவில்லையாமே.''

''உனக்கு அவர்களைப் பிடிக்கவில்லை என்பது நன்றாகத் தெரிகிறது!'' என்று மறுபடியும் யெர்குஷோவ் பேசினான்.

''வீரர்களுக்குப் படுக்கை விரித்துப் போடவேண்டும், சிவப்பு ஒயினும் தேனும் கொடுக்க வேண்டும் என்று உத்தரவு வந்திருக்கிறதாக அவர்கள் சொல்கிறார்கள்'' என்று நஸார்கா கூறினான். அவன் லுக்காஷ்காவைக் காப்பியடிப்பதைப் போல அதே தோரணையில் நின்றதுடன் தொப்பியையும் அதே மாதிரி தலையின் பின்பகுதியில் வைத்துக்கொண்டான்.

யெர்குஷோவ் பலமாகச் சிரித்தபடியே தனக்கு மிகவும் அருகில் உட்கார்ந்து கொண்டிருந்த பெண்ணைக் கட்டிப் பிடித்து அணைத்தான். ''அப்படித்தான் நானும் கேள்விப்பட்டேன்.''

''சீ! விளையாடாதே. உன் மனைவியிடம் சொல்லி விடுவேன்!'' என்று அந்தப் பெண் அதட்டினாள்.

''அவளிடம் சொல்!'' என்று குடிமயக்கத்திலிருந்த யெர்குஷோவ் கத்தினான். ''நஸார்கா சொன்னது உண்மை. அப்படி ஒரு சுற்றுக்கடிதம் வந்திருக்கிறது. அதைப் படிக்கிற அளவுக்கு அவனுக்கு அறிவு இருக்கிறது. இது உண்மை.'' அவன் வரிசைக்கிரமமாக நடந்துகொள்வதைப் போல இன்னொரு பெண்ணைக் கட்டிப் பிடிக்க முயன்றான்.

''ராஸ்கல்! நீ என்ன செய்ய முயல்கிறாய்?'' வட்டமான இளஞ்சிவப்பு முகங்கொண்ட உஸ்தென்கா சிரித்தபடியே அவனை அடிக்கக் கையை ஓங்கினாள்.

அந்தக் கஸாக்கு பின்னே நகர்ந்து தள்ளாடி அநேகமாகக் கீழே விழுந்துவிட்டான்.

''பெண்கள் பலமில்லாதவர்கள் என்று பொய் சொல்கிறார்கள். இவள் என்னை அநேகமாகக் கொன்றுவிட்டாளே!''

''ராஸ்கல். எல்லைக் காவல் நிலையத்திலிருந்து பிசாசுதான் உன்னை இங்கே கொண்டுவந்திருக்க வேண்டும்!'' என்று சொன்ன உஸ்தென்கா அவனிடமிருந்து திரும்பி மறுபடியும் உள்ளூரச் சிரித்தாள். ''அப்ரேக் வந்த பொழுது நீ தூங்கிக் கொண்டிருந்தாயாக்கும். அவன் உன்னை

வெட்டிப் போட்டிருந்தால் சனியன் தொலைந்தது என்ற நிம்மதியாவது கிடைத்திருக்கும்.''

''இருந்தாலும் நீ அவனுக்காக அழுதிருப்பாய்!'' என்று நஸார்கா கூறினான்.

''ஆம், உனக்காகவும் கூட அழுதிருப்பேன். அப்படியே வைத்துக்கொள்!''

''பார்த்தாயா? அவளுக்கு இதயமில்லை. அவள் எனக்காக அழுதிருப்பாளா, நஸார்கா?'' என்று யெர்குஷோவ் பேசினான்.

இந்தப் பேச்சு நடைபெற்றுக் கொண்டிருந்த நேரம் முழுவதிலும் லுக்காஷ்கா மௌனமாக மார்யானாவைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் உற்றுப் பார்த்தது அந்தப் பெண்ணுக்குக் குழப்பத்தை ஏற்படுத்தியிருப்பதாகத் தோன்றியது.

''மார்யானா! உன் வீட்டில் யாரோ தலைவர் தங்கியிருப்பதாகக் கேள்விப்படுகிறேன்'' என்று சொல்லிக் கொண்டு அவன் அவளை நெருங்கினான்.

மார்யானா வழக்கம்போல உடனே பதில் சொல்லவில்லை; ஆனால் தன்னுடைய கண்களை மெதுவாக நிமிர்த்தி அவனைப் பார்த்தாள். அவனுக்கும் அந்த இளம் பெண்ணுக்கும் இடையில் அசாதாரணமான, மற்றவர்களிடமிருந்து வித்தியாசமான ஒன்று நடைபெற்றுக் கொண்டிருப்பதைப் போல லுக்காஷ்காவின் கண்களில் சிரிப்பின் ஒளி தோன்றியது.

''அவர்களிடம் இரண்டு குடிசைகள் இருக்கிறது. அதனால் அவர்களுக்குக் கஷ்டம் இல்லை'' என்று ஒரு கிழவி மார்யானாவைப் பேசவிடாமல் தடுத்தபடி கூறினாள். ''ஆனால் ஃபோமுஷ்கினுடைய வீட்டில் அவர்கள் ஒரு அதிகாரிக்குத் தங்குமிடம் கொடுக்கும்படி ஆயிற்று. அவர் அறை முழுவதும் தன்னுடைய சாமான்களைப் போட்டு அடைத்திருக்கிறார், அந்தக் குடும்பம் கஷ்டப்படுகிறது என்று சொல்கிறார்கள். ஒரு படை முழுவதையும் ஒரு கிராமத்தில் தங்க வைத்திருக்கிறார்கள்— இப்படி நடந்ததாக எப்பொழுதாவது கேள்விப்பட்டிருக்கிறோமா? இதைப் பற்றி நாம் என்ன செய்ய முடியும்? அவர்கள் இங்கே எதற்காக வந்திருக்கிறார்கள்?''

''அவர்கள் தேரெக்கின் குறுக்கே பாலம் கட்டப்

போவதாகச் சொல்கிறார்கள்'' என்று ஒரு பெண் கூறினாள்.

''நான் கேள்விப்பட்டது'' என்று நஸார்கா குறுக்கிட்டுப் பேசியபடியே உஸ்தென்காவிடம் சென்றான். ''அவர்கள் ஒரு குழி வெட்டி அதில் இளம் பெண்களையும் போட்டுப் புதைக்கப் போகிறார்களாம்; ஏனென்றால் நீங்கள் இளைஞர்களைக் காதலிக்கவில்லையாம்.'' அவன் மறுபடியும் தனக்கு மிகவும் பிடித்தமான முறையில் குனிந்து காலைத் தேய்த்த பொழுது அவர்கள் எல்லோரும் சிரித்தார்கள். யெர்குஷோவ் உடனே வரிசை முறைப்படி அவன் கட்டிப் பிடிக்க வேண்டிய அடுத்த பெண்ணாக இருந்த மார்யானாவை விட்டு விட்டு அவளைக் கடந்துசென்ற கஸாக்குக் கிழவியைக் கட்டியணைத்தான்.

''நீ மார்யானாவைத் தானே கட்டிப்பிடிக்க வேண்டும். அவள்தானே அடுத்த பெண்'' என்றான் நஸார்கா.

''ஆனால் இந்தக் கிழவி அவளைக் காட்டிலும் அழகாக இருக்கிறாளே'' என்று சொல்லிவிட்டு அவளை முத்தமிடுவதற்கு முயற்சித்த பொழுது அவள் தப்புவதற்குப் போராடினாள்.

''என்னால் மூச்சுவிட முடியவில்லை!'' என்று அவள் சிரித்தபடியே கத்தினாள்.

தெருவின் முனையில் ஒரே சீராக நடந்து வந்த காலடி ஓசை அவர்களுடைய சிரிப்பில் குறுக்கிட்டது. மூன்று வீரர்கள் மேல்கோட்டு அணிந்து தோளில் துப்பாக்கியுடன் படைப்பிரிவின் பெட்டகத்தைக் காவல் காப்பவர்களுக்கு பதிலாட்களாகப் போய்க் கொண்டிருந்தார்கள். முதிய வீரரான கார்ப்பொரல் கஸாக்குகளைக் கோபத்துடன் பார்த்தார். அவர் வீரர்களை அணிவகுத்துச் சென்ற முறை காரணமாக லுக்காஷ்காவும் நஸார்காவும் அவர்களுக்கு வழிவிட்டு ஒதுங்கிக்கொள்வது அவசியமாயிற்று. நஸார்கா பாதையிலிருந்து விலகிக் கொண்டான்; லுக்காஷ்கா கண்களைச் சிமிட்டி தலையையும் அகன்ற முதுகையும் திருப்பிக்கொண்டு நின்றான்; ஆனால் அந்த இடத்தை விட்டு அசையவில்லை.

''ஆட்கள் நிற்கும்பொழுது அவர்கள் விலகிப் போக வேண்டும்'' என்று அந்த வீரர்களை ஓரக்கண்ணால்

பார்த்து இகழ்ச்சியாகத் தலையை ஆட்டியபடியே அவன் கூறினான்.

வீரர்கள் புழுதி நிறைந்த சாலையில் அமைதியாக அணிவகுத்துச் சென்றார்கள்.

மார்யானா சிரித்தாள். அவளுடன் சேர்ந்து மற்ற பெண்களும் சிரித்தார்கள்.

''முறுக்கான இளைஞர்கள்! கோயில் மதகுருக்கள் மாதிரி நீளமான கோட்டு அணிந்திருக்கிறார்கள்'' என்றான் நஸார்கா. அவன் அந்த வீரர்களைக் கேலி செயவதைப் போலத் தெருவில் நடந்து செல்ல ஆரம்பித்தான்.

அந்தக் கூட்டம் மறுபடியும் சிரித்தது.

லுக்காஷ்கா மார்யானாவை நோக்கி மெதுவாக நடந்து சென்றான்.

''அந்தத் தலைவரை எங்கே தங்க வைத்திருக்கிறீர்கள்?'' என்று அவன் கேட்டான்.

மார்யானா பேசுவதற்கு முன்பு சற்றுத் தயங்கினாள்.

''அவர் புதிய குடிசையில் தங்கியிருக்கிறார்.''

''அவர் இளைஞரா அல்லது முதியவரா?'' என்று லுக்காஷ்கா அந்தப் பெண்ணுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு கேட்டான்.

''நான் அவரைக் கேட்டிருப்பேன் என்று நீ நினைக்கிறாயா?'' என்று மார்யானா பதிலளித்தாள். ''அவருக்கு சிவப்பு ஒயின் ஊற்றித் தருவதற்குப் போனபொழுது அவர் சன்னல் அருகில் உட்கார்ந்து கொண்டு யெரோஷ்கா மாமாவுடன் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்தேன். சணல்நிற முடி உள்ளவர். ஒரு வண்டி நிறைய சாமான்கள் கொண்டுவந்தார்.''

அவள் கண்களைக் கீழே தாழ்த்தினாள்.

''எல்லைக் காவல் நிலையத்திலிருந்து வருவதற்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்ததைப் பற்றி எவ்வளவு மகிழ்ச்சி அடைகிறேன், தெரியுமா?'' என்று லுக்காஷ்கா அந்த வீட்டுத் திண்ணையில் அந்தப் பெண்ணிடம் இன்னும் நெருங்கி அவளுடைய கண்களை நேராகப் பார்த்துக் கொண்டு கூறினான்.

''எத்தனை நாள் தங்கியிருப்பாய்?'' என்று மார்யானா லேசாகச் சிரித்துக்கொண்டு கேட்டாள்.

''நாளை வரை. எனக்கு விதைகள் கொடு'' என்று அவன் கையை நீட்டிக்கொண்டு கேட்டான்.

மார்யானா கணீரென்று சிரித்துக்கொண்டு தன்னுடைய சட்டையிலிருந்த முடிச்சைப் பிரித்தாள்.

''எல்லாவற்றையும் எடுத்துவிடாதே'' என்றாள் அவள்.

''உண்மையைச் சொல்லட்டுமா, நீ இல்லாமல் நான் அதிகமாகத் தனிமையை உணர்ந்தேன்'' என்று லுக்காஷ்கா அவள் மார்பிலிருந்து விதைகளை எடுத்துக்கொண்டு தணிந்த, அடக்கமான குரலில் முணுமுணுத்தான். பிறகு அவளிடம் இன்னும் நெருங்கிச் சென்று கண்களில் குறும்புத் தனத்துடன் அவள் காதில் எதையே முணு முணுக்கத் தொடங்கினான்.

''நான் வரமாட்டேன்; சொன்னால் சொன்னதுதான்'' என்று அவள் திடீரென்று அவனிடமிருந்து திரும்பிக் கொண்டு உரத்த குரலில் சொன்னாள்.

''உண்மையாக... நான் உன்னிடம் ஒரு விஷயத் தைப் பேச வேண்டும்'' என்று லுக்காஷ்கா முணுமுணுத் தான். ''கடவுளே! வா, மார்யானா!''

மார்யானா மாட்டேன் என்று உறுதியாகத் தலை யை ஆட்டினாள், ஆனால் அவள் இன்னும் சிரித்துக் கொண்டிருந்தாள்.

''மார்யானா அக்கா! இரவு உணவு சாப்பிட அம்மா உன்னை வீட்டுக்கு வரச் சொன்னாள்'' என்று மார்யா னாவின் தம்பி கத்திக்கொண்டு கஸாக்குகளின் கோஷ்டி யை நோக்கி ஓடிவந்தான்.

''இதோ வந்துவிட்டேன்'' என்று அந்த இளம் பெண் பதிலளித்தாள். ''தம்பி! நீ முன்னால் போ. நான் உனக் குப் பின்னால் வருகிறேன். நீயாகப் போ.''

லுக்காஷ்கா எழுந்து தொப்பியைச் சிறிது உயர்த்திக் கொண்டான்.

''நேரமாகிவிட்டது. வீட்டுக்குப் புறப்பட வேண்டி யதுதான். அதுதான் சரி'' என்று அலட்சியமாகப் பேசு வதைப் போலப் பாசாங்கு செய்தான். ஆனால் அவனால் புன்சிரிப்பை அடக்க முடியவில்லை. அவன் அந்த வீட்டின் மூலைக்குச் சென்று மறைந்துவிட்டான்.

இதற்கிடையில் அந்த கிராமம் இரவின் இருளில் மூழ்

கியிருந்தது. வானத்தின் விதானத்தில் பிரகாசமான நட்சத்திரங்கள் சிதறிக் கிடந்தன. தெருக்கள் இருண்டு போய் வெறிச்சென்று இருந்தன. நஸார்கா கஸாக்குப் பெண்களுடன் திண்ணையில் தங்கியிருந்தான்; அவர்களுடைய சிரிப்பொலி இன்னும் கேட்டுக் கொண்டிருந்தது. பெண்களை விட்டுப் பிரிந்து ஓசையெழுப்பாமல் போய்க் கொண்டிருந்த லுக்காஷ்கா பூனை மாதிரிக் குனிந்து குத்துவாளைக் கையில் பிடித்துக்கொண்டு தன்னுடைய வீட்டுக்குப் போகின்ற வழியில் செல்லாமல் துணை லெப்டினென்டினுடைய வீட்டை நோக்கி ஓடினான். அவன் ஓட்டமாக இரண்டு தெருக்களைக் கடந்த பிறகு பக்கத்திலிருந்த தெருவில் திரும்பி செர்கெஸ்காவை மடித்துக் கொண்டு வேலியின் நிழலில் தரையில் உட்கார்ந்தான்.

''அதிகாரியின் மகள் எப்படிப்பட்டவள்!'' என்று அவன் தனக்குள் சொல்லிக்கொண்டான். ''சிறிது நேரம் உல்லாசமாக இருக்க அவள் விரும்பவில்லை. சரி! அதற்கு நேரம் வரும்.''

அந்தப் பெண் அருகில் வந்து கொண்டிருக்கின்ற காலடிச் சத்தம் கேட்டது. அவன் உற்றுக்கேட்ட பிறகு தனக்குள் சிரித்துக்கொண்டான். மார்யானா தலையைக் குனிந்தபடியே வேகமாகவும் ஒரே சீராகவும் அவனை நோக்கி நடந்து வந்தாள். அவள் கையில் ஒரு சிறிய மிலாறை வைத்துக்கொண்டு அதை வேலிக்கம்புகள் மீது தட்டிக்கொண்டு வந்தாள். லுக்காஷ்கா எழுந்து நின்றான். மார்யானா திடுக்கிட்டு அவனுக்கு முன்னால் நின்றாள்.

''பிசாசு! நீ என்னை பயமுறுத்திவிட்டாய். அப்படியானால் நீ வீட்டுக்குப் போகவில்லையாக்கும்'' என்று அவள் குதூகலமாகச் சிரித்துக்கொண்டு கூறினாள்.

லுக்காஷ்கா அந்தப் பெண்ணை ஒரு கையினால் அணைத்துக்கொண்டு மறு கையினால் அவள் முகத்தைத் தழுவினான். ''நான் உன்னிடம் என்ன சொல்ல விரும்பினேன், தெரியுமா? அட கடவுளே!..'' அவன் குரல் நடுங்கித் தேய்ந்தது.

''இரவு நேரத்தில் இது என்ன பேச்சு'' என்றாள் மார்யானா. ''என் அம்மா காத்துக் கொண்டிருக்கிறாள். நீ உன் பெண்ணிடம் போ.''

அவள் அவனிடமிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு சிறிதளவு தூரம் ஓடினாள். அவள் வீட்டு முகப்புக்கும் தெருவுக்கும் இடையிலுள்ள வேலியை அடைந்ததும் அவள் நின்று தனக்குப் பின்னால் ஓடிவந்து கொண்டிருந்த கஸாக்கை நோக்கித் திரும்பினாள். தன்னுடன் இன்னும் சிறிது நேரம் இருந்து விட்டுப் போகுமாறு அவளிடம் மன்றாடுவதற்கு அவன் முயன்று கொண்டிருந்தான்.

''வௌவாலே! உனக்கு என்ன வேண்டும்?'' என்று அவள் மீண்டும் சிரித்துக்கொண்டு கேட்டாள்.

''என்னைக் கேலிசெய்யாதே, மார்யானா! கடவுளே! நான் ஒரு பெண்ணை வைத்திருந்தால் தப்பா? அவளைப் பிசாசு கொண்டு போகட்டும். நீ மட்டும் சரியென்று சொல். நான் உன்னை உயிருக்குயிராகக் காதலிப்பேன். நீ எதை விரும்புகிறாயோ அதைச் செய்வேன். சத்தம் கேட்கிறதா? (அவன் தன் பையில் வைத்திருந்த நாணயங்களைக் குலுக்கிக்காட்டினான்.) நாம் உல்லாசமாக வாழ்க்கை நடத்த முடியும். எல்லா ஆண்களும் அனுபவிக்கிறார்கள். நான் அனுபவிக்கக் கூடாதா? நீ எனக்குச் சிறிதளவு மகிழ்ச்சி கூடத் தர மாட்டேன் என்கிறாயே, மார்யானா கண்ணே!''

அந்தப் பெண் பதிலளிக்காமல் அவன் எதிரே நின்று கொண்டிருந்தாள். தன்னுடைய விரல்களால் அந்த மிலாறைச் சிறு துண்டுகளாக உடைத்தாள்.

லுக்காஷ்கா திடீரென்று கைமுஷ்டிகளை மடித்துக் கொண்டு பற்களை இறுக்க கடித்தான்.

''நான் ஏன் எப்பொழுதும் காத்துக்கொண்டு, காத்துக் கொண்டு இருக்க வேண்டும்! மார்யானா, நான் உன்னை எவ்வளவு காதலிக்கிறேன் என்பதை நீ கற்பனை செய்யக்கூட முடியாது. என்னை என்ன வேண்டுமானாலும் செய்'' என்று சொல்லிவிட்டு அவன் திடீரென்று கோபத்துடன் முகத்தைச் சுளித்துக் கொண்டு அவளுடைய இரண்டு கைகளையும் பிடித்தான்.

மார்யானாவின் முகமும் குரலும் சிறிதும் மாறாமல் அப்படியே அமைதியாக இருந்தன.

''பதற வேண்டாம், லுக்காஷ்கா! நான் சொல்லப் போவதைக் கேள்'' என்று அவள் பதிலளித்தாள். அவள்

தன்னுடைய கைகளை விடுவித்துக் கொள்ளவில்லை. ஆனால் கஸாக்கைத் தன்னை விட்டுச் சிறிது பின்னால் தள்ளினாள். ''நான் அனுபவமில்லாத பெண் என்பது உண்மையே. ஆனால் நான் சொல்வதை நீ கேள். நான் இதைச் சொல்லக்கூடாது, என்றாலும் நீ என்னைக் காத லிப்பதால் இதைச் சொல்கிறேன். என் கைகளை விடு. நான் உன்னிடம் சொல்கிறேன்: உன்னைக் கல்யாணம் செய்துகொள்ள எனக்கு விருப்பமே, ஆனால் நீ என் னிடம் எவ்விதமான மடத்தனமான காரியங்களையும் எதிர்பார்க்கக் கூடாது'' என்று அவன் முகத்தை நேராகப் பார்த்தபடியே மார்யானா கூறினாள்.

''நீ என்ன சொல்கிறாய்—கல்யாணமா? கல்யாணம் செய்வது எங்களது சக்திக்கு உட்பட்டதல்ல. நீ என் னைக் காதலிக்க வேண்டுமென்று விரும்புகிறேன், மார் யானா கண்ணே!'' என்றான் லுக்காஷ்கா. அவனுடைய சோகமான, பதட்டமான மனநிலை திடீரென்று பணி வாகவும் அடக்கமாகவும் அன்பு நிறைந்ததாகவும் மாறி யது. அவன் அவளுடைய கண்களை உற்றுப் பார்த்து விட்டுச் சிரித்தான்.

மார்யானா அவனை நெருங்கி வந்து அவனுடைய உதடுகளை அழுத்தி முத்தமிட்டாள்.

''அன்பே!'' என்று கூறி உணர்ச்சி மேலோங்க அவ னைத் தழுவினாள். பின்னர் திடீரென்று அவனிடமிருந்து தன்னைப் பிரித்துக்கொண்டு ஓட ஆரம்பித்தாள். திரும் பிப் பார்க்காமல் வீட்டு வேலியின் முன்வாசற் கதவு வழி யாக உள்ளே ஓடினாள்.

''இன்னும் ஒரு நிமிடம் மட்டும் நின்று நான் சொல் வதைக் கேள்'' என்று கஸாக்கு கெஞ்சிய போதிலும் மார் யானா நிற்கவில்லை.

''நீ போய்விடு! நம்மைப் பார்த்து விடுவார்கள்!'' என்று அவள் கூறினாள். ''எங்கள் வீட்டில் தங்கியிருக் கிற பிசாசு சுற்றுவட்டகையில் உலாவிக் கொண்டிருப் பதாகத் தெரிகிறது.''

''அதிகாரியின் மகளுக்குக் கல்யாணம் செய்ய ஆசை யாக்கும்! கல்யாணம் பிறகு, இப்பொழுது என்னைக் காதல் செய்'' என்று லுக்காஷ்கா தனக்குள் சொல்லிக் கொண்டான்.

அவன் யாம்காவின் வீட்டுக்குச் சென்ற பொழுது நஸார்கா அங்கே இருந்தான். அவனுடன் சேர்ந்து குடித்த பிறகு அவன் துனாய்காவின் வீட்டுக்குச் சென்றான். அவள் அவனுக்கு விசுவாசமாக இல்லாவிட்டாலும் அவளுடன் இரவைக் கழித்தான்.

## 14

மார்யானா வெளிவாசற் கதவின் வழியாக உள்ளே நுழைந்தபொழுது ஒலேனின் உண்மையாகவே அங்கே உலாவிக் கொண்டிருந்தான். ''வீட்டில் தங்கியிருக்கிற பிசாசு சுற்றுவட்டகையில் உலாவிக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது'' என்று அவள் கூறியது அவன் காதில் விழுந்தது. அவன் யெரோஷ்கா மாமாவுடன் தன்னுடைய புதிய இருப்பிடத்தின் வெளி வராந்தாவில் அமர்ந்தபடியே அன்றைய மாலைப் பொழுது முழுவதையும் கழித்திருந்தான். மேசையை எடுத்து வெளியே போட்டு சமவார், ஒயின், மெழுகுவர்த்தி விளக்கு ஆகியவற்றை அதன் மீது வைக்குமாறு உத்தரவிட்டான். தேநீர் அருந்திவிட்டு சுருட்டைப் புகைத்தபடியே நிலைப்படி மீது, தன்னுடைய காலடியில் உட்கார்ந்திருந்த கிழவர் சொன்ன கதைகளைக் கேட்டுக் கொண்டிருந்தான். வெளியே காற்று பலமாக வீசவில்லை என்றாலும் மெழுகுவர்த்தி மினுக்மினுக் கென்று எரிந்தது, சுடர் இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் வளைந்து ஆடிக்கொண்டிருந்தது. ஒரு சமயத்தில் வெளி வராந்தாவின் மரத்தூண் மீதும் மறு சமயத்தில் மேசை, டம்ளர்கள் மீதும் அடுத்த சமயத்தில் அந்தக் கிழவருடைய வெண்மையான, ஒட்டக் கத்தரித்து விடப்பட்டிருந்த தலைமீதும் லேசான வெளிச்சத்தைக் காட்டியது. விட்டிற் பூச்சிகள் படபடவென்று சிறகுகளை ஆட்டிப் பறந்து கொண்டிருந்தன. அவை மேசை, டம்ளர்கள் மீது மோதியபொழுது அவற்றின் சிறகுகளில் ஒட்டியிருந்த தூசி சிதறியது. விட்டிற் பூச்சிகள் அந்த விளக்கு வெளிச்சத்தின் குறுகிய வட்டத்தின் ஊடே பறந்து வெளியே இருந்த இருளில் மறைந்தன.

ஒலேனினும் யெரோஷ்காவும் சேர்ந்து ஐந்து பாட்டில் சிவப்பு ஒயினைக் குடித்து முடித்திருந்தார்கள். அந்

தக் கிழவர் ஒவ்வொரு முறையும் டம்ளரில் ஒயினை ஊற்றி நிரப்பிக்கொண்டு, ஒலேனினுக்கு முன்னே காட்டி அவனுடைய நலத்துக்காகக் குடித்தார். அவர் சளைக்காமல் பேசிக் கொண்டிருந்தார். அவர் கஸாக்குகளின் முன்கால வாழ்க்கை பற்றி, தன்னுடைய தகப்பனாரைப் பற்றிப் பேசினார். 'அகன்ற முதுகு' என்னும் பட்டப்பெயர் பெற்றிருந்த அவர் தகப்பனார் முந்நூற்றி அறுபது பவுண்டு எடையுள்ள காட்டுப்பன்றியின் உடலைத் தனியாகத் தூக்கிக்கொண்டு வந்தார், குடிப்பதற்கு உட்கார்ந்தால் இரண்டு வாளி சிவப்பு ஒயினைக் குடித்துவிடுவார் என்றார். கிழவர் தன்னுடைய இளமைக் காலத்தைப் பற்றி, தனது நண்பன் கிர்ச்சிக்கைப் பற்றிப் பேசினார். அவர் தன்னுடைய வேட்டையைப் பற்றி, ஒரு நாள் காலை நேரத்தில் இரண்டு மான்களைக் கொன்றதை வர்ணித்தார். அவர் தன்னுடைய வைப்பாட்டியைப் பற்றிப் பேசினார். அவர் காவல் நிலையத்தில் இருந்த பொழுது அவள் அவரைப் பார்ப்பதற்கு இரவு நேரத்தில் பதுங்கி வருவாள். அவர் எல்லாவற்றையும் அதிகமான நாவன்மையுடனும் உணர்ச்சியுடனும் வர்ணித்த படியால் நேரம் கழிந்து கொண்டிருந்ததை ஒலேனின் கவனிக்கவில்லை.

''அப்பனே, என்னுடைய பொற்காலத்தில் நீ என்னைச் சந்திக்கவில்லை, என்னுடன் பழகவில்லை. நான் உனக்கு எல்லாவற்றையுமே காட்டியிருப்பேன். இன்றைக்கு யெரோஷ்கா ஓய்ந்துவிட்டான். அன்று யெரோஷ்காவின் புகழ் ரெஜிமென்ட் முழுவதிலும் பிரபலமடைந்திருந்தது. சிறந்த குதிரை யாரிடம் இருக்கிறது? மிக விலையுயர்ந்த வாள் யாரிடம் இருக்கிறது? எல்லாம் யெரோஷ்காவிடம். குடியாட்டம் போட யாரைத் தேர்ந்தெடுப்பார்கள்? மலைக்குப் போய் அகமத்-கானைக் கொல்வதற்கு யாரை அனுப்பினார்கள்? எப்பொழுதும் யெரோஷ்காவை. பெண்ணுக்கு யாரைப் பிடிக்கும்? எப்பொழுதும் என்றும் யெரோஷ்காதான். ஏனென்றால் நான் உண்மையான ஜிகித்தாக இருந்தேன். குடிகாரன், திருடன், குதிரைக் கூட்டங்களை மலையிலிருந்து ஓட்டிவருவதில் திரமைசாலி, பாடகன்!.. என்னால் எந்த வேலையும் செய்ய முடியும். இன்று என்னைப் போன்ற ஒருத்தனை கஸாக்கு

களிடம் பார்க்க முடியாது. அவர்களைப் பார்த்தால் எனக்குக் கஷ்டமாக இருக்கிறது. இவ்வளவுதான் உயரம் (யெரோஷ்கா தரைக்கு மேல் ஒரு கஜ உயரத்தில் கையை நீட்டிக் காட்டினார்), அவர்கள் அசிங்கமான பூட்சுகளை அணிந்திருக்கிறார்கள், அவற்றைப் பார்த்துப் பார்த்து மகிழ்ச்சி அடைகிறார்கள். அவர்கள் மிகவும் அதிகமாகக் குடிக்கிறார்கள். ஆனால் கஸாக்குகளைப் போலக் குடிக் கத் தெரியாது. பிறகு எப்படி என்று எனக்குச் சொல்லத் தெரியவில்லை. ஆனால் நான் யார்? நான்தான் யெ ரோஷ்கா, திருடன். கிராமங்களில் மட்டுமல்ல, மலை களிலும் என்னைப் பற்றி அதிகமாகத் தெரியும். மலை நாட்டு அரசர்கள் என்னுடைய நண்பர்கள். அவர்கள் என்னைப் பார்க்க வந்தார்கள். எல்லோருக்கும் நான் நண்பனாக இருந்தேன். தார்த்தாரியனோ, அர்மீனிய னோ, வீரனோ அல்லது அதிகாரியோ எல்லாம் எனக்கு ஒன்றுதான். அவர் குடிக்கவேண்டும், அவ்வளவுதான். 'பிற சமயத்தவர்களிடமிருந்து விலகியிருக்க வேண்டும்' என்று ஒருவர் சொன்னார். 'படைவீரனுடன் குடிக்காதே, தார்த்தாரியனுடன் சாப்பிடாதே.'''

''இப்படிக் கூறியவர் யார்?''

''ஓ! எங்கள் மதகுருக்கள் இப்படிக் கூறினார்கள். முல்லா அல்லது காதி சொல்வதை ஒரு முறை கேள். 'சமய நம்பிக்கை இல்லாதவர்களே! நீங்கள் ஏன் பன்றி இறைச்சியைச் சாப்பிடுகிறீர்கள்?' ஒவ்வொருவருக்கும் தனி மரபுகள் இருக்கின்றன என்பது இதன் பொருள். ஆனால் எல்லாம் ஒன்றுதான் என்பது என்னுடைய கருத்து. மனிதன் அனுபவிப்பதற்காகக் கடவுள் எல்லா வற்றையும் படைத்தார். பாவச் செயல் என்று ஒன்றும் இல்லை. உதாரணமாகக் காட்டு மிருகத்தை எடுத்துக் கொள். அது தார்த்தாரியனது நாணலிலும் வசிக்கிறது, நம்முடைய நாணலிலும் வசிக்கிறது. எங்கே போனாலும் அதற்கு வீடு. கடவுள் கொடுக்கிற உணவை அது சாப்பிடு கிறது. ஆனால் நரகத்தில் நமக்கு தண்டனை தரப்படும், நாம் கறிவறுக்கிற சட்டியை நக்க வேண்டும் என்று நம் மவர்கள் சொல்கிறார்கள். இவை எல்லாம் போலியான வை என்று நான் கருதுகிறேன்'' என்று அவர் சிறிது நேர மௌனத்திற்குப் பிறகு கூறினார்.

''எது போலியானது?''

''மதகுருக்கள் சொல்வது. அப்பனே, செர்வ்லியோனயா கிராமத்தில் ஒரு கஸாக்கு மேஜர் இருந்தார். அவர் என்னுடைய நண்பர். அவர் என்னைப் போன்ற வீரர். அவர் செச்னியாவில் கொல்லப்பட்டார். மதகுருக்கள் தங்களுடைய மண்டைகளில் இவற்றைத் தயாரிக்கிறார்கள் என்று அவர் கூறுவார். 'நீ மரணமடைவாய், உன் மீது புல் வளர்ந்து உன்னை மூடும். அத்துடன் எல்லாம் முடிந்துவிடும்.' அவர் மிகவும் துணிச்சலானவர்!'' என்று சொல்லிவிட்டு அந்தக் கிழவர் சிரித்தார்.

''உங்கள் வயது என்ன?'' என்று ஒலேனின் கேட்டான்.

''கடவுளுக்குத்தான் தெரியும்! சுமார் எழுபது இருக்கும். ஜாரிட்சா ஆட்சி செய்து கொண்டிருந்தபொழுது நான் சிறுவன் அல்ல. அப்படியானால் எவ்வளவு வயதாகிறது என்று கணக்குப் போட்டுக் கொள். என்ன, எழுபது இருக்குமா?''

''அப்படித்தான் இருக்கும். ஆனால் நீங்கள் இன்னும் வீரத்தோடு இருக்கிறீர்கள்.''

''கடவுளுக்கு நன்றி. நான் ஆரோக்கியமாக, முழு ஆரோக்கியமாக இருக்கிறேன். என் வாழ்க்கையில் என் மனைவி, பிசாசு, எல்லாவற்றையும் கெடுத்தாள்...''

''எப்படி?''

''என்னவோ, அவள் கெடுத்தாள்...''

''நீங்கள் இறந்த பிறகு புல் உங்களை மூடுமா?'' என்று ஒலேனின் அவருடைய வார்த்தைகளைத் திருப்பிச் சொன்னான்.

யெரோஷ்காவினால் தன்னுடைய சிந்தனையைத் தெளிவாகக் கூற விரும்பவில்லை என்று தோன்றியது. அவர் சிறிது நேரம் மௌனமாக உட்கார்ந்திருந்தார்.

''என் புதைகுழியின் மீது புல் வளராது என்று நீ நினைக்கிறாயா? குடிக்கலாமா!'' என்று அவர் சிரித்தபடியே டம்ளரில் ஒயினை ஊற்றிக்கொண்டு கத்தினார்.

## 15

''நாம் தொடர்வோம். எதைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம்?'' என்று அவர் தன்னுடைய சிந்த

னைகளை ஒழுங்குபடுத்த முயன்றுகொண்டு கேட்டார். ''நான் எப்படிப்பட்ட மனிதன் என்பதைக் கூறினேன். நான் ஒரு வேட்டைக்காரன். இங்கே இருக்கின்ற அத்தனை நபர்களிலும் என்னுடன் ஒப்பிடுவதற்கு ஒரு நபர் கிடையாது. மிருகங்களில் ஒவ்வொரு ரகத்தையும் பறவைகளில் ஒவ்வொரு ரகத்தையும் நான் கண்டுபிடித்து உனக்குக் காட்ட முடியும். எல்லாவற்றைப் பற்றியும் எனக்குத் தெரியும். என்னிடம் நாய்கள், இரண்டு துப்பாக்கிகள், வலைகள், பறவை வேட்டைக் கருவி, பருந்து இருக்கின்றன. என்னிடம் கடவுள் செயலாக எல்லாமே இருக்கின்றன. நீ வெறும் வாயாடியாக இல்லாமல் உண்மையான வேட்டைக்காரனாக இருந்தால் நான் உன்னிடம் எல்லாவற்றையும் காட்டுவேன். காட்டு மிருகத்தின் தடத்தை என்னால் கண்டுபிடிக்க முடியும். அந்தக் கலை எனக்கு நன்றாகத் தெரியும். அது எப்பொழுது தன்னுடைய பொந்துக்கு வரும், தண்ணீர் குடிக்க அல்லது சேற்றில் புரளுவதற்கு எங்கே வரும் என்பது எனக்குத் தெரியும். நான் மரத்தில் ஓர் இருக்கை அமைத்து இரவு முழுவதும் அதன் மீது உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருப்பேன். எதற்காக நான் வீட்டில் உட்கார்ந்திருக்க வேண்டும்? வீட்டில் நீ பாவம் செய்கிறாய், குடிக்கிறாய். பெண்கள் எப்பொழுதும் அங்குமிங்கும் போய்க் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் அதிகமாகப் பேசுகிறார்கள். குழந்தைகள் கூச்சல் போட்டவாறிருக்கிறார்கள். கரிப்புகை மூச்சை அடைக்கிறது. அங்கே உட்கார்ந்து கண்விழித்துப் பார்த்துக் கொண்டிருப்பது முற்றிலும் தனியானது. சூரியன் மறையும் போது வீட்டைவிட்டுப் புறப்பட்டு ஓர் இடத்தைத் தேர்ந்தெடுக்கிறாய். நாணலை மிதித்துத் தரையில் மடக்குகிறாய். அங்கே உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருக்கிறாய். காட்டில் நடைபெறுகின்ற ஒவ்வொன்றும் உனக்குத் தெரியும். நீ வானத்தைப் பார்க்கிறாய். நட்சத்திரங்கள் மேலே மிதந்து செல்கின்றன. உன் கண்கள் அவற்றைப் பின்தொடர்கின்றன, இரவு நேரம் என்ன என்பதை முடிவு செய்கிறாய். சுற்றுமுற்றும் பார்க்கிறாய். காட்டில் சலசலப்புக் கேட்கிறது. நீ காதுகளைக் கூர்மையாக்கும் பொழுது பொத்தென்று விழுகிற சத்தம் கேட்கிறது. அது காட்டுப் பன்றி சேற்றில் விழுந்து புரள்

கின்ற சத்தம். இளம் பருந்துகள் அல்லது கிராமச் சேவல்கள் அல்லது வாத்துகள் கூவி எழுப்புகின்ற சத்தம் கேட்கும். வாத்துகள் பேசுகின்ற சத்தம் கேட்டால் அது நள்ளிரவு என்று தெரியும். எனக்கு இந்த விஷயங்கள் எல்லாமே தெரியும். தொலைவில் எங்கோ ஒரு இடத்தில் ஒரு துப்பாக்கி வேட்டுச் சத்தம் கேட்கிறது. அது என் சிந்தனையைத் தூண்டுகிறது. துப்பாக்கியால் சுட்டது யார்? என்னைப் போன்ற ஒரு கஸாக்கா? அவன் காட்டு மிருகத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தானா? அவன் அந்த மிருகத்தைக் கொன்றுவிட்டானா அல்லது சும்மா காயப்படுத்தி விட்டானா? அந்த மிருகம் தப்பிப்போய் நாணற் புதருக்கு ஓடி இரத்தச் சேற்றில் புரளவேண்டுமா, எதற்காக இந்த அமளி? எனக்கு இது பிடிக்காது, ஓ! எனக்கு இது பிடிக்காது! ஒரு மிருகத்தை எதற்காக முடமாக்க வேண்டும்? முட்டாள்! முட்டாள்!' அல்லது 'ஒரு அப்ரேக் ஒரு முட்டாள் கஸாக்கைச் சுட்டிருப்பானா?' என்று என்னையே கேட்டுக்கொள்கிறேன். இச்சிந்தனைகள் எல்லாம் என் மண்டையைக் குடைகின்றன. ஒருநாள் நான் ஆற்றங்கரையில் உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருந்தபொழுது ஒரு தொட்டில் மிதந்து வந்ததைப் பார்த்தேன். அதன் விளிம்பு மட்டும் சிறிது உடைந்திருந்தது. மற்றபடி அது நன்றாகவே இருந்தது. இது யாருடைய தொட்டில்? பிசாசுப் படைவீரர்கள் ஒரு செச்சென் கிராமத்துக்குப் போய் அங்கிருந்த பெண்களைத் தூக்கிக் கொண்டு போயிருக்க வேண்டும். ஏதோ ஒரு பிசாசு அந்தக் குழந்தையைக் கொன்றிருக்கிறது, காலைப் பிடித்துத்தூக்கி மூலையில் எறிந்திருக்க வேண்டும். அவர்கள் அப்படிச் செய்யவில்லை என்றால்? ஐயோ, ஆண்களுக்கு ஆன்மாக்கள் இல்லை! இப்படிச் சிந்திக்கும்பொழுது நான் மிகவும் வருத்தப்பட்டேன். 'தொட்டிலை வீசிவிட்டார்கள், தாயாரைத் தூக்கிக்கொண்டு போய்விட்டார்கள், வீட்டை எரித்துவிட்டார்கள். ஆனால் ஜிகித்திடம் துப்பாக்கி இருக்கிறது. அவன் கொள்ளையடிப்பதற்கு நம்முடைய பகுதிக்கு வருவான்' என்று நான் எனக்குள் பேசிக் கொள்வேன். நான் உட்கார்ந்து சிந்திக்கிறேன். நான் உற்றுக் கேட்டுக் கொண்டிருக்கும்பொழுது ஒரு காட்டுப் பன்றிக் கூட்டம் புதருக்குள் ஓடிவருகிறது. எனக்குள்

ஏதோ ஒன்று படபடவென்று அடிக்கிறது. 'குழந்தைகளே, வா'ங்கள்! என்னை மோப்பம் பிடித்துவிட்டீர்களாக்கும்' என்று மனத்தில் சொல்கிறேன். நான் அசையாமல் உட்கார்ந்திருக்கிறேன்; ஆனால் என்னுடைய இருதயம் டப், டப், டப் என்று துடிக்கிறது. என் உடம்பு ஆடுகிறது. இந்த வசந்த காலத்தில் ஒரு பெரிய காட்டுப்பன்றிக் கூட்டம் ஓடிவந்தது. 'கடவுளே காப்பாற்றுங்கள்...' என்று சொல்லி, நான் சுடுவதற்குத் தயாரிப்புச் செய்து கொண்டிருந்தேன். அந்த நேரத்தில் கிழட்டுத் தாய்ப் பன்றி மோப்பம் பிடித்தது. 'குட்டிகளே! கவனம். அங்கே ஆபத்து இருக்கிறது. ஒரு மனிதன் உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருக்கிறான்' என்று குட்டிகளிடம் பேசியது. காட்டுப்பன்றிக் கூட்டம் முழுவதும் புதர்களுக்குள் ஓடி மறைந்தது. எனக்கு மிகவும் எரிச்சலாக இருந்தது!'' என்றார்.

''ஒரு மனிதன் பார்த்துக் கொண்டிருக்கிறான் என்று தாய்ப் பன்றி குட்டிகளிடம் எப்படிக் கூறியது?'' என்று ஒலேனின் கேட்டான்.

''எப்படிக் கூறியிருக்கும் என்று நினைக்கிறாய்? காட்டு மிருகம் ஒரு முட்டாள் என்று நீ நினைக்கிறாயா? இல்லை. அது பன்றியாக இருந்தால் கூட ஒரு மனிதனைக் காட்டிலும் அறிவுடையது. அதற்கு எல்லாம் தெரியும். ஒரு உதாரணம் சொல்கிறேன். மனிதன் போகிற வழியில் தடம் இருக்கிறது, ஆனால் அவன் அதை கவனிப்பதில்லை. காட்டுப்பன்றியோ மனிதனுடைய தடத்தைப் பார்த்தவுடன் மோப்பம் பிடித்துவிட்டு ஓடிப்போகிறது. அப்படியானால் அதற்கு அறிவு இருக்கிறது என்றுதானே அர்த்தம். நீ அதை மோப்பம் பிடிக்கவில்லை என்பது அதற்குத் தெரியும், ஆனால் அது உன்னை மோப்பம் பிடித்து விட்டது. நீ அதைக் கொல்வதற்கு விரும்புகிறாய், ஆனால் அது காட்டில் உயிரோடு சுற்றித் திரிய விரும்புகிறது. உனக்கென்று சட்டங்கள் இருப்பதைப் போல மிருகத்துக்கும் அதன் சட்டங்கள் இருக்கின்றன. அது ஒரு பன்றிதான். ஆனால் உனக்குச் சிறிதும் தாழ்ந்ததல்ல. கடவுள் படைப்புக்களில் அதுவும் ஒன்று. ஐயோ! மனிதன் முட்டாள்! முட்டாள்! மனிதன் முட்டாள்!'' என்று அந்த முதிய வேட்டைக்காரர் திரும்பத் திரும்பச்

சொல்லிவிட்டு தலையைக் குனிந்துகொண்டு சிந்தனை யில் மூழ்கினார்.

ஒலேனினும் சிந்தனை செய்தான். அவன் படிகளி லிருந்து கீழே இறங்கினான்; கைகளைப் பின்னால் கட் டிக்கொண்டு அமைதியாக சுற்றுவட்டகையில் முன்னும் பின்னும் நடக்க ஆரம்பித்தான்.

யெரோஷ்கா திடீரென்று சிந்தனையிலிருந்து விடு பட்டுத் தலையை உயர்த்தினார். துடித்துக் கொண் டிருந்த மெழுகுவர்த்தியின் சுடரினால் கவர்ச்சிக்கப்பட்டு அதில் விழுந்து கொண்டிருந்த விட்டிற் பூச்சிகளை கவன மாகப் பார்க்கத் தொடங்கினார்.

''முட்டாள்! முட்டாள்!'' என்று அவர் முணுமுணுத் தார். ''எங்கே பறந்து வருகிறாய்? முட்டாள்! முட்டாள்!'' அவர் எழுந்து நின்று கொண்டு தன்னுடைய மொத்தை யான விரல்களால் விட்டிற் பூச்சிகளை விரட்ட ஆரம் பித்தார். ''நீ எரிந்துவிடுவாய், முட்டாளே. இங்கே, இந் தப் பக்கத்தில் பற, இங்கே இடம் நிறைய இருக்கிறது'' என்று அவர் அன்புமிக்க குரலில் கூறினார். அவர் தன் னுடைய மொத்தையான விரல்களைப் பயன்படுத்தி ஒரு விட்டிற் பூச்சியை அதன் சிறகுகளைப் பிடித்துத் தூக்க வும் அதைத் தப்பிப் போகுமாறு செய்யவும் முயன்றார். ''நீ அழியப் போகிறாய். உனக்காக நான் வருந்து கிறேன்.''

அவர் வம்பளந்துகொண்டும் பாட்டிலிலிருந்து ஊற் றிக் குடித்துக்கொண்டும் அங்கே நெடுநேரம் உட்கார்ந் திருந்தார். ஒலேனின் சுற்றுவட்டகையில் முன்னும் பின் னும் நடந்து கொண்டிருந்தான். வேலியின் மறுபக்கத் தில் திடீரென்று கேட்ட சலசலப்புச் சத்தம் அவன் கவ னத்தை ஈர்த்தது. அவன் தன்னையறியாமல் மூச்சை அடக்கிக் கொண்டான். ஒரு பெண்ணின் சிரிப்பொலி, ஆணின் குரல், முத்தமிடுகின்ற ஓசை அவனுக்குக் கேட் டது. அவன் புல்தரையில் வேண்டுமென்றே கால்களைத் தேய்த்துக்கொண்டு சுற்றுவட்டகையின் மறு பக்கத்துக் குச் சென்றான். சிறிது நேரத்தில் வெளிக்கதவைத் திறக் கின்ற சத்தம் கேட்டது. சிவப்பு நிறத்தில் செர்கெஸ்கா வும் வெள்ளை நிற ஆட்டு மென்மயிர்த் தொப்பியும் அணிந்த ஒரு கஸாக்கு வேலியோரமாகச் சென்றான்,

தலையில் வெள்ளை நிறத் துணி அணிந்த உயரமான பெண்ணும் ஒலேனினைக் கடந்து சென்றாள். மார்யானா வேண்டுமென்றே நிதானமாக நடந்து சென்றது 'உனக்கும் எனக்கும் எத்தகைய சம்பந்தமும் கிடையாது' என்று சொல்வதைப் போலத் தோன்றியது. அவன் கண்கள் அந்த கஸாக்குக் குடிசையின் படிகள் வரை அவளைப் பின்தொடர்ந்தன. அவள் தலைத் துணியைக் கழற்றுவதையும் பெஞ்சின் மீது உட்காருவதையும் அவன் சன்னல் வழியாகப் பார்த்தான். அவனிடம் திடீரென்று வேதனை மிக்க தனிமையுணர்ச்சியும் தெளிவில்லாத ஆசைகளும் நம்பிக்கைகளும் யாரோ ஒரு நபரிடம் ஓரளவுக்குப் பொறாமையும் ஏற்பட்டன.

குடிசைகளில் கடைசியாக எரிந்து கொண்டிருந்த விளக்குகளும் அணைக்கப்பட்டு விட்டன. கிராமத்தில் கடைசி ஓசைகளும் மறைந்துவிட்டன. வேலிகள், கொட்டி லில் படுத்திருந்த கால்நடைகளின் மங்கலான உருவங் கள், வீடுகளின் கூரைகள், அழகான போப்லார் மரங் கள்—எல்லாமே கடும் உழைப்புக்குப் பிறகு ஆரோக்கிய மான, மென்மையான உறக்கத்தில் ஆழ்ந்து விட்டதாகத் தோன்றியது. வெகு தூரத்திலிருந்த சதுப்புகளிலிருந்து தவளைகள் தொடர்ச்சியாக எழுப்பிய ஓசை கவனமான காதில் கேட்டது. கிழக்குத் திசையில் நட்சத்திரங்களின் எண்ணிக்கை முன்னைக் காட்டிலும் குறைந்திருந்தது; அதிகரித்துக் கொண்டிருந்த வெளிச்சத்தில் அவை உருகி விட்டதைப் போலத் தோன்றியது. ஆனால் தலைக்கு மேலே அவை முன்னெப்போதுமிருந்ததைக் காட்டிலும் அதிகப் பிரகாசமாகத் தோன்றின, முன்னெப்போதுமிருந் ததைக் காட்டிலும் ஏராளமாகக் கொட்டிக் கிடந்தன. முதியவரான யெரோஷ்கா கையின் மேல் தலையைச் சாய்த்தபடியே உறங்கத் தொடங்கியிருந்தார். அருகி லிருந்த ஏதோ ஒரு கொல்லையில் ஒரு சேவல் கூவியது. ஆனால் ஒலேனின் தன்னுடைய சிந்தனையில் மூழ்கிய வனாக இன்னும் மேலும் கீழும், முன்னும் பின்னும் நடந்து கொண்டிருந்தான். பலர் சேர்ந்து பாடுகின்ற குரல்கள் அவன் காதுகளுக்குக் கேட்டன. அவன் வேலியின் அருகில் சென்று உற்றுக்கேட்டான். இளம் கஸாக்குகள் ஒரு வேடிக் கையான பாடலைப் பாடிக் கொண்டிருந்தார்கள்; அந்

தக் கூட்டிசையில் ஒரு இளம் குரல் தனித்து ஒலித்தது.

''பாடிக் கொண்டிருப்பது யார் என்று உனக்குத் தெரிகிறதா?'' என்று அந்தக் கிழவர் தூக்கத்திலிருந்து விழித்துக்கொண்டு கேட்டார். ''அது ஜிகித் லுக்காஷ்காவின் குரல். அவன் ஒரு செச்செனைக் கொன்று விட்டான். அதனால் அவன் கும்மாளம் போடுகிறான். இது கொண்டாடப்படவேண்டிய விஷயமா? முட்டாள், முட்டாள்!''

''ஆனால் நீங்கள் மக்களைக் கொன்றிருக்கிறீர்களே?'' என்று ஒலேனின் கூறினான்.

அந்தக் கிழவர் திடீரென்று இரண்டு முழங்கைகளையும் ஊன்றி ஒலேனினுடைய முகத்துக்கு அருகில் தன்னுடைய முகத்தைக் கொண்டுவந்தார்.

''நீ ஒரு பிசாசு!'' என்று அவர் கத்தினார். ''நீ என்ன சொல்கிறாய்? அதைப் பற்றிப் பேசக் கூடாது. அது அருவருப்பானது, மனிதனைக் கொல்வது அருவருப்பானது! போய் வருகிறேன், அப்பனே! நன்றாகக் குடித்துவிட்டேன். எனக்கு முழுத்திருப்தி'' என்று சொல்லிக் கொண்டு அவர் எழுந்தார். ''நாளைக்கு வேட்டையாடப் போகிறேன். நீ வருகிறாயா?''

''நிச்சயமாக வருகிறேன்.''

''அதிகாலையில் எழுந்துவிடு. ஏனென்றால் நீ அதிகமாகத் தூங்கினால் உனக்கு தண்டனை கொடுப்பேன்.''

''அதைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். நீங்கள் எழுந்திருப்பதற்கு முன்பே நான் எழுந்துவிடுவேன்'' என்று ஒலேனின் பதிலளித்தான்.

அந்தக் கிழவர் புறப்பட்டுச் சென்றார். பாட்டு முடிந்து விட்டது. காலடிகளின் ஓசையும் வேடிக்கைப் பேச்சும் கேட்டன. சிறிது நேரத்துக்குப் பிறகு அவர்கள் பாடுவது மறுபடியும் கேட்டது. ஆனால் அது வெகுதூரத்திலிருந்து வந்தது. யெரோஷ்காவின் கனத்த குரல் மற்ற குரல்களுடன் சேர்ந்து ஒலித்தது.

''எப்படிப்பட்ட மனிதர்கள்! எத்தகைய வாழ்க்கை!'' என்று நினைத்து ஒலேனின் பெருமூச்சு விட்டான். அவன் தன்னுடைய குடிசைக்குத் தனியாகத் திரும்பிச் சென்றான்.

# 16

யெரோஷ்கா மாமா படையைச் சேர்ந்தவர் அல்ல; அவர் தனியாக வசித்து வந்தார். அவர் மனைவி இருபது ஆண்டுகளுக்கு முன்பு அவரை விட்டுப் பிரிந்து போய்விட்டாள், ருஷ்ய சார்ஜென்டைத் திருமணம் செய்துகொண்டாள். அவருக்குக் குழந்தைகள் இல்லை. பழைய காலத்தில் கிராமத்தில் நானே முதல் வீரன் என்று அவர் கூறியது வெறும் தற்புகழ்ச்சியல்ல. பழங்காலத்தைச் சேர்ந்த வீரர் என்று அவர் எல்லா கஸாக்குகள் மத்தியிலும் பிரபலமடைந்திருக்கிறார். ஒன்றுக்கு மேற்பட்ட செச்சென்களையும் ஒன்றுக்கு மேற்பட்ட ருஷ்யர்களையும் அவர் கொன்றிருக்கிறார். அவர் மலைகளுக்குச் சென்று கொள்ளையடிப்பார்; அவர் ருஷ்யர்களிடமிருந்தும் திருடியிருக்கிறார். அவர் இரண்டு முறை சிறையில் வைக்கப்பட்டிருந்தார். அவருடைய வாழ்க்கையில் பெரும் பகுதி காடுகளில், வேட்டையில் கழிந்திருந்தது. அப்படிப்பட்ட சமயங்களில் அவர் பெரும்பாலும் ஒரு ரொட்டித் துண்டைச் சாப்பிட்டும் தண்ணீரைத் தவிர வேறு எதையும் அருந்தாமலும் நாட் கணக்கில் இருந்திருக்கிறார். ஆனால் அவர் கிராமத்துக்குத் திரும்பியதும் காலையிலிருந்து இரவு வரை குடித்து அதைச் சரி செய்து கொள்வார்.

அவர் ஒலேனினுடைய குடிசையிலிருந்து தனது வீட்டுக்குத் திரும்பி சுமார் இரண்டு மணி நேரம் உறங்கினார், பொழுது புலர்வதற்குச் சிறிது நேரத்துக்கு முன்பு விழித்துக்கொண்டு, படுக்கையில் படுத்தவாறு முந்திய மாலைப் பொழுதில் தான் பழகிய நபரைப் பற்றி ஒரு முடிவுக்கு வருவதற்கு முயற்சி செய்து கொண்டிருந்தார். ஒலேனினுடைய எளிமை அவருக்கு மிகவும் பிடித்திருந்தது; ஆனால் அவன் ஒயினை தாராளமாக ஊற்றிக் கொடுத்ததையே அவர் எளிமை என்று கருதினார். ஒலேனினை நினைத்தபொழுது அவருக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. ருஷ்யர்கள் எல்லோருமே எளிமையாகவும் செல்வர்களாகவும் இருப்பது ஏன், அவர்கள் மிகவும் படித்தவர்களாக இருந்தாலும் ஒன்றுமே தெரியாமலிருப்பது ஏன் என்று அவர் வியந்தார். அவர் இந்தக் கேள்விகள் எல்லாவற்றையும் பற்றிச் சிந்தித்தார்; ஒலேனினால் அவருக்கு ஏதேனும்

பயன் ஏற்படுமா, எதைக் கேட்டுப் பெறலாம் என்று யோசித்தார்.

யெரோஷ்கா மாமாவின் குடிசை போதுமான அளவுக்குப் பெரியது; பழமையானதும் அல்ல; ஆனால் ஒரு பெண்ணின் கைத்திறன் அங்கே இல்லை என்பதை மிகவும் எளிதில் பார்க்க முடிந்தது. கஸாக்குகள் வழக்கமாக வீட்டைச் சுத்தமாக வைத்துக்கொள்வதில் மிகவும் அக்கறையுள்ளவர்கள்; அவருடைய வீடு அதற்கு மாறாகக் குப்பை நிறைந்தும் அதிகமான அளவுக்கு ஒழுங்கில்லாமலும் இருந்தது. மேசையின் மீது அவருடைய இரத்தக் கறை படிந்த கோட்டு, பணியாரத்தில் ஒரு பாதி கிடந்தன; அவற்றுக்குப் பக்கத்தில் பருந்திற்கு இரை கொடுக்க சிறகுகள் பறிக்கப்பட்ட காக்கை கிடந்தது. பெஞ்சுகளின் மீது அவருடைய முரட்டுத் தோல் காலணிகள், ஒரு துப்பாக்கி, ஒரு குத்துவாள், ஒரு பை, ஈரமாக இருந்த உடைகள், கந்தைகள் சிதறிக் கிடந்தன. மூலையில் வைக்கப்பட்டிருந்த தொட்டி நிறைய அழுக்கான, துர்நாற்ற மடித்த தண்ணீர் இருந்தது. ஒரு வேட்டை துப்பாக்கியும் பறவை வேட்டைக் கருவியும் தொட்டியின் அருகில் இருந்தன. அழுக்குப் பிடித்த தரையில் ஒரு வலை, சில செத்த காட்டுக் கோழிகள் கிடந்தன. மேசைக்காலுடன் காலைச் சேர்த்துக் கட்டப்பட்டிருந்த கோழி சுற்றி வந்து கொத்திக் கொண்டிருந்தது. அணைந்து போன அடுப்பில் வைக்கப்பட்டிருந்த உடைந்த பானை நிறைய பாலைப் போன்ற ஏதோ ஒருவகை திரவம் இருந்தது. அடுப்பின் மீது ஒரு வல்லூறு கிறீச்சிட்டது, அது தன்னைக் கட்டியிருந்த கயிற்றைக் கத்தரிப்பதற்கு முயன்று கொண்டிருந்தது; ஓரத்தில் இறகு உதிர்ந்து போன பருந்து கோழியை ஓரக்கண்ணால் பார்த்தபடியே அமைதியாக உடகார்ந்திருந்தது; அது அவ்வப்பொழுது தலையை ஒரு பக்கத்திலும் பிறகு மறு பக்கத்திலும் சாய்த்துக் கொண்டிருந்தது.

ஒரு குறுகிய கட்டிலின் மேல் யெரோஷ்கா மாமா சட்டை மட்டும் அணிந்து முதுகுப் பக்கத்தில் படுத்திருந்தார். அவர் அடுப்பின் மீது கால்களை நீட்டியிருந்தார். அந்தக் கட்டில் சுவருக்கும் அடுப்புக்கும் இடையில் போடப்பட்டிருந்தது. கையுறை அணியாமல் பருந்தைத்

தூக்கிக் கொண்டு வந்த பொழுது அது அவருடைய கைகளைப் பிறாண்டியதில் காயங்கள் ஏற்பட்டிருந்தன. அவர் தன்னுடைய மொத்தையான விரல்களால் காயங்களின் மீதிருந்த பொறுக்குகளைச் சொரிந்து கொண்டிருந்தார். அந்த அறை முழுவதும், குறிப்பாக அந்தக் கிழவர் படுத்திருந்த மூலையில் அந்தக் கிழவருடன் எப்பொழுதுமே இருக்கின்ற காட்டமான, ஆனால் வெறுக்கக்கூடியதாக இல்லாத பல்விதமான நாற்றங்களின் கலவை நிறைந்திருந்தது.

''நீங்கள் வீட்டில் இருக்கிறீர்களா, மாமா?'' என்று சன்னல் வழியாக வந்த தெளிவான குரல் அவர் காதில் விழுந்தது. அது தன்னுடைய அடுத்த வீட்டுக்காரனான லுக்காஷ்காவின் குரல் என்பதை அவர் உடனே தெரிந்து கொண்டார்.

''ஆமாம், இங்கேதான் இருக்கிறேன். உள்ளே வா!'' என்றார் அந்தக் கிழவர். ''அடுத்த வீட்டுக்கார மார்க்கா, லுக்கா மார்க்கா! உன் மாமாவைப் பார்க்க வந்திருக்கிறாயா? எல்லைக் காவல் நிலையத்துக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறாயா?''

பருந்து இந்தக் குரல்களைக் கேட்டுக் கலவரமடைந்தது. அது தன்னுடைய இறக்கைகளை ஆட்டிக்கொண்டு தன்னைக் கட்டியிருந்த கயிற்றை இழுத்தது.

அந்தக் கிழவருக்கு லுக்காஷ்கா மீது அதிகமான பிரியம் உண்டு. கஸாக்குகளின் இளைய தலைமுறையினரை அவர் பொதுவில் இகழ்ச்சியாகக் கருதினாலும், அநேகமாக விதிவிலக்களித்த ஒரே நபர் லுக்காஷ்கா தான். மேலும் அவருடைய அடுத்த வீட்டுக்காரர்களான லுக்காஷ்காவும் அவனுடைய தாயாரும் தங்கள் சேமிப்பிலிருந்து அவரிடம் இல்லாத ஒயின், தயிர் மற்றும் இதர பொருட்களை அடிக்கடி கொடுத்துவந்தார்கள். வாழ்க்கை முழுவதும் சொந்த விருப்பங்களையே பின்பற்றி வந்திருக்கின்ற யெரோஷ்கா மாமா தன்னுடைய உணர்ச்சிகளை எப்பொழுதும் மிகவும் காரியவாதமான முறையில் விளக்குவார். ''வேண்டாம் என்று ஏன் சொல்ல வேண்டும்?'' என்று அவர் தனக்குள்ளாகவே விவாதிப்பார். ''அவர்களிடம் வசதி இருக்கிறது. நான் அவர்களுக்குப் புதிய பன்றி அல்லது கோழி இறைச்சியைத் தருவேன்.

அவர்கள் தங்களுடைய மாமாவை மறக்கவில்லை: எப்பொழுதாவது ஒரு அப்பம் அல்லது பணியாரம் கொடுக்கட்டுமே.''

''மார்க்கா, நலமா? உன்னைப் பார்ப்பதில் மகிழ்ச்சி அடைகிறேன்'' என்று அந்தக் கிழவர் குதூகலத்துடன் பேசினார். அவர் கட்டிலை விட்டு வெறுங்காலுடன் வேகமாகக் கீழே இறங்கித் துள்ளிக் குதித்து மரக்கட்டைகள் ஓசை எழுப்புகின்ற தரையில் ஓரிரு காலடிகள் வைத்தார். அவர் தன்னுடைய கால்களைப் பார்த்தார். தன்னுடைய வளைந்த கால்களில் வேடிக்கையான ஏதோ ஒன்றை திடீரென்று பார்த்ததைப் போல பலமாகச் சிரித்தார். வெறும் பாதங்களால் தரையை ஓங்கி மிதித்தார், மறுபடியும் மிதித்தார். பிறகு நடனமாடுவதைப் போல நடந்தார். ''சரியாக இருக்கிறதா?'' என்று தன்னுடைய இடுங்கிய கண்களில் சிரிப்புடன் பேசினார்.

லுக்காஷ்கா லேசாகச் சிரித்தான்.

''நீ எல்லைக் காவல் நிலையத்துக்குப் புறப்பட்டுவிட்டாயா?''

''நான் உங்களிடம் சொன்னபடி சிவப்பு ஒயினைக் கொண்டு வந்திருக்கிறேன், மாமா.''

''கிறிஸ்து உன்னைக் காப்பாற்றுவார்!'' என்றார் அந்தக் கிழவர். அவர் தன்னுடைய கால் சராயையும் பெஷ்மெத்தையும் தரையிலிருந்து எடுத்து அணிந்து கொண்டார். இடைவாரை இழுத்து இறுக்கமாகக் கட்டினார். ஒரு குடுவையிலிருந்து சிறிதளவு தண்ணீரைத் தன்னுடைய கைகளின் மேல் ஊற்றினார். பிறகு கை ஈரத்தை பழைய கால் சராயில் துடைத்தார், ஒரு உடைந்து போன சீப்பை எடுத்து அவசரமாக தாடியைச் சீவினார், பிறகு லுக்காஷ்கா முன்னே நின்றார்.

''நான் தயாராகிவிட்டேன்!'' என்று அவர் சொன்னார்.

லுக்காஷ்கா ஒரு கோப்பையை எடுத்துக் கழுவி அதில் ஒயினை ஊற்றி அந்தக் கிழவரிடம் எடுத்துச் சென்றான்.

''உன்னுடைய நலத்துக்காக!'' என்று யெரோஷ்கா மாமா வீறார்ந்த பெருமிதத்துடன் ஒயினை ஏற்றுக் கொண்டு கூறினார். ''உன்னுடைய விருப்பங்கள் எல்லாமே நிறைவேறட்டும்! நீ ஒரு வீரனாக ஆசீர்வதிக்



கிறேன். நீ சிலுவைப் பதக்கம் பெற ஆசீர்வதிக்கிறேன்!''

லுக்காஷ்காவும் அதே முறையைப் பின்பற்றிக் குடித்தான். பிறகு ஒயினை மேசை மீது வைத்தான். கிழவர் எழுந்துசென்று கருவாட்டை எடுத்துக் கொண்டு போய் நிலைப்படியில் வைத்து அதை நயப்படுத்துவதற்காக ஒரு கம்பினால் நசுக்கினார். பிறகு அதைத் தன்னுடைய முரட்டுக் கைகளில் எடுத்து தன்னிடமிருந்த ஒரேயொரு

நீல நிறத் தட்டில் அதை வைத்து மேசையின் மீது கொண்டுவந்து வைத்தார்.

''என்னிடம் எல்லாமே இருக்கிறது, சாப்பிடுவதற்கும் ஏதாவது எப்பொழுதும் என்னிடம் இருக்கிறது, கடவுளுக்கு நன்றி!'' என்று அவர் ஆணவமாகக் கூறினார். ''மோசெவ் எப்படி இருக்கிறான்?'' என்று கேட்டுப் பேச்சை மாற்றினார்.

அந்த சார்ஜென்ட் தன்னிடமிருந்து துப்பாக்கியை எடுத்துக்கொண்டதை லுக்காஷ்கா அவரிடம் தெரிவித்தான். அவருடைய அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்வதற்கு அவன் விரும்பியது வெளிப்படையாகத் தெரிந்தது.

''துப்பாக்கி விவகாரத்தைப் பெரிசு படுத்தாதே; நீ துப்பாக்கியைக் கைவிடாவிட்டால் உனக்குப் பரிசு கிடைக்காது'' என்றார் கிழவர்.

''என்ன பெரிசாகக் கிடைக்கப் போகிறது, மாமா? 'சின்னப் பையனு'க்கு என்ன பரிசு கொடுப்பது என்றுதான் அவர்கள் சொல்வார்கள். ஆனால் அது சிறந்த துப்பாக்கி, கிரிமியாவில் செய்யப்பட்டது. எண்பது ரூபிள் விலை இருக்கும்.''

''விட்டுத் தள்ளு! இப்படித்தான் முன்பு எனக்கும் ஒரு லெப்டினென்டுக்கும் சச்சரவு ஏற்பட்டது. அவன் என்னுடைய குதிரையைக் கேட்டான். 'உன்னுடைய குதிரையை எனக்குக் கொடு. உனக்குத் துணை லெப்டினென்ட் பதவி தருகிறேன்' என்றான் அவன். நான் குதிரையைக் கொடுக்கவில்லை; எனக்கு ஒன்றும் கிடைக்கவில்லை.''

''பாருங்க, மாமா! நான் ஒரு குதிரை வாங்க வேண்டும். ஆற்றின் அக்கரையில் ஐம்பது வெள்ளி ரூபிள்களுக்குக் குறைவாக ஒரு குதிரை வாங்க முடியாது என்று சொல்கிறார்கள். அம்மா இன்னும் ஒயினை விற்கவில்லை.''

''ஆ, இதைப் பற்றி கவலைப்பட்டுக் கொண்டிருக்காதே!'' என்று அந்தக் கிழவர் கூறினார். ''யெரோஷ்கா மாமா உன்னுடைய வயதில் குதிரைக் கூட்டங்களையே நொகாய்க்காரர்களிடமிருந்து திருடி தேரெக்கைக் கடந்து ஓட்டிக்கொண்டு வந்தான். நான் எப்பொழுதும் மூன்று பின்ட் வோட்காவுக்கு அல்லது காகேஷிய மென்மயிர் கோட்டுக்கு ஒரு சிறந்த குதிரையை விற்றுவிடுவதுண்டு.''

''ஏன் அவ்வளவு மலிவாக விற்பனை செய்தீர்கள்?''

''முட்டாள், முட்டாள், மார்க்கா!'' என்று அந்தக் கிழவர் இகழ்ச்சியாகக் கூறினார். ''வேறு என்ன செய்ய முடியும்? கருமித்தனமாக இருக்கக் கூடாது என்பதற் காகவே திருடினோம். குதிரைகளைத் திருடுவது எப்படி என்பது உன் தலைமுறையைச் சேர்ந்த பசங்களுக்குத் தெரியாது என்று நினைக்கிறேன். ஏன் பேசாமலிருக் கிறாய்?''

''மாமா, நான் என்ன சொல்ல முடியும்?'' என்றான் லுக்காஷ்கா. ''உங்களைப் போன்ற மனிதர்களல்ல நாங் கள் என்று தோன்றுகிறது.''

''முட்டாள், முட்டாள், மார்க்கா! உங்களைப் போன்ற மனிதர்கள் அல்ல'' என்று அந்த இளம் கஸாக்கு மாதிரி பேசிக் கேலி செய்தார் அந்தக் கிழவர். ''இல்லை. உன்னுடைய வயதில் நான் இக்காலத்துக் கஸாக்கு மாதிரி இருக்கவில்லை.''

''அது எப்படி?''

அந்தக் கிழவர் ஏளனமாகத் தலையை ஆட்டினார்.

''யெரோஷ்கா மாமா எளிமையானவன். அவன் கருமி யல்ல. செச்னியா முழுவதும் என்னுடைய நண்பர்கள் ஏராளமாக இருந்தார்கள். என்னுடைய செச்சென் நண் பர்களில் யாராவது என்னைப் பார்க்க வந்தால் நாங்கள் மயக்கம் வருகின்ற வரை குடிப்போம். நான் அவரை மகிழ்ச்சிகரமாக வைத்திருப்பேன். படுத்துத் தூங்குவதற்கு என்னுடைய இடத்தை அளிப்பேன். அவருடைய வீட்டுக்குச் செல்கின்றபொழுது அவருக்கு எப்பொழுதும் பரிசு கொடுப்பேன். இது மனிதர்கள் நடந்து கொண்ட முறை; ஆனால் இப்பொழுது எல்லாம் மாறிவிட்டது. இளைஞர்கள் வெறும் விளையாட்டு விதைகளைக் கொ றித்து ஓடுகளைத் துப்புவது'' என்று அந்தக் கிழவர் இன் றுள்ள கஸாக்குகள் முலாம்பழ விதைகளைக் கொறித்து ஓடுகளைத் துப்புகிற பாவனையை நடித்துக் காட்டி இகழ்ச்சியாக முடித்தார்.

''ஆம். அது எனக்குத் தெரியும். இப்பொழுது அப் படித்தான் இருக்கிறது!'' என்றான் லுக்காஷ்கா.

''நீ வீரன் என்று பிரபலமடைய விரும்புகிறாய். அப் படியானால் ஒரு ஜிகித்தாக இரு, விவசாயியாக இருக்

காதே. விவசாயி கூட குதிரைகளைப் பணம் கொடுத்து வாங்குகிறான்...''

அவர்கள் இருவரும் மௌனமாக இருந்தார்கள்.

''ஆனால் மிகவும் சலிப்பாக இருக்கிறது, மாமா. கிராமத்தில் அல்லது எல்லைக் காவல் நிலையத்தில் அவ்வளவு சலிப்பாக இருக்கிறது. களியாட்டத்துக்கு அதிக இடமில்லை. மக்கள் எல்லோரும் கோழைகளாக இருக்கிறார்கள். உதாரணத்துக்கு நஸார்காவை எடுத்துக் கொள்ளுங்கள். சில நாட்களுக்கு முன்பு ஒரு செச்சென் கிராமத்துக்குப் போயிருந்தோம். குதிரைகளைப் பிடிப்பதற்குத் தன்னுடன் நொகாய்ப் பிரதேசத்துக்குப் புறப்படுமாறு கிரேய்-கான் அழைத்தார். ஒருவரும் புறப்படவில்லை. நான் மட்டும் எப்படிப் போவது?''

''உன் மாமா இருக்கிறேன்! நான் எதற்காக இருக்கிறேன்? நான் உபயோகமில்லாதவன் என்றா நினைக்கிறாய்? இல்லை, நான் ஓய்ந்து விடவில்லை. ஒரு குதிரையைக் கொடு. நான் உடனே நொகாய்ப் பிரதேசத்துக்குப் புறப்படுகிறேன்.''

''வீண் பேச்சு எதற்கு, மாமா?'' என்றான் லுக்காஷ்கா. ''கிரேய்-கானுடன் நான் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதைச் சொல்லுங்கள். 'நொகாய்க்காரர்களிடமிருந்து குதிரைகளைத் தேரெக் ஆற்றுக்குக் கொண்டுவா. நீ பயப்பட வேண்டாம். ஒரு குதிரைக் கூட்டத்தை வைத்துக்கொள்வதற்கு என்னிடம் இடமிருக்கிறது' என்று அவர் சொல்கிறார். அவர் தலையை மொட்டை அடித்துக் கொண்டிருக்கிறார்; அவரை நம்புவதற்குக் கஷ்டமாக இருக்கிறது.''

''நீ கிரேய்-கானை நம்பலாம். அவர் குடும்பத்தில் எல்லோரும் நல்லவர்கள். அவர் தகப்பனார் எனக்கு மிகவும் விசுவாசமான நண்பராக இருந்தார். உன் மாமா சொல்வதை கவனமாகக் கேள். நான் உனக்குத் தப்பான ஆலோசனை சொல்லமாட்டேன். அவரை சத்தியம் செய்யச் சொல். பிறகு நீ அவரை நம்பலாம். ஆனால் நீ அவருடன் போவதாக இருந்தால் கைத்துப்பாக்கியைத் தயாராக வைத்துக்கொள். குதிரைகளைப் பங்கு பிரித்துக் கொள்கின்ற சமயத்தில் அது முக்கியம். முன்னொரு சமயத்தில் ஒரு செச்சென் என்னைக் கொல்வதற்குக் குறி

பார்த்துவிட்டான். நான் குதிரைக்குப் பத்து ரூபிள் விலை சொன்னதுதான் காரணம். அவரை நம்பலாம்; ஆனால் தூங்கும்பொழுது உன் துப்பாக்கியைப் பக்கத்தில் வைத்துக்கொள்.''

அந்தக் கிழவருடைய அறிவுரையை லுக்காஷ்கா கவனமாகக் கேட்டான்.

''மாமா, உங்களிடம் எந்தப் பூட்டையும் திறக்கக் கூடிய ஒரு மாயப் பச்சிலை இருப்பதாகச் சொல்கிறார்களே, அது உண்மையா?'' என்று அந்த இளம் கஸாக்கு சிறிது நேரம் மௌனமாக இருந்த பிறகு கேட்டான்.

''அப்படி எதுவும் கிடையாது. ஆனால் அதைக் கண்டு பிடிப்பது எப்படி என்பதை நான் உனக்குச் சொல்லித் தருகிறேன். நீ நல்ல இளைஞன். உன்னுடைய மாமாவை மறந்துவிடவில்லையே. சொல்லட்டுமா?''

''சொல்லுங்கள், மாமா.''

''ஆமை தெரியுமா? ஆமை இருக்கிறதே, அது ஒரு பிசாசு.''

''ஆமையைப் பற்றி எனக்கு நன்றாகத் தெரியும்.''

''ஆமையின் கூட்டைக் கண்டுபிடி. ஆமை அங்கே போக முடியாதபடி அதைச் சுற்றி சிறிய வேலியைப் போடு. ஆகவே அதைச் சுற்றிச் சுற்றிவரும். பிறகு அது போய் மாயப் பச்சிலையைக் கொண்டுவரும். அந்தப் பச்சிலை வேலியை உடைத்துவிடும். மறுநாள் காலையில் நீ அங்கே போய்த் தேடவேண்டும். வேலி உடைந்திருக்கிற இடத்தில் மாயப் பச்சிலை கிடக்கும். அதை எடுத்துக்கொள். நீ விரும்புகின்ற எந்த இடத்துக்கும் அதைக் கொண்டுபோ. எந்தப் பூட்டும் எந்தக் கதவும் உன்னைத் தடுக்க முடியாது.''

''நீங்கள் எப்பொழுதாவது முயன்றதுண்டா, மாமா?''

''இல்லை. நான் ஒருபோதும் முயன்றதில்லை. ஆனால் நல்லவர்கள் இப்படிச் சொல்வதுண்டு. குதிரையில் ஏறி உட்கார்ந்தவுடன் 'வணங்குகிறேன்' என்ற சொல்லை மட்டும் மந்திரமாக நான் உச்சரிப்பேன். என்னை யாரும் கொல்ல முடியாது.''

'' 'வணங்குகிறேன்' என்பது எப்படிப்பட்ட மந்திரம், மாமா?''

''அந்த மந்திரம் உண்மையாகவே உனக்குத் தெரி

யாதா? ஐயோ! என்ன ஆட்கள்! உன் மாமாவிடம் கேட்டிருக்க வேண்டாமா? சரி, நான் சொல்வதை கவனமாகக் கேட்டுப் பிறகு திருப்பிச் சொல்:

ஸியோனில் வசிப்பவர்களே!
உங்களை வணங்குகிறேன்.
உங்கள் ஜாரைப் பாருங்கள்.
குதிரை மீது அமர்ந்திருக்கிறோம்.
ஸபோனியா அழுகிறார்,
ஸகாரியா சொல்கிறார்.
ஓ, மான்டிரிச் பிதாவே,
மக்களை எப்பொழுதும் நேசியுங்கள்!

''மக்களை எப்பொழுதும் நேசியுங்கள்'' என்று அந்தக் கிழவர் திருப்பிக் கூறினார். ''புரிகிறதா? திருப்பிச் சொல்!''

லுக்காஷ்கா சிரித்தான்.

''அவர்கள் உங்களைக் கொல்ல முடியாததற்கு இந்த மந்திரம்தான் காரணம் என்று சொல்கிறீர்களா, மாமா? இது சாத்தியமா?''

''இளைஞர்களாகிய நீங்கள் ரொம்ப கெட்டிக்காரர்களோ? இந்த மந்திரத்தைக் கற்றுக்கொள். எப்பொழுதும் திருப்பிச் சொல். அதனால் உனக்குத் தீமை ஏற்படாது. சரி, அதை உச்சரித்துவிட்டு வாழ்க்கையில் முன்னேறு'' என்று சொல்லிவிட்டு அந்தக் கிழவர் சிரித்தார். ''ஆனால் நொகாய்ப் பிரதேசத்துக்கு நீ போகாதே, லுக்கா! அங்கே போகாதே! அவ்வளவு தான் சொல்வேன்.''

''ஏன் போகக்கூடாது?''

''அதற்கு இது சமயமல்ல, நீங்களும் அதற்குத் தகுந்தவர்களல்ல. கஸாக்குகளாகிய நீங்கள் இப்பொழுது வெறும் குப்பை. மேலும் ருஷ்யர்கள் இங்கே வந்திருக்கிறார்கள். அவர்கள் உன்னைப் பிடித்து நீதிமன்றத்தில் நிறுத்திவிடுவார்கள். உண்மையாகச் சொல்கிறேன். அது வேண்டாம். இன்றைய இளைஞர்களாகிய நீங்கள் அதற்குத் தகுதியில்லாதவர்கள். ஒரு சமயத்தில் கிர்ச்சிக்கும் நானும்...''

அந்தக் கிழவர் தன்னுடைய முடிவில்லாத கதைகளில்

ஒன்றைச் சொல்வதற்கு ஆரம்பித்தார். ஆனால் லுக்காஷ்கா சன்னல் வழியாகப் பார்த்தான்.

''நன்றாக விடிந்துவிட்டது, மாமா,'' என்று அவன் குறுக்கிட்டுக் கூறினான். ''நான் புறப்படுகிறேன். சும்மா இருக்கும் பொழுது வீட்டுக்கு வாருங்கள்.''

''கிறிஸ்து உன்னைக் காப்பாற்றுவார். நான் அந்த வீரனிடம் போகவேண்டும். அவனை வேட்டையாடக் கூட்டிப் போவதாக வாக்களித்தேன். அவன் நல்லவனாகத் தெரிகிறது.''

## 17

லுக்காஷ்கா யெரோஷ்கா வீட்டிலிருந்து புறப்பட்டுத் தன்னுடைய வீட்டுக்குச் சென்றான். அவன் வீட்டுக்குத் திரும்பிவந்து கொண்டிருந்தபொழுது ஈரப்பதமான மூடு பனி பூமியிலிருந்து மேலே எழும்பி கிராமத்தையே மூடிக் கொண்டிருந்தது. எல்லாக் கொட்டில்களிலும் கால்நடை உறக்கத்திலிருந்து விழித்துக்கொண்டு அசையத் தொடங்கியது. சேவல்கள் உரத்த குரல்களில் அடிக்கடி கூவின. மக்கள் உறக்கம் கலைந்து எழ ஆரம்பித்தார்கள். லுக்காஷ்கா தன்னுடைய வீட்டை நெருங்கிய பொழுது மூடு பனியில் ஈரமாக இருந்த முன்பக்க வேலியையும் வீட்டுப் படிகளையும் திறந்திருந்த கதவையும் பார்த்தான். சுற்று வட்டகையில் யாரோ விறகை வெட்டிக் கொண்டிருக்கும் சத்தம் கேட்டது. லுக்காஷ்கா வீட்டுக்குள் நுழைந்தான். அவன் தாயார் ஏற்கெனவே எழுந்து அடுப்புக்கு முன்னால் நின்று அடுப்பில் சுள்ளிகளைப் போட்டுக் கொண்டிருந்தாள். அவனுடைய தங்கை இன்னும் தூங்கிக் கொண்டிருந்தாள்.

''என்ன லுக்காஷ்கா? உன் கொண்டாட்டம் முடிந்து விட்டதா?'' என்று அவன் தாயார் கோபமின்றிக் கேட்டாள். ''நேற்றிரவில் எங்கே போயிருந்தாய்?''

''கிராமத்துக்குப் போயிருந்தேன்'' என்று லுக்காஷ்கா அக்கறையில்லாமல் பதிலளித்தான். அவன் துப்பாக்கியை அதன் உறையிலிருந்து எடுத்துச் சரி பார்த்துக் கொண்டிருந்தான்.

அவன் தாயார் தலையை ஆட்டினாள்.

லுக்காஷ்கா துப்பாக்கியின் பற்றுவாயில் வெடி

மருந்தை வைத்துவிட்டு, ஒரு சிறிய பையிலிருந்து சில காலித் தோட்டாக்களை எடுத்து அவற்றுக்குள் வெடி மருந்தை அடைக்கத் தொடங்கினான். கந்தல் துணியில் சுற்றப்பட்டிருந்த குண்டுகளை கவனமாக உள்ளே திணித் தான். அந்த வேலை முடிந்ததும் தோட்டாக்களை சரி பார்த்துவிட்டுப் பைக்குள் வைத்தான்.

''அம்மா, என் பையைத் தைக்கச் சொன்னேனே, அதைச் செய்துவிட்டாயா?'' என்று கேட்டான்.

''பின்னே? அந்த ஊமைப் பெண் நேற்று மாலை முழு வதும் அதைத் தைத்துக் கொண்டிருந்தாள். நீ உடனே காவல் நிலையத்துக்குத் திரும்ப வேண்டுமா? நான் உன் னைச் சிறிது நேரம் கூடப் பார்க்கவில்லையே.''

''என்ன செய்வது? நான் உடனே திரும்பிப் போக வேண்டியிருக்கிறது'' என்று லுக்காஷ்கா வெடிமருந்துப் பையைக் கட்டிக் கொண்டு பதிலளித்தான். ''ஊமை எங்கே இருக்கிறாள்? அவள் வெளியே போய்விட்டாளா?''

''ஆமாம். அவள் விறகை வெட்டிப்போட்டுக் கொண் டிருக்கிறாள். உன்னைப் பார்க்கவில்லை என்று அவ ளுக்கு ஒரே வருத்தம். 'தம்பியை நான் பார்க்கவே முடி யாது போலிருக்கிறதே' என்று சொல்லிவிட்டுத் தன் னுடைய முகத்துக்கு நேரே கையைக் காட்டி, நாக்கை வளைத்துக் கொக்கரித்துத் தன்னுடைய கையை இரு தயத்தின் மேலே வைத்து சைகை காட்டினாள். அவள் மிகவும் வருத்தப்படுகிறாள் என்று அர்த்தம். நான் போய் அவளைக் கூட்டிக் கொண்டு வரவா? அந்த அப்ரேக்கைப் பற்றிக் கூட அவள் நன்றாகத் தெரிந்து வைத்திருக் கிறாள்.''

''அவளைக் கூட்டிவா'' என்றான் லுக்காஷ்கா. ''நான் அங்கே கொஞ்சம் கொழுப்பு வைத்திருக்கிறேன். அதைக் கொண்டுவா. என்னுடைய வாளில் தடவ வேண் டும்.''

அந்தக் கிழவி வெளியே சென்றாள். சில நிமிடங் களில் லுக்காஷ்காவின் செவிட்டூமைச் சகோதரி குடிசை யின் மரப்படிகளில் சப்தம் ஏற்படுத்தியவாறு உள்ளே வந்தாள். அவள் அவனைக் காட்டிலும் ஆறு ஆண்டுகள் மூத்தவள். செவிட்டூமைகளுக்கு அடையாளமான அசட் டுத்தனமும் மந்தபுத்தியும் அவள் முகத்தில் பளிச்சென்று

தெரியவில்லை என்றால் தோற்றத்தில் அவனை மிகவும் ஒத்திருந்திருப்பாள். அவள் முரட்டுத் துணியில் ஒட்டுப் போடப்பட்ட சட்டையை அணிந்திருந்தாள். அவளுடைய பாதங்களில் காலணிகள் இல்லை, அவற்றில் தூசி படிந் திருந்தது. தலையில் ஒரு பழைய நீலத் துணியைக் கட்டி யிருந்தாள். அவளுடைய கழுத்தும் கைகளும் முகமும் ஒரு ஆணைப் போல சதைப் பிடிப்பாக இருந்தன. அவள் எப்பொழுதுமே கடினமான உடலுழைப்புச் செய்து பழ கியவள் என்பதை அவளுடைய உடையும் தோற்றமும் முனைப்பாக எடுத்துக்காட்டின. அவள் கைகளில் தூக்கிக் கொண்டு வந்த விறகை அடுப்புக்குப் பக்கத்தில் வைத் தாள். பிறகு மகிழ்ச்சி பொங்கச் சிரித்துக்கொண்டு தன் சகோதரனிடம் சென்றாள். அவளுடைய சிரிப்பில் முகம் கோணலாகச் சுருங்கியது. அவள் சகோதரனுடைய தோளைத் தடவிவிட்டுத் தன்னுடைய கைகள், முகம் மற்றும் உடல் முழுவதையும் உபயோகித்து வேகமாக சைகைகளைச் செய்தாள்.

''சரி, சரி! நீ நல்ல பெண், ஸ்தெப்கா!'' என்று சகோ தரன் தலையை ஆட்டிக்கொண்டு கூறினான். ''பை நன் றாக இருக்கிறது. நன்றாகத் தைத்திருக்கிறாய். நீ நல்ல பெண். இதோ உனக்காகக் கொண்டுவந்தேன்.'' அவன் தன்னுடைய சட்டைப் பையிலிருந்து இரண்டு கேக்கு களை எடுத்து அவளிடம் கொடுத்தான்.

ஸ்தெப்காவின் முகம் சிவந்தது. அவள் தன்னுடைய மகிழ்ச்சியை வெளியிடுவதற்காக விநோதமான முறை யில் கூச்சலிட்டாள். அவள் கேக்குகளைப் பிடுங்கிக் கொண்டு முன்னைக் காட்டிலும் அதிக வேகமாகக்கூட மறுபடியும் சைகைகளைச் செய்ய ஆரம்பித்தாள். அடிக் கடி ஒரு திசையில் விரலை நீட்டிக் காட்டினாள், தன் னுடைய தடித்த விரலைக் கொண்டு புருவங்கள், முகத் தின் மேல் வரைந்து காட்டினாள். அவள் எதைச் சொல்ல விரும்புகிறாள் என்பதை லுக்காஷ்கா புரிந்துகொண்டான்; புன்சிரிப்புடன் தலையை ஆட்டிக் கொண்டிருந்தான். அவன் இளம்பெண்களுக்கு இனிப்புகளைக் கொடுப்பது நல்லது, எல்லாப் பெண்களுக்கும் அவனைப் பிடித்திருக் கிறது, அந்தப் பெண்களில் ஒருத்தி—மார்யானா—மற்ற வர்களைக் காட்டிலும் நல்லவள், அவள் அவனைக் காத

லிக்கிறாள் என்று அவள் சைகைகளின் மூலம் பேசினாள். அவள் மார்யானாவின் வீடு இருந்த திசையில் விரலை வேகமாக நீட்டி மார்யானவை சுட்டிக்காட்டிய பிறகு தன்னுடைய புருவங்களையும் முகத்தையும் தொட்டாள், உதடுகளைச் சப்பித் தலையை ஆட்டினாள். அவள் தன்னுடைய கையினால் நெஞ்சைத் தொட்டு, கையை முத்தமிட்டு யாரையோ கட்டிப்பிடிப்பதைப் போலப் பாசாங்கு செய்ததன் மூலம் 'காதலிக்கிறாள்' என்பதை உணர்த்தினாள். தாயார் அந்த அறைக்குத் திரும்பி வந்தாள், அந்த ஊமைப் பெண் எதைச் சொல்வதற்கு முயற்சி செய்கிறாள் என்பதைப் புரிந்துகொண்டு சிரித்தபடியே தலையை ஆட்டினாள். ஸ்தெப்கா அவளிடம் கேக்குகளைக் காட்டிவிட்டு மறுபடியும் மகிழ்ச்சி பொங்கக் கூச்சலிட்டாள்.

''அன்றைக்கு உலீத்கா பாட்டியுடன் பேசிக் கொண்டிருந்தேன். கல்யாணத் தரகர்களை அனுப்பப் போவதாக அவளிடம் சொன்னேன்'' என்றாள் தாயார். ''அவள் மிகவும் அன்புடன் நடந்துகொண்டாள்.''

லுக்காஷ்கா எதுவும் பேசாமல் தன்னுடைய தாயாரைப் பார்த்தான்.

''சரி, அம்மா! நீ ஒயினை விற்றுவிடு. எனக்குக் குதிரை அவசியமாக இருக்கிறது.''

''நேரம் வருகின்றபொழுது அதை விற்பனை செய்வேன். பீப்பாய்களைப் பழுதுபார்த்துக் கொண்டிருக்கிறேன்'' என்றாள் தாயார். தன் குடும்ப நிர்வாக விவகாரங்களில் மகன் தலையிட்டது அவளுக்குப் பிடிக்கவில்லை என்பது வெளிப்படையாகத் தெரிந்தது. ''நீ போகும்பொழுது வராந்தாவில் வைத்திருக்கின்ற சிறிய பையை எடுத்துக்கொண்டு போ. நான் நண்பர்களிடம் கடன் வாங்கியிருக்கிறேன். நீ எல்லைக் காவல் நிலையத்தில் சுகமாக இருக்க வேண்டும் என்பதற்காக எல்லாம் செய்கிறேன். அதை உன்னுடைய பையில் வைக்கவா?''

''சரி'' என்றான் லுக்காஷ்கா. ''கிரேய்-கான் ஆற்றைக் கடந்து வந்தால் காவல் நிலையத்துக்கு அனுப்பு. ஏனென்றால் இன்னும் நெடுங்காலத்துக்கு எனக்கு விடுமுறை கிடைக்காது. எனக்கு அவரிடம் ஒரு வேலை இருக்கிறது.''

லுக்காஷ்கா புறப்படுவதற்குத் தயாரித்துக் கொண்டான்.

''நான் அவரை அனுப்பிவைக்கிறேன், லுக்காஷ்கா, அனுப்பிவைக்கிறேன். நீ யாம்காவின் வீட்டில் தானே முழு நேரமும் இருந்தாய், இது உண்மையா, இல்லையா?'' என்று அந்த முதிய தாயார் கேட்டாள். ''நேற்றிரவில் கால்நடையைப் பார்க்க நான் எழுந்து போன பொழுது பாட்டுச் சத்தம் கேட்டது. நீ பாட்டுப்பாடுகின்ற குரல் காதில் விழுந்தது.''

லுக்காஷ்கா பதிலளிக்கவில்லை. அவன் வராந்தாவுக்குச் சென்று பைகளை எடுத்துத் தோளில் மாட்டிக் கொண்டான். பிறகு மேல்கோட்டை மாட்டிக்கொண்டு தன்னுடைய துப்பாக்கியை எடுத்து வாயிலில் சிறிது நேரம் நின்றான்.

''போய்வருகிறேன், அம்மா!'' என்று தாயாரிடம் சொல்லிவிட்டு வீட்டு வேலியின் கதவைச் சாத்தினான். ''நஸார்காவிடம் சிறிய பீப்பாயில் ஒயினைக் கொடுத்தனுப்பு, நான் நண்பர்களுக்கு விருந்தளிப்பதாகச் சொல்லியிருக்கிறேன். அவன் உன்னிடம் வருவான்.''

''கடவுள் உன்னைக் காப்பாற்றுவார், லுக்காஷ்கா! கடவுள் உன்னோடிருப்பார்! நான் கொடுத்தனுப்புகிறேன். புதிய பீப்பாயிலிருந்து ஊற்றிக் கொடுக்கிறேன்'' என்று சொல்லிக்கொண்டு அந்த முதிய தாயார் வேலிவரை வந்தாள். ''உன்னிடம் ஒரு விஷயம் சொல்லவேண்டும்'' என்று வேலியின் மேல் குனிந்தபடியே அவள் கூறினாள்.

கஸாக்கு தயங்கி நின்றான்.

''நீ இங்கே விரும்பியபடி ஆட்டம் போட்டிருக்கிறாய். சரி. கடவுள் விருப்பம்! ஒரு இளைஞன் சந்தோஷமாக இருப்பது தப்பு என்று நான் சொல்லமாட்டேன். ஏனென்றால் கடவுள்தான் உனக்கு அதிர்ஷ்டத்தைக் கொடுத்தார். நல்லதே. ஆனால், மகனே, நீ வேலையில் இருப்பதால், எதிலும் அளவுக்கு மீறிப் போய்விடாதே. உன் மேலதிகாரியிடம் பணிவுடன் நடந்துகொள். அப்படித்தான் இருக்க வேண்டும்! ஒயினை விற்பனை செய்கிறேன், நீ குதிரை வாங்குவதற்குப் பணம் சேமித்து வைக்கிறேன், அந்தப் பெண்ணை உனக்குக் கல்யாணம் செய்துவைக்கிறேன்.''

''சரி, சரி'' என்று மகன் முகத்தைச் சுளித்துக் கொண்டு பதிலளித்தான்.

அந்த ஊமைப் பெண் அவனுடைய கவனத்தை ஈர்ப்பதற்காக ஒலி எழுப்பினாள். அவள் தன்னுடைய தலையையும் கையையும் சுட்டிக்காட்டினாள். 'மொட்டைத் தலை—செச்சென்' என்று அதற்கு அர்த்தம். பிறகு அவள் தன்னுடைய கண்புருவங்களைச் சுருக்கி, துப்பாக்கியினால் குறிபார்ப்பதைப் போல நடித்துக் கூச்சலிட்டாள். அவள் தலையை ஆட்டிக்கொண்டு விசித்திரமான ஒலியுடன் முடித்தாள். ''நீ இன்னும் ஒரு செச்செனைக் கொல்ல வேண்டும்'' என்று அவள் லுக்காஷ்காவிடம் சொல்லிக் கொண்டிருந்தாள்.

லுக்காஷ்கா அதைப் புரிந்து கொண்டு சிரித்தான். அவன் கால்களை வேகமாக, லேசாக வைத்து நடந்தான். மென்மயிர்க் கோட்டணிந்திருந்த முதுகுக்குப் பின்னால் துப்பாக்கியை மாட்டிக்கொண்டு அவன் அடர்த்தியான மூடுபனிக்குள் சென்று மறைந்தான்.

அந்த முதிய தாயார் வேலிக் கதவுக்குப் பக்கத்தில் ஒரு நிமிட நேரம் மௌனமாக நின்றுவிட்டு பால் பதனிடும் இடத்தை நோக்கிச் சென்றாள். அவளுடைய அன்றாட வேலை உடனே ஆரம்பமாயிற்று.

## 18

லுக்காஷ்கா எல்லைக் காவல் நிலையத்துக்குத் திரும்பிய அதே சமயத்தில் யெரோஷ்கா மாமா சீட்டியடித்துத் தன்னுடைய நாய்களைக் கூப்பிட்டார். வேலியைக் கடந்தபடியே பின்புற வழியாக ஒலேனினுடைய இருப்பிடத்துக்குச் சென்றார். அவர் வேட்டைக்குப் போகின்ற பொழுது பெண்களைச் சந்திப்பதற்கு விரும்புவதில்லை. ஒலேனின் இன்னும் தூங்கிக் கொண்டிருந்தான். வன்யூஷா விழித்துவிட்ட போதிலும் இன்னும் படுக்கையில் படுத்துக்கொண்டு நேரமாகிவிட்டதா, இல்லையா என்று கண்டுபிடிக்க முயற்சிப்பவனைப் போல சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டிருந்தான். அந்த நேரத்தில் யெரோஷ்கா மாமா முதுகுக்குப் பின்னால் துப்பாக்கி தொங்க, கதவைத் திறந்தார்.

''எழுந்துநில்! உஷார்!'' என்று தன்னுடைய அடித் தொண்டையில் கத்தினார். ''துப்பாக்கியை எடு! செச்சென்கள் வந்து விட்டார்கள்! இவான்! எசமானருக்கு சமவாரைத் தயாரி.'' ஒலேனினைப் பார்த்து அவர் ''எழுந்திரு! சீக்கிரம்!'' என்று அதட்டினார். ''எங்கள் பழக்கம் இது, நல்லவனே! இந்த நேரத்தில் பெண்கள் கூட எழுந்துவிட்டார்கள். அதோ, அந்தச் சன்னல் வழியாகப் பார்! அவள் தண்ணீர் கொண்டுவரப் போய்க் கொண்டிருக்கிறாள். நீ இன்னும் தூங்குகிறாய்.''

ஒலேனின் விழித்துக் கொண்டு படுக்கையிலிருந்து துள்ளிக் குதித்தான். அந்தக் கிழவரைப் பார்ப்பதும் அவருடைய குரலைக் கேட்பதும் எவ்வளவு இனிமையாக, குதூகலமாக இருக்கிறது!

''சீக்கிரம்! சீக்கிரம், வன்யூஷா!'' என்றான் அவன்.

''இதுதான் நீ வேட்டைக்குப் போகிற லட்சணமா? எல்லோருக்கும் சாப்பாடு முடிந்துவிட்டது. நீ இன்னும் தூங்கிக் கொண்டிருக்கிறாய். லியாம்! எங்கே போனாய்?'' என்று அவர் நாயைப் பார்த்துக் கூச்சலிட்டார். ''உன் துப்பாக்கி தயாராக இருக்கிறதா?'' என்று கிழவர் அந்தக் குடிசையில் ஒரு பட்டாளமே இருப்பதைப் போலப் பெருங்கூச்சல் போட்டார்.

''எதுவுமே தயாராக இல்லாததற்கு நான் தான் பொறுப்பு. வன்யூஷா, வெடிமருந்தை எடு! துப்பாக்கி அடைப்பானைக் கொடு!'' என்று ஒலேனின் கூறினான்.

''அபராதம்!'' என்று கிழவர் உரத்த குரலில் கூறினார்.

''உங்களுக்குத் தேநீர் வேண்டுமா?'' என்று வன்யூஷா சிரித்துக் கொண்டே கொச்சையான பிரெஞ்சு மொழியில் கேட்டான்.

''நீ நம்ம ஆளல்ல! நீ எங்கள் மொழியில் பேசுவதில்லை, பிசாசு!'' என்று அந்தக் கிழவர் வாயைத் திறந்து வன்யூஷாவிடம் பற்களின் ஈறுகளைக் காட்டிக்கொண்டு அதட்டினார்.

''முதல் தடவை செய்த தவறு இது. நீங்கள் என்னை மன்னிக்கவேண்டும்'' என்று ஒலேனின் பெரிய பூட்சுகளைக் கால்களில் மாட்டியபடியே சிரித்துக்கொண்டு கூறினான்.

''முதல் தடவை என்பதால் மன்னிக்கிறேன்'' என்றார் யெரோஷ்கா. ''ஆனால் இன்னொரு தடவை நீ தாமதமாக எழுந்தால் ஒரு வாளி சிவப்பு ஒயின் அபராதம் கொடுக்கவேண்டும். வெய்யில் போட ஆரம்பித்து விட்டால் மான்களைப் பார்க்க முடியாது.''

''அப்படி ஒரேயொரு மானைப் பார்த்தாலும் அது மனிதர்களாகிய நம்மை விட புத்திசாலியாக இருக்கும் என்று நினைக்கிறேன்'' என்று ஒலேனின் முந்திய மாலை நேரத்தில் கிழவர் சொன்னதைத் திருப்பிக் கூறினான். ''தந்திரத்தினால் மானை ஏமாற்ற முடியாது.''

''ஓ! நீ கிண்டல் செய்கிறாயா? முதலில் ஒரு மானைக் கொல். அதன் பிறகு பேசலாம். சீக்கிரம்! அதோ பார், உன் வீட்டுக்காரர் உன்னைப் பார்க்க வருகிறார்'' என்று யெரோஷ்கா சன்னலுக்கு வெளியே பார்த்துக்கொண்டு கூறினார். ''பார், அவர் கம்பீரமாக உடையணிந்திருக்கிறார், அதிகாரி என்று உன்னிடம் காட்டுவதற்காகப் புதிய கோட்டை அணிந்திருக்கிறார். என்ன விநோதம்! ஆ, எப்படிப்பட்ட மக்கள்!''

அந்தத் தருணத்தில் வன்யூஷா எசமானரிடம் வீட்டுக்காரர் அவரைப் பார்க்க வந்திருப்பதைத் தெரிவிப்பதற்கு வந்தான்.

''பணத்துக்காக வந்திருக்கிறார்'' என்று அவர் வந்திருப்பதன் நோக்கத்தைத் தெரிவித்து ஒலேனினைத் தயாரிப்பதற்கு அவன் அர்த்தத்துடன் கூறினான். அடுத்த வினாடியில் துணை லெப்டினென்ட் புதிய செர்கெஸ்கா, தோள்பட்டையில் அதிகாரிக்குரிய சின்னங்களுடன் பளபளவென்று மெருகிடப்பட்ட பூட்சுகளணிந்து—அது கஸாக்குகள் மத்தியில் அபூர்வம்—சிரித்துக் கொண்டு பகட்டுநடை நடந்தபடியே அறைக்குள் வந்து வாழ்த்துகளைத் தெரிவித்தார்.

அந்தத் துணை லெப்டினென்ட் ஒரு நாகரிகமடைந்த கஸாக்கு; அவர் ருஷ்யாவில் இருந்திருக்கிறார், ஆசிரியராக வேலை செய்திருக்கிறார். எல்லாவற்றுக்கும் மேலாக உயர்குடியைச் சேர்ந்தவர். உயர்குடியைச் சேர்ந்தவரெனத் தோற்றமளிக்க வேண்டும் என்பதில் அக்கறையுடன் இருந்தார். ஆனால் அவருடைய சுறுசுறுப்பு, இயல்பாக இல்லாத சுய நம்பிக்கை, நாகரிகமில்லாத பேச்சு ஆகிய

வற்றைப் பகட்டான முறையில் மறைத்துக் கொண்ட போதிலும் அவர் யெரோஷ்கா மாமாவைப் போன்ற வர் தான் என்ற முடிவுக்கு வருவதைத் தவிர்க்க இய லாது. சூரிய ஒளியில் கறுத்துப்போன அவருடைய முகம், கைகள் மற்றும் சிவந்த மூக்கில் அது தெரிந்தது. ஒலேனின் அந்தக் கஸாக்குப் படை அதிகாரியை உட்காருமாறு கூறி னார்.

''வணக்கம், இலியா அவர்களே!'' என்று யெரோஷ் கா எழுந்துநின்று கொண்டு கூறினார். அவர் குனிந்து வணக்கம் செலுத்தியது ஒலேனினுக்கு கிண்டல் செய் வதைப் போலத் தோன்றியது.

''வணக்கம், மாமா! அதற்குள் இங்கே வந்துவிட்டீர் களா?'' என்று அவர் கிழவரைப் பார்த்து அசிரத்தை யுடன் தலையை ஆட்டிக் கூறினார்.

அவர் மெலிந்த, ஒல்லியான, அழகான தோற்றம் உடையவர்; நாற்பது வயதானவர்; அவருடைய நரைத்த தாடி ஆப்பு வடிவத்தில் இருந்தது. ஆனால் தன்னுடைய நாற்பது வயதுக்கு அதிகமான உற்சாகத்துடன் இருந் தார். ஒலேனின் தன்னை ஒரு சாதாரண கஸாக்காகக் கருதிவிடக்கூடாது என்று அவர் கவலைப்பட்டது வெளிப் படையாகத் தெரிந்தது. மற்றவர்கள் தன்னுடைய முக் கியத்துவத்தை உடனடியாகப் புரிந்துகொள்ள வேண்டும் என்பதில் அவர் அக்கறை கொண்டிருந்தார்.

''இவர் எங்களது எகிப்திய நிம்ரோட்'' என்று அவர் ஒலேனினை நோக்கித் திரும்பி அந்தக் கிழவரைச் சுட் டிக்காட்டி சுயதிருப்தியை வெளிப்படுத்துகின்ற புன்சிரிப் புடன் கூறினார். ''ஆண்டவருக்கு முந்திய மாபெரும் வேடர். எங்களில் இவர்தான் எல்லாவற்றிலும் முதலிடம் பெற்ற வர். இவருடன் ஏற்கெனவே பழகிவிட்டீர்களா?''

யெரோஷ்கா மாமா முரட்டுத் தோல் காலணியணிந்த தனது பாதங்களைப் பார்த்துக் கொண்டு யோசனை யுடன் தலையை ஆட்டினார்; பிறகு தன்னிடமே திருப்பிச் சொன்னார்: '' 'எகிப்திய நிம்ரோட்'—அதற்கு என்ன அர்த்தம்?''

''சரி. நாங்கள் வேட்டையாடப் போகிறோம்'' என் றான் ஒலேனின்.

''மிகவும் நல்லது. ஆனால் நான் உங்களுடன் ஒரு விஷயத்தைப் பற்றிப் பேச வேண்டும்.''

''சொல்லலாமே.''

''தாங்கள் ஒரு பிரபு; நான் தெரிந்து கொண்டவரை நாம் இருவருமே அதிகாரி அந்தஸ்தில் இருப்பவர்கள்; ஆகவே நாம் படிப்படியாகவும் எப்பொழுதும் ஒருவரையொருவர் பிரபுவாகவும் நடத்த வேண்டும்.'' அவர் பேச்சை நிறுத்திவிட்டுப் புன்சிரிப்புடன் அந்தக் கிழவரையும் ஒலேனினையும் பார்த்தார். ''தாங்கள் என்னுடன் வாடகையைப் பற்றிப் பேசுவது பொருத்தமாக இருக்கும். ஏனென்றால் என் மனைவி கொஞ்சம் மந்த புத்தி உடையவள். நேற்று நீங்கள் அவளிடம் பேசிய வார்த்தைகளின் அர்த்தத்தை அவள் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. ரெஜிமெண்டின் தளகர்த்தரின் உதவி அதிகாரிக்கு என்னுடைய வீட்டை—குதிரை லாயத்தைச் சேர்க்காமல்—ஆறு வெள்ளி ரூபிளுக்கு வாடகைக்கு விடுவதில் எனக்கு உடன்பாடே. ஆனால் உயர்ந்த குடும்பத்தைச் சேர்ந்தவன் என்ற முறையில் என்னுடைய வீட்டை வேறு யாருக்கும் விடமுடியாது என்று நான் எப்போதும் மறுக்கமுடியும். ஆனால் நீங்கள் இதில் மிகவும் ஆர்வத்துடன் இருக்கிறீர்கள். நானும் அதிகாரி என்பதால் நான் உங்களுடன் மிகவும் சுலபமாக இதைப் பற்றிப் பேசி முடிவு செய்ய முடியும். நான் இந்த மாவட்டத்தில் பிறந்தவன். எங்களுடைய வழக்கமான மரபுக்கு இது சரியல்ல என்றாலும் நிபந்தனைகளை எல்லா அம்சங்களிலும் நான் ஒத்துக்கொள்கிறேன்...''

''மிகவும் ஆர்ப்பாட்டமாகப் பேசிவிட்டார்'' என்று அந்தக் கிழவர் முணுமுணுத்தார்.

அந்தத் துணை லெப்டினென்ட் இதே பாணியில் இன்னும் நீண்ட நேரம் தொடர்ந்து பேசினார். அவர் அந்த இருப்பிடத்துக்கு மாதத்துக்கு ஆறு வெள்ளி ரூபிள் வாடகை பெற விரும்புகிறார் என்பதை ஒலேனின் அவருடைய பேச்சிலிருந்து மிகவும் சிரமப்பட்டுப் புரிந்துகொண்டார். அவருடைய விருப்பத்தை ஒலேனின் நிறைவேற்றினார். பிறகு தன்னுடன் தேநீர் அருந்துமாறு விருந்தினரைக் கேட்டுக்கொண்டார். அந்தத் துணை லெப்டினென்ட் மறுத்தார்.

''எங்களிடம் முட்டாள்தனமான பழக்கங்கள் இருக்கின்றன. அதன்படி தீட்டுப்பட்ட டம்ளரை உபயோகிப்பது பாவம். நான் நாகரிகமானவன் என்பதால் இதைப் புரிந்து கொள்ள முடிகிறது, ஆனால் என்னுடைய மனைவி சாஸ்திரம் பார்ப்பவள்...''

''சரி. தேநீர் அருந்துகிறீர்களா?''

''நீங்கள் அனுமதித்தால், நான் என்னுடைய சொந்த டம்ளரை உபயோகிக்கிறேன்'' என்று அந்த அதிகாரி பதிலளித்துவிட்டு வெளி வராந்தாவை நோக்கிச் சென்றார். ''ஒரு டம்ளரைக் கொண்டுவா!'' என்று உத்தரவிட்டார்.

சில நிமிடங்களில் கதவு திறந்தது. சூரிய ஒளியில் கறுத்துப் போன, இளஞ்சிவப்பு நிறத்தில் சட்டை அணிந்த இளம் கரம் அந்த அறைக்குள் ஒரு டம்ளரை நீட்டியது. துணை லெப்டினென்ட் கதவுக்கருகில் சென்று டம்ளரை வாங்கிக்கொண்டு தன்னுடைய மகளிடம் ஒன்று அல்லது இரண்டு வார்த்தைகளை முணுமுணுத்தார். ஒலேனின் அவருடைய சொந்த டம்ளரில் தேநீரை ஊற்றினார். யெரோஷ்கா தீட்டுப்பட்ட டம்ளரில் தேநீரைக் குடித்தார்.

''ஆனால் உங்களைத் தாமதப்படுத்த விரும்பவில்லை.'' அந்த அதிகாரி அவசரமாகத் தேநீரைக் குடித்து உதடுகளைச் சுட்டுக்கொண்டார். ''எனக்கு மீன்பிடிப்பதில் அதிகமான ஆர்வமுண்டு. நான் இங்கே சிறிது காலத்துக்குத்தான் இருப்பேன், என்னுடைய வேலையிலிருந்து விடுமுறையில் வந்திருக்கிறேன். என்னுடைய அதிர்ஷ்டத்தை, தேரெக்கின் செல்வத்தில் ஒன்றிரண்டாவது எனக்குக் கிடைக்கிறதா என்பதைச் சோதித்துப் பார்க்க விரும்புகிறேன். நீங்கள் சந்தர்ப்பம் கிடைக்கும் பொழுது என் இருப்பிடத்துக்கு வருவீர்கள் என்று நம்புகிறேன்; எங்கள் வழக்கம்படி ஒயினை அருந்த வேண்டும்'' என்று அவர் கூறினார்.

பிறகு அவர் ஒலேனினுடைய கையை அழுத்தி அவனிடம் விடைபெற்றுக் கொண்டு அகன்றார்.

ஒலேனின் வேட்டைக்குத் தயாராகிக் கொண்டிருந்த பொழுது துணை லெப்டினென்ட் கண்டிப்பான குரலில் குடும்பத்தினருக்கு உத்தரவுகள் போடுவதைக் கேட்

டான். பிறகு சில நிமிடங்களில் அவர் கால்சட்டையை முழங்கால் வரை மடித்து விட்டுக் கொண்டு கிழிந்த கோட் அணிந்து, மீன்பிடிக்கின்ற வலையைத் தோளில் சாய்த்துக்கொண்டு போவதை ஒலேனின் சன்னல் வழியாகப் பார்த்தான்.

''மோசடிக்காரன்'' என்று தீட்டுப்பட்ட டம்ளரில் தேநீர் குடித்துக் கொண்டிருந்த யெரோஷ்கா மாமா கூறினார். ''நீ ஆறு வெள்ளி ரூபிள் கொடுக்கப் போகிறாயா என்பதைச் சொல். இப்படியாராவது கேள்விப்பட்டதுண்டா? இரண்டு வெள்ளி ரூபிளை விட்டெறிந்தால் இந்த கிராமத்திலேயே சிறந்த வீடு கிடைக்குமே. ராஸ்கல்! மூன்று வெள்ளி ரூபிளுக்கு என் வீட்டைத் தருவேனே!''

''வேண்டாம். நான் இங்கேயே இருக்கிறேன்'' என்றான் ஒலேனின்.

''ஆறு வெள்ளி ரூபிள்! பணத்தை இப்படி முட்டாள்தனமாக வீணாக்கலாமா? ஐயோ!'' என்று சீறினார் அந்தக் கிழவர். ''கொஞ்சம் ஒயின் கொடு, இவான்!''

ஒலேனினும் கிழவரும் லேசான காலைச் சிற்றுண்டி அருந்தி விட்டுப் பிரயாணத்தை முன்னிட்டுச் சிறிது வோட்கா குடித்தபிறகு ஒன்றாகத் தெருவுக்கு வந்தார்கள். அப்பொழுது காலை எட்டு மணி இருக்கும். வேலிக் கதவுக்கு முன்னால் ஒரு மாட்டுவண்டியைப் பார்த்தார்கள். மார்யானா ஒரு வெள்ளைத் துணியினால் கண்களைத் தவிர முகம் முழுவதையும் மூடிக் கட்டிக்கொண்டு, சட்டைக்கு மேலே பெஷ்மெத், காலில் பூட்சுகள் அணிந்து, கையில் நீண்ட குச்சியை வைத்துக்கொண்டு, காளைமாடுகளின் கொம்புகளில் கட்டப்பட்ட கயிற்றைப் பிடித்தபடி மாடுகளை ஓட்டிக்கொண்டிருந்தாள்.

''ஆ! சின்னம்மா!'' என்று கூறிய கிழவர் அவளைக் கட்டியணைப்பதைப் போல சைகை செய்தார்.

மார்யானா அவரை அடிக்கப் போவதைப் போலக் குச்சியை ஓங்கினாள். அவர்கள் இருவரையும் தன்னுடைய அழகிய கண்களில் குதூகலம் பொங்கப் பார்த்தாள்.

ஒலேனினுடைய இதயம் என்றுமில்லாதபடி மகிழ்ச்சியடைந்தது.

''சரி, வா'ங்கள். போகலாம்!'' என்றான். அவன் தோளில் துப்பாக்கியை வைத்துக்கொண்டான்; அந்தப் பெண்ணின் பார்வை தன் மீது நிலைகுத்தியிருப்பதை உணர்ந்தான்.

மார்யானா மாடுகளை அதட்டி ஓட்டுகின்ற சத்தம் அவர்களுக்குப் பின்னால் கேட்டது. உடனே அந்த வண்டி கடகடத்துக்கொண்டு சென்றது.

கிராமத்தில் வீடுகளுக்குப் பின்னாலிருந்த பாதை வழி யாகவும் வயல்களுக்குக் குறுக்காகவும் அவர்கள் போய்க் கொண்டிருந்த பொழுது யெரோஷ்கா ஓயாமல் பேசிக் கொண்டே வந்தார். அவரால் அந்தத் துணை லெப்டி னென்டை மறக்க முடியவில்லை. அவரைத் திட்டிக் கொண்டே வந்தார்.

''நீங்கள் ஏன் அவரை வெறுக்கிறீர்கள்?'' என்று ஒலே னின் கேட்டான்.

''கஞ்சப் பயல்! எனக்கு அவனைப் பிடிக்கவில்லை'' என்றார் அந்தக் கிழவர். ''அவன் சாகும்பொழுது எல் லாவற்றையும் விட்டு விட்டுத்தான் போகப் போகிறான். யாருக்காகச் சேர்க்கிறான்? அவன் ஏற்கெனவே இரண்டு வீடுகள் கட்டிவிட்டான். சகோதரன் மீது வழக்குத் தொடர்ந்து அவனிடமிருந்த தோட்டத்தைப் பிடுங்கிக் கொண்டான். எல்லாவகையான ஆவணங்களையும் எழுது வதில் அவன் எப்படிப்பட்ட சூரப்பயல் என்பது உனக் குத் தெரியுமா? மற்ற கிராமங்களிலிருந்து அவனிடம் வருகிறார்கள். அவன் எல்லாவகையான ஆவணங்களை யும் சிறப்பான முறையில் எழுதிக் கொடுக்கிறான். எப் பொழுதும் அப்படி எழுதுகிறான். அவன் யாருக்காகச் சேமிக்கிறான்? அவனுக்கு ஒரு பையனும் பெண்ணும் தான் இருக்கிறார்கள்; அவளுக்குக் கல்யாணம் செய்து விட்டால் வேறு செலவு கிடையாது.''

''ஒருவேளை சீதனம் கொடுப்பதற்காக சேமிக்க லாம்'' என்று ஒலேனின் கூறினான்.

''சீதனம் எதற்கு? அவள் அழகான பெண். பையன் கள் அவளைக் கல்யாணம் செய்வதற்கு ஓடிவருவார்கள். ஆனால் இவன் ஒரு பிசாசு. பணக்காரனுக்குத்தான் அவ ளைக் கொடுக்க விரும்புவான். அவனிடமிருந்து ஏராள மாகப் பணத்தைப் பிடுங்கப் பார்ப்பான். லுக்கா இருக்

கிறானே, அவன் ஒரு கஸாக்கு. என் பக்கத்து வீட்டில் வசிக்கிறான். என்னுடைய மருமகன். நல்ல இளைஞன். அந்த செச்செனை அவன் தான் கொன்றான். அவன் ரொம்பக் காலமாக அவளைச் சுற்றிக் கொண்டிருக்கிறான். ஆனால் இவன் அவனுக்குத் தரவில்லை. தட்டிக் கழிப்பதற்கு ஏதாவது ஒரு சாக்குச் சொல்லிக் கொண்டே இருக்கிறான். பெண் ரொம்பச் சின்னவள் என்கிறான். ஆனால் அவனுடைய நோக்கம் என்ன என்பது எனக்குத் தெரியும். அவர்கள் பரிசுகளுடன் வரவேண்டும் என்று எதிர்பார்க்கிறான். ஆனால் லுக்காஷ்காவுக்கு அவளைக் கொடுக்கத்தான் போகிறார்கள். ஏனென்றால் இந்த கிராமத்தில் அவன்தான் முதல் கஸாக்கு, ஒரு ஜிகித். அவன் தான் அப்ரேக்கைக் கொன்றான். அவனுக்குச் சிலுவைப் பதக்கம் கொடுக்கப் போகிறார்கள்.''

''என்ன இப்படிச் சொல்கிறீர்கள்? நேற்று மாலையில் நான் சுற்றுவட்டகையில் நடந்து கொண்டிருந்த பொழுது இந்தப் பெண் ஒரு கஸாக்கை முத்தமிடுவதைப் பார்த்தேன்'' என்றான் ஒலேனின்.

''இருக்காது. தவறாகச் சொல்கிறாய்!'' என்று அந்தக் கிழவர் இடையில் குறுக்கிட்டுக் கூச்சலிட்டார்.

''கடவுள் சத்தியமாக!'' என்றான் ஒலேனின்.

''பெண் என்பவள் பிசாசுதான்'' என்று யெரோஷ்கா மாமா விறைப்பாகப் பேசினார். ''அந்தக் கஸாக்கு யார்?''

''நான் அவனைப் பார்க்கவில்லை.''

''அவன் தொப்பி எப்படியிருந்தது? அது வெள்ளை நிறத்தில் இருந்ததா?''

''ஆமாம்.''

''மேல்கோட்டு சிவப்பு நிறமா? அவன் உன் உயரம் இருந்தானா?''

''இல்லை. என்னைக் காட்டிலும் கூட உயரம்.''

''அவன்தான்'' என்று கூறிக்கொண்டு யெரோஷ்கா ஓவென்று சிரித்தார். ''அவன் தான். என்னுடைய மார்க்கா. அவன் பெயர் லுக்காஷ்கா. நான் அவனை மார்க்கா என்று கூப்பிடுவது பழக்கம். ஏனென்றால் நான் ஒரு வேடிக்கைப் பேர்வழி. அவன்தான். எனக்கு அவன் மீது அதிகமான பிரியம், அப்பனே! நான் ஒருகாலத்தில் அவ

னைப் போலவே இருந்தேன். பெண்களை எப்படிக் காதலித்தேன் தெரியுமா! என்னுடைய காதலி தன்னுடைய தாயார், மதினியுடன் கூடப் படுத்துத் தூங்குவாள். அப்படியிருந்தும் நான் அங்கே போய்விடுவேன். அவள் வீடு உயரத்தில் இருந்தது. அவளுடைய தாயார் ஒரு சரியான பிசாசு. அவளுக்கு என்னைக் கண்டாலே பிடிக்காது. நான் என்னுடைய நண்பன் கிர்ச்சிக்குடன் போவேன். சன்னலின் கீழே போய் அவனுடைய தோளின் மேல் ஏறி நின்றுகொண்டு சன்னலைத் திறந்து அவளை உசுப்புவேன். அவள் பெஞ்சின் மீது படுத்து நன்றாகத் தூங்கிக் கொண்டிருப்பாள். ஒரு நாள் அவள் தூங்கிக் கொண்டிருக்கும் பொழுது எழுப்பிவிட்டேன். அவள் எப்படிக் கூச்சலிட்டாள், தெரியுமா? அவளுக்கு என்னை அடையாளம் தெரியவில்லை. 'யார் அங்கே?' ஒரு வார்த்தை பேசக் கூட எனக்கு சக்தியில்லை. அவள் தாயார் புரண்டு கொண்டிருந்தாள். நான் என்னுடைய தொப்பியை எடுத்து அவளிடம் கொடுத்தேன். தொப்பியைத் தடவிப் பார்த்து யார் என்பதைத் தெரிந்துகொண்டாள். அவள் குதித்து எழுந்து என்னிடம் ஓடிவந்தாள். அந்தக் காலத்தில் நான் எதை விரும்பினாலும் அதை அடைந்தேன். அவள் எனக்குத் தயிரும் திராட்சைப் பழமும் எல்லாவற்றையும் கொண்டுவருவாள்'' என்று யெரோஷ்கா தன்னுடைய வாழ்க்கைக் கதைகளுக்கு ஒரு காரியவாதமான திருப்பத்தைக் கொடுத்தார். ''அவளைத் தவிர இன்னும் பலர் இருந்தார்கள்! அந்தக் காலத்தில் வாழ்க்கை வாழ்க்கையாக இருந்தது.''

''இப்பொழுது எப்படி இருக்கிறது?''

''இப்பொழுது நாம் நாய்க்குப் பின்னால் போகிறோம். காட்டுக்கோழியை மரத்தில் கட்டுவோம். பிறகு நீ சுட்டுத்தள்ளுவாய்.''

''நீங்கள் மார்யானாவைக் காதலிக்க விரும்புவீர்களா?''

''நீ நாயைப் பார்த்துக் கொண்டிரு. பொழுது சாய்வதற்குள் நான் உனக்குக் காட்டுகிறேன்'' என்று அந்தக் கிழவர் தன்னுடைய அன்புக்குரிய லியாமைச் சுட்டிக் காட்டினார்.

அவர்கள் இருவரும் பேச்சை நிறுத்திக்கொண்டார்கள்.

அவர்கள் சுமார் நூறு தப்படிகள் நடந்து சென்றார்கள். எப்பொழுதாவது ஒரு வார்த்தை பேசினார்கள். அந்தக் கிழவர் நின்று பாதையின் குறுக்கே கிடந்த காய்ந்த மிலாறைச் சுட்டிக்காட்டினார்.

''அது என்னவென்று நினைக்கிறாய்?'' என்று அவர் கேட்டார். ''அது சரியானபடிக் கிடக்கிறதா? இல்லை. அந்த மிலாறு தவறான முறையில் கிடக்கிறது.''

''ஏன் தவறு என்று சொல்கிறீர்கள்?''

அந்தக் கிழவர் இகழ்ச்சியாகச் சிரித்தார்.

''உனக்கு ஒன்றுமே தெரியவில்லை. நான் சொல்வதைக் கேள். ஒரு மிலாறு இப்படிக் கிடந்தால் நீ அதைத் தாண்டிப் போகக்கூடாது, அதைச் சுற்றிப்போக வேண்டும் அல்லது பாதையிலிருந்து அதைத் தூக்கிப் போட்டுவிட்டு 'கடவுளே காப்பாற்றுங்கள்!' என்று தோத்திரத்தைச் சொல்ல வேண்டும். பிறகு கடவுளின் ஆசியினால் நடக்க முடியும். அப்பொழுது தான் உனக்கு ஆபத்து வராது. அப்படித்தான் பெரியவர்கள் என்னிடம் அடிக்கடி கூறினார்கள்.''

''இது என்ன பிதற்றல்?'' என்றான் ஒலேனின். ''மார்யானாவைப் பற்றிப் பேசுங்கள். அவள் லுக்காஷ்காவுடன் சுற்றுகிறாளா?''

''ஸ்ஸ்! பேசாதே!'' என்று அந்தக் கிழவர் முணுமுணுத்து உரையாடலில் குறுக்கிட்டார். ''உற்றுக்கேள். இப்பொழுது நாம் அடர்த்தியான காட்டுக்குள் போய்க்கொண்டிருக்கிறோம்.''

அந்தக் கிழவர் ஓசையெழுப்பாமல் ஒற்றையடிப்பாதையில் நடந்தார்; அந்தப் பாதை நெருக்கமான புதர்கள் மண்டிய அடர்த்தியான காட்டுக்குள் சென்றது. அவர் அவ்வப்பொழுது முகத்தைச் சுளித்துக்கொண்டு ஒலேனினைப் பார்த்தார். ஒலேனின் சப்தமெழுப்பிக் கொண்டு நடந்து போய்க் கொண்டிருந்தான். அவனுடைய பூட்சுகளினால் தரையில் ஓங்கிமிதித்தான். அவன் துப்பாக்கியை கவனமின்றி வைத்துக்கொண்டு பாதையில் குறுக்கிட்ட மரக்கிளைகளில் சிக்கிக்கொண்டு நடந்தான்.

''இவ்வளவு ஓசையெழுப்பாதே, வீரனே! மெதுவாக

நட!'' என்று யெரோஷ்கா கோபத்துடன் முணுமுணுத்தார்.

மூடுபனி ஓரளவுக்கு மறைந்து ஈரம் படிந்திருந்த நாணல் கூரைகளை வெளிக்காட்டியது. மூடுபனி பனித் துளியாக மாறிவிட்டது. பாதையிலும் வேலியில் படர்ந் திருந்த கொடிகளின் இலைகளிலும் பெரிய துளிகள் தென் பட்டன. எல்லாப் புகைபோக்கிகளிலிருந்தும் புகை வெளி வந்து மிதந்து கொண்டிருந்தது. மக்கள் கிராமத்திலி ருந்து போய்க் கொண்டிருந்தார்கள்; சிலர் வேலை செய் வதற்கும், சிலர் ஆற்றங்கரைக்கும், சிலர் எல்லைக் காவல் நிலையத்துக்கும் போய்க் கொண்டிருந்தார்கள்.

இரண்டு வேட்டைக்காரர்களும் செடிகள் முளைத் திருந்த ஈரப் பாதையில் சேர்ந்து போய்க் கொண்டிருந் தார்கள். நாய்கள் வால்களை ஆட்டிக்கொண்டு, தமது எசமானர்களை அவ்வப்பொழுது திரும்பிப் பார்த்துக் கொண்டு அவர்களுக்குப் பக்கத்திலேயே ஓட்டமும் நடை யுமாக வந்து கொண்டிருந்தன. ஏராளமான கொசுக்கள் அவர்களைச் சுற்றிலும் பறந்து அவர்களைப் பின்தொ டர்ந்தன; அவர்களுடைய முதுகுகள், முகங்கள், கை களில் ஒட்டிக்கொண்டன. புல்லின் வாசனையும் காட்டின் ஈரமும் காற்றில் கலந்திருந்தன. ஒலேனின் அடிக்கடி பின்னால் திரும்பி கையில் குச்சியுடன் மாடுகளை விரட் டிக் கொண்டிருந்த பெண் உட்கார்ந்திருந்த வண்டியைப் பார்த்தான்.

## 19

கதிரவன் மூடுபனியைக் கலைத்து அதற்குள் ஊடு ருவ முயற்சி செய்வதைப் போன்ற உணர்ச்சி காற்றில் கலந்திருந்தது. மூடுபனி இலேசாகிவிட்டது; ஆனால் அது இன்னும் மரங்களின் உச்சிகளை மறைத்துக் கொண்டிருந் தது. அந்தக் காடு மிகவும் பெரியதாகத் தோன்றியது. காலடியை முன்னே எடுத்து வைத்த ஒவ்வொரு முறை யும் காட்சி மாறியது. மரத்தைப் போலத் தோன்றியது புதராக மாறியது, நாணற் தண்டுகள் மரத்தைப் போலப் பெரிதாக தோன்றின.

எங்கும் அமைதி நிலவியது. ஏற்கெனவே அவர்களு டைய காதுகளில் விழுந்த கிராமத்தின் ஓசைகள் இப்

பொழுது வேட்டைக்காரர்களின் காதுகளை எட்ட வில்லை. நாய்கள் முட்புதர்களைக் கடந்து போய்க் கொண்டிருந்தன. எப்பொழுதாவது பறவைகளின் கிறீச் சொலி கேட்டது. இந்தக் காடுகள் ஆபத்தானவை, இம் மாதிரி இடங்களில் அப்ரேக்குகள் மறைந்திருக்கக் கூடும் என்பது ஒலேனினுக்குத் தெரியும். காட்டில் போய்க் கொண்டிருப்பவனுக்குத் துப்பாக்கி மட்டும்தான் உறுதி யான பாதுகாப்பு என்பது அவனுக்குத் தெரியும். அவ னுக்கு பயம் ஏற்பட்டது என்று துல்லியமாகச் சொல்ல முடியாது; ஆனால் தன்னுடைய இடத்தில் வேறொருவர் இருந்தால் அந்த நபர் பயமடைவார் என்பதை அவன் உணர்ந்தான். அவன் கண்களைக் குறுக்கிக்கொண்டு மூடு பனி படர்ந்திருந்த ஈரப்பதமான காட்டிற்குள் பார்த் தான்; வெகு தூரத்திலிருந்து வருகின்ற மெலிதான ஓசை களை உற்றுக் கேட்டான். துப்பாக்கியை உறுதியாகப் பிடித்துக் கொண்டான். அவன் புதுமையான, ஆனால் அதே சமயத்தில் மனத்துக்குப் பிடித்தமான உணர்ச்சியை அனுபவித்தான்.

யெரோஷ்கா மாமா முன்னால் போய்க் கொண்டிருந் தார். அவர் இரட்டைத் தடங்கள் தென்பட்ட ஒவ்வொரு குட்டைக்குப் பக்கத்திலும் நின்று அத்தடங்களை கவன மாக ஆராய்ந்தார்; அவற்றை ஓலேனினிடம் சுட்டிக்காட் டினார். அவர் அநேகமாக ஒரு வார்த்தை கூடப் பேச வில்லை, அவர் பார்த்தவற்றைப் பற்றி எப்பொழுதா வது முணுமுணுக்க மட்டுமே செய்தார். அவர்கள் சென்ற பாதையில் எப்போதோ ஒரு வண்டி போயிருந்தது. ஆனால் நெடுங்காலத்துக்கு முன்பே அந்தத் தடங்களைப் புல் மேவிவிட்டது.இரண்டு பக்கங்களிலும் எல்ம் மற்றும் சினார் மரங்கள் மிகவும் அடர்த்தியாக வளர்ந்திருந்த படியால் கண்களால் அவற்றின் ஆழத்தை ஊடுருவிப் பார்க்க இயலவில்லை. அநேகமாக ஒவ்வொரு மரத்தி லும் அடி முதல் நுனிவரை காட்டுத்திராட்சைக் கொடி கள் போர்த்தியிருந்தன. சிறுபுதர்களில் முட்செடிகள் அடர்த்தியாக வளர்ந்திருந்தன. திறந்த வெளிகளில் காட்டுப் பழப்புதர்கள், நாணல் செடிகள் வளர்ந்து மூடி யிருந்தன. நாணல் தண்டுகளில் சாம்பல் நிறப் பூக்கள் அசைந்தாடிக் கொண்டிருந்தன. விலங்குகள் ஏற்படுத்திய



பெரிய பாதைகளும் காட்டுக் கோழிகள் ஏற்படுத்திய சிறிய பாதைகளும் அங்குமிங்கும் காணப்பட்டன. அவை ஒற்றையடிப் பாதையிலிருந்து ஆரம்பமாகி புதர்களின் அடியில் போய் முடிந்தன. இப்படிப்பட்ட காட்சியை ஒருபோதும் பார்த்திராத ஒலேனின் அந்தக் கன்னிக்காட்டின் செழுமையைக் கண்டு திகைத்தான். அந்தக் காடு, ஆபத்து, மர்மமான முறையில் முணுமுணுக்கின்ற கிழவர், ஒல்லியான, அழகுமிக்க மார்யானா, மலைகள்—இவை அனைத்தும் ஒலேனினுக்கு ஒரு கனவைப் போலத் தோற்றமளித்தன.

''ஒரு காட்டுக்கோழி இருப்பதை நாய் கண்டுபிடித்தது'' என்று அந்தக் கிழவர் முணுமுணுத்தார். அவர் சுற்றுமுற்றும் பார்த்துவிட்டுத் தொப்பியை முகத்தின் மீது இழுத்து விட்டுக் கொண்டார். ''உன் முகத்தை மறை. அது ஒரு காட்டுக்கோழி.'' அவர் ஒலேனினைக் கோபத்துடன் பார்த்து முகத்தைச் சுளித்தார்; கைகளையும் முழங்கால்களையும் மடக்கிக்கொண்டு ஊர்ந்தார். ''மனிதனுடைய முகத்தைக் கண்டால் அதற்குப் பிடிக்காது.''

அந்தக் கிழவர் திடீரென்று தன்னுடைய முழு உயரத்துக்கும் எழுந்துநின்று ஒரு மரத்தை உற்றுப்பார்க்க ஆரம்பித்தபொழுது ஒலேனின் இன்னும் அவருக்குப் பின்புறத்தில்தான் இருந்தான். அந்த மரத்தின் அடிப்பாகத்தில் நாய் குரைத்துக் கொண்டிருந்தது, மரத்திலிருந்த காட்டுக்கோழி நாயைப் பார்த்துக் கொக்கரித்தது. அப்போது ஒலேனின் அந்தக் காட்டுக் கோழியைப் பார்த்தான். அவன் அதைக் குறிபார்த்தபொழுது யெரோஷ்கா மாமாவின் துப்பாக்கி பீரங்கியைப் போன்ற சத்தத்துடன் வெடித்தது. மேலே பறப்பதற்கு முயற்சி செய்ய ஆரம்பித்த பறவை பூமியின் மீது விழுந்தது, அதன் இறகுகள் நாலா பக்கங்களிலும் சிதறி விழுந்தன. அவன் அந்தக் கிழவரை நோக்கிச் சென்றபொழுது மற்றொரு காட்டுக்கோழி பயந்து போய் மேலே பறந்தது. ஒலேனின் துப்பாக்கியை உயர்த்திப் பிடித்துக் குறிபார்த்துச் சுட்டான். பறந்து கொண்டிருந்த காட்டுக்கோழி கல்லைப் போலப் புதருக்குள் விழுந்தது.

''சபாஷ்!'' என்று பாராட்டினார் யெரோஷ்கா மாமா. பறந்து கொண்டிருக்கும் பறவையைச் சுடுவதில் அவர் திறமைசாலியல்ல. அவர்கள் காட்டுக்கோழிகளைத் தூக்கிக்கொண்டு மேலும் நடந்து சென்றார்கள். அந்த முயற்சியினாலும் பாராட்டினாலும் கிளர்ச்சியுற்ற ஒலேனின் அந்தக் கிழவருடன் பேசிக் கொண்டே நடந்தான்.

''நில்! நாம் இந்தப் புதருக்குள் போக வேண்டும்'' என்று சொல்லிக்கொண்டு அந்தக் கிழவர் அவனை நிறுத்தினார். ''நேற்று இந்த இடத்தில் கலைமானின் தடங்களைப் பார்த்தேன்.''

அவர்கள் அந்தப் புதருக்குள் திரும்பி சுமார் முந்நூறு தப்படிகள் நடந்தபிறகு நாணல் செடிகள் மண்டி

யிருந்த திறந்த வெளியை அடைந்தார்கள். அங்கே சில இடங்களில் தண்ணீர் தேங்கியிருந்தது. ஒலேனின் அந்த முதிய வேடரைப் பின்தொடர்ந்து சென்றான். அவன் இருபது தப்படிகள் அவருக்குப் பின்னாலிருந்த பொழுது அவர் கீழே குனிந்து அர்த்தத்துடன் தலையை ஆட்டு வதையும் கையை ஆட்டித் தன்னைக் கூப்பிடுவதையும் கண்டான். அவருடன் சேருவதற்கு நடந்துவந்த ஒலேனின் அங்கே மனிதனுடைய கால் தடங்களைப் பார்த்தான். யெரோஷ்கா மாமா அந்தக் கால் தடங்களை அவனிடம் சுட்டிக்காட்டினார்.

''இதைப் பார்த்தாயா?''

''ஆம், பார்த்தேன். அதற்கென்ன?'' என்று ஒலே னின் இயன்ற அளவுக்கு அமைதியாக பதிலளிப்பதற்கு முயற்சி செய்துகொண்டு கூறினான். ''ஒரு மனிதன் இங்கே நடந்திருக்கிறான்.''

அமெரிக்க எழுத்தாளர் கூப்பர் வர்ணித்த பத்ஃபாய்ந் தர் (வழிகாண்பவன்) என்னும் கதாநாயகன் மற்றும் அப்ரேக்குகளைப் பற்றிய எண்ணங்கள் அவன் மனத் தில் பளிச்சென்று தோன்றின. அந்தக் கிழவர் எவ்வளவு முன்சாக்கிரதையுடன் நடந்துசெல்கிறார் என்பதை கவ னித்தபொழுது அதைப் பற்றி அவரிடம் கேட்கலாமா என்று அவனால் முடிவு செய்வதற்கு இயலவில்லை. அந்த மர்மச் சூழல் உண்மையான ஆபத்தினால் ஏற்படுவதா அல்லது வேட்டையின் வசீகரத்தில் உண்டாவதா என் பதைப் பற்றி அவனுக்கு சந்தேகம் ஏற்பட்டது.

''சீ! இவை என்னுடைய கால் தடங்கள்தான்'' என்று அந்தக் கிழவர் அலட்டிக்கொள்ளாமல் பேசினார். பிறகு அவர் புல்செடிகளைச் சுட்டிக்காட்டினார். அங்கே ஒரு காட்டு மிருகத்தின் அநேகமாக அழிந்து போன தடங்கள் தென்பட்டன.

கிழவர் மேலும் நடந்துகொண்டே இருந்தார். இப் பொழுது ஒலேனின் அவருடன் சேர்ந்தாற்போல நடந் தான். அவர்கள் இன்னும் இருபது தப்படிகள் நடந்த பிறகு தாழ்வான பகுதியில் இறங்கி புதரை அடைந்தார் கள். அங்கே ஒரு பெரிய பேரி மரம் இருந்தது. அதற்குக் கீழே புல் வளரவில்லை. அந்தக் கறுப்பு மண்ணின் மீது ஒரு காட்டு மிருகத்தின் புதிய சாணம் கிடந்தது.

எங்கும் காட்டுத்திராட்சைக் கொடிகளால் சூழப்பட்டிருந்த அந்த இடம் மூடப்பட்ட இளமரக்காவைப் போல இருண்டும் குளிர்ச்சியாகவும் இருந்தது.

''அது இன்று காலையில் இங்கே இருந்திருக்கிறது'' என்று அந்தக் கிழவர் பெருமூச்சுடன் கூறினார். ''பார்! அது இங்கே தங்கியிருந்ததை இந்தப் பொந்து காட்டுகிறது.''

காட்டில் திடீரென்று ஒரு பயங்கரமான சத்தம், கிளைகள் முறிந்து விழுகின்ற சத்தம் கேட்டது. அவர்கள் நின்றிருந்த இடத்திலிருந்து சுமார் பத்து தப்படிகள் தூரம்தான் இருக்கும். அவர்கள் இருவரும் திடுக்கிட்டுப் போய் துப்பாக்கிகளைப் பிடித்தார்கள்; ஆனால் கண்களுக்கு ஒன்றுமே தெரியவில்லை; குச்சிகள் முறிகின்ற சத்தம் மட்டுமே கேட்டது. ஒரு கண நேரம் முறைப்படியான, வேகமாகப் பாய்ந்தோடுகின்ற குளம்பொலி கேட்டது. பிறகு அந்த முறிவுச் சத்தம் மந்தமான இரைவொலியாக மாறியது; அது அந்த அமைதியான காட்டில் எதிரொலித்துக்கொண்டு அப்பால், வெகு தூரத்துக்கு அப்பால் போய்க் கொண்டிருந்தது. ஒலேனினுடைய இதயத்தில் எதையோ இழந்து விட்டதைப் போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. அவன் திகைப்புடன் அந்த அமைதி நிறைந்த காட்டின் பசுமைக்குள் உற்றுப் பார்த்தான். கடைசியில் திரும்பி அந்தக் கிழவரைப் பார்த்தான். யெரோஷ்கா மாமா மார்பின் மீது துப்பாக்கியை வைத்தபடியே அசையாமல் நின்று கொண்டிருந்தார். அவருடைய தொப்பி தலைக்குப்பின்னால் தொங்கியது. அவருடைய கண்கள் அசாதாரணமான ஒளியுடன் பிரகாசித்தன. அவருடைய திறந்த வாயில் மஞ்சள் காவி படிந்த உடைந்த பற்கள் தெரிந்தன. அவர் அப்படியே கல்லாக மாறிவிட்டதைப் போல நின்று கொண்டிருந்தார்.

''பெரிய கலைமான்!'' என்று அவர் உரத்த குரலில் கூறினார். அவர் மனமுறிவில் தன்னுடைய துப்பாக்கியைக் கீழே போட்டுவிட்டுத் தன்னுடைய வெண்மையான தாடியைப் பிய்த்துக்கொள்ள ஆரம்பித்தார். ''இங்கேதான் நின்று கொண்டிருந்திருக்கிறது! ஒரே ஒரு வினாடி நேரம் முன்னால் வந்திருந்தால் நாம் அதைச் சுட்டிருக்க முடியும்! முட்டாள்! முட்டாள்!'' அவர் தன்னுடைய

தாடியை ஆத்திரத்தோடு பிடித்திழுத்தார். ''முட்டாள்! பன்றிப்பயல்!'' என்று அவர் தாடியை இன்னும் இழுத்துக் கொண்டு திரும்பத் திரும்பக் கூறினார். அந்த மூடுபனி யில் காட்டிற்குள் ஏதோ ஒன்று பறந்தோடிக் கொண் டிருப்பதைப் போலத் தோன்றியது. தப்பியோடிக் கொண் டிருந்த கலைமானின் குளம்பொலி வெகு தூரத்துக்கு அப்பால், இன்னும் அப்பால் மேன்மேலும் மங்கலாகக் கேட்டது...

ஒலேனின் களைப்படைந்து, பசியுடன், வலிமையுடன் அந்தக் கிழவரோடு திரும்பிய பொழுது இருட்டிக் கொண்டிருந்தது. உணவு தயாராக இருந்தது. அவன் அந்த முதிய வேடருடன் சேர்ந்து உணவு சாப்பிட்டான், குடித்தான். அவர்கள் வெளி வராந்தாவுக்குச் சென்ற பொழுது அவன் இதயத்தில் கிளர்ச்சியும் மகிழ்ச்சியும் நிறைந்திருந்தன. கதிரவன் மறைந்து கொண்டிருந்த பின் புலத்தில் மலைகள் மறுபடியும் அவன் கண்களுக்கு முன் னால் தோன்றின. அந்தக் கிழவர் மறுபடியும் வேட்டை யைப் பற்றி, அப்ரேக்குகளைப் பற்றி, தன்னுடைய காமப் பெண்களைப் பற்றி, தன்னுடைய கட்டுப்பாடில் லாத, வீர சாகச வாழ்க்கையைப் பற்றி முடிவில்லாத கதைகளைக் கூறினார். அந்த ஒப்பற்ற இளம் அழகி மார் யானா மறுபடியும் அந்த சுற்றுவட்டகையில் இங்குமங் கும் போய்க் கொண்டிருந்தாள்...

## 20

தாங்கள் அந்தக் கலைமானை மிரண்டோடும்படி செய்த இடத்துக்கு மறுநாள் ஒலேனின் தனியாகச் சென் றான். அந்த கிராமத்தின் நுழைவாயில் வழியாகச் செல் கின்ற பாதை நீளமானது என்பதால் அவன் அந்தப் பாதையில் போகவில்லை. மற்ற எல்லோரையும் போல முள்வேலியைக் குனிந்து கடந்து வெளியே சென்றான். முட்களில் சிக்கிக் கொண்ட கோட்டை விடுவித்துக் கொண்டு அவன் வெளியில் வந்த சிறிது நேரத்தில் அவ னுக்கு முன்னே ஓடிக் கொண்டிருந்த நாய் இரண்டு காட் டுக்கோழிகளை விரட்டிப் பறக்கும்படி செய்தது. அவன் முட்புதருக்குள் முழுவதும் நுழைந்தவுடனே ஒவ்வொரு காலடிச் சத்தத்திலும் காட்டுக் கோழிகள் பறக்கத்

தொடங்கின. (முதிய வேடர் முந்திய நாளன்று அவனிடம் இந்த இடத்தைக் காட்டவில்லை.) ஒலேனின் பன்னிரண்டு வேட்டுக்களில் ஐந்து காட்டுக்கோழிகளைச் சுட்டுக்கொன்றான்; அவற்றைச் சேகரிப்பதற்காகப் புதருக்குள் குனிந்து சென்றபொழுது அவன் தன்னை மிகவும் சிரமப்படுத்திக் கொண்டான்; அவனுடைய உடலில் வியர்வை வழிந்தது. அவன் நாயைத் தன்னிடம் கூப்பிட்டான். துப்பாக்கியைத் திறந்து அதற்குள் தோட்டாவை வைத்தான். கொசுக்களைத் தன்னுடைய கோட்டின் கைநுனிகளால் விரட்டிக் கொண்டு சப்தமெழுப்பாமல் தாங்கள் முந்திய நாள் போன இடத்தை அடைந்தான். ஆனால் அந்த நாயைக் கட்டுப்படுத்த முடியவில்லை. அது புதிய தடங்களை மோப்பம் பிடித்துக் கொண்டிருந்தது. அவன் இன்னொரு சோடி காட்டுக்கோழிகளைச் சுட்டுக் கொன்றான். அதனால் ஏற்பட்ட தாமதத்தின் காரணமாக அவன் அந்த இடத்துக்குப் போய்ச் சேர்ந்த பொழுது நடுப்பகலாகிவிட்டது.

அன்றைய பொழுது குறிப்பிடத்தக்க அளவுக்குத் தெளிவாகவும், அமைதியாகவும் வெப்பமாகவும் இருந்தது. காலைப் பொழுதின் குளிர்ச்சி காட்டிலிருந்து முற்றிலும் மறைந்துவிட்டது. எண்ணற்ற கொசுக்கள் அவன் முகத்தில், முதுகில் கைகளில் அப்பியிருந்தன. அவை நாயின் முதுகில் மொய்த்தபொழுது அந்த நாயின் கறுப்பு நிறம் சாம்பல் நிறமாக மாறியது. கோட்டின் நிறமும் அப்படியே மாறியது. அந்தக் கோட்டை ஊடுருவி அவை கொட்டின. ஒலேனின் தன்னைக் கொடுமைப் படுத்திய கொசுக்களிடமிருந்து தப்புவதற்குத் தயாராகி விட்டான். அந்த கிராமத்தில் கோடைகாலத்தைக் கழிக்க முடியாது என்று கூட அவனுக்குத் தோன்றியது. அவன் வீட்டுக்குத் திரும்பிவிட வேண்டியதுதான் என்று புறப்பட்டான். ஆனால் இப்படிப்பட்ட கஷ்டங்களைச் சமாளித்துக் கொண்டுதான் மனிதர்கள் வாழ்கிறார்கள் என்பதை நினைத்தவுடன் அதைத் தாங்கிக்கொள்வதென்று உறுதியாக முடிவு செய்தான். கொசுக்கள் விரும்பிய அளவுக்கு அவனைக் கடிப்பதற்கு அனுமதி கொடுத்தான். இதில் விசித்திரமானது என்னவென்றால் நடுப்பகல் வந்த பொழுது கொசுக்கடி அவனுக்குப் பிடித்தமானதாக

இருக்கத் தொடங்கியது. எல்லாத் திசைகளிலும் தன்னைச் சூழ்ந்திருக்கின்ற இந்தக் கொசுக்கள், கையினால் முகத்தைத் தடவுகின்ற பொழுது வழிகின்ற இந்தக் கொசுப்பசை, உடல் முழுவதிலும் ஏற்படுகின்ற தாங்க முடியாத இந்த அரிப்பு இல்லையென்றால் அந்தக் காடு அதனது இயல்பையும் கவர்ச்சியையும் தன்னைப் பொருத்தமட்டில் இழந்திருக்கும் என்றுகூட அவனுக்குத் தோன்றியது. முன்னர் பயங்கரமாகவும் தாங்கிக் கொள்ள முடியாததாகவும் காணப்பட்ட எண்ணற்ற கொசுக்கள், செடிகொடிகளின் ஒழுங்கற்ற தன்மை, விலங்குகள் பறவைகளின் இந்தக் கானகம், இருண்ட இந்தப் பசுங்காடு, நறுமணமுள்ள இந்த வெப்பக்காற்று, தேரெக்கிலிருந்து எல்லா இடங்களிலிருந்தும் கசிந்து வந்ததும் தொங்கிக் கொண்டிருந்த இலைகளுக்குக் கீழாகக் குமிழியிட்டு வந்ததுமான இந்தச் சேற்று நீர் வாய்க்கால்கள் ஆகியனவற்றுக்கு, மிகவும் பொருத்தமானதாக இருந்ததால் இப்போது ஏற்றுக் கொள்ளத்தக்கனவாக மாறத் தொடங்கின.

முந்திய நாளன்று கலைமானைப் பார்த்த இடத்துக்கு அவன் போனபொழுது அங்கே ஒன்றுமில்லாதபடியால் அவன் ஓய்வெடுக்க விரும்பினான். கதிரவன் உச்சியிலிருந்தது. அவன் திறந்த இடத்துக்கு வந்தபொழுது அல்லது ஒரு பாதையைப் பின்பற்றி நடந்து சென்றபொழுது வெப்பம் அவன் தலையையும் கழுத்தையும் சுட்டது. அவனுடைய இடைவாரில் கட்டித் தொங்கவிடப்பட்டிருந்த ஏழு காட்டுக்கோழிகளும் பெருஞ்சுமையாக இருந்து அவனுடைய வேகத்தைக் குறைத்தன. அவன் அந்தக் கலைமான் சென்ற பாதையைத் தேடினான். அவன் புதர்கள் வழியாகப் புதர்க் காட்டுக்குள் ஊர்ந்து முந்திய நாள் அந்தக் கலைமான் படுத்திருந்த இடத்துக்கு, அது ஓய்வெடுத்த மறைவிடத்துக்கு வந்து சேர்ந்தான். அவன் தன்னைச் சுற்றிலும் இலைகளின் இருண்ட, பசுமையான சுவரைக் கண்டான். அந்தக் கலைமான் படுத்திருந்த பொந்தை, காய்ந்த சாணத்தை, கலைமானின் முழங்கால்கள் பதிந்த சுவடுகளை, அதன் குளம்புகள் கிளறிப்போட்ட மண்ணை, முந்திய நாளில் ஏற்பட்ட தன்னுடைய கால்தடங்களைக் கண்டான். அந்த இடம்

குளிர்ச்சியாகவும் வசதியாகவும் இருந்தது. அவனுக்குக் கவலைகளும் இல்லை, விருப்பங்களும் இல்லை.

அவனிடம் திடீரென்று எல்லாவற்றின் மீதும் காரணமில்லாத மகிழ்ச்சியும் அன்பும் கலந்த விசித்திரமான உணர்ச்சி ஏற்பட்டது. அவன் குழந்தையாக இருந்தபொழுது செய்ததைப் போல சிலுவையிட்டுக் கொள்வதற்கு ஆரம்பித்தான், யாருக்கோ நன்றி கூறினான். திடீரென்று இந்த எண்ணம் மிகவும் அதிகமான தெளிவுடன் அவன் மனத்தில் உதித்தது:

''நான், திமீத்ரி ஒலேனின், மற்ற எல்லோரிடமிருந்தும் வேறுபட்டிருக்கின்ற ஒரு பிறவி இங்கே தன்னந்தனியாகப் படுத்திருக்கிறேன். இந்த இடம் எங்கே இருக்கிறது என்பது கடவுளுக்குத்தான் தெரியும். இதே இடத்தில் ஒரு கலைமான், கிழட்டுக் கலைமான், அழகான பிராணி வசிக்கிறது. அது ஒருவேளை மனிதனுடைய முகத்தை ஒருபோதும் பார்த்திருக்காது. இந்த இடத்திற்கு எந்த மனிதனும் இதற்கு முன்பு வந்ததில்லை, அல்லது வருவதற்கு எண்ணியதில்லை. இங்கே நான் உட்கார்ந்திருக்கிறேன். இளமையான மரங்களும் தொன்மையான மரங்களும் என்னைச் சூழ்ந்திருக்கின்றன. ஒவ்வொரு மரத்தின் மீதும் காட்டுத்திராட்சைக் கொடிகள் படர்ந்திருக்கின்றன. என்னைச் சுற்றி ஏராளமான காட்டுக் கோழிகள். அவை ஒன்றையொன்று விரட்டிக் கொண்டிருக்கின்றன. ஒருவேளை செத்துப்போன நண்பர்களை மோப்பம் பிடிக்கலாம்.''

அவன் தனது காட்டுக் கோழிகளைத் தடவினான், அவற்றைத் தூக்கிப் பார்த்தான்; இரத்தக் கறைபட்ட தன்னுடைய கையைக் கோட்டின் மீது துடைத்துக் கொண்டான்.

''ஒருவேளை நரிகளும் என்னை மோப்பம் பிடிக்கலாம். அவை அதிருப்தியான மூஞ்சிகளுடன் மறு பக்கத்திற்குச் செல்லலாம். என்னைச் சுற்றிக் கொசுக்கள் இலைகளின்—அவை அவற்றுக்கு மாபெரும் தீவுகளைப் போலத் தோன்றக்கூடும்—நடுவில் பறந்துவருகின்றன, ரீங்காரம் செய்துகொண்டு காற்றில் மிதந்துவருகின்றன. ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, நூறு, ஆயிரம், மில்லியன் கொசுக்கள். அவை ஒவ்வொன்றுமே ஏதோ ஒரு

விசேஷமான காரணத்துக்காக என்னைச் சுற்றிப் பறக்கின்றன. நான் மற்ற எல்லோரிடமிருந்தும் எந்த அளவில் வேறுபட்டிருக்கின்ற தனிப் பிறவியாக இருக்கிறேனோ அதே மாதிரியான பிறவிகள்.''

கொசுக்கள் எதைப் பற்றிச் சிந்திக்கின்றன, ரீங்காரம் செய்துகொண்டு பறக்கின்றன என்பதைப் பற்றித் தெளிவான கருத்து அவனுக்குக் கிடைக்க ஆரம்பித்தது: ''குழந்தைகளே! இந்தப் பாதையில் வா'ங்கள்! இங்கே உண்பதற்கு நல்ல பொருள் இருக்கிறது'' என்று அவன் மீது உட்காரும்பொழுது கொசுக்கள் பாடுகின்றன.

தான் ருஷ்யாவின் பிரபுத்துவக் குடும்பத்தைச் சிறிதும் சேர்ந்தவனல்ல, மாஸ்கோவின் உயர்ந்த சமூக வட்டாரங்களைச் சேர்ந்தவனல்ல, இந்த நபர் அல்லது அந்த நபருடைய உறவினன் அல்ல, வெறும் கொசு அல்லது தன்னைச் சுற்றியிருக்கின்ற காடுகளில் இப்பொழுது வசிக்கின்ற காட்டுக்கோழி அல்லது கலைமான் போன்றவனே என்பது அவனுக்குத் தெளிவாயிற்று. ''அவற்றைப் போலவேதான், யெரோஷ்கா மாமாவைப் போலவேதான், நான் என்னுடைய அற்பமான வாழ்க்கையை வாழ்ந்து முடித்தபிறகு அவற்றைப் போலவே செத்து விடுவேன். 'அதற்குப் பிறகு புல்தான் முளைக்கும்' என்று அவர் கூறியது சரியானதே.''

''அது புல்லாக மட்டுமே இருந்தால்கூட என்ன?'' அவன் சிந்தனைகள் தொடர்ந்தன. ''எப்படியிருந்தாலும் நான் வாழத்தான் வேண்டும். மகிழ்ச்சியோடு இருக்கத்தான் வேண்டும். ஏனென்றால் என்னிடம் ஒரேயொரு ஆசைதான் இருக்கிறது, அதுதான் மகிழ்ச்சி. நான் எப்படி இருந்தாலும் அது ஒன்றாகத்தான் இருக்கும். மற்ற எல்லோரையும் போல நானும் மிருகமாக இருந்தால் என்மீது புல் முளைக்கும் வேறு ஒன்றும் நடைபெறாது. அல்லது எல்லாவற்றையும் உள்ளடக்கிய தெய்விக நிலையின் ஒரு பகுதி பதிப்பிக்கப்பட்ட சட்டமாக இருந்தால்; எப்படியிருப்பினும் இயன்ற அளவுக்கு சிறந்த முறையில் நான் வாழ வேண்டும். மகிழ்ச்சியோடிருப்பதென்றால் நான் எப்படி வாழ வேண்டும்? நான் இதுநாள் வரை மகிழ்ச்சியோடில்லாதது ஏன்?''

அவன் தன்னுடைய கடந்த கால வாழ்க்கையைப்

பின்னோக்கிப் பார்க்க ஆரம்பித்தான். அது அருவருப்புடையதாக அவனுக்குத் தோன்றியது. அவனுடைய தேவைகள் அதிகமாக இல்லாத பொழுதுகூட அவன் தனக்கே மிகவும் அதிகமான அளவுக்குச் சுயநலக்காரனாகத் தோன்றினான். அவன் சிந்தனை செய்து கொண்டிருந்த நேரம் முழுவதும் பிரகாசமான பச்சை நிற இலைகளை, வானத்தில் கீழே இறங்கிக் கொண்டிருந்த கதிரவனை, தெளிவான வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். தான் இன்னும் அந்த உயர்ந்த மட்டத்தில் மகிழ்ச்சியுடனிருப்பதை அவன் உணர்ந்தான்.

''என்னை மகிழ்ச்சியுடையவனாகச் செய்வது எது? கடந்த கால வாழ்க்கையில் எந்த நோக்கத்தைப் பின்பற்றினேன்?'' என்று அவன் தன்னைக் கேட்டுக்கொண்டான். ''என்னுடைய சொந்த நலன்களைப் பற்றி எவ்வளவு கவனமுடையவனாக இருந்திருக்கிறேன்! எவ்வளவு சலனபுத்தியுடன் நடந்து கொண்டிருக்கிறேன்! என்னுடைய நடவடிக்கைகளின் விளைவுகள் எப்படிப்பட்டவை? அவமானம், வேதனை ஆகியவைதான்! எவ்வளவு சிறியதைக் கொண்டு மகிழ்ச்சி அடையமுடியும் என்பது இப்பொழுது எனக்குத் தெரிகிறது!''

ஒரு புதிய உலகத்தைத் திடீரென்று பார்த்ததைப் போல அவன் உணர்ந்தான். ''இதுதான் மகிழ்ச்சி'' என்று அவன் தனக்குள் சொல்லிக்கொண்டான். ''மற்றவர்களுக்காக வாழ்வதுதான் மகிழ்ச்சி. இது தெளிவாகப் புரிகிறது. மகிழ்ச்சிக்கான ஆசையுடன் மனிதன் படைக்கப்பட்டிருக்கிறான். ஆகவே அது நியாயமான ஆசைதான். தன்னலங்காரத்துடன் பூர்த்தி செய்தால் அதாவது, செல்வம், புகழ், சுகபோகம், காதல் ஆகியவற்றை அடைவதில் தன்னுடைய சக்தியை உபயோகித்தால், சந்தர்ப்பங்கள் இந்த ஆசையைத் திருப்தி செய்வதை இயலாததாக்கிவிடலாம். ஆகவே இந்த ஆசைகள் தவறானவை. மகிழ்ச்சி அடையவேண்டும் என்ற ஆசை நியாயமானது. வெளியிலுள்ள நிலைமைகளிலிருந்து சுதந்திரமான முறையில் எப்பொழுதும் எந்த ஆசைகளையும் நிறைவேற்ற முடியும்?—காதல், சுய மறுப்பு!''

இது புதிய உண்மையாக அவனுக்குத் தோன்றியது. இதைக் கண்டுபிடித்தது அவனுக்குப் பேரானந்தத்தை

யும் மனக்கிளர்ச்சியையும் கொடுத்தபடியால் அவன் துள்ளியெழுந்தான். இயன்ற அளவுக்கு வேகமாக யாருக்காகத் தன்னை தியாகம் செய்து கொள்ளலாம், யாருக்கு உதவி செய்யலாம், யாரைக் காதலிக்கலாம் என்று அவன் பொறுமையில்லாமல் சிந்திக்கத் தொடங்கினான்.

''எனக்கென்று எதுவும் அவசியமில்லை என்பதால் நான் மற்றவர்களுக்காக ஏன் வாழக் கூடாது?'' என்று சிந்தித்தான். அவன் துப்பாக்கியை எடுத்துக் கொண்டான். இதைப் பற்றி இன்னும் நன்றாக சிந்திப்பதற்கு, நன்மை செய்வதற்குரிய சந்தர்ப்பத்தைக் கண்டுபிடிப்பதற்கு இயன்ற அளவுக்கு வேகமாக வீட்டுக்குத் திரும்ப வேண்டும் என்னும் நோக்கத்துடன் புதர்க்காட்டிலிருந்து வெளியே வந்தான். திறந்த பகுதிக்கு வந்ததும் அவன் சுற்றுமுற்றும் பார்த்தான். சூரியன் மரங்களின் உச்சிகளுக்குப் பின்னால் மறைந்திருந்தது. வெப்பம் தணிந்து குளிர்ச்சி ஏற்பட்டிருந்தது. அந்த இடம் அவனுக்கு முற்றிலும் தெரியாததாக, கிராமத்தைச் சுற்றியுள்ள பிரதேசத்திலிருந்து வித்தியாசமானதாக அவனுக்குத் தோன்றியது. எல்லாம்—பருவநிலையும் காட்டின் இயல்பும்—திடீரென்று மாறிவிட்டன. மேகங்கள் வானத்தை மறைத்திருந்தன. காற்று மரங்களின் உச்சியினூடே குலவையிட்டது. அவனைச் சுற்றிலும் நாணற் செடிகள் மற்றும் மக்கிப் போய்க் கொண்டிருந்த மரங்கள் மட்டுமே தெரிந்தன. ஏதோ ஒரு மிருகத்தை விரட்டிக்கொண்டு ஓடிப் போயிருந்த தன்னுடைய நாயைக் கூப்பிடத் தொடங்கினான். அந்த அத்துவானத்தில் அவனுடைய குரல் தனியாக ஒலித்துத் திரும்ப எதிரொலித்தது. திடீரென்று பயங்கரமான அச்ச உணர்ச்சி அவனைப் பற்றியது. அவன் அஞ்சத் தொடங்கினான். அவன் அப்ரேக்குகளையும், அவர்கள் செய்ததாக அவன் கேள்விப்பட்டிருந்த படுகொலைகளையும் நினைத்துக் கொண்டான். ஒவ்வொரு புதருக்குப் பின்னாலும் ஒரு செச்சென் மறைந்து கொண்டிருப்பதாக, அவன் தன் மீது பாய்வதற்குத் தயாராக இருப்பதாக அவன் கற்பனை செய்ய ஆரம்பித்தான். தன்னுடைய உயிருக்காகப் போராடி செத்துக் கொண்டிருப்பதாக அல்லது கோழையைப் போல ஓடுவதாக அவன் கற்பனை செய்தான். கடவுள்

மற்றும் எதிர்கால வாழ்க்கையைப் பற்றிய சிந்தனை நெடுங்காலமாக அவனிடம் ஏற்பட்டிராத பேரொளியுடன் தோன்றியது. ஆனால் அவனைச் சுற்றி எங்கும் அதே இருண்ட, கண்டிப்பு மிக்க, ஒழுங்கில்லாத இயற்கை காணப்பட்டது.

''நான் இங்கே இறந்துவிடலாம், எந்த நல்ல காரியத்தையும் நிறைவேற்றாமல் இறந்துவிடலாம், இங்கே, மனிதர்களுடைய கண்களிலிருந்து நெடுந்தூரத்துக்கு அப்பால் இறந்துவிடக் கூடும் என்றால் எனக்கென்று வாழ்வதால் என்ன பயன்?'' என்று அவன் தன்னைத் தானே கேட்டுக்கொண்டான்.

கிராமம் இருப்பதாக அவன் கருதிய திசையில் நடந்தான். அவன் வேட்டையை முற்றிலும் மறந்துவிட்டான். அவன் தாங்கமுடியாதபடிக் களைத்துப் போயிருப்பதாக உணர்ந்தான். அவன் ஒவ்வொரு புதரையும் ஒவ்வொரு மரத்தையும் அச்சத்துடன்—அநேகமாக பீதியுடன்—பார்த்தான். எந்த வினாடியிலும் தன் உயிருக்கு ஆபத்தேற்படும் என்று எதிர்பார்த்தான். நேர்பாதையிலிருந்து வெகுதூரம் விலகிச் சென்ற பிறகு தேரெக்கிலிருந்து மணற்பாங்கான, குளிர்ந்த தண்ணீர் ஓடிக் கொண்டிருந்த வாய்காலுக்கு வந்து சேர்ந்தான். திசை தவறிவிடக் கூடாது என்பதற்காக அந்த வாய்காலை ஒட்டிப் போக முடிவு செய்தான். அந்த வாய்கால் வழியாகச் சென்றால் எங்கே போக முடியும் என்பது இப்பொழுதுகூட அவனுக்குத் தெரியவில்லை. அவனுக்குப் பின்னாலிருந்த நாணற்புதரில் திடீரென்று ஏதோ விழுகின்ற சத்தம் கேட்டது. அவன் திடுக்கிட்டான். அவன் கைகள் துப்பாக்கியைப் பற்றின. சூடேறிப் போய் மூச்சிறைத்துக் கொண்டிருந்த அவனுடைய நாய் கால்வாயின் குளிர்ந்த நீரில் குதித்து தண்ணீரைக் குடித்துக் கொண்டிருந்த சத்தமே அது. ஒலேனினுக்கு வெட்கமேற்பட்டது.

அவன் குனிந்து நாய்க்குப் பக்கத்தில் நின்றுகொண்டு தண்ணீரை அள்ளிக்குடித்தான். பிறகு அந்த நாய் ஓடிய திசையில் நடந்தான். அதைப் பின்பற்றிப் போனால் கிராமத்துக்குப் போய்விட முடியும் என்று எதிர்பார்த்தான். ஆனால் நாய் துணையாக இருந்தாலும் அவனுக்கு முன்னெப்போதுமில்லாத அளவுக்கு அது இருளடர்ந்து



தோன்றியது. காடு இருள் சூழ்ந்திருந்தது. காற்று அங்கே யிருந்த பழமையான, முரிந்துபோன மரங்களின் உச்சிகளில் மேன்மேலும் ஆவேசமாக வீசியது. பெரிய பறவைகள் அந்த மரங்களிலிருந்த தமது கூடுகளைச் சுற்றிப் பறந்துகொண்டு கூக்குரலிட்டன. அங்கே செடி, கொடிகள் அடர்த்தியாக வளரவில்லை. காற்றில் முணுமுணுக்கின்ற நாணற் புதர்களும் ஒன்றும் வளராத, மணற்பாங்கான பகுதிகளும் மேன்மேலும் அதிகமாகத் தென்பட்டன. மணற் பகுதிகளில் காட்டு மிருகங்களின் தடங்கள் பதிந்திருந்தன. காற்றின் ஊளையுடன் சேர்ந்து ஒரு சோகமான, சலிப்பூட்டுகின்ற சத்தம் கேட்டது. அவனுடைய ஆன்மா முழுவதும் மனச்சோர்வு நிறைந்திருந்தது. அவனது இடைவாரில் முதுகுக்குப் பின்னால் தொங்கிக் கொண்டிருந்த காட்டுக்கோழிகளைத் தொட்டுப் பார்த்தான். ஒரு கோழி குறைந்திருந்தது. அந்தப் பறவை எங்கோ பிய்ந்து விழுந்துவிட்டது. இரத்தக் கறையுடன் அதன் கழுத்தும் தலையும் மட்டுமே இடைவாரில் தொங்கிக் கொண்டிருந்தன. தன் வாழ்க்கையில் ஒருபோதும் இவ்வளவு அதிகமாகப் பயந்ததில்லை என்று அவன் உணர்ந்தான். கடவுளுக்குத் தோத்திரம் சொல்ல ஆரம்பித்தான். எந்தவொரு நல்ல காரியமும் செய்யாமல் மரணமடைந்துவிடலாம் என்னும் ஒரே பயம் அவனுக்கு ஏற்பட்டது. வாழவேண்டும், ஏதாவதொரு மாபெரும் சுயமறுப்புச் சாதனையை நிறைவேற்றுவதற்காக வாழவேண்டும் என்னும் விருப்பம் அவனிடம் மிகவும் அதிகமான முனைப்புடன் தோன்றியது.

## 21

கதிரவன் திடீரென்று அவனுடைய இதயத்திற்குள் பிரகாசித்ததைப் போல அவனுக்குத் தோன்றியது. ருஷ்ய மொழி உரையாடலின் ஒலிகள் கேட்டன; தேரெக் வேக மாக, முறையாக ஓடிக் கொண்டிருக்கின்ற சத்தம் கேட் டது. அவன் இரண்டு தப்படிகள் நடப்பதற்குள் அவ னுக்கு முன்பாக பழுப்பு மஞ்சள் நிறத்தில் ஓடிக் கொண் டிருக்கும் தண்ணீரின் மேற்பரப்பு, கரைகளிலும் திட்டு களிலும் ஈரமான, பழுப்பு மணல், தொலைவிலிருக்கின்ற ஸ்டெப்பி, காவல் பரண், சேணம் பூட்டப்பட்டு கால் மடக்கிக் கட்டப்பட்ட நிலையில் புல்மேய்ந்து கொண் டிருக்கின்ற குதிரை, மலைகள் ஆகியவை தோன்றின. செங் கதிரோன் மேகங்களுக்குப் பின்னாலிருந்து கண நேரம் தலை நீட்டிப் பார்த்தான்; அதன் கடைசிக் கதிர்கள் ஆற்றின் குறுக்கே, நாணற்செடிகளின் மீது விழுந்து கூரை யின் மீதும் அங்கே நின்று கொண்டிருந்த கஸாக்குகள் கோஷ்டியின் மீதும் பிரகாசித்தன. அந்த கோஷ்டியில் லுக்காஷ்காவின் வாட்டசாட்டமான உருவம் தானாகவே ஒலேனினுடைய கவனத்தை ஈர்த்தது என்பதில் வியப்பு இல்லை.

அவனுக்கு நிம்மதி ஏற்பட்டது; எவ்விதமான காரண மும் இல்லாமல் பூரணமாக மகிழ்ச்சியடைந்தான். அவன் தேரெக்கின் கரை மீதுள்ள நீஷ்னி-பிரதோத்ஸ்கி காவல் நிலையத்துக்கு வந்துசேர்ந்து விட்டான். அந்தக் காவல் நிலையம் ஒரு அமைதியான செச்சென் கிராமத் துக்கு எதிரில் அமைக்கப்பட்டிருந்தது. அவன் கஸாக்கு களுக்கு முகமன் கூறினான்; யாருக்காவது நன்மை செய் வதற்கு இன்னும் சந்தர்ப்பம் கிடைக்காததால் வீட்டுக் குள் சென்றான். அந்த வீட்டிலும் அவனுக்கு சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. கஸாக்குகள் அவனை ஆர்வத்துடன் வரவேற்கவில்லை. அவன் களிமண்ணால் மெழுகப்பட் டிருந்த வராந்தாவுக்குச் சென்று சுற்றுமுற்றும் பார்த்த படி சிகரெட் குடித்துக் கொண்டு அமர்ந்திருந்தான். கஸாக்குகள் அவனைப் பற்றிச் சிறிதும் அக்கறை காட்ட வில்லை; ஏனென்றால் அவன் சிகரெட் புகைத்தது முதற் காரணம். அன்றைய மாலை நேரத்தில் அவர்களுடைய

கவனம் வேறொன்றில் ஈடுபட்டிருந்தது இரண்டாவது காரணம்.

எதிரி செச்சென்கள் சிலர், லுக்காஷ்காவினால் கொல்லப்பட்ட அப்ரேக்கின் உறவினர்கள், பணம் கொடுத்து உடலை மீட்டுச் செல்வதற்காக மலைகளிலிருந்து வந்திருந்தார்கள். அவர்கள் ஒரு மொழிபெயர்ப்பாளனையும் கூட்டிக் கொண்டு வந்திருந்தார்கள். கிராமத்திலிருந்து கஸாக்குகளின் தலைமை அதிகாரிகள் வருவதற்காகக் காத்திருந்தார்கள்.

இறந்த அப்ரேக்கின் சகோதரன் உயரமாகவும் எடுப்பான தோற்றத்துடனும் இருந்தான். அவனுடைய தாடி ஒழுங்காகக் கத்தரித்து விடப்பட்டு சிவப்புச் சாயம் பூசப்பட்டிருந்தது. அவன் கிழிந்து போன செர்கெஸ்காவும் காகேஷிய மென்மயிர் தொப்பியும் அணிந்திருந்தாலும் ஒரு அரசனைப் போன்ற கம்பீரத்துடனும் செருக்குடனும் இருந்தான். அவன் முகத்தோற்றத்தில் செத்துப் போன அப்ரேக்கைப் போலவே இருந்தான். அவன் யாரையும் ஏறிட்டுக்கூடப் பார்க்கவில்லை. செத்துப்போனவனுடைய உடலை நோக்கி ஒரு முறைகூடக் கண்களைத் திருப்பவில்லை. அவன் நிழலில் குத்துக் காலிட்டு தரையில் உட்கார்ந்து கொண்டு புகைக்குழாயில் புகை பிடித்துக் கொண்டிருந்தான், தரையின்மீது எச்சிலைத் துப்பினான். அவ்வப்பொழுது கட்டைக்குரலில் கட்டளைகளைப் பிறப்பித்தான். அவனுடைய சகா அதிகமான பணிவுடன் அவற்றைக் கேட்டான். அவன் ஒரு ஜிகித், ருஷ்யர்களை முற்றிலும் வேறு சூழ்நிலைகளில் பலமுறை பார்த்தவன், ஆகவே இப்பொழுது அவன் ஆச்சரியப்படுவதற்குரிய அல்லது அவனுடைய கவனத்தை ஈர்ப்பதற்குரிய முறையில் அங்கே ஒன்றுமில்லை என்பது தெளிவாகத் தெரிந்தது.

ஒலேனின் அந்தப் பிணத்தின் அருகில் சென்று அதை உற்றுப்பார்க்க ஆரம்பித்தான். ஆனால் இறந்தவனின் சகோதரன் அவனை அமைதியாக, இகழ்ச்சியாகப் பார்த்தான்; கோபத்தோடு படபடவென்று ஏதோ கூறினான். மொழிபெயர்ப்பாளன் இறந்தவனுடைய முகத்தை ஒரு துணியினால் வேகமாக மூடினான். அந்த ஜிகித்தின் முகத்தில் தோன்றிய கம்பீரத்தையும் கடுமையையும் பார்த்த

பொழுது ஒலேனினுக்குப் பேச நாவெழவில்லை. அவ னுக்கு முகமன் கூறிவிட்டு எந்த கிராமத்திலிருந்து வந் தான் என்று கேட்டான். ஆனால் செச்சென் அவனை லேசாகப் பார்த்துவிட்டு, இகழ்ச்சியுடன் எச்சிலைத் துப்பி விட்டு முகத்தைத் திருப்பிக் கொண்டான். அந்த மலை வாசி அவனிடம் அலட்சியமாக, சிறிதும் அக்கறையில் லாமல் நடந்துகொண்டது ஒலேனினுக்கு மிகவும் வியப் பாக இருந்தது. மலைவாசி முட்டாளாக இருக்கவேண் டும் அல்லது ருஷ்ய மொழியைப் புரிந்து கொள்ளாதவ னாக இருக்கவேண்டும் என்று அவன் தன்னை சமாதானம் செய்துகொண்டான்.

ஒலேனின் அவனுடைய தோழனிடம் பேசினான். ஒற்ற னாகவும் மொழிபெயர்ப்பாளனாகவும் பணியாற்றிய அவனுடைய தோழன் அவனைப் போலவே கிழிந்த உடையை அணிந்திருந்தான். ஆனால் கருமுடியுடனும் சுறுசுறுப்புடனும் இருந்தான். அவனுடைய பற்கள் மிக வும் வெண்மையாகவும் கறுப்புக்கண்கள் பிரகாசமாகவும் இருந்தன. அவன் சிறிதும் உரையாடலை வெறுக்கவில்லை தனக்கு ஒரு சிகரெட் தருமாறு கேட்டு வாங்கிக் கொண் டான்.

''மொத்தம் ஐந்து சகோதரர்கள் இருந்தார்கள்'' என்று அந்த மொழிபெயர்ப்பாளன் அரைகுறை ருஷ்ய மொழியில் பேசினான். ''ருஷ்யர்கள் ஏற்கெனவே மூன்று நபர்களைக் கொன்றுவிட்டார்கள். இரண்டு பேர்தான் மிஞ்சினர். அவன் ஒரு ஜிகித், அபாரமான ஜிகித்'' என்று அந்த மொழிபெயர்ப்பாளன் செச்செனைச் சுட்டிக்காட் டிக் கூறினான். ''செத்துப்போன அப்ரேக்கின் பெயர் அகமத்-கான். அவன் கொல்லப்பட்டபொழுது இவன் அக் கரையில் நாணற்காட்டில் மறைந்துகொண்டு இருந்தான். அவன் எல்லாவற்றையும் பார்த்தான். அகமத்-கானின் உடலைப் படகில் தூக்கி வைத்து, இக்கரைக்குக் கொண்டு வந்தது எல்லாவற்றையும் பார்த்தான். அவன் இரவு வரை அங்கேயே உட்கார்ந்திருந்தான். அவன் அந்தக் கிழவனைச் சுட்டுக்கொல்ல விரும்பினான். ஆனால் மற்ற வர்கள் அவனை விடவில்லை.''

லுக்காஷ்கா அவர்கள் இருந்த இடத்துக்கு வந்து தரையில் உட்கார்ந்தான்.

''நீ எந்த கிராமத்திலிருந்து வருகிறாய்?''

''அதோ, அந்த மலையில் இருக்கும் கிராமம்'' என்று பதிலளித்த மொழிபெயர்ப்பாளன் தேரெக்கின் குறுக்கே ஒரு நீலநிற மூடுபனிக் கணவாயைச் சுட்டிக்காட்டினான். ''உனக்கு சுயூக்-சூ தெரியுமா? அதிலிருந்து பத்து வெர்ஸ் டாக்கள் தூரத்தில் இருக்கிறது.''

''சுயூக்-சூவில் உனக்கு கிரேய்-கானைத் தெரியுமா?'' என்று லுக்காஷ்கா கேட்டான். ''அவர் என்னுடைய நண் பர்.'' அவன் தன்னுடைய நண்பரைப் பற்றிப் பெரு மைப்பட்டான் என்பது வெளிப்படையாகவே நன்கு தெரிந்தது.

''அவர் என் அடுத்த வீட்டுக்காரர்'' என்று மொழி பெயர்ப்பாளன் பதிலளித்தான்.

''அப்படியா?'' என்றான் லுக்காஷ்கா. அவன் அதிக மான அக்கறையுடன் அந்த மலைவாசியுடன் தார்த்தா ரிய மொழியில் பேச ஆரம்பித்தான்.

சிறிது நேரத்தில் கஸாக்குப் படையின் லெப்டினென் டும் கிராமத் தலைவரும் குதிரைகளில் வந்தார்கள். அவர் களுக்குப் பின்னால் இரண்டு கஸாக்குகள் வந்தார்கள். புதிதாக அங்கே வந்த அதிகாரிகளில் ஒருவரான லெப் டினென்ட் கஸாக்குகளுக்கு முகமன் கூறினார்; ஆனால் 'தாங்கள் நலமா, அதிகாரி அவர்களே!' என்று இராணு வத்தில் பதில் முகமன் சொல்வதைப் போல அங்கே யாரும் சொல்லவில்லை. அங்குமிங்கும் யாராவது சிலர் தலை தாழ்த்தி வணக்கத்தைத் தெரிவித்தார்கள். அவ் வளவுதான். சிலர் எழுந்து நிமிர்ந்து நின்றார்கள். லுக் காஷ்காவும் அவர்களுடன் சேர்ந்து நின்றான். எல்லைக் காவல் நிலையத்தில் எல்லாம் திருப்திகரமாக இருக்கிறது என்று சார்ஜென்ட் தெரிவித்தார். கஸாக்குகள் விளை யாடுகின்ற பட்டாள விளையாட்டைப் போல இவை எல்லாமே ஓலேனினுக்கு வேடிக்கையாகத் தோன்றின. ஆனால் சம்பிரதாயங்கள் சீக்கிரமாகவே மிகவும் எளிமை அடைந்தன. மற்றவர்கள் எல்லோரையும் போல திறமை உள்ள கஸாக்கான லெப்டினென்ட் மொழிபெயர்ப்பாள னுடன் தார்த்தாரிய மொழியில் சுறுசுறுப்பாகப் பேசலா னார். ஒரு ஆவணம் தயாரிக்கப்பட்டு மொழிபெயர்ப் பாளனிடம் கொடுக்கப்பட்டுப் பணம் பெற்றுக் கொள்

ளப்பட்டது. பிறகு அவர்கள் பிணத்தை நெருங்கினார்கள்.

''கவ்ரீலவ் லுக்கா—யார் அந்த நபர்?'' என்று லெப்டினென்ட் கேட்டார்.

லுக்காஷ்கா தொப்பியைக் கையிலெடுத்துக் கொண்டு முன்னே வந்தான்.

''உன்னைப் பற்றி கர்னலுக்கு அறிக்கை அனுப்பியிருக்கிறேன். அவர்கள் என்ன செய்வார்களோ, எனக்குத் தெரியாது. உனக்கு சிலுவைப் பதக்கம் அளிக்க வேண்டும் என்று சிபாரிசு செய்திருக்கிறேன். சார்ஜென்ட் பதவிக்கு உனக்கு இன்னும் வயதாகவில்லை. உனக்கு எழுதப்படிக்கத் தெரியுமா?''

''தெரியாது.''

''நிஜமாகவா? ஆள் வாட்டசாட்டமாக இருக்கிறாய்!'' என்று அந்த லெப்டினென்ட் தளபதியைப் போன்ற தோரணையில் பேசினார். ''தொப்பியைத் தலையில் மாட்டிக்கொள். நீ கவ்ரீலவ் குடும்பத்தைச் சேர்ந்தவனா? 'அகன்ற முதுகு'க்குச் சொந்தக்காரனா?''

''அவருடைய மருமகன்'' என்று சார்ஜென்ட் பதிலளித்தார்.

''தெரியும், எனக்குத் தெரியும். சரி, அதைத் தூக்கிக் கொண்டு போங்கள். நீங்கள் உதவி செய்யுங்கள்'' என்று அவர் கஸாக்குகளைத் திரும்பிப் பார்த்துக்கொண்டு கூறினார்.

லுக்காஷ்காவின் முகம் மகிழ்ச்சியினால் பிரகாசித்தது. அது வழக்கத்தைக் காட்டிலும் இன்னும் அழகாகத் தோன்றியது. அவன் சார்ஜென்டிடமிருந்து திரும்பி வந்தான்; தொப்பியைத் தலையில் அணிந்துகொண்டு மறுபடியும் ஒலேனினுக்குப் பக்கத்தில் உட்கார்ந்தான்.

பிணத்தைத் தூக்கிக் கொண்டு போய்ப் படகில் வைத்த பிறகு அகமத்-கானின் சகோதரனாகிய அந்த செச்சென் ஆற்றங் கரையை நோக்கிச் சென்றான். கஸாக்குகள் ஒன்றும் பேசாமல் அவனுக்கு வழிவிட்டார்கள். அவன் ஆற்றங்கரையிலிருந்து ஒரே பாய்ச்சலில் துள்ளிக்குதித்துப் படகில் உட்கார்ந்தான். பிறகு அவன் எல்லா கஸாக்குகளையும் கணநேரம் பார்த்தான். அவன் முதல் தடவையாக அவர்களைப் பார்த்ததை ஒலேனின்



குறித்துக்கொண்டான். பிறகு அவன் தன்னுடைய சகா வான மொழிபெயர்ப்பாளனிடம் ஏதோ கேட்டான். அந்த மொழிபெயர்ப்பாளன் பதில் சொல்லிவிட்டு லுக் காஷ்காவை சுட்டிக்காட்டினான். செச்சென் லுக்காஷ் காவை உற்றுப் பார்த்துவிட்டு மெதுவாக ஆற்றின் அக் கரையை நோக்கித் திரும்பினான். அவனுடைய முகத்தில் வெறுப்பைக் காட்டிலும் இதயத்தைக் குளிர வைக்கின்ற இகழ்ச்சி அதிகமாக இருந்தது. அவன் மேலும் சில வார்த் தைகள் பேசினான்.

''அவன் என்ன கூறினான்?'' என்று ஒலேனின் அந்த

சுறுசுறுப்பான மொழிபெயர்ப்பாளனிடம் கேட்டான்.

''நீங்கள் எங்களைக் கொல்கிறீர்கள். நாங்கள் உங்களைக் கொல்வோம். இது எப்பொழுதும் சங்கிலியைப் போலத் தொடரும்'' என்று அவன் அரைகுறையாக பதிலளித்தான். பிறகு தன் வெண்மையான பற்களைக் காட்டிச் சிரித்துக்கொண்டு துள்ளிக் குதித்துப் படகில் உட்கார்ந்தான்.

செத்துப் போனவனுடைய சகோதரன் படகில் அசையாமல் உட்கார்ந்து அக்கரையை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். அவனிடம் வெறுப்பும் இகழ்ச்சியும் மிகவும் நிறைந்திருந்தபடியால் இக்கரையில் எதையுமே கவனிப்பதற்குரியதாக அவன் கருதவில்லை. அந்த மொழிபெயர்ப்பாளன் படகின் பின்புறத்தில் நின்றுகொண்டு துடுப்பை இரண்டு பக்கங்களிலும் மாற்றிப் போட்டு வலித்தான். அவன் திறமையாகப் படகை ஆற்றின் குறுக்கே செலுத்திக் கொண்டு ஓயாமல் பேசிக் கொண்டிருந்தான். நீரோட்டம் படகைச் சாய்வாகக் கொண்டு சென்றபொழுது, படகு மேன்மேலும் சிறிதாகிக்கொண்டு வந்தது, பேச்சுக் குரல்கள் அநேகமாக மறைந்தன, கடைசியில் அவர்கள் அக்கரையில் போய் இறங்குவது தெரிந்தது. அங்கே அவர்களுடைய குதிரைகள் நின்று கொண்டிருந்தன. அவர்கள் படகிலிருந்து பிணத்தை வெளியே எடுத்து அந்தக் குதிரை அதிகமாக முரண்டு செய்ததைப் பொருட்படுத்தாமல் குதிரைச் சேணத்தின் மேல் வைத்துக் கட்டினார்கள். பிறகு குதிரைகளின் மேல் ஏறி உட்கார்ந்து பாதை வழியே மெதுவாகச் சென்றார்கள். அவர்கள் ஒரு கிராமத்தைக் கடந்து சென்ற பொழுது அவர்களைப் பார்ப்பதற்கு ஏராளமானவர்கள் ஓடிவந்தார்கள்.

ஆனால் ஆற்றின் ருஷ்யக் கரையிலிருந்த கஸாக்குகள் அதிகமான திருப்தியும் மகிழ்ச்சியும் அடைந்தார்கள். எங்கும் சிரிப்பும் கேலிப் பேச்சும் கேட்டது. லெப்டினென்டும் கிராமத் தலைவரும் குடிசைக்குள் சென்று பசியாறினார்கள். லுக்காஷ்காவினால் தன்னுடைய மகிழ்ச்சியை அடக்க முடியவில்லை. அவன் பிரகாசமான முகத்துடன் ஒலேனினுக்குப் பக்கத்தில் முழங்கைகளை முழங்கால்களின் மீது வைத்துக்கொண்டு உட்கார்ந்தான். அவன்

கையில் ஒரு குச்சியை வைத்துக்கொண்டு அதன் தோலைச் சுரண்டிக் கொண்டிருந்தான்.

''நீங்கள் எதற்காகப் புகை பிடிக்கிறீர்கள்?'' என்று லுக்காஷ்கா ஆவலை அடக்க முடியாதவன் போலக் கேட்டான். ''அது நல்லதா?''

அந்தக் கூட்டத்தில் ஒலேனின் இருப்புக் கொள்ளாமலிருப்பதையும் கஸாக்குகள் மத்தியில் அவன் தன்னந் தனியாக உட்கார்ந்திருப்பதையும் அவன் கவனித்தபடியால் அவனிடம் வலியப் பேசினான்.

''சும்மாதான். அது எனக்குப் பழக்கம். நீ ஏன் கேட்கிறாய்?'' என்று ஒலேனின் பதிலளித்தான்.

''ஹ்ம்! இங்குள்ள எங்களவர்கள் யாரும் புகை பிடித்தால் அது அவருக்கு ஒத்துக்கொள்ளாது. பாருங்கள், மலை எவ்வளவு பக்கத்தில் இருக்கிறது'' என்று லுக்காஷ்கா கணவாயைச் சுட்டிக்காட்டிக் கொண்டு கூறினான். ''ஆனால் அங்கே போவதென்றால் மிகவும் கஷ்டப்பட வேண்டியிருக்கும்!.. நீங்கள் வீட்டுக்குத் தனியாகப் போகமுடியுமா? இருட்டிவிட்டதே. நீங்கள் விரும்பினால் நான் கூட வருகிறேன். சார்ஜென்டிடம் அனுமதி கேளுங்கள்'' என்றான் லுக்காஷ்கா.

''எவ்வளவு அருமையான இளைஞன்!'' என்று ஒலேனின் அந்த கஸாக்கின் குதூகலம் நிறைந்த முகத்தை உற்றுப் பார்த்துக் கொண்டு எண்ணினான். அவன் மார்யானாவையும் வேலிக்கதவுக்குப் பின்னால் அவன் காதில் விழுந்த 'இச்' ஒலியையும் நினைத்துக்கொண்டான். லுக்காஷ்காவுக்காக, அவன் படிக்காததற்காக ஒலேனின் வருத்தப்படத் தொடங்கினான். ''எவ்வளவு முட்டாள்தனம்! எவ்வளவு குழப்பம்!'' என்று அவன் நினைத்தான். ''ஒரு மனிதன் இன்னொருவனைக் கொன்றுவிட்டான். ஏதோ நல்ல காரியம் செய்ததைப் போல அவனிடம் மகிழ்ச்சியும் திருப்தியும் ஏற்படுகின்றன. இதைப் பற்றி மகிழ்ச்சி அடைவதற்கு எந்தக் காரணமும் கிடையாது என்று அவனிடம் எதுவுமே சொல்லவில்லையா? மற்றவர்களைக் கொல்வதில் மகிழ்ச்சி ஏற்படாது, தியாகம் செய்வதில் தான் மகிழ்ச்சி இருக்கிறது என்று எதுவுமே சொல்லவில்லையா?''

''தம்பி! கொல்லப்பட்ட செச்செனின் சகோதர

னிடம் சிக்கிவிடாதே!'' என்று படகு திரும்பிப் போவதைப் பார்க்க வந்திருந்த கஸாக்குகளில் ஒருவன் லுக்காஷ்கா விடம் கூறினான். ''அவன் உன்னைப் பற்றிச் சொன் னதை நீ கேட்டாயா?''

லுக்காஷ்கா தலையை நிமிர்த்தினான்.

''நான் தீக்கை கொடுத்தேனே, அவனா?'' என்று கேட்டான். அவன் செச்செனையே அப்படிக் கேலியாகக் குறிப்பிட்டான்.

''நீ தீக்கை கொடுத்தவன் இனிமேல் மறுபடியும் எழுந்துவரப் போவதில்லை. ஆனால் அவனுடைய சகோ தரன் இன்னும் உயிரோடிருக்கிறான்.''

''அவன் உயிரோடு திரும்பியதற்குக் கடவுளுக்கு நன்றி தெரிவிக்கட்டும்'' என்று லுக்காஷ்கா சிரித்துக்கொண்டு கூறினான்.

''நீ ஏன் அதைப் பற்றி மகிழ்ச்சியடைகிறாய்? உன் சகோதரன் கொல்லப்பட்டிருந்தால் நீ மகிழ்ச்சி அடை வாயா?'' என்று ஒலேனின் கேட்டான்.

ஒலேனினை உற்றுப்பார்த்த கஸாக்கின் கண்களில் ஏளனக்குறி தோன்றியது. ஒலேனின் சுட்டிக்காட்ட விரும் பிய அர்த்தத்தை அவன் முழுமையாகப் புரிந்துகொண் டான் என்பதில் சந்தேகமில்லை, ஆனால் அவன் இத் தகைய அற்பமான விஷயங்களைக் காட்டிலும் உயர்ந்த நிலையில் இருந்தான்.

''சில சமயங்களில் அப்படியும் நடக்கும். அவர்கள் நம்முடைய சகோதரர்களைக் கொல்லவில்லையா?''

## 22

லெப்டினென்டும் கிராமத் தலைவரும் குதிரைகளின் மீது ஏறிச் சென்றார்கள். ஒலேனின் லுக்காஷ்காவைத் திருப்தி செய்வதற்காகவும் இருண்ட காட்டினூடே தனி யாகப் போக விரும்பாததனாலும் லுக்காஷ்காவைத் துணையாக அனுப்புமாறு கேட்டுக்கொண்டான். அனுமதி அளிக்கப்பட்டது. அவன் மார்யானாவைப் பார்க்க விரும் பலாம் என்று ஒலேனின் ஊகித்தான். மேலும் இனிய சுபாவமும் ஓயாத பேச்சும் கொண்ட அந்த கஸாக்கு துணையாக வருவதைப் பற்றி அவன் மகிழ்ச்சி அடைந் தான். அவனுடைய கற்பனையில் லுக்காஷ்காவும் மார்

யானாவும் இயற்கையாகவே இணைந்திருந்தார்கள்; அவர்களைப் பற்றி நினைப்பதை அவன் விரும்பினான். ''அவன் மார்யானாவைக் காதலிக்கிறான். ஒரு வேளை நானும் அவளைக் காதலிக்கலாம்'' என்று ஒலேனின் தனக்குள் சொல்லிக்கொண்டான். அவர்களிருவரும் அந்த இருண்ட காட்டின் வழியாகப் போய்க் கொண்டிருந்த பொழுது விசித்திரமான, புதுமையான பாச உணர்ச்சி அவனிடம் மேலோங்கியது. லுக்காஷ்காவும் குறிப்பிடத்தக்க அளவில் மகிழ்ச்சியாக இருந்தான். ஒவ்வொரு கோணத்திலும் வித்தியாசமாக இருந்த அந்த இரண்டு இளைஞர்களுமே பாசத்தைப் போன்ற ஒரு உணர்ச்சிக்கு உட்பட்டார்கள். அவர்களுடைய கண்கள் சந்தித்த ஒவ்வொரு முறையும் அவர்கள் குதூகலமாகச் சிரிக்க விரும்பினார்கள்.

''நீ எந்த வாசல் வழியாகப் போகவேண்டும்?'' என்று ஒலேனின் கேட்டான்.

''நடு வாசல். அந்தச் சேறுவரை உங்களுடன் வருகிறேன். அதற்கு அப்பால் பயப்படுவதற்கு ஒன்றுமில்லை.''

ஒலேனின் சிரித்தான்.

''நான் ஏன் பயப்படவேண்டும்? நீ திரும்பிப் போ. உனக்கு மிகவும் நன்றி. நான் தனியே போகிறேன்.''

''பரவாயில்லை! எனக்கு வேறு வேலை எதுவும் இல்லை. நீங்கள் பயப்படுவது தப்பா? நாங்கள் கூட பயப்படுவதுண்டு'' என்று லுக்காஷ்கா சிரித்துக்கொண்டு கூறினான். அவன் பேச்சு ஒலேனினுடைய சுயமரியாதைக்கு ஆறுதலாக இருந்தது.

''அப்படியானால் என்னுடன் வா. நாம் பேசிக் கொண்டிருக்கலாம், மதுவருந்தலாம். நீ நாளைக்கு வீட்டுக்குப் போ.''

''இரவில் தங்குவதற்கு எனக்கு இடமில்லை என்று நினைக்கிறீர்களா?'' என்று லுக்காஷ்கா புன்சிரிப்புடன் பதிலளித்தான். ''நான் உடனே திரும்ப வேண்டுமென்று சார்ஜென்ட் உத்தரவிட்டிருக்கிறார்.''

''நேற்று மாலையில் உன் குரலைக் கேட்டேன். நீ பாட்டுப் பாடிக் கொண்டிருந்தாய்; மேலும் நான் உன்னைப் பார்த்தேன்.''

''அது ஒன்றும் புதுமையல்ல...'' என்று லுக்காஷ்கா தலையை ஆட்டினான்.

''என்ன, உனக்குத் திருமணம் நடைபெறப் போகிற தாமே? உண்மைதானா?'' என்று ஒலேனின் கேட்டான்.

''நான் கல்யாணம் செய்துகொள்ள வேண்டும் என்று என் அம்மா விரும்புகிறாள். ஆனால் இன்னும் நான் குதிரை வாங்கவில்லை.''

''நீ இராணுவத்தில் நிரந்தரப் பிரிவில் உள்ளவன் தானே?''

''அதெப்படி? நான் இப்பொழுதுதான் சேர்ந்திருக் கிறேன். இன்னும் குதிரை இல்லை. அதை ஏற்பாடு செய்ய எந்த வழியும் கிடையாது. அதனால்தான் நான் திருமணம் செய்து கொள்ளவில்லை.''

''குதிரை என்ன விலை இருக்கும்?''

''அன்றைக்கு ஆற்றுக்கு அப்பால் குதிரை ஒன்றுக்கு விலை கேட்டார்கள். அவர்கள் அறுபது ரூபிளுக்கு ஒத்துக் கொள்ளவில்லை. ஆனால் அது நொகாய் குதிரை.''

''என்னிடம் ஆணைகளை எடுத்துச் செல்லும் படை வீரனாக வேலை பார்க்கிறாயா? நான் அதற்கு ஏற்பாடு செய்யட்டுமா? உனக்குக் குதிரை தருகிறேன்'' என்று ஒலேனின் திடீரென்று உணர்ச்சிவசப்பட்டுக் கூறினான். ''கண்டிப்பாகத் தருகிறேன். என்னிடம் இரண்டு குதிரை கள் இருக்கின்றன. எனக்கு இரண்டு குதிரைகள் வேண் டியதில்லை.''

''ஏன் வேண்டாம் என்கிறீர்கள்'' என்று லுக்காஷ்கா சிரித்துக்கொண்டு கேட்டான். ''நீங்கள் ஏன் எனக்கு ஒரு குதிரை கொடுக்க வேண்டும்? கடவுள் புண்ணியத்தால் எனக்கு ஒரு குதிரை கிடைக்கும்.''

''உண்மையாகத்தான் நான் சொல்கிறேன்! அல்லது என்னிடம் வேலை பார்க்கமாட்டாயா?'' என்று ஒலே னின் கேட்டான். லுக்காஷ்காவுக்கு ஒரு குதிரை கொடுக்க நினைத்ததைப் பற்றி அவனுடைய மனத்தில் மகிழ்ச்சி பொங்கியது. ஆனால் அவனுக்குக் குழப்பமாக இருந் தது; அவனுடைய மனச்சாட்சி உறுத்தியது. அந்தத் தடுமாற்றத்திலிருந்து தப்புவதற்கு அவன் முயற்சி செய் தான். ஆனால் அவனுக்கு வார்த்தைகள் கிடைக்கவில் லை.

லுக்காஷ்கா முதலில் பேச ஆரம்பித்தான்.

''ருஷ்யாவில் உங்களுக்குச் சொந்த வீடு இருக்கிறதா?''

தனக்குச் சொந்தமாக ஒரு வீடு மட்டுமல்ல, சில வீடுகள் இருக்கின்றன என்பதை ஒலேனினால் சொல்லாதிருக்க முடியவில்லை.

''உங்கள் வீடு அழகாக இருக்குமா? இங்கேயுள்ள வீடுகளைக் காட்டிலும் பெரியதா?'' என்று லுக்காஷ்கா ஆர்வத்துடன் கேட்டான்.

''ரொம்பப் பெரிசு! பத்து மடங்கு பெரிசு! மூன்று மாடிக் கட்டிடம்'' என்று ஒலேனின் விளக்கினான்.

''ஆனால் உங்களிடம் எங்களிடமிருப்பதைப் போன்ற குதிரைகள் உண்டா?''

''என்னிடம் நூறு குதிரைகள் இருக்கின்றன. ஒவ்வொரு குதிரையும் முந்நூறு—நானூறு ரூபிள் மதிப்புள்ளது. முந்நூறு வெள்ளி ரூபிள்கள்! பந்தயக் குதிரைகள்!.. ஆனால் இங்கேயுள்ள குதிரைகளை எனக்கு மிகவும் பிடிக்கிறது.''

''இங்கே எப்படி வந்தீர்கள்? உங்களுடைய சொந்த விருப்பத்தினாலா அல்லது வேறு காரணமுண்டா?'' என்று லுக்காஷ்கா கேட்டான். அவனுடைய குரலில் கேலிக்குறி இன்னும் இருந்தது. அவர்கள் போய்க் கொண்டிருந்த வழியில் ஒரு பாதை பிரிவதை அவன் சுட்டிக்காட்டினான். ''இங்கேதான் நீங்கள் பாதையிலிருந்து விலகிவிட்டீர்கள். நீங்கள் வலது பாதையில் வந்திருக்க வேண்டும்.''

''நான் சொந்த முடிவின் பேரில் இங்கே வந்தேன். உங்களுடைய நாட்டைப் பார்க்கவேண்டும், படையெடுப்பில் கலந்துகொள்ள வேண்டும் என்று விரும்பினேன்'' என்று ஒலேனின் பதிலளித்தான்.

''படையெடுப்பில் கலந்துகொள்ள வேண்டுமென்று எனக்கும் ஆசைதான். உஸ்! நரிகள் ஊளையிடுகின்றன. கேளுங்கள்!'' என்றான் லுக்காஷ்கா.

''ஆனால் ஒரு மனிதனைக் கொன்றதைப் பற்றி நீ பயப்படவில்லையா?'' என்று ஒலேனின் கேட்டான்.

''எதற்காக நான் பயப்படவேண்டும்? ஆனால் படையெடுத்துப் போவதைத்தான் மிகவும் விரும்புகிறேன்...'' என்று லுக்காஷ்கா மறுபடியும் கூறினான்.

''ஒருவேளை நாம் இருவரும் சேர்ந்து போகலாம். எங்கள் படைப்பிரிவு திருவிழாவுக்கு முன்பாக புறப்படும்.

உங்களுடைய குதிரைப் படைப் பிரிவும் அதனுடன் சேர்ந்து புறப்படும்.''

''உங்களுடைய சொந்த விருப்பத்தின்பேரில் இங்கே வந்திருக்கிறீர்களா! உங்களுக்கு வீடு, குதிரைகள் இருக்கின்றன, பண்ணையாட்கள் இருக்கிறார்கள். என்னிடம் இவை இருந்தால் நான் சுகபோகமாக இருப்பேன்... உங்கள் பதவி என்ன?''

''நான் யுங்கெர் பதவி வகிக்கிறேன்; ஆனால் பதவி உயர்வுக்கு சிபாரிசு போயிருக்கிறது.''

''உங்கள் சொந்த வீட்டு வாழ்க்கையைப் பற்றிப் பிரமாதமாகச் சொல்கிறீர்கள். அப்படியிருந்தால் நான் அந்த வீட்டை விட்டு வர மாட்டேன். என்னுடைய சொந்த வீட்டை விட்டுக்கூட வெளியே வரமாட்டேன். இங்கே எங்களுடன் வசிப்பது உங்களுக்குப் பிடித்திருக்கிறதா?''

''ஆமாம். மிகவும் பிடித்திருக்கிறது'' என்றான் ஒலேனின்.

அவர்கள் இருவரும் இப்படி அந்தரங்கமாகப் பேசிக் கொண்டு கிராமத்தை அடைந்தபொழுது மிகவும் இருட்டி விட்டது. காட்டின் கரிய இருள் அவர்களை இன்னும் சூழ்ந்திருந்தது. காற்று மரங்களின் உச்சிகளில் ஓலமிட்டது. நரிகள் அவர்களுடைய குதிகால்களுக்குப் பின்னால் ஊளையிட்டுக் கொண்டும், சிரித்துக் கொண்டும் கூக்குரலிட்டுக் கொண்டும் ஓடிவருவதைப் போலத் தோன்றியது. ஆனால் அவர்களுக்கு முன்பாக கிராமத்தில் பெண்கள் பேசிக் கொண்டிருக்கும் சத்தமும் நாய்களின் குரைப்பொலியும் கேட்டன. குடிசைகளின் உருவரைகளை அவர்கள் தெளிவாகப் பார்த்தார்கள். சன்னல்களில் விளக்குகள் பிரகாசித்தன. மாட்டுச் சாணம் எரிக்கப்படுகின்ற நெடி காற்றில் மிகவும் அதிகமாக இருந்தது.

இந்த கிராமம்தான் தன்னுடைய வீடு, தன்னுடைய குடும்பம், தன்னுடைய எல்லா மகிழ்ச்சியுமே, இந்த கிராமத்தில் இவ்வளவு மகிழ்ச்சியுடன் வசிப்பதைப் போல தான் ஒருபோதும் வசித்ததில்லை, இனி ஒருபோதும் வசிக்கப் போவதில்லை என்று ஒலேனின், சிறப்பாக அந்த இரவு நேரத்தில் உணர்ந்தான். அந்த இரவு நேரத்தில் அவர்கள் எல்லோர் மீதும், குறிப்பாக லுக்காஷ்கா

மீதும் அவன் எவ்வளவு பாச உணர்ச்சியைக் கொண்டிருந்தான்!

ஒலேனின் வீட்டுக்குத் திரும்பியதும் தானே குதிரை லாயத்துக்குச் சென்று அவன் கிரோஸ்னயாவில் வாங்கிய குதிரையை—அவன் எப்பொழுதும் சவாரி செய்த குதிரை அல்ல, ஆனால் மற்றொரு குதிரை, அது இளமைப் பருவத்தைத் தாண்டியிருந்த போதிலும் எவ்விதத்திலும் மட்டமான குதிரை அல்ல—வெளியே கொண்டுவந்தான். ஒலேனின் அந்தக் குதிரையை லுக்காஷ்காவுக்கு அன்பளிப்பாகக் கொடுத்தபொழுது அவன் திகைப்படைந்தான்.

''நீங்கள் ஏன் குதிரையை எனக்குத் தருகிறீர்கள்?'' என்று லுக்காஷ்கா கேட்டான். ''நான் இதுவரை உங்களுக்கு எந்த ஊழியமும் செய்யவில்லையே.''

''உண்மையில் இந்தக் குதிரையினால் எனக்கு எந்தப் பயனுமில்லை. இதைப் பெற்றுக்கொள்'' என்று ஒலேனின் வற்புறுத்தினான். ''என்றாவது ஒரு நாள், நீ எனக்கு ஏதாவது உதவி செய்வாய்... நாம் இருவரும் சேர்ந்து படையெடுப்புக்குப் புறப்படுவோம்.''

லுக்காஷ்கா குழப்பமடைந்தான்.

''எப்படித் தருகிறீர்கள்? அதிக விலையுள்ள இந்தக் குதிரையை?'' என்று லுக்காஷ்கா குதிரையைப் பார்க்காமலே கேட்டான்.

''எடுத்துக் கொள்! எடுத்துக் கொள்! நீ எடுத்துக் கொள்ளா விட்டால் எனக்கு வருத்தமேற்படும். வன்யூஷா! சாம்பல் குதிரையை அவனிடம் கொண்டுபோ!''

லுக்காஷ்கா குதிரையின் கடிவாளத்தைப் பிடித்தான்.

''நான் உங்களுக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். இதை நான் சிறிதும் எதிர்பார்க்கவில்லை, கனவு கூடக் காணவில்லை...''

ஒலேனின் பன்னிரண்டு வயதுப் பையனைப் போல மிகவும் மகிழ்ச்சியடைந்தான்.

''இங்கே கட்டு. இது நல்ல குதிரை. கிரோஸ்னயாவில் வாங்கினேன். நன்றாகப் பாய்ந்தோடும். வன்யூஷா, சிவப்பு ஒயின் கொண்டுவா! நாங்கள் உள்ளே போகிறோம்.''

ஒயின் கொண்டுவரப்பட, லுக்காஷ்கா உட்கார்ந்து மதுக்கிண்ணத்தை எடுத்து சிவப்பு ஒயினைக் குடித்தான்.

''நான் உங்களுக்கு ஏதேனும் உதவி செய்வதற்கு கடவுள் அருள் புரியவேண்டும்'' என்று சொல்லிக்கொண்டு அவன் கிண்ணத்தைக் காலி செய்தான். ''உங்கள் பெயர் என்ன?''

''திமீத்ரி.''

''திமீத்ரி அவர்களே, கடவுள் உங்களைக் காப்பாற்று வார்! நாம் நண்பர்களாக இருப்போம். உங்களுக்கு வசதிப்படுகின்ற பொழுது என்னுடைய வீட்டுக்கு வர வேண்டும். நாங்கள் பணக்காரர்களாக இல்லாவிட்டா லும் நண்பர்களை எப்படியாவது உபசரிப்போம். நான் போய் என்னுடைய தாயாரிடம் இதைத் தெரிவிப்பேன். தயிர் அல்லது திராட்சை—எது வேண்டுமென்றாலும் நாங்கள் தருகிறோம். நீங்கள் எல்லைக் காவல் நிலையத் துக்கு வந்தால் வேட்டையில் அல்லது அக்கரைக்குச் செல்ல அல்லது நீங்கள் விரும்புகின்ற எதிலும் நான் உதவி செய்யத் தயார். அன்றைக்கு நான் எவ்வளவு பெரிய காட்டுப் பன்றியைச் சுட்டுக் கொன்றேன், தெரியுமா? கஸாக்குகளுடன் அதைப் பகிர்ந்துகொண்டேன். உங்கள் அறிமுகம் கிடைத்திருந்தால் அதை அப்படியே உங்க ளுக்கு அனுப்பியிருப்பேன்.''

''அதற்கென்ன, நன்றி! ஒரு விஷயம். இந்தக் குதி ரையை வண்டியில் பூட்டாதே. அப்படிச் செய்தால் குதி ரை சவாரிக்கு ஏற்றதாக இருக்காது.''

''குதிரையை வண்டியில் மாட்டுவதா? உங்களுக்கு ஒரு விஷயம் சொல்கிறேன்'' என்று லுக்காஷ்கா தலை யைக் குனிந்துகொண்டு மெதுவாகப் பேசினான். ''எனக்கு ஒரு நண்பர் இருக்கிறார். கிரேய்-கான் என்று பெயர். மலைகளிலிருந்து கீழே இறங்கிவருகின்ற பாதைகளில் வேட்டையாடுவதற்கு அவர் என்னைக் கூப்பிட்டிருக் கிறார். நாம் இருவரும் சேர்ந்து போகலாம். நான் உங் களைக் காட்டிக் கொடுக்க மாட்டேன். உங்களுடைய மெய்க்காப்பாளனாக இருப்பேன்.''

''போவோம். ஒருநாள் புறப்படுவோம்.''

லுக்காஷ்கா முற்றிலும் இயல்பாக நடந்துகொண்ட துடன் ஒலேனின் தன்னிடம் காட்டிய அன்பைப் புரிந்து கொண்டதைப் போலத் தோன்றியது. அவன் சிறிதும் குழப்பமடையாமல் எல்லாவற்றையும் இயல்பாக எடுத்

துக் கொண்டதைப் பற்றி ஒலேனின் ஆச்சரியமடைந்தான். அது அவனுக்கு முற்றிலும் திருப்தியாக இருந்ததென்று சொல்லமுடியாது. அவர்கள் நெடுநேரம் வரை அமர்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். லுக்காஷ்கா அதிகமாகக் குடித்தபிறகு—அவன் எவ்வளவு குடித்தாலும் மயக்கமடைய மாட்டான்—ஒலேனினுடைய கையைக் குலுக்கி விடைபெற்ற பொழுது இரவு நெடுநேரமாகியிருந்தது.

அடுத்தபடியாக என்ன செய்யவேண்டும் என்று சிந்தித்தபடி ஒலேனின் சன்னலுக்கு வெளியே பார்த்தான். லுக்காஷ்கா தலையைக் குனிந்தபடியே மெதுவாக நடந்து போய்க் கொண்டிருந்தான். குதிரையை வெளிக்கதவுக்கு வெளியே கொண்டுவந்த பிறகு அவன் திடீரென்று தலையை ஆட்டிக்கொண்டு பூனை போல குதிரையின் முதுகில் துள்ளியேறினான்; கடிவாளத்தைத் தளர்த்திவிட்டு கூக்குரலிட்டுத் தெருவழியாகப் பாய்ந்து சென்றான். அவன் மார்யானாவை சந்தித்துத் தன்னுடைய மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்வான் என்று ஒலேனின் எதிர்பார்த்தான். அவன் அப்படிச் செய்யவில்லை. எனினும் ஒலேனின் தன்னுடைய வாழ்க்கையில் முன்னெப்பொழுதும் கண்டிராத மகிழ்ச்சியை உணர்ந்தான். அவன் ஒரு குழந்தையைப் போல உவகையடைந்தான். தான் லுக்காஷ்காவுக்கு குதிரையைக் கொடுத்ததை மட்டுமன்றி அப்படிக் கொடுப்பதற்குத் தூண்டியது எது என்பதையும் மகிழ்ச்சியைப் பற்றித் தன்னுடைய புதிய தத்துவத்தையும் அவன் வன்யூஷாவிடம் கூறினான். வன்யூஷா அந்தத் தத்துவத்தை அங்கீகரிக்கவில்லை. ''விட்டெறிவதற்கு எங்களிடம் பணமில்லை, ஆகவே இது முட்டாள்தனம்'' என்று அவன் கூறினான்.

லுக்காஷ்கா குதிரையை வேகமாக ஓட்டிக்கொண்டு வீட்டுக்குச் சென்றான். குதிரையிலிருந்து துள்ளிக்குதித்துக் கீழே இறங்கித் தன் தாயாரிடம் குதிரையை ஒப்படைத்தான். மற்ற கஸாக்குகளின் குதிரைகளுடன் அதையும் மேய்ச்சலுக்கு அனுப்புமாறு அவளிடம் கூறினான். அவன் அன்றிரவே எல்லைக் காவல் நிலையத்துக்குத் திரும்பிப் போகவேண்டும். ஊமைப்பெண் குதிரையை ஓட்டிப்போவதற்கு வந்தாள். 'அவனுக்குக் குதிரையைக்

கொடுத்தவனை எப்பொழுதாவது பார்க்க நேர்ந்தால் அவன் காலில் விழுந்து நன்றியைத் தெரிவிப்பேன்' என்று அவள் சைகைகள் காட்டினாள். அவனுடைய முதிய தாயார் அவன் கூறிய கதையைக் கேட்டுத் தலையை மட்டும் ஆட்டினாள். லுக்காஷ்கா அந்தக் குதிரையைத் திருடிக்கொண்டு வந்திருக்கிறான் என்று அவள் தன்னுடைய இதயத்தின் ஆழத்தில் உறுதியாக நம்பினாள். எனவே பொழுது விடிவதற்கு முன்னரே அதை மேய்ச்சலுக்கு ஓட்டிப் போகுமாறு தன் ஊமை மகளிடம் கூறினாள்.

லுக்காஷ்கா தனியாக எல்லைக் காவல் நிலையத்துக்குத் திரும்பினான். ஒலேனினுடைய செயலுக்கு என்ன அர்த்தம் என்பதைப் பற்றியே அவனுடைய சிந்தனைகள் தீவிரமாகச் சுழன்றன. அந்தக் குதிரை பிரமாதமானது என்று சொல்ல முடியாவிட்டாலும் அது குறைந்த பட்சம் நாற்பது வெள்ளி ரூபிள்கள் பெறுமதிப்புடையது என்று அவன் மதிப்பிட்டான். அந்த அன்பளிப்பைப் பற்றி அவன் மிகவும் மகிழ்ச்சி அடைந்தான். ஆனால் அந்நியன் ஏன் அந்தக் குதிரையைத் தனக்கு அன்பளிப்பாகக் கொடுத்தான் என்பது அவனுக்குப் புரியவில்லை. ஆகவே அவனிடம் சிறிதளவு நன்றியுணர்ச்சிகூட ஏற்படவில்லை. அதற்கு பதிலாக அந்த யுங்கெரின் உத்தேசங்களைப் பற்றித் தெளிவில்லாத சந்தேகங்கள் அவனிடம் ஏராளமாக ஏற்பட்டன. அந்த நோக்கங்கள் என்னவாக இருக்கும் என்று அவனால் விளக்கமுடியவில்லை; ஆனால் முற்றிலும் அந்நியரான ஒருவர் எத்தகைய பிரதிபலனையும் எதிர்பாராமல் தன்னுடைய இதயத்தின் அன்பு காரணமாக நாற்பது ரூபிள் மதிப்புள்ள குதிரையை அன்பளிப்பாகத் தரக்கூடும் என்பதை அவனால் ஒத்துக் கொள்ள முடியவில்லை. அவன் குடிமயக்கத்தில் அப்படி நடந்து கொண்டிருந்தால் அதைப் புரிந்துகொள்ள முடியும்; அவன் டாம்பீகமாக நடந்துகொள்ள விரும்புகிறான் என்று விளக்கமளிக்க முடியும். ஆனால் அந்த யுங்கெர் நல்ல நிதானத்தில் இருந்தான். ஆகவே ஏதோ ஒரு தீய செயலைச் செய்வதற்குத் தனக்கு லஞ்சம் கொடுக்க விரும்பியதாக அவனுக்குத் தோன்றியது.

''ஐயா! நீங்கள் தப்புக்கணக்குப் போட்டு விட்டீர்கள்'' என்று லுக்காஷ்கா தனக்குள் சொல்லிக்கொண்

டான். ''என்னிடம் குதிரையைக் கொடுத்துவிட்டீர்கள். அடுத்து என்ன செய்கிறீர்கள் என்று பார்ப்போம். நான் ஒரு முட்டாள் அல்ல. என்னை ஏமாற்றுவது என்றால் அது எளிதல்ல. பொறுத்துப் பார்ப்போம்!'' ஒலேனி னைப் பற்றி ஜாக்கிரதையாக இருக்கவேண்டும் என்று முடிவு செய்வதற்கு அவன் முயன்றபொழுது அவன் மீது மெய்யாகவே ஒரு விரோத உணர்ச்சியை உருவாக்கிக் கொண்டான். குதிரை எப்படிக் கிடைத்தது என்று அவன் யாரிடமும் சொல்லவில்லை. குதிரையை விலைக்கு வாங் கியதாக ஒருவனிடம் கூறினான்; மற்றவர்களது கேள்வி களுக்குத் தெளிவில்லாத பதில்களைச் சொல்லி சமா ளித்தான். எனினும் கிராமத்தில் உண்மை சீக்கிரத்தி லேயே அம்பலமாகிவிட்டது. லுக்காஷ்காவின் தாயார், மார்யானா, துணை லெப்டினென்ட் மற்றும் இதர கஸாக்குகள் ஒலேனினுடைய காரணமில்லாத அன்பளிப் பைப் பற்றி அறிந்ததும் வியப்படைந்தார்கள். மேலும் அந்த யுங்கெரைப் பற்றி அச்சப்படுவதற்குத் தொடங்கி னார்கள். எனினும் அவனுடைய இச்செயல் அவனுடைய எளிமை, செல்வம் ஆகியவற்றைப் பற்றி அதிகமான மரி யாதையை அவர்களிடம் ஏற்படுத்தியது.

''துணை லெப்டினென்டின் வீட்டில் தங்கியிருக்கின்ற யுங்கெர் லுக்காஷ்காவுக்கு ஐம்பது ரூபிள் மதிப்புள்ள குதிரையைக் கொடுத்திருக்கிறானே, உனக்குத் தெரி யுமா?'' என்று கேட்டார் ஒருவர். ''அவன் பணக்கார னாகத்தான் இருக்க வேண்டும்!''

''நான் அதைப் பற்றிக் கேள்விப்பட்டேன்'' என்று அடுத்தவர் அர்த்தச் செறிவுடன் பதிலளித்தார். ''ஏதோ ஒரு காரியத்துக்காகத்தான் அதைக் கொடுத்திருக்கிறான். என்ன நடைபெறப் போகிறது என்று பார்ப்போம்,பார்ப் போம். உர்வானுக்கு அதிர்ஷ்டம் அடிக்கிறது.''

''இந்த யுங்கெர்கள் தந்திரசாலிகள், கெட்ட பயல் கள்!'' என்றார் மூன்றாவது நபர். ''அவனை ஏதோ ஒரு தொல்லையில் மாட்டி விடப் போகிறான்.''

ஒலேனினுடைய வாழ்க்கை சிக்கலின்றி, ஒரே மாதிரி யாகப் போய்க் கொண்டிருந்தது. அவன் தன்னுடைய மேலதிகாரிகள் அல்லது சகாக்களுடன் எவ்விதமான தொடர்பும் வைத்துக் கொள்ளவில்லை. காகசசில் பணக் கார ராணுவ யுங்கெரின் நிலை இந்த அம்சத்தில் மிகவும் சாதகமானதாகும். அவன் வேலை செய்ய வேண்டியதில் லை, 'டிரில்' செய்ய வேண்டியதில்லை. படையெடுப்பின் போது ஒலேனினுடைய சேவைகளுக்காக அவன் அதி காரி பதவிக்கு சிபாரிசு செய்யப்பட்டிருக்கிறான்; அந்தப் பதவி உயர்வு ஆணை வருகின்ற வரை அவனை யாரும் தொந்தரவு செய்யமாட்டார்கள். அதிகாரிகள் அவனை ஒரு பிரபுவாகப் பார்த்தார்கள்; ஆகவே அவனிடம் கண் ணியமாக நடந்துகொண்டார்கள். அவன் எல்லைப்புறத் தில் இருந்தபொழுது அதிகாரிகளின் சீட்டுக்கச்சேரிகள், மதுபான விருந்துகள் மற்றும் கேளிக்கைகளில் பங்கெடுத் தான். ஆனால் இப்பொழுது அவனுக்கு அவற்றில் ஈடு பாடு இல்லை; அவன் அதிகாரிகள் வட்டாரத்திலிருந்தும் அந்த கிராமத்தில் அவர்களுடைய வாழ்க்கையிலிருந்தும் ஒதுங்கியிருந்தான்.

கஸாக்கு கிராமங்களில் அதிகாரிகளின் வாழ்க்கை பல ஆண்டுகளாகவே பிரத்யேகமான அம்சங்களைக் கொண் டிருந்தது. கோட்டைகளில் இருக்கின்ற ஒவ்வொரு யுங் கெர் அல்லது அதிகாரி பீர் குடிப்பதையும் சீட்டு விளை யாடுவதையும் பரிசுகள் மற்றும் படையெடுப்புகளைப் பற்றிப் பேசுவதையும் வாடிக்கையாக வைத்திருப்பதைப் போல அவர்கள் கஸாக்குக் கிராமங்களில் தங்கியிருக்கின்ற பொழுது தம்முடைய வீட்டுக்காரர்களுடன் சிவப்பு ஒயி னைக் குடிப்பதையும் கஸாக்குப் பெண்களுக்கு இனிப்புப் பண்டங்கள், தேன் ஆகியவற்றைக் கொடுப்பதையும் அந் தப் பெண்களுடன் உல்லாசமாகச் சுற்றுவதையும் அவர் களைக் காதலிப்பதையும் வழக்கமாக வைத்திருந்தார் கள். சில அதிகாரிகள் அவர்களைத் திருமணம் செய் கின்ற அளவுக்கும் போவதுண்டு. ஒலேனின் எப்பொழு தும் தன்னுடைய சொந்த வழியிலேயே வாழ்பவன்; எல் லோரும் நடந்து தேய்ந்து போன பாதையில் நடப்பதை

இயல்பாகவே வெறுத்தவன். காகசசில் அதிகாரிகளுடைய வாழ்க்கை என்னும் தேய்ந்துபோன தடங்களில் அவன் நடக்கவில்லை.

கதிரவன் காலையில் உதிக்கின்றபொழுது அவன் இயல்பாகவே எழுந்துவிடுவான். காலைத் தேநீர் அருந்திய பிறகு மலைகளை, காலையிளம் பொழுதின் பேரழகை, மார்யானாவை ரசிப்பதற்கு அவன் வெளியே வருவான். கிழிந்த மாட்டுத் தோல் மேல்கோட்டு, முரட்டுத் தோல் காலணிகள் ஆகியவற்றை அணிந்துகொள்வான். குத்துவாளை இடையில் மாட்டிக்கொண்டு துப்பாக்கி, உணவு, சிகரெட்டுகள் ஆகியவற்றை பையில் எடுத்துக்கொண்டு, தன்னுடைய நாயுடன் காலையில் ஆறு மணிக்கு அந்த கிராமத்தின் பின்புறத்திலுள்ள காட்டுக்குப் புறப்பட்டுச் செல்வான்.

மாலையில் சுமார் ஏழு மணி அளவில் அவன் களைத்துப்போய், பசியுடன் இடைவாரில் ஐந்து அல்லது ஆறு காட்டுக்கோழிகள் (சில சமயங்களில் கூடுதலாக ஒரு காட்டு மிருகம்) தொங்க வீடு திரும்புவான். அவன் உணவையோ சிகரெட்டையோ அநேகமாகத் தொட்டிருக்க மாட்டான். அவன் பைக்குள் சிகரெட்டுகள் இருப்பதைப் போல அவன் தலைக்குள் சிந்தனைகள் இருந்தால், பதினான்கு மணி நேரம் காட்டில் அலைந்த பொழுது அவனுடைய சிந்தனையில் சிறு மாற்றம் கூட ஏற்படவில்லை என்பது தெளிவாகத் தெரியும். அவன் தார்மிக ரீதியில் புத்துணர்ச்சி அடைந்தவனாக, சுறுசுறுப்பானவனாக, பூரணமான மகிழ்ச்சியை உணர்ந்தவனாகத் திரும்புவான். அவன் எதைப் பற்றி சிந்தித்துக் கொண்டிருந்தான் என்று அவனால் சொல்ல இயலாது. அவனுடைய மூளையில் நுரைத்துப்பொங்கியவை சிந்தனைகள், நினைவுகள், கற்பனைகள் எவையுமல்ல. எல்லாவற்றையும் பற்றிய துணுக்குகள். நாள் முழுவதும் எதைப்பற்றி சிந்தித்துக் கொண்டிருந்தேன் என்று அவன் பின்னர் தன்னையே கேட்டபொழுது இவை ஒவ்வொன்றிலிருந்தும் சில துணுக்குகள் அவன் நினைவுக்கு வருவதுண்டு. அவன் தன்னை மனைவியுடன் தோட்டத்தில் உழைக்கின்ற கஸாக்காக அல்லது மலையில் வசிக்கின்ற அப்ரேக்காக அல்லது தன்னிலிருந்து வெளியேறி ஓடிவருகின்ற காட்டுப் பன்றியாகக்

கற்பனை செய்துகொள்வான். அதே சமயத்தில் அவன் ஒரு காட்டுக் கோழி, காட்டுப் பன்றி அல்லது கலை மானைத் தேடி உற்றுக் கேட்டுக்கொண்டும் காத்துக் கொண்டும் கூர்மையாக கவனித்துக்கொண்டும் இருப் பான்.

மாலை நேரங்களில் யெரோஷ்கா மாமா தவறாமல் வந்து அவனுடன் பேசிக் கொண்டிருப்பார். வன்யூஷா ஒரு குவார்ட் சிவப்பு ஒயினைக் கொண்டுவந்து வைப்பான். அவர்கள் மெதுவாகப் பேசிக்கொண்டும் குடித்துக்கொண் டும் உட்கார்ந்திருப்பார்கள். பிறகு பரஸ்பரத் திருப்தி யுடன் பிரிந்து செல்வார்கள். மறுநாள் மறுபடியும் வேட் டை, மறுபடியும் ஆரோக்கியமான களைப்பு, மறுபடி யும் மாலையுணவுக்குப் பிறகு குடித்தல், மறுபடியும் மகிழ்ச்சியை உணர்தல். சில திருவிழா நாட்களில் அல் லது ஓய்வு நாட்களில் அவன் நாள் முழுதும் வீட்டிற்குள் ளேயே தங்கியிருப்பான். அப்பொழுது மார்யானாவை அக்கறையுடன் கவனிப்பது அவனுடைய முக்கியமான வேலையாக இருக்கும். அவளது ஒவ்வொரு அசைவை யும் அவன் சன்னல் வழியாக அல்லது வெளி வராந்தாவில் உட்கார்ந்து கொண்டு தன்னையறியாமல் ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருப்பான். அவன் மலைகளையும் வானத்தையும் காதலித்ததைப் போலவே மார்யானா வையும் காதலித்தான் (அப்படித்தான் அவன் நினைத்துக் கொண்டான்); அவளுடன் நெருங்கிப் பழக வேண்டும் என்று அவன் சிறிதும் நினைக்கவில்லை. அவளுக்கும் அந்த கஸாக்கு லுக்காஷ்காவுக்கும் இடையில் நிலவிய உறவை அல்லது, சற்றுக் குறைவான அளவில், பணக்கார அதிகாரிகளுக்கும் கஸாக்கு இளம்பெண்களுக்கும் இடை யில் இருந்த உறவைப் போல அவர்களுக்கிடையில் உறவு ஏற்படுவதைப் பற்றிய கேள்விக்கே இடமில்லை என்று அவனுக்குத் தோன்றியது. தன்னுடைய சகாக்களைப் போன்று தானும் நடக்க முயற்சி செய்தால் அவன் தன் னுடைய பரிபூரண மகிழ்ச்சியையும் மன அமைதியையும் இழந்துவிட்டுத் துன்பங்கள், ஏமாற்றங்கள், விசாரங்கள் நிறைந்த படுகுழியில் விழ வேண்டியிருக்கும் என்று அவ னுக்குத் தோன்றியது. மேலும் இந்த அழகிய இளம் பெண்ணிடம் அவன் நடந்ததைப் போல நடந்து கொள்

கின்றபொழுது ஒருவகையான சுயமறுப்பை நிறைவேற்று வதாக அவன் உணர்ந்தான். அது அவனிடம் அந்த அள வுக்கு மகிழ்ச்சியை ஏற்படுத்தியது. எல்லாவற்றுக்கும் மேலாக அவன் மார்யானாவிடம் ஏதோ காரணத்துக் காக அச்சம் கொண்டிருந்தபடியால் தகுதிக்குறைவான ஒரு காதல் வார்த்தை கூடப் பேசுமாறு எதுவும் அவ னைத் தூண்ட முடியாது.

கோடை காலத்தில் ஒருநாள் ஒலேனின் வேட்டைக் குப் போகாமல் வீட்டில் ஓய்வெடுத்துக் கொண்டிருந் தான். மாஸ்கோவின் உயர்சமூகத்தில் அவன் சந்தித் திருந்த ஒரு இளைஞர், அறிமுகமானவர் சிறிதும் எதிர் பாராத விதத்தில் அவனைச் சந்திப்பதற்கு வந்தார்.

''ஆ! என் அருமை நண்பரே! உங்களை இங்கே சந் திப்பது எனக்கு எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கிறது, தெரியுமா?'' என்று அவர் மாஸ்கோ பாணியில் ருஷ்ய மொழியையும் பிரெஞ்சு மொழியையும் கலந்து பேச ஆரம்பித்தார். அவர் பிரெஞ்சு மொழிச் சொற்றொடர் களைக் கலந்தபடியே தொடர்ந்து பேசினார். 'யாரோ ஒருவர் ஒலேனின்' என்று பேசுவதைக் கேட்டேன். எந்த ஒலேனின் என்று கேட்டேன். நீங்கள் இங்கே இருக்கிறீர் கள் என்று அறிந்தபொழுது நான் எவ்வளவு மகிழ்ச்சி அடைந்தேன், தெரியுமா?.. விதிதான் நம்மை ஒன்று சேர்த்திருக்கிறது... சரி. நலமாக இருக்கிறீர்களா? என்ன செய்கிறீர்கள்?''

பெருமகன் பெலேத்ஸ்கி தன்னுடைய கதை முழு வதையும் கூறினார். இந்த ரெஜிமென்டில் சேர்ந்து வேலை செய்வதற்குத் தற்காலிகமாக அனுப்பப்பட்ட தையும் தலைமைத் தளகர்த்தர் தன்னுடைய துணைவர் குழாத்தில் பணி செய்யுமாறு கேட்டுக் கொண்டதையும், தனக்கு அவ்வளவு அக்கறையில்லாவிட்டாலும் படை யெடுப்பு முடிந்தபிறகு அதை ஏற்றுக்கொள்ள உத்தேசிப் பதையும் அவர் விவரித்தார்.

''இந்தக் காட்டில் ஒருவர் வேலை செய்வதென்றால் அது குறைந்தபட்சம் பதவி உயர்வுக்காக, பதக்கம் பெறுவதற்காக, 'கார்ட்ஸ்' பிரிவுக்கு முன்னேறுவதற் காக... இவை அனைத்தும் எனக்கு மிகவும் அவ சியம். எனக்காக இல்லாவிட்டாலும் குறைந்தபட்சம்

என்னுடைய உறவினர்களுக்காக, என்னுடைய நண்பர் களுக்காக அவசியம். பெருமகன் என்னிடம் மிகவும் அன்பாகப் பேசினார். அவர் சிறந்த கனவான்'' என்று பெலேத்ஸ்கி ஒரே மூச்சில் பேசினார். ''படையெடுப்பு முடிந்தபிறகு நான் செயிண்ட் ஆன்னா பதக்கத்தைப் பெற்றேன். அடுத்த தாக்குதல் ஆரம்பமாகின்ற வரை நான் இங்கே தங்கியிருக்கப் போகிறேன். இது சிறப்பான இடம். பெண்கள் எவ்வளவு அழகாக இருக்கிறார்கள்! சரி. உங்கள் விஷயம் எப்படி? நம்முடைய காப்டன் அவன்தான் ஸ்தார்த்செவ், உங்களுக்கு அவனைத் தெரி யுமே—அவன் நல்ல உள்ளமுள்ள முட்டாள்... நீங்கள் இங்கே பயங்கரமான தனிமையில் வசிக்கிறீர்கள், அவர் களில் ஒருவரிடம் கூட உங்களுக்குத் தொடர்பு இல்லை என்று அவன் என்னிடம் கூறினான். இங்கேயுள்ள அதி காரிகளுடன் நெருங்கிப் பழகுவதற்கு நீங்கள் விரும்ப வில்லை என்பதை நான் நன்றாகப் புரிந்துகொள்ள முடி யும். இப்பொழுது நாம் அடிக்கடி சந்திப்போம். அதைப் பற்றி எனக்கு மகிழ்ச்சியே. நான் சார்ஜென்டின் வீட்டில் தங்கியிருக்கிறேன். அங்கே உஸ்தென்கா என்னும் பெய ருடைய பெண் இருக்கிறாள்! அவள் சிறந்த அழகி!''

ஒலேனின் எந்த உலகத்திலிருந்து தான் நிரந்தரமாக ஓடிவந்துவிட்டதாக நம்பினானோ அந்த உலகத்தைச் சேர்ந்த பிரெஞ்சு மற்றும் ருஷ்யச் சொற்கள் மேன்மே லும் அதிகமாகப் பேசப்பட்டன. பெலேத்ஸ்கி இனிமை யானவர், நல்ல பண்புகளைக் கொண்ட இளைஞர் என் பது அவரைப் பற்றிய பொதுவான கருத்து. அது உண் மையாக இருப்பது மிகவும் சாத்தியமே. அவர் அழகான, அன்பு நிறைந்த முகத்தைக் கொண்டவராக இருந்தாலும் ஒலேனினுக்கு அவரைப் பார்ப்பதற்குக் கூடப் பிடிக்க வில்லை. ஏனென்றால் ஒலேனின் கைவிட்டுவிட்ட அரு வருப்பான வாழ்க்கையின் சகல அம்சங்களையும் அவர் நினைவுபடுத்தினார். அந்த உலகத்தைச் சேர்ந்த இந்த நபரை விலக்குவதற்குத் தன்னால் முற்றிலும் இயலவில்லை என்பது அவனுக்கு இன்னும் அதிகமான எரிச்சலைக் கொடுத்தது. ஒருகாலத்தில் அவன் வாழ்ந்த அந்தப் பழைய உலகம் இன்னும் அவன் மீது மறுக்கமுடியாத ஆதிக்கத்தைக் கொண்டிருப்பதைப் போலத் தோன்றி

யது. அவனுக்கு பெலேத்ஸ்கி மீதும் தன் மீதும் எரிச்சல் ஏற்பட்டபோதிலும் அவன் பிரெஞ்சுச் சொற்களைக் கலந்து அவருடன் உரையாடினான், தலைமைத் தளகர்த்தர் மற்றும் தன்னுடைய பழைய மாஸ்கோ நண்பர்களிடம் அக்கறை உள்ளவனைப் போல விசாரித்துக்கொண்டான். அவர்கள் இருவரும் இந்த பிரெஞ்சுக் கிளைமொழியைப் பேசிய காரணத்தால் தன்னுடைய சக அதிகாரிகளைப் பற்றி, கஸாக்குகளைப் பற்றி இகழ்ச்சியாகப் பேசினான்; அவன் அதிகமான நட்புணர்ச்சியுடன் பெலேத்ஸ்கிக்கு விடை கொடுத்த பொழுது அவரைப் பார்ப்பதற்கு அடிக்கடி வருவதாக வாக்குறுதியளித்தான், அவரும் தன் வீட்டுக்கு அடிக்கடி வரவேண்டும் என்று வற்புறுத்தினான். எனினும் ஒலேனின் தன்னுடைய வாக்குறுதியை நிறைவேற்றவில்லை. ஆனால் வன்யூஷாவுக்கு பெலேத்ஸ்கியை மிகவும் பிடித்திருந்தது. அவர் உண்மையான எசமானர் என்று அவன் கூறினான்.

காகசசில் கஸாக்கு கிராமத்தில் தங்கியிருக்கின்ற பணக்கார அதிகாரியின் வழக்கமான வாழ்க்கையில் பெலேத்ஸ்கி உடனடியாக ஈடுபட்டார். ஒரு மாதத்துக்கும் குறைவான காலத்தில் அவர் அந்த கிராமத்தின் பழைய குடிகளில் ஒருவராக ஆகிவிட்டதாக ஒலேனினுக்குத் தோன்றியது. அவர் முதியவர்களை உபசரித்தார், பெண்களுக்கு விருந்தளித்தார், அவர்கள் நடத்திய விருந்துகளுக்குச் சென்றார். அங்கே தன்னுடைய சாதனைகளைப் பற்றி பெருமையாகப் பேசினார். கிராமத்தின் இளம்பெண்களும் மாதர்களும் ஏதோ காரணத்துக்காக அவரைத் தாத்தா என்று சொல்லத் தொடங்கினார்கள். மதுவையும் பெண்ணையும் விரும்புகின்ற அந்த நபரின் அந்தஸ்தை சட்டென்று முடிவுசெய்து விடக் கூடிய கஸாக்குகள் அவரிடம் ஒட்டிக்கொண்டார்கள், அவர்களுக்குப் புதிராக இருந்த ஒலேனினைக் காட்டிலும் அவரை அதிகமாக நேசித்தார்கள்.

## 24

காலை ஐந்து மணி. வன்யூஷா குடிசையின் வெளி வராந்தாவிற்குச் சமவாரைக் கொண்டுவந்தான். ஒலேனின் ஆற்றில் குளிப்பதற்காகக் குதிரை மீது சென்றி

ருந்தான். (ஆற்றில் தன்னுடைய குதிரையை நீச்சலடிக் கச் செய்கின்ற புதிய வேடிக்கையில் அவன் சமீபகாலமாக ஈடுபட்டிருந்தான்.) பாட்டி உலீத்கா பால் பதனிடு மிடத்துக்குப் போயிருந்தாள். அப்பொழுதுதான் பற்ற வைக்கப்பட்டிருந்த அடுப்பிலிருந்து அடர்த்தியான, கறுப் புப் புகை புகைபோக்கி வழியாக மேலே வந்து கொண் டிருந்தது. மார்யானா கொட்டிலில் பெண் எருமை யின் பாலைக் கறந்து கொண்டிருந்தாள். ''அசையாமல் இருக்கமாட்டாயா? சனியனே!'' என்று அவள் பொறுமை யின்றித் திட்டுகின்ற சத்தம் கேட்டது. பிறகு பால் பீச்சு கின்ற முறைப்படியான ஓசை கேட்டது.

தெருவில், வீட்டிற்கு அருகில் குதிரையின் குளம் பொலி கேட்டது. ஒலேனின் அழகான கறுஞ்சாம்பல் குதிரை மீது சேணமில்லாதபடி உட்கார்ந்து அதனது ஈர உடல் ஒளியில் பிரகாசிக்க, கதவின் அருகில் வந்தான். சிவப்புத் துணியை முகத்தைச் சுற்றிக் கட்டியிருந்த மார் யானா தன் அழகிய முகத்தை நீட்டிக் கொட்டிலிலிருந்து எட்டிப் பார்த்தாள். அவள் உடனே தலையை இழுத்துக் கொண்டாள். ஒலேனின் சிவப்பு நிறப் பட்டுச் சட்டை யும் வெள்ளை நிறச் செர்கெஸ்காவும் அணிந்திருந்தான். அவனுடைய இடைவாரில் ஒரு குத்துவாள் தொங்கிக் கொண்டிருந்தது. தலையில் உயரமான காகேஷிய மென் மயிர் தொப்பி அணிந்திருந்தான். அவன் பருமனான குதிரையின் ஈர முதுகின்மேல் ஓரளவு எடுப்பாக உட் கார்ந்திருந்தான். துப்பாக்கி தோளில் தொங்க, வாசற் கதவைத் திறப்பதற்குக் குனிந்தான். அவன் தலைமயிர் இன்னும் ஈரமாகவே இருந்தது; அவன் முகம் இளமை யுடனும் ஆரோக்கியத்துடனும் பிரகாசித்தது. அவன் தன்னுடைய அழகை, திறமையை உணர்ந்தான், ஒரு ஜிகித்தைப் போலத் தன்னை நினைத்துக்கொண்டான். ஆனால் அந்த விஷயத்தைத் தவறாகக் கருதிவிட்டான். அவன் வெறும் படைவீரன் என்பதை அனுபவமுள்ள எந்த கஸாக்கும் ஒரு பார்வையில் சொல்லிவிடுவான்.

அந்தப் பெண் எட்டிப் பார்ப்பதை அவன் கவனித் தான். இரட்டைக் கதவில் ஒன்றைத் திறந்த பிறகு அவன் கடிவாளத்தைப் பிடித்து குதிரையை இழுத்துக்கொண் டும் சாட்டையை வீசிக்கொண்டும் உள்ளே வந்தான்.

''தேநீர் தயாராகிவிட்டதா, வன்யூஷா?'' என்று மாட்டுக் கொட்டில் கதவைப் பார்க்காமல் உற்சாகத்துடன் கேட்டான்.

ஒலேனின் அந்தக் குதிரையை இழுத்துப் பிடித்த பொழுது மிகவும் திருப்தியடைந்தான். வேலியைத் தாண்டிக் குதிப்பதற்குத் துடித்துக் கொண்டிருந்த குதிரை உலர்ந்த மண்ணை குதூகலத்துடன் பிறாண்டிக் கொண்டிருந்தது.

''தயாராகிவிட்டது'' என்று வன்யூஷா கொச்சையான பிரெஞ்சு மொழியில் பதிலளித்தான்.

மார்யானாவின் அழகிய கண்கள் கொட்டிலிலிருந்து இன்னும் தன்னைப் பார்த்துக் கொண்டிருப்பதாக அவனுக்குத் தோன்றியது; ஆனால் அவன் திரும்பிப் பார்க்கவில்லை. அவன் குதிரையிலிருந்து கீழே குதித்தபொழுது துப்பாக்கி படியில் சிக்கியதால் தடுமாறியதை எப்படியோ சமாளித்துக்கொண்டான். உடனே கலவரத்துடன் கொட்டிலை நோக்கிப் பார்த்தான். ஆனால் அங்கே யாரும் தென்படவில்லை, பால் பீச்சுகின்ற ஓசை மட்டும் கேட்டது.

அவன் வீட்டுக்குள் சென்று சில விநாடிகளில் ஒரு புத்தகத்தையும் புகைக்குழாயையும் எடுத்துக்கொண்டு வெளியில் வந்தான். வெளி வராந்தாவில் காலைக் கதிரவனின் சாய்வான கதிர்கள் இன்னும் எட்டாத பகுதியில் தேநீர் டம்ளருடன் உட்கார்ந்தான். அன்று பகல் உணவுக்கு முன்பாக வெளியில் போகக்கூடாது என்று முடிவு செய்திருந்தான். நெடுங்காலமாக எழுதாமலிருக்கின்ற சில கடிதங்களை எழுதிவிட வேண்டும் என்றும் தீர்மானித்தான். ஆனால் என்ன காரணத்தினாலோ வெளி வராந்தாவில் அந்த வசதியான இடத்தை விட்டு எழுந்து போவதற்கும் சிறைச் சாலையைப் போல அறைக்குள் தன்னை அடைத்துக் கொள்வதற்கும் அவன் விரும்பவில்லை. அடுப்பைப் பற்றவைக்கின்ற வேலையைப் பாட்டி உலீத்கா முடித்துவிட்டாள். மார்யானா கால் நடையைப் புல்மேய அனுப்பிவிட்டாள். அவள் வெளியில் வந்து அடுப்பெரிப்பதற்கு விறகுகளை சேகரித்துக் கொண்டிருந்தாள்.

ஒலேனினுக்கு முன்னால் புத்தகம் திறந்தபடி இருந்தது. ஆனால் அதில் அச்சிடப்பட்டிருந்த எழுத்துகளைப்

படிப்பதில் அவனுக்கு அக்கறை ஏற்படவில்லை. அவன் புத்தகத்திலிருந்து கண்களை மேலே உயர்த்துவதும் தனக்கு முன்னால் வேலை செய்து கொண்டிருந்த உடற் கட்டுடைய இளம்பெண்ணைப் பார்ப்பதுமாக இருந் தான். அந்த ஈரமான காலைப் பொழுதின் நிழலில் அவள் வீட்டுக்கு அருகில் வந்தாள். அதிகாலைக் கதிரவனுடைய உற்சாகமான ஒளியில் குளித்துக் கொண்டிருந்த சுற்று வட்டகையில் நடந்து சென்றபொழுது பிரகாசமான வர்ண உடைகளை அணிந்திருந்த அவளுடைய சீரான உடல் கதிரவனின் ஒளியில் பிரகாசிக்கும், அவள் நிழல் தரையில் நீளமாக விழும். அவளுடைய அசைவுகளில் சிறிதளவைக் கூடப் பார்க்கத் தவறிவிடக்கூடாது என்று அவன் விரும்பினான்.

அவள் எவ்வளவு இயல்பாக, அழகாக இங்குமங்கும் நடக்கிறாள் என்பதைப் பார்ப்பது அவனுக்குப் பெரு மகிழ்ச்சியாக இருந்தது; அவளணிந்திருந்த ஒரே உடை யான இளஞ்சிவப்பு நிறச் சட்டை அவள் மார்பின் மீதும் அவளுடைய அழகிய கால்களின் மீதும் அழகிய மடிப்பு களாக விழுந்திருப்பதையும் அவள் கீழே குனிந்து பிறகு முழு உயரத்துக்கு நிமிர்வதையும் அப்பொழுது அவ ளணிந்திருக்கும் உடையின் இறுக்கத்தில் மார்பகம் எடுப் பாகத் தோன்றுவதையும் இன்னும் பயன்பட்டுக் கொண் டிருந்த பழைய சிவப்புக் காலணிகளை அணிந்த அவளு டைய மெல்லிய பாதங்கள் பூமியின் மீது ஊன்றியிருப் பதையும் சட்டைக்கைகள் மேலே தூக்கிச் சொருகப்பட் டிருந்த அவளுடைய வலிமையான கரங்கள் பொறுமை யில்லாமல் மண்வாரியை உபயோகித்தபொழுது தசை நார்களின் விளையாட்டையும் அவளுடைய ஆழமான கரிய கண்கள் சில சமயங்களில் அவனை நோக்குவதை யும் பார்ப்பது அவனுக்குப் பெரு மகிழ்ச்சியாக இருந் தது. அவளுடைய மெல்லிய கண்புருவங்கள் சுருங்கினா லும் அவளுடைய கண்கள் தம்முடைய அழகை உணர்ந்து திருப்தியை வெளிப்படுத்தின.

''ஏங்க, ஒலேனின்! சீக்கிரமாக எழுந்து விட்டீர் களா?'' என்று பெலேத்ஸ்கியின் குரல் கேட்டது. அவர் காகேஷிய படை அதிகாரியின் கோட் அணிந்தவாறு சுற்று வட்டகைக்குள் நுழைந்தார்.

''ஆ! பெலேத்ஸ்கி!'' என்று வரவேற்றுக் கொண்டு ஒலேனின் தன்னுடைய கையை நீட்டினான். ''இவ்வளவு சீக்கிரத்தில் வெளியில் புறப்பட்டுவிட்டீர்களா?''

''நான் என்ன செய்வது? என்னை வெளியேற்றிவிட்டார்கள். இன்றிரவில் என் வீட்டில் ஒரு நடன நிகழ்ச்சி இருக்கிறது. மார்யானா, நீ உஸ்தென்காவின் வீட்டுக்கு வருகிறாயல்லவா?'' என்று அந்தப் பெண்ணைத் திரும்பிப் பார்த்துக் கேட்டார்.

பெலேத்ஸ்கி அந்த இளம்பெண்ணிடம் இயல்பான நட்புணர்ச்சியுடன் பேசியது ஒலேனினுக்குத் திகைப்பாக இருந்தது. ஆனால் மார்யானா அவனுடைய கேள்வி தன் காதில் விழாததைப் போன்று பாசாங்கு செய்துகொண்டு தலையைக் குனிந்துகொண்டாள், மண்வாரியைத் தோள் மீது வைத்துக்கொண்டு கொட்டகையை நோக்கி வேகமான, அழுத்தமான காலடிகளில் நடந்து சென்றாள்.

''அவள் வெட்கப்படுகிறாள், வெட்கப்படுகிறாள்'' என்று பெலேத்ஸ்கி உரத்த குரலில் கூறினார். ''அவள் உங்களைக் கண்டு பயப்படுகிறாள்'' என்று கேலியாகச் சொல்லிக்கொண்டு அவர் படிகளின் மீது ஓடிவந்தார்.

''நீங்கள் என்ன சொன்னீர்கள்? நடன நிகழ்ச்சி வைத்திருக்கிறீர்களா? உங்களை வெளியேற்றியது யார்?''

''நான் தங்கியிருக்கின்ற உஸ்தென்காவின் வீட்டில் நடன நிகழ்ச்சி நடைபெறுகிறது. நீங்கள் கலந்துகொள்ள வேண்டும் என்று அவள் விரும்புகிறாள். நடன நிகழ்ச்சி —அதாவது பணியாரங்களும் இளம்பெண்களும்.''

''சரி! அங்கே வந்து நாம் என்ன செய்ய வேண்டும்?''

பெலேத்ஸ்கி தந்திரமாக சிரித்தார், கண்ணைச் சிமிட்டிக்கொண்டு மார்யானா போன கொட்டகையைச் சுட்டிக் காட்டினார்.

ஒலேனின் தோள்களைக் குலுக்கினான். அவன் முகம் சிவந்தது.

''கடவுளே! நீங்கள் ஒரு விசித்திரமான ஆள்!'' என்றான்.

ஒலேனின் முகத்தைச் சுளித்துக் கொண்டிருந்தான். பெலேத்ஸ்கி அதை கவனித்தார். அவர் உதடுகளில் தந்திரம் நிறைந்த புன்சிரிப்பு விளையாடியது.

''என்ன, அது இயற்கை தானே. நீங்கள் ஒரே வீட்

டில் அவளுடன் வசிக்கிறீர்கள். அவள் அழகான பெண் அற்புதமான பெண்... பேரழகி...''

''அவள் ஓரு அதிசயம்! இப்படிப்பட்ட பெண்ணை நான் ஒருபோதும் பார்த்ததில்லை'' என்று ஒலேனின் கூறினான்.

''சரி. அதற்கென்ன?'' என்று பெலேத்ஸ்கி கூறினார். ஒலேனினுடைய பரவசத்தை அவரால் புரிந்துகொள்ள முடியவில்லை.

''நான் சொல்லப் போவது விசித்திரமாக இருக்கும், ஆனால் என் அபிப்பிராயத்தைச் சொல்லி விடுகிறேன். இங்கே வசிக்க ஆரம்பித்ததிலிருந்து என்னைப் பொருத்த மட்டில் பெண்களே அவசியமில்லாதிருக்கிறது. அது நல்லது, சரியானது. ஏனென்றால் நமக்கும் இந்தப் பெண்களுக்கும் இடையில் பொதுவாக என்ன இருக்க முடியும்? யெரோஷ்கா—அது வேறு விஷயம். எனக்கும் அவருக்கும் ஒரு பொதுவான வேட்கை, அதாவது வேட்டையாடுதல் இருக்கிறது'' என்று ஒலேனின் பேசினான்.

''புதுமையாக இருக்கிறது! பொதுவான அம்சமா? எனக்கும் ஒரு மாதிரியான பெண்ணுக்கும் பொதுவாக என்ன இருக்கிறது? அதேதான். உள்ளூர்ப் பெண்கள் அவ்வளவு சுத்தமாக இல்லை என்று வேண்டுமானால் சொல்லுங்கள். அது வேறு உலகம். இருக்கிற இடத்துக்குத் தகுந்தபடி நடந்துகொள்ள வேண்டும்!''

''ஆனால் அத்தகைய பெண்களை நான் ஒருபோதும் அறிந்ததில்லை. என்னால் அவர்களுடன் பழக முடியாது'' என்று ஒலேனின் பதிலளித்தான். ''அவர்களை நான் மதிக்க முடியாது. ஆனால் இங்குள்ள பெண்களை நான் நிச்சயமாக மதிக்கிறேன்.''

''ரொம்ப சரி! மரியாதை செய்யுங்கள். வேண்டாமென்று யாரும் சொல்லவில்லையே.''

ஒலேனின் பதிலளிக்கவில்லை. அவன் சொல்ல ஆரம்பித்ததை முடிக்க வேண்டுமென்று ஆர்வமாக இருந்தான் என்பது வெளிப்படையாகத் தெரிந்தது. அவனுடைய இதயத்தில் அது மாபெரும் சுமையாக இருந்தது.

''நான் விதிவிலக்கு என்பது எனக்குப் புரிகிறது'' என்று அவன் ஓரளவுக்குச் சங்கடத்துடன் பேச்சைத் தொடர்ந்தான். ''என்னுடைய வாழ்க்கை இப்படி

அமைந்து இருக்கிறது. என் கொள்கையை மாற்ற வேண்டிய அவசியத்தை நான் பார்க்கவில்லை என்பது மட்டுமல்ல, உங்களைப் போல நான் வாழ்வதென்றால் இப்போது மகிழ்ச்சியாக வாழ்வது போல என்னால் இங்கே வாழவே முடியாது. நான் உங்களிடமிருந்து வித்தியாசமான வேறொன்றை அவர்களிடம் பார்க்கிறேன், வேறொன்றை அவர்களிடம் தேடுகிறேன்.''

பெலேத்ஸ்கி நம்பிக்கையற்ற முறையில் கண் புருவங்களை உயர்த்தினார்.

''எப்படி இருந்தாலும் இன்று மாலையில் என் வீட்டுக்கு வாருங்கள். மார்யானா அங்கே இருப்பாள். உங்களிருவரையும் அறிமுகம் செய்கிறேன். வாருங்கள் தயவு செய்து வாருங்கள். சுவாரசியமாக இல்லாவிட்டால் நீங்கள் வீட்டுக்குத் திரும்பிவிடலாம். அல்லவா?''

''நான் வருவேன். ஆனால் தீவிரமான காதலில் சிக்கிவிடுவேனோ என்று நான் உண்மையாகவே பயப்படுகிறேன்.''

''ஓ! ஓ! ஓ!'' என்று பெலேத்ஸ்கி சிரித்தார். ''என்னவாகத்தான் இருக்கட்டுமே, நீங்கள் நடனத்துக்கு வாருங்கள். நான் உங்களைப் பாதுகாப்பேன். நீங்கள் வருகிறீர்கள் அல்லவா? நிச்சயமாகச் சொல்லுங்கள்.''

''நான் வருவேன். ஆனால் நாம் என்ன செய்யப் போகிறோம், என்ன பாத்திரத்தை நடிக்கப் போகிறோம் என்பது உண்மையாகவே எனக்குப் புரியவில்லை.''

''தயவு செய்து வாருங்கள்! வருகிறீர்கள் அல்லவா?''

''ஆமாம். நான் வருகிறேன். அநேகமாக வருவேன்'' என்றான் ஒலேனின்.

''மற்ற இடங்களில் இல்லாத அழகான பெண்கள் இங்கே இருக்கிறார்கள். நீங்களோ இங்கே சாமியாரைப் போல வசிக்கிறீர்கள்! நீங்கள் இதை ஏன் விரும்புகிறீர்கள்? இருப்பவற்றை அனுபவிக்காமல் உங்களுடைய வாழ்க்கையை ஏன் கெடுத்துக் கொள்கிறீர்கள்? நம்முடைய படைப்பிரிவு வஸ்த்வீழென்ஸ்கயாவுக்கு புறப்படப் போகிறது என்பது உங்களுக்குத் தெரியுமா?''

''அது சரியல்ல! எட்டாவது படைப்பிரிவு புறப்படுகிறது என்று தான் என்னிடம் கூறினார்கள்'' என்றான் ஒலேனின்.

''இல்லை. தளகர்த்தரின் உதவி அதிகாரி எனக்குக் கடிதம் எழுதியிருக்கிறார். பெருமகனே இந்தப் படையெடுப்பில் கலந்து கொள்ளப் போகிறார் என்று அவர் தெரிவிக்கிறார். நான் அவரைப் பார்க்கப் போவது எனக்கு மகிழ்ச்சியாக இருக்கிறது. எனக்கு இங்கே அலுப்பு ஆரம்பமாகிக் கொண்டிருக்கிறது.''

''முன்னேறித் தாக்குதல் விரைவில் நடைபெறும் என்று சொல்கிறார்கள்.''

''நான் அதைக் கேள்விப்படவில்லை. சென்ற படையெடுப்பு சம்பந்தமான வேலைக்காக க்ரினோவித்ஸினுக்கு செயிண்ட் ஆன்னா பதக்கம் கொடுத்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். லெப்டினென்ட் பதவி உயர்வு வரப் போகிறது என்று அவன் எதிர்பார்த்தான்'' என்று பெலேத்ஸ்கி சிரித்துக் கொண்டே கூறினார். ''அந்த விஷயத்தில் ஏமாற்றம்தான். அவன் துணைவர் குழாத்திற்குப் போய் இருக்கிறான்...''

இருட்டத் தொடங்கியபொழுது ஒலேனினுடைய சிந்தனைகள் 'நடன நிகழ்ச்சி'யைப் பற்றித் திரும்பின. பெலேத்ஸ்கியின் அழைப்பு அவனுக்கு எரிச்சலைக் கொடுத்தது. அவன் கலந்துகொள்ள விரும்பினான்; ஆனால் அங்கே இருப்பது அவனுக்கு விசித்திரமாக, ஓரளவுக்கு சமாளிக்க முடியாததாகத் தோன்றியது. அங்கே கஸாக்குகள் அல்லது பேரிளம் பெண்கள் இருக்க மாட்டார்கள், இளம்பெண்கள் மட்டுமே இருப்பார்கள் என்பது அவனுக்குத் தெரியும். அது எப்படி இருக்கும்? அவன் எப்படி நடந்துகொள்ள வேண்டும்? அவன் எதைப் பற்றிப் பேச வேண்டும்? அவர்கள் அவனிடம் என்ன சொல்வார்கள்? இந்தச் சுதந்திரமான கஸாக்கு இளம்பெண்களிடம் அவன் எப்படிப் பழக வேண்டும்? அவர்களுடன் விசித்திரமான, நம்பிக்கையில்லாத, அதே சமயத்தில் கண்டிப்பான உறவுகளைப் பற்றி பெலேத்ஸ்கி அவனிடம் சொல்லியிருக்கிறார்... அங்கே ஒரே அறையில் மார்யானாவுடன் இருக்கப் போவதையும் அநேகமாக அவளுடன் பேசுவதற்கு சந்தர்ப்பம் கிடைக்கும் என்பதையும் நினைக்கவே அவனுக்கு விசித்திரமாக இருந்தது. அவளுடைய கம்பீரமான தோரணையை நினைத்தபொழுது அவளுடன் அநேகமாகப் பேச முடி

யாதென்று அவன் நினைத்தான். அது மிகவும் சாதாரண விஷயம் என்று பெலேத்ஸ்கி கூறியிருந்தார். ''பெலேத்ஸ்கி மற்ற பெண்களிடம் நடந்து கொள்வதைப் போல மார்யானாவிடமும் நடந்து கொள்வாரா? அது சாத்தியமா? அது சுவாரசியமாக இருக்கும்'' என்று அவன் தனக்குள் சொல்லிக் கொண்டான். ''இல்லை. அங்கே போகாமலிருப்பது நல்லது. அது முழுவதுமே அருவருப்பானது, கேவலமானது, ஒரு பயனும் இல்லாதது.'' ஆனால் அது எப்படியிருக்கும் என்ற கேள்வி மறுபடியும் அவனைத் துன்புறுத்தியது. அவன் வாக்களித்திருந்ததும் அவனைக் கட்டாயப்படுத்தியது. அவன் ஒரு முடிவுக்கும் வராமலே வெளியில் புறப்பட்டான். ஆனால் பெலேத்ஸ்கியின் வீட்டுக்குச் சென்று உள்ளே நுழைந்தான்.

பெலேத்ஸ்கி தங்கியிருந்த கஸாக்கு வீடு ஒலேனினுடைய வீட்டைப் போலவே இருந்தது. பூமியிலிருந்து ஒன்றரை அடி உயரத்தில் தூண்களின் மேல் கட்டப்பட்டு இரண்டு அறைகளைக் கொண்டிருந்தது. ஒலேனின் செங்குத்தான படிகளில் ஏறி முதல் அறைக்குள் நுழைந்தான். அந்த அறையில் இறகு மெத்தைகள், கம்பளங்கள், போர்வைகள், தலையணைகள் கஸாக்கு பாணியில் சுவர் நெடுகிலும் நேர்த்தியாகவும் அழகாகவும் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. பக்கச் சுவர்களில் செப்புப் பாத்திரங்களும், ஆயுதங்களும் மாட்டப்பட்டிருந்தன. பெஞ்சுக்குக் கீழே தர்ப்பூசணிப் பழங்களும் சுரைக்காய்களும் வைக்கப்பட்டிருந்தன.

அடுத்த அறையில் ஒரு பெரிய அடுப்பு, மேசை, பெஞ்சுகள், தெய்வ வடிவங்கள் இருந்தன. பெலேத்ஸ்கி தன்னுடைய மடக்கும் படுக்கை, டிரங்குப் பெட்டிகள், ஒரு கம்பளம்(அதன் மீது அவருடைய ஆயுதங்கள் தொங்கிக் கொண்டிருந்தன) ஆகியவை சகிதமாக இந்த அறையில் தங்கியிருந்தார். மேசையில் பல்வேறு வாசனைப் பொருட்களும் படங்களும் சிதறிக்கிடந்தன. ஒரு பட்டு மேலங்கி பெஞ்சின் மீது கிடந்தது. அழகாகவும் சுத்தமாகவும் இருந்த பெலேத்ஸ்கி உள்ளாடை மட்டும் அணிந்து படுக்கையில் படுத்துக்கொண்டு 'திரீ மஸ்கட்டர்ஸ்' என்னும் பிரெஞ்சு நாவலைப் படித்துக் கொண்டிருந்தார்.

அவர் துள்ளியெழுந்தார்.

''நான் எப்படி வசதியாக இருக்கிறேன், பார்த்தீர்களா? அழகாக இருக்கிறதல்லவா? நீங்கள் வந்ததைப் பற்றி எனக்கு மகிழ்ச்சி. அவர்கள் அதிகமான உணவுப் பொருட்களைத் தயாரித்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் பணியாரம் எப்படி செய்கிறார்கள் என்று உங்களுக்குத் தெரியுமா? மாவைப் பிசைந்து அதில் பன்றிக் கறியும் திராட்சைப் பழங்களும் சேர்க்கிறார்கள். ஆனால் அது முக்கியமல்ல. உள்ளே எவ்வளவு சத்தம் கேட்கிறது பாருங்கள்!''

அவர்கள் சன்னல் வழியாகப் பார்த்தபொழுது அந்த வீட்டுக்காரியின் வீட்டில் அதிகமான வேலை நடந்து கொண்டிருப்பதைப் பார்த்தார்கள். இளம் பெண்கள் அந்த வீட்டிற்குள் தொடர்ச்சியாக நுழைவதும் வெளியே வருவதுமாக இருந்தார்கள். அவர்கள் கைகளில் ஏதாவதொரு பாத்திரம் இருந்தது.

''முடிந்துவிட்டதா?'' என்று பெலேத்ஸ்கி கேட்டார்.

''இதோ, சீக்கிரமாக முடிந்துவிடும், தாத்தா! உங்களுக்குப் பசிக்கிறதா?'' இந்தக் கேலியைத் தொடர்ந்து வெடிச்சிரிப்புச் சத்தம் கேட்டது.

பருமனாக, அழகாக, சிவந்த கன்னங்களுடன் இருந்த உஸ்தென்கா சட்டைக்கைகளின் நுனிகளை மேலே தூக்கிச் சொருகிக் கொண்டு தட்டுகளை வாங்கிச் செல்வதற்காக பெலேத்ஸ்கியின் அறைக்குள் வந்தாள்.

''நான் தட்டுகளை உடைத்து விடுவேன்'' என்று அவள் பெலேத்ஸ்கியிடம் கூறினாள். ''நீங்கள் அங்கே வந்து உதவி செய்தாலென்ன'' என்று சிரித்துக்கொண்டு ஒலேனினிடம் பேசினாள். ''பெண்களுக்கு இனிப்புத் தின்பண்டங்கள் வாங்கிவரச் சொல்லுங்கள்'' என்றாள்.

''மார்யானா வந்திருக்கிறாளா?''

''அதிலென்ன சந்தேகம்! அவள் பிசைந்த மாவைக் கொண்டு வந்திருக்கிறாள்.''

''இந்த உஸ்தென்காவுக்கு நல்ல உடையணிவித்து ஓரிரு ஆபரணங்களை மாட்டினால் அவள் நம்முடைய அழகிகள் எல்லோரையும் காட்டிலும் அழகுடையவளாக இருப்பாள்! நீங்கள் கஸாக்கு அழகி போர்ஷெவாவைப் பார்த்திருக்கிறீர்களா? அவள் கர்னலைத் திருமணம்

செய்துகொண்டாள். அவளைப் பார்த்தால் அப்படியே மயங்கிவிடக்கூடும். என்ன கம்பீரம்!''

''நான் போர்ஷெவாவை ஒருபோதும் பார்த்ததில்லை. அவர்களுடைய உடை மிகவும் அழகாக இருக்கிறது என்பது என்னுடைய அபிப்பிராயம்.''

''ஆ!'' என்று பெலேத்ஸ்கி கேலியாகப் பெருமூச்சுவிட்டார். ''எல்லா விதமான வாழ்க்கைக்கும் அனுசரித்துப் போகின்ற திறமை என்னிடம் இருக்கிறது. அவர்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள் என்று பார்க்கப் போகிறேன்.''

அவர் மேலங்கியை அணிந்துகொண்டு வெளியே சென்றார்.

''தின்பண்டங்கள் வாங்கிவரச் சொல்லுங்கள்!'' என்று அவர் கத்தினார்.

ஒலேனின் தன்னுடைய நண்பருடைய வேலைக்காரனிடம் கேக்குகளும் தேனும் வாங்கிவருமாறு கூறினான். அவனிடம் பணம் கொடுக்கும் பொழுது யாரையோ விலைக்கு வாங்குவதைப் போல ஒலேனினுக்கு அருவருப்பான உணர்ச்சி ஏற்பட்டது. எத்தனை இனிப்புத் தின்பண்டங்கள் வாங்க வேண்டும் என்று அவன் கேட்டபொழுது ஒலேனினால் சரியாக பதிலளிக்க இயலவில்லை.

''நீயே முடிவு செய்துகொள்.''

''எல்லாப் பணத்துக்கும் வாங்க வேண்டுமா?'' என்று அந்த முதிய படைவீரன் அர்த்தத்துடன் கேட்டான்.

''எல்லாப் பணத்துக்கும் வாங்கு, எல்லாப் பணத்துக்கும் வாங்கு!'' என்று ஒலேனின் உத்தரவிட்டான். ஏதோ ஆபத்தான, தகுதியில்லாத காரியத்தைச் செய்யப் போவதைப் போல அவன் இதயம் படபடவென்று அடித்துக் கொள்வது ஏன் என்று வியந்துகொண்டு சன்னலுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்தான்.

பெலேத்ஸ்கி பெண்கள் இருந்த அறைக்குள் நுழைந்தவுடன் அங்கே ஏற்பட்ட சிரிப்பையும் கூக்குரலையும் கேட்டான். சில நிமிடங்களில் பெலேத்ஸ்கி வேகமாக வெளியே வருவதைப் பார்த்தான். அந்த அறையில் கூச்சலும் சத்தமும் சிரிப்பும் கேட்டன.

''அவர்கள் என்னைப் பிடித்துத் தள்ளிவிட்டார்கள்'' என்று பெலேத்ஸ்கி படிகளில் ஓடிவந்து அறைக்குள் நுழைந்தபடியே கூறினார்.

சிறிது நேரத்தில் உஸ்தென்கா அந்த அறைக்குள் வந்தாள். எல்லாம் தயாராக இருக்கிறது, விருந்தினர்கள் உள்ளே வந்து தங்களை கௌரவிக்க வேண்டும் என்று மிகவும் கம்பீரமாகக் கூறினாள்.

அவர்கள் உள்ளே நுழைந்தபொழுது எல்லாம் உண்மையாகவே தயாராக இருந்தன. உஸ்தென்கா அறையின் சுவர் நெடுகிலும் இறகு மெத்தைகளை அடுக்கிக் கொண்டிருந்தாள். மேசையின் மீது அதற்குச் சிறிதும் பொருத்தமில்லாத துணி விரிக்கப்பட்டு அதன் மேல் ஒயின் கூஜாவும் உலர்ந்த மீன்களும் வைக்கப்பட்டிருந்தன. அந்த அறையில் கேக்குகள், திராட்சைப் பழங்களின் இனிமையான வாசனை பரவியிருந்தது. மிகவும் சிறந்த முறையில் உடையணிந்த ஆறு இளம்பெண்கள் (அவர்கள் வழக்கம் போலத் துணியைத் தலையில் கட்டியிருக்கவில்லை) அடுப்புக்குப் பக்கத்திலிருந்த மூலையில் கூடி நின்று முணுமுணுத்துக் கொண்டும் கேலி செய்துகொண்டும் சிரித்துக் கொண்டுமிருந்தார்கள்.

''உணவு வகைகளை ருசிபார்க்குமாறு உங்களைப் பணிவுடன் அழைக்கிறோம்'' என்று உஸ்தென்கா விருந்தினர்களை உணவு வைத்திருந்த மேசைக்கு வருமாறு கேட்டுக்கொண்டாள்.

அங்கே கூடியிருந்த பெண்கள் எல்லோரும் விதிவிலக்கில்லாமல் அழகிகளாக இருந்தார்கள். அவர்கள் மத்தியில் மார்யானா நிற்பதை ஒலேனின் கவனித்தான். இத்தகைய மோசமான, சங்கடமான சூழ்நிலையில் அவளைச் சந்திப்பது அவனுக்கு வேதனையாகவும் எரிச்சலாகவும் இருந்தது. அவன் அங்கே வந்ததை சங்கடமாக உணர்ந்தான், ஆனால் பெலேத்ஸ்கியைப் பின்பற்றுவதென்று முடிவு செய்தான். அந்த இளைஞர் ஒருவகையான பெருமிதத்துடன் ஆனால் அதே சமயத்தில் சுபாவமாகவும் பரபரப்பில்லாமலும் மேசைக்கு அருகில் சென்று உஸ்தென்காவின் நலத்துக்காக என்று சொல்லி ஒரு கிண்ணத்தில் ஒயினைக் குடித்தார்; தன்னுடைய உதாரணத்தைப் பின்பற்றுமாறு மற்றவர்களைக் கேட்டுக்கொண்டார். இளம்பெண்கள் ஒயின் குடிப்பதில்லை என்று உஸ்தென்கா விளக்கினாள்.

''தேனைக் கலந்து நாங்கள் குடிக்கலாம்'' என்று

அந்தப் பெண்கள் மத்தியிலிருந்து ஒரு குரல் ஒலித்தது.

பெலேத்ஸ்கி தன்னுடைய வேலைக்காரனைக் கூப்பிட்டார். அவன் அப்பொழுதுதான் கடையிலிருந்து தேனும் தின்பண்டங்களும் வாங்கிக்கொண்டு திரும்பியிருந்தான். அவன் தன்னுடைய கண்களின் ஓரத்தினால் பிரபுக்களைப் பார்த்தான். அந்தப் பார்வையில் பொறாமை அல்லது இகழ்ச்சி இருந்தது. அவர்கள் உல்லாசமாகவே இருப்பதாக அவன் கருதினான். தேனையும் காகிதத்தில் சுற்றப்பட்டிருந்த தின்பண்டங்களையும் கவனமாகக் கொடுத்துவிட்டு வாங்கிய பொருட்களுக்கு முறையாகக் கணக்குச் சொல்ல ஆரம்பித்தான்; ஆனால் பெலேத்ஸ்கி அவனை வெளியே விரட்டினார்.

ஒயினில் தேனைக் கலந்து கிண்ணங்களில் ஊற்றப்பட்டது; மூன்று பவுண்டு கேக்குகளும் மேசையின் மீது வைக்கப்பட்டன. பெலேத்ஸ்கி மூலையில் நின்றுகொண்டிருந்த பெண்களைக் கட்டாயப்படுத்தி மேசைக்கு முன்பாக உட்கார்த்தினார். பிறகு அங்கே வைக்கப்பட்டிருந்த தின்பண்டங்களை அவர்களிடம் விநியோகம் செய்ய ஆரம்பித்தார்.

மார்யானா தன்னுடைய சிறிய, சூரிய ஒளியில் கறுத்திருந்த கையில் மூன்று கேக்குகளை வைத்துக்கொண்டு என்ன செய்வதென்று தெரியாமல் உட்கார்ந்து கொண்டிருந்ததை ஒலேனின் பார்க்கத் தவறவில்லை. பெலேத்ஸ்கியும் உஸ்தென்காவும் உற்சாகமாக நடந்துகொண்டதுடன் அங்கே இருந்தவர்களுக்கு மகிழ்ச்சியூட்டுவதற்கு மிகவும் முயன்றார்கள். எனினும் அந்த விருந்து அடக்கமாகவும் குதூகலமின்றியும் இருந்தது. ஒலேனினுக்கு ஏதோ சங்கடமாக இருந்தது. ஏதாவது பேச வேண்டுமே என்று மூளையைக் கசக்கினான். தன்னை எல்லோரும் ஆர்வத்துடன்—ஒருவேளை வேடிக்கை பார்க்கின்ற மாதிரி பார்க்கிறார்கள், தன்னுடைய சங்கட உணர்ச்சி அவர்களுக்கும் பரவிவிட்டது என்று ஒலேனின் உணர்ந்தான். அவன் முகத்தில் சிவப்பேறியது; குறிப்பாக மார்யானா அந்தச் சூழ்நிலையிலிருந்த சங்கடத்தை உணர்ந்ததாக அவன் நினைத்தான்.

''நாம் அவர்களுக்குப் பணம் கொடுப்பதற்காக ஒருவேளை அவர்கள் காத்துக் கொண்டிருக்கலாம்'' என்று

அவன் தனக்குள் சொல்லிக்கொண்டான். ''நாம் எப்படி அவர்களிடம் பணம் கொடுக்க வேண்டும்? அவர்களிடம் இயன்ற அளவு சீக்கிரமாகப் பணத்தைக் கொடுத்துவிட்டுப் புறப்படுவது எப்படி?''

## 25

''உன் வீட்டில் குடியிருப்பவரை நீ இன்னும் தெரிந்து கொள்ளாதிருப்பது எப்படி?'' என்று பெலேத்ஸ்கி மார்யானாவிடம் திரும்பிக் கேட்டார்.

''அவர் எங்களைச் சந்திக்க ஒருபோதும் வராமலிருக்கும் பொழுது நான் அவரை எப்படித் தெரிந்து கொள்ள முடியும்?'' என்று மார்யானா ஒலேனினை ஓரக் கண்ணால் பார்த்துக்கொண்டு பதிலளித்தாள்.

இதைக் கேட்டு வெட்கமடைந்த ஒலேனின் முகம் சிவந்து சம்பந்தமில்லாமல் பேசினான்: ''உன் தாயாரிடம் எனக்கு பயம். நான் முதல் தடவை உங்களைப் பார்க்க வந்தபொழுது அவள் என்னைத் திட்டிவிட்டாள்.''

மார்யானா படீரென்று சிரித்தாள்.

''உடனே நீங்கள் பயந்துவிட்டீர்களா?'' என்று அவள் ஒலேனினைப் பார்த்துக் கேட்டுவிட்டு முகத்தைத் திருப்பிக்கொண்டாள்.

ஒலேனின் அந்த அழகிய பெண்ணின் முகத்தை முழுமையாகப் பார்ப்பது அது தான் முதல் தடவை. இதுவரை அவள் கண்களைத் தவிர முகத்தைத் துணியால் மூடியிருப்பாள். அந்த கிராமத்தின் அழகு ராணியாக அவள் கருதப்பட்டது காரணமில்லாமல் அல்ல. உஸ்தென்கா கவர்ச்சியான இளம்பெண்; குட்டை, சற்றுப் பருமன், சிவந்த கன்னங்கள் செம்பழுப்பு நிறக் கண்கள். அவளுடைய சிவந்த உதடுகள் எப்பொழுதும் சிரித்துக் கொண்டேயிருக்கும். அவள் எப்பொழுதும் கேலியும் பேச்சுமாக இருப்பாள். ஆனால் மார்யானா அதற்கு மாறானவள். அவள் கவர்ச்சிகரமானவள் அல்ல, ஆனால் உண்மையான அழகி. பொருத்தமாக அமைந்திருந்த அவளுடைய வடிவம், எடுப்பான மார்பும் தோள்களும், குறிப்பாக அடர்த்தியான புருவங்களின் நிழலிலிருந்து எட்டிப்

பார்க்கின்ற அவளுடைய நீளமான கரிய நிறக் கண்களின் கடுமையான, ஆனால் அன்பு நிறைந்த பார்வையும் அவளுடைய உதடுகளில் தவழ்ந்த புன்சிரிப்பின் நேசமும் இல்லையென்றால் அவளுடைய முகம் அதிகமான அளவுக்கு ஆண்மகனைப் போல, அநேகமாக முரட்டுத்தனமாக இருப்பதாக யாரும் நினைத்திருக்கலாம். அவள் அபூர்வமாகத்தான் சிரித்தாள். ஆனால் அவளுடைய சிரிப்பு எப்பொழுதும் வசீகரமாக இருந்தது. அவளுடைய உடலில் வலிமையும் ஆரோக்கியமும் பொங்கித் ததும்பின. அங்கிருந்த எல்லாப் பெண்களுமே கவர்ச்சிகரமாக இருந்த போதிலும் அவர்களும் பெலேத்ஸ்கியும் தின்பண்டங்களை வாங்கிவந்த வேலைக்காரனும் மார்யானாவிடம் தடுக்க முடியாதபடி கவர்ந்து இழுக்கப் பட்டார்கள். அவர்கள் அங்கிருந்த பெண்களிடம் பேசிய பொழுது இயல்பாகவே மார்யானாவை நோக்கித் திரும்பினார்கள். அவள் மற்றவர்கள் மத்தியில் பெருமிதம் நிறைந்த, கம்பீரமான ராணியைப் போலத் தோன்றினாள்.

அந்த விருந்தை வெற்றிகரமாக்குவதற்கு பெலேத்ஸ்கி விடாமுயற்சி செய்து கொண்டிருந்தபடியால் அவர் தன்னுடைய கலகலப்பான பேச்சை நிறுத்தவில்லை. அவர் இளம்பெண்களிடம் ஒயினைக் குடிக்குமாறு வற்புறுத்தினார், அவர்களிடம் நகைச்சுவையாகப் பேசினார்; மார்யானாவின் அழகைப் பற்றி சுவைக்கேடான சொற்களை பிரெஞ்சு மொழியில் ஒலேனினிடம் ஓயாமல் சொல்லிக் கொண்டிருந்தார்; அவளை 'உங்களுடையவள்' என்று குறிப்பிட்டதுடன் தன்னுடைய உதாரணத்தைப் பின்பற்றுமாறு ஒலேனினையும் வற்புறுத்தினார்.

ஆனால் ஒலேனினுக்கு அது மேன்மேலும் தாங்கிக் கொள்ள முடியாததாக இருந்தது. இந்த இடத்திலிருந்து தப்பிச் செல்வதற்கு ஏதாவதொரு சாக்கைக் கண்டு பிடிக்க ஒலேனின் முயற்சி செய்து கொண்டிருந்தபொழுது பெலேத்ஸ்கி ஓர் அறிவிப்பைச் செய்தார். அவர்கள் அன்று உஸ்தென்காவுக்குப் பெயர் சூட்டிய நாளைக் கொண்டாடியபடியால் அவள் எல்லோருக்கும் ஒயினும் முத்தமும் அளிக்க வேண்டும் என்றார். அவள் ஒரு நிபந்தனையின் பேரில் அதற்கு ஒத்துக்கொண்டாள். கிராமத்தில் நடைபெறுகின்ற திருமணங்களில் செய்வதைப்

போல தன்னுடைய தட்டில் அவர்கள் காசு போட வேண்டும் என்று அவள் கூறினாள். ''பிசாசுதான் இந்த அருவருப்பான விவகாரத்திற்குள் என்னை இழுத்திருக்க வேண்டும்!'' என்று ஒலேனின் தனக்குள் சொல்லிக் கொண்டான். அவன் புறப்படுகின்ற உத்தேசத்துடன் எழுந்தான்.

''நீங்கள் எங்கே போகிறீர்கள்?''

''நான் புகையிலை எடுக்கப் போகிறேன்'' என்று ஒலேனின் அப்படியே போய்விடுகின்ற உத்தேசத்துடன் கூறினான். ஆனால் பெலேத்ஸ்கி அவன் கையைப் பிடித்து நிறுத்தினார்.

''என்னிடம் பணம் இருக்கிறது'' என்று அவர் பிரெஞ்சு மொழியில் கூறினார்.

''சரி. இனி தப்ப முடியாது. நான் பணம் கொடுக்கத்தான் வேண்டும்'' என்று ஒலேனின் நினைத்தான். தான் சாமர்த்தியமாக நடந்துகொள்ளாததைப் பற்றி அவனுக்கும் கோபமேற்பட்டது. ''பெலேத்ஸ்கியைப் போல நான் நடந்துகொள்ள முடியாதா? நான் இங்கே வந்திருக்கக் கூடாது, ஆனால் வந்தபிறகு அவர்களுடைய வேடிக்கையைக் கெடுப்பதற்கு எனக்கு உரிமையில்லை. நான் கஸாக்கு பாணியில் குடிக்க வேண்டும்'' என்று நினைத்தான். சுமார் எட்டுக் கிண்ணங்கள் கொண்ட மரக் கோப்பையை எடுத்து அதில் ஒயினை ஊற்றி ஒரே மடக்கில் குடித்தான். அங்கிருந்த இளம்பெண்கள் அதை ஆச்சர்யத்துடன், அநேகமாக பயத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அது விசித்திரமாகவும் பண்புக் குறைவாகவும் அவர்களுக்குத் தோன்றியது. உஸ்தென்கா இருவருக்கும் ஒவ்வொரு கிண்ணங்களில் ஒயின் கொடுத்து இருவரையும் முத்தமிட்டாள்.

''பெண்களே! நாம் இப்போது உல்லாசமாக இருப்போம்'' என்று அவள் தட்டில் போடப்பட்டிருந்த நான்கு ரூபிள்களைக் குலுக்கிக் காட்டினாள்.

அதற்குப் பிறகு ஒலேனின் எவ்விதத்திலும் அடக்கமாக நடந்து கொள்ளவில்லை. அவன் நிதானமில்லாமல் பேச ஆரம்பித்தான்.

''மார்யானா, இப்பொழுது முத்தமிட்டு கிண்ணத்தைத் தர வேண்டியது உன்னுடைய முறை'' என்று

பெலேத்ஸ்கி அவளுடைய கையைப் பிடித்திழுத்தவாறு கூறினார்.

''நான் உனக்கு இப்படித்தான் முத்தம் கொடுப்பேன்'' என்று அவரை நோக்கிக் கையை உயர்த்தியபடி அவள் கூறினாள்.

''தாத்தா பணம் கொடுக்காவிட்டால் கூட அவருக்கு முத்தம் கொடுக்க வேண்டும்'' என்றாள் மற்றொரு பெண்.

''புத்திசாலிப் பெண்!'' என்றார் பெலேத்ஸ்கி. அவர் அந்தப் பெண்ணைப் பிடித்திழுத்து அவள் திமிறியதைப் பொருட்படுத்தாமல் முத்தமிட்டார்.

''நீ ஒயினைக் கொடுக்க வேண்டும்'' என்று பெலேத்ஸ்கி மார்யானாவை வற்புறுத்தினார். ''உன் வீட்டில் தங்கியிருப்பவருக்குக் கொடு.''

அவள் கையைப் பிடித்திழுத்து பெஞ்சில் ஒலேனினுக்குப் பக்கத்தில் உட்கார வைத்தார்.

''எவ்வளவு அழகான பெண், பாருங்கள்!'' என்று அவளுடைய தலையைத் திருப்பிப் பக்கவாட்டில் அவள் முகத்தைக் காட்டினார்.

மார்யானா சிறிதும் எதிர்க்கவில்லை; அவள் பெருமிதத்துடன் சிரித்துக்கொண்டு தன்னுடைய நீளமான, கரிய விழிகளை ஒலேனினை நோக்கித் திருப்பினாள்.

''சிறந்த அழகி!'' என்று பெலேத்ஸ்கி மறுபடியும் கூறினார்.

''நான் எப்படிப்பட்ட அழகி என்பதைப் பாருங்கள்!'' என்று சொல்வதைப் போல மார்யானா பார்த்தாள்.

ஒலேனின் கையை நீட்டி மார்யானாவை இழுத்து அவளை முத்தமிடுவதற்கு முயற்சி செய்தான். ஆனால் அவள் திடீரென்று தன்னை விலக்கிக்கொண்டு, பெலேத்ஸ்கியை அநேகமாகக் குப்புறத் தள்ளி மேசை மீதிருந்த சிறிய மூடியைக் கீழே தள்ளிவிட்டு அடுப்பிற்குப் பின்னால் ஓடி மறைந்தாள். அங்கே கூக்குரல்களும் சிரிப்பும் பொங்கின. பெலேத்ஸ்கி பெண்களிடம் ஏதோ இரகசியமாகச் சொன்னார். அவர்கள் எல்லோரும் திடீரென்று அந்த அறையிலிருந்து வெளியே ஓடி வராந்தாவில் போய் நின்றுகொண்டார்கள். அந்த அறையின் கதவை மூடிவிட்டார்கள்.

''நீ பெலேத்ஸ்கியை முத்தமிட்டாய். ஆனால் என்னை முத்தமிட மாட்டேன் என்று சொல்வது ஏன்?'' என்று ஒலேனின் கேட்டான்.

''எனக்குப் பிடிக்கவில்லை. அவ்வளவுதான்'' என்று அவள் தன்னுடைய கீழுதட்டைப் பிதுக்கி முகத்தைச் சுளித்துக்கொண்டு கூறினாள். ''அவர் தாத்தா'' என்று அவள் சிரித்துக்கொண்டு கூறினாள். அவள் கதவின் அருகில் சென்று அதை ஓங்கிக் குத்தத் தொடங்கினாள். ''பிசாசுகளே! கதவை ஏன் தாளிட்டீர்கள்?''

''அவர்கள் அங்கே இருக்கட்டும். நாம் இங்கே இருப்போம்'' என்று ஒலேனின் அவளை நெருங்கி வந்து கூறினான்.

அவள் மறுபடியும் முகத்தைச் சுளித்துக் கொண்டு அவனை விலகிப் போ என்று பிடித்துத் தள்ளினாள். அவள் மிகவும் அற்புதமான அழகி என்று மறுபடியும் அவனுக்குத் தோன்றியபடியால் அவன் சுய உணர்வு பெற்று தனது செயலுக்காக வெட்கப்பட்டான். அவன் கதவின் அருகில் சென்று அதை இழுத்துத் திறப்பதற்கு முயற்சி செய்தான்.

''பெலேத்ஸ்கி, கதவைத் திறவுங்கள்! இது என்ன முட்டாள்தனம்? ஏன் இப்படிச் செய்தீர்கள்?''

மார்யானா மறுபடியும் புதுமலர்ச்சியுடன் ஆனந்தமாகச் சிரித்தாள்.

''ஆ! என்னைக் கண்டு பயப்படுகிறீர்கள் அல்லவா?'' என்றாள்.

''ஆமாம்! ஏனென்றால் நீ உன்னுடைய அம்மாவைப் போல முசுடு.''

''நீங்கள் யெரோஷ்காவுடன் இன்னும் அதிக நேரத்தைக் கழித்தால் பெண்கள் உங்களை இன்னும் அதிகமாக விரும்புவார்கள்'' என்று அவள் கிண்டலாகக் கூறினாள். அவன் கண்களை நேராகப் பார்த்துக்கொண்டு முறுவலித்தாள்.

என்ன பதில் சொல்வதென்று அவனுக்குத் தெரியவில்லை.

''நான் உங்களைப் பார்க்க வந்தால்?'' என்று அவன் திடீரென்று கேட்டான்.



''எல்லாமே வேறு விதமாக இருக்கும்'' என்று அவள் தலையை ஆட்டிக்கொண்டு பதிலளித்தாள்.

அந்த நேரத்தில் பெலேத்ஸ்கி கதவைக் குத்தித் திறந்தார். மார்யானா பின்னோக்கிச் சாய்ந்து விலகுவதற்காகத் துள்ளிக் குதித்தபொழுது அவளுடைய இடை ஒலேனின் காலில் இடித்தது.

''குப்பை, நான் நினைத்துக் கொண்டிருந்தவை, காதலையும் சுயமறுப்பையும் லுக்காஷ்காவையும் பற்றி என்னுடைய கருத்துகள் எல்லாம் குப்பை. மகிழ்ச்சியடைவதுதான் முக்கியம். மகிழ்ச்சியைத் தேடுவது நியாயமானதே'' என்று ஒலேனினுடைய மூளையில் ஒரு கருத்து தோன்றியது. அவன் அழகி மார்யானாவைத் தழுவி—அந்த நேரத்தில் அவனுக்கேற்பட்ட பலம் அவனுக்கு வியப்பாக இருந்தது—அவளுடைய நெற்றியிலும் கன்னத்திலும் முத்தமிட்டான். மார்யானா கோபமடையவில்லை. அவள் குதூகலமாக சிரித்துக்கொண்டு மற்ற பெண்களுடன் சேருவதற்கு ஓடினாள்.

அந்த விருந்து இப்படி முடிவடைந்தது. உஸ்தென்காவின் தாயார் வேலை முடிந்து வீட்டுக்குத் திரும்பினாள். அந்தக் கிழவி அங்கிருந்த இளம்பெண்களைத் திட்டி வீட்டுக்கு அனுப்பினாள்.

# 26

''ஆம்! என் உணர்ச்சிகளுக்கு சுதந்திரம் கொடுப்பதை மட்டும் செய்தால் போதும்; இந்த கஸாக்குப் பெண்ணை முட்டாள்தனமாகக் காதலிக்க ஆரம்பிப்பேன்'' என்று சிந்தித்துக்கொண்டு ஒலேனின் வீட்டுக்குத் திரும்பினான். அவன் இதே சிந்தனையுடன் உறங்கினான். இந்த மடமை தானாக மறைந்துவிடும், பழைய வாழ்க்கைக்குத் திரும்ப முடியும் என்று அவன் கற்பனை செய்தான்.

ஆனால் அந்தப் பழைய வாழ்க்கை மறுபடியும் தொடங்கவில்லை, மார்யானாவுடன் அவனுடைய உறவுகள் மாறிவிட்டன. முன்பு அவர்களைப் பிரித்துவைத்திருந்த தடுப்புச் சுவர் நொறுங்கிவிட்டது. அவர்கள் சந்திக்கும்பொழுது ஒலேனின் எப்பொழுதும் அவளுக்கு முகமன் கூறினான்.

துணை லெப்டினென்ட் வீட்டுக்கு வாடகை வசூலிக்க வந்தார். ஒலேனினுடைய செல்வத்தையும் பரோபகாரத்தையும் பற்றிக் கேள்விப்பட்டபடியால் தங்களைப் பார்க்க வருமாறு அழைத்தார். அந்தக் கிழவி அவனை முகஸ்துதி செய்கின்ற முறையில் வரவேற்றாள். அந்த 'நடன நிகழ்ச்சி'க்குப் பிறகு ஒலேனின் தன்னுடைய வீட்டின் சொந்தக்காரி வசித்த குடிசைக்கு அடிக்கடி சென்றான். மாலையில் வெகுநேரம் வரை அவர்களுடன் உரையாடிக் கொண்டிருந்தான். அவன் வெளித் தோற்றத்தில் பழைய மாதிரியாகவே அந்த கிராமத்தில் வாழ்ந்து கொண்டிருந்தான்; ஆனால் அவனுடைய இதயத்தின் ஆழத்தில் எல்லாமே மாறிவிட்டன. அவன் பகல் நேரத்தைக் காட்டில் கழிப்பான்; ஆனால் எட்டு மணியாகி இருட்டத் தொடங்கியதும் தனியாகவோ அல்லது யெரோஷ்கா மாமாவுடனோ தன்னுடைய வீட்டின் சொந்தக்காரர்களிடம் செல்வான். அவன் அவர்களுடன் நெருங்கிப் பழகிவிட்டபடியால் அவன் வரவில்லை என்றால் அவர்கள் ஆச்சரியமடைந்தார்கள். அவன் குடித்த ஒயினுக்குத் தாராளமாகவே பணம் கொடுத்

தான்; மேலும் அவன் சுமுகமாக நடந்து கொண்டான். வன்யூஷா அவனுக்கு அங்கே தேநீர் கொண்டுவந்து தருவான்; அவன் அடுப்புக்குப் பக்கத்தில் ஒரு மூலையில் உட்கார்ந்திருப்பான். அவன் அங்கே உட்கார்ந்திருப்பதனால் குலையாத அந்தக் கிழவி தன்னுடைய வேலையைச் செய்து கொண்டிருப்பாள்; அவர்கள் தேநீர் அருந்திக்கொண்டு அல்லது ஒயினைக் குடித்துக் கொண்டு கஸாக்குகளின் செயல்களைப் பற்றி, தங்களது அண்டை அயலாரைப் பற்றிப் பேசிக் கொண்டிருப்பார்கள் அல்லது ஒலேனின் அவர்களிடம் ருஷ்யாவைப் பற்றிச் சொல்வான் அல்லது அவர்கள் அவனிடம் கேள்வி கேட்பார்கள். சில சமயங்களில் அவன் தன்னுடைய புத்தகத்தைக் கொண்டுவந்து அங்கே உட்கார்ந்து படிப்பான்.

மார்யானா காட்டிலுள்ள ஆட்டைப் போலத் தன்னுடைய கால்களை மடக்கிக்கொண்டு அடுப்பின் மேல் அல்லது விளக்கிலிருந்து மிகவும் தள்ளியிருக்கின்ற மூலையில் உட்கார்ந்திருப்பாள். அவள் உரையாடலில் கலந்து கொள்ள மாட்டாள்; ஆனால் ஒலேனின் அவளுடைய கண்களையும் முகத்தையும் பார்த்தான், அவள் அசைந்த பொழுது அல்லது விதைகளைக் கொறிக்கின்றபொழுது அந்த ஓசையைக் கேட்டான். அவன் பேசுகின்றபொழுது அவள் தன்னுடைய முழு கவனத்துடனும் கேட்டுக் கொண்டிருக்கிறாள் என்பதை உணர்ந்தான். அவன் அமைதியாகப் படித்துக் கொண்டிருக்கும் பொழுது கூட அவள் அங்கே இருப்பதை உணர்ந்தான். அவள் தன்னையே பார்த்துக் கொண்டிருக்கிறாள் என்று சில சமயங்களில் அவனுக்குத் தோன்றியது. அவள் பார்வையும் அவன் பார்வையும் சந்திக்கும்பொழுது அவன் தன்னையறியாமலே மௌனமாக அவளைப் பார்த்துக் கொண்டிருப்பான். அவள் உடனே தன்னுடைய கண்களைத் திருப்பிக் கொள்வாள். அவன் அந்தக் கிழவியுடன் உரையாடலில் மும்முரமாக ஈடுபட்டிருப்பதைப் போலப் பாசாங்கு செய்து கொண்டு அவள் சுவாசத்தை, அவளுடைய ஒவ்வொரு அசைவின் சத்தத்தையும் கேட்டுக் கொண்டிருப்பான்.

அவள் மறுபடியும் தன்னை எப்பொழுது பார்ப்பாள் என்று காத்திருப்பான்.

மற்றவர்கள் இருக்கின்றபொழுது அவள் பெரும்பாலும் அவனிடம் மகிழ்ச்சியான நட்புணர்ச்சியுடன் நடந்துகொண்டாள்; ஆனால் அவர்கள் தனியாக இருக்கும்பொழுது அவள் கட்டுப்பாடில்லாமலும் முரட்டுத்தனமாகவும் நடந்துகொண்டாள். சில சமயங்களில் மார்யானா தெருவிலிருந்து திரும்புவதற்கு முன்பாக அவன் அங்கே போவதுண்டு. அங்கே உட்கார்ந்து இருக்கும்பொழுது திடீரென்று அவள் பாதங்களை அழுத்தி நடந்து வருகின்ற சத்தம் அவனுக்குக் கேட்கும்; திறந்திருக்கும் கதவின் வழியாக அவளுடைய நீலநிறக் கலிக்கோ சட்டை தோன்றி மறையும். அவள் அறையின் மத்தியப் பகுதிக்குள் நுழைந்தவுடன் அவனைப் பார்ப்பாள்; அவளுடைய கண்கள் மென்மையாகச் சிரிக்கும். அப்பொழுது மகிழ்ச்சியும் பயமும் கலந்த உணர்ச்சி அவனைப் பற்றிக்கொள்ளும்.

அவன் அவளிடம் எதுவும் கேட்கவில்லை, ஒன்றும் எதிர்பார்க்கவில்லை. ஆனால் ஒவ்வொரு நாளும் அவளைப் பார்ப்பது அவனுடைய வாழ்க்கைக்கு மேன்மேலும் இன்றியமையாததாகிவிட்டது.

அவன் இப்படி அந்த கிராம வாழ்க்கைக்கு மிகவும் பழக்கப்பட்டு விட்டபடியால் அவனுடைய கடந்த கால வாழ்க்கை முற்றிலும் அந்நியமான ஏதோ ஒன்றாக அவனுக்குத் தோன்றியது. அவன் வாழ்ந்த அந்தச் சிறிய உலகத்தைத் தவிர எதிர்காலம் என்பது அறவே இல்லாததாகத் தோன்றியது. அவனுடைய உறவினர்களிடமிருந்து அல்லது நண்பர்களிடமிருந்து கடிதம் வந்தால் அவன் வருத்தமடைந்தான்; ஏனென்றால் அவன் அழிந்து போய்விட்டதைப் போல அவர்கள் சோகத்தைக் கொட்டினார்கள். ஆனால் அந்த கஸாக்கு கிராமத்தில் வசித்துக் கொண்டிருந்த அவன் தன்னைப் போன்ற வாழ்க்கையை நடத்தாத எல்லோரையும் உருப்படாதவர்கள் என்று கருதினான். தன்னுடைய பழைய வாழ்க்கை முறையிலிருந்து தன்னைப் பிய்த்துக்கொண்டதைப் பற்றி, அந்த கிராமத்தில் தன்னுடைய சூழலை எளிமையாகவும் இயல்பாகவும் அமைத்திருப்பதைப் பற்றி ஒருபோதும் வருத்

தப்படவேண்டிய அவசியமிருக்காது என்று அவன் கருதினான். அவன் இராணுவப் படையெடுப்புக்களுக்கும் கோட்டைகளுக்கும் சென்றபொழுது மகிழ்ச்சியாகவே இருந்தது. ஆனால் இங்கே, யெரோஷ்கா மாமாவின் துணையுடன் தன்னுடைய காட்டில், கிராமத்தின் ஓரத்திலிருந்த தன்னுடைய வீட்டில் இருந்தபொழுது, குறிப்பாக மார்யானாவையும் லுக்காஷ்காவையும் நினைத்தபொழுது பழைய வாழ்க்கையின் பொய்மையை அவன் முற்றிலும் தெளிவாக உணர்ந்தான். அக்காலத்தில் கூட அந்த வாழ்க்கை அவன் மனத்தில் கலவரமூட்டியது, ஆனால் இப்பொழுது வர்ணிக்க முடியாத அளவுக்கு அருவருப்பாகவும் முட்டாள்தனமாகவும் தோன்றியது.

அவன் ஒவ்வொரு நாளும் மேன்மேலும் சுதந்திரமடைந்தவனாக, மனிதனாக உணர்ந்தான். காகசஸ் அவனுடைய கனவுகளிலிருந்து முற்றிலும் வேறுவிதமாக இருந்தது. காகசசைப் பற்றி அவனுடைய கற்பனைகள் அல்லது அவன் கேள்விப்பட்டிருந்த, படித்திருந்த வர்ணனைகளுக்கும் ஏற்றபடி அங்கே ஒன்றுமில்லை என்பதை அவன் கண்டுகொண்டான். ''நான் கற்பனை செய்ததைப் போன்று காகேஷிய மென்மயிர் மேல்கோட்டுகளோ, நீர்வீழ்ச்சிகளோ இங்கே இல்லை, அமலாத்-பெக்குகளோ, வீரர்களோ, போக்கிரிகளோ இங்கே கிடையாது'' என்று அவன் தனக்குள் சொல்லிக்கொண்டான். ''இயற்கையைப் போலவே மனிதர்கள் வாழ்கிறார்கள்; அவர்கள் மடிகிறார்கள், அவர்கள் பிறக்கிறார்கள், அவர்கள் திருமணம் செய்துகொள்கிறார்கள், அவர்கள் மறுபடியும் பிறக்கிறார்கள், அவர்கள் சண்டை போடுகிறார்கள், குடிக்கிறார்கள், சாப்பிடுகிறார்கள், உற்சாகமாக வாழ்கிறார்கள், மறுபடியும் அவர்கள் மடிகிறார்கள். சூரியன், புல், பிராணி, மரம் ஆகியவற்றின் மீது இயற்கை விதிக்கின்ற மாற்ற முடியாத நிபந்தனைகளைத் தவிர வேறு ஒன்றுமில்லை. வேறு விதிகள் இங்கே செயல்படவில்லை.'' ஆகவே அவனுடன் ஒப்பிடுகிற பொழுது அவர்கள் அழகானவர்களாக, வலிமையானவர்களாக, சுதந்திரமானவர்களாகத் தோன்றினார்கள். அவர்களைப் பார்க்கும்பொழுது அவன் வெட்கமடைந்தான், தன்னை நினைத்து வருத்தப்பட்டான்.

எல்லாவற்றையும் துறந்துவிட்டு கஸாக்குகளில் ஒருவனாகச் சேர்ந்து, வீடும் கால்நடையும் வாங்கிக்கொண்டு, கஸாக்குப் பெண்ணைத் திருமணம் செய்து கொண்டு (மார்யானா அல்ல, அவளை லுக்காஷ்காவுக்கு விட்டுக் கொடுத்துவிடுவான்) யெரோஷ்காவுடன் வாழ்வது, அவருடன் சேர்ந்து வேட்டையாடவும் மீன்பிடிக்கவும் செல்வது, கஸாக்குகளுடன் படையெடுப்புக்குப் போவது ஆகிய எண்ணங்கள் ஆழமான முறையில் அவனிடம் அடிக்கடி ஏற்பட்டன.

''நான் ஏன் அப்படிச் செய்யவில்லை? நான் எதற்காகக் காத்துக் கொண்டிருக்கிறேன்?'' என்று அவன் தன்னைக் கேட்டுக்கொண்டான். அவன் தன்னை வருத்திக் கொண்டான், தன்னையே சோதித்துக் கொண்டான். ''எனக்கு நியாயமானதாகவும் சரியானதாகவும் தோன்றுவதைச் செய்வதற்கு நான் அஞ்சுகிறேனா? சாதாரண கஸாக்காக வாழ வேண்டும், இயற்கையோடிணைந்த வாழ்க்கை நடத்த வேண்டும், மனிதர்களுக்குத் தீங்கு செய்யக் கூடாது, நன்மையே செய்ய வேண்டும்—இதைச் செய்ய வேண்டும் என்ற கனவு, மந்திரியாக அல்லது ரெஜிமென்டின் கமான்டராக இருக்கவேண்டும் என்று முன்னர் நான் கண்ட கனவுகளைக் காட்டிலும் அதிக முட்டாள்தனமானதா?''

''பொறுத்திரு, அவசரப்பட்டு முடிவு செய்யாதே'' என்று ஏதோ ஒரு குரல் அவனைக் கேட்டுக் கொண்டது. யெரோஷ்கா அல்லது லுக்காஷ்காவின் வாழ்க்கை போன்று அதே மாதிரியாகத் தான் வாழ முடியாது, ஏனென்றால் அவனிடம் வேறு விதமான மகிழ்ச்சி இருக்கிறது என்னும் குழப்பமான உணர்வு அவனைத் தடுத்தது: மகிழ்ச்சி என்பது சுயமறுப்பில் அடங்கியிருக்கிறது என்னும் எண்ணம் அவனைத் தடுத்தது. லுக்காஷ்காவுக்கு அவன் உதவி செய்ததைப் பற்றி ஓயாமல் மகிழ்ச்சி அடைந்தான். மற்றவர்களின் நலனுக்காகத் தன்னைத் தியாகம் செய்துகொள்ளக்கூடிய சந்தர்ப்பத்தை அவன் முடிவில்லாமல் தேடினான். ஆனால் அந்த வாய்ப்பு அவனுக்குக் கிடைக்கவில்லை. சில சமயங்களில் அவன் மகிழ்ச்சியை அடைவதற்குப் புதிதாகக் கண்டு பிடிக்கப்பட்ட இந்த சூத்திரத்தை மறந்துவிடுவான், யெரோஷ்கா மாமாவின்

வாழ்க்கையில் பங்கெடுப்பதற்கு சுதந்திரமுள்ளவனாகத் தன்னைக் கருதுவான். ஆனால் திடீரென்று அதை மறுபடியும் நினைத்துக்கொள்வான்; உடனே உணர்வு பூர்வமான சுயமறுப்பு என்ற எண்ணத்தைப் பிடித்துத் தொங்குவான், ஆகவே எல்லா மனிதர்களையும் மற்றவர்களுடைய மகிழ்ச்சியையும் அமைதியாகவும் அகந்தையுடனும் பார்ப்பான்.

## 27

திராட்சைப் பழங்களைப் பறிக்கின்ற பருவத்துக்கு முன்னர் லுக்காஷ்கா குதிரையில் சவாரி செய்துகொண்டு ஒலேனினைப் பார்க்க வந்தான். அவனிடம் வீரமான கஸாக்கின் தோற்றம் வழக்கத்தைக் காட்டிலும் அதிகமாக இருந்தது.

''எப்படி இருக்கிறாய்? உன் திருமணம் எப்பொழுது?'' என்று ஒலேனின் அவனை அன்புடன் வரவேற்றுக்கொண்டு கேட்டான்.

லுக்காஷ்கா நேரடியாக பதிலளிக்கவில்லை.

''ஆற்றின் அக்கரையில் உங்கள் குதிரையைக் கொடுத்துவிட்டு இந்தக் குதிரையை வாங்கியிருக்கிறேன்! சரியான குதிரை! சிறந்த குதிரைப் பண்ணையின் சூடுபோடப்பட்ட அந்த கபர்தா குதிரைகள் எனக்கு மிகவும் பிடிக்கும்.''

அவர்கள் புதிய குதிரையை கவனமாகப் பார்த்தார்கள். சுற்றுவட்டகையில் அதை நடக்க விட்டார்கள். அது உண்மையாகவே அற்புதமான குதிரை—செம்பழுப்பு நிறப் பொலிகுதிரை. அகலமான நீளமான முதுகு, பளபளப்பான தோல், நன்கு மயிரடர்ந்த வால், உயர் ஜாதிக் குதிரையின் மென்மையான பிடரிமயிர் கொண்டது. அந்தக் குதிரை மிகவும் கொழுத்திருந்தபடியால், அதன் முதுகில் படுத்துத் தூங்க முடியும் என்று லுக்காஷ்கா கூறினான். அதன் குளம்புகள், கண்கள், பற்கள் மற்றும் எல்லா உறுப்புகளுமே சிறப்பாக இருந்தன. அது மிகவும் தூய்மையான ஜாதிக் குதிரை என்று தெளிவாகத் தெரிந்தது. ஒலேனினால் அந்தக் குதிரையைப் பாராட்டாமல் இருக்க முடியவில்லை. காகசசில் அவ்வளவு அழகான குதிரையை அவன் பார்த்ததில்லை.

''நன்றாக ஓடுகிறது'' என்று லுக்காஷ்கா குதிரையின் கழுத்தைத் தடவிக்கொடுத்தவாறு கூறினான். ''எப்படி நடை! மிகவும் புத்திசாலி. எசமானருக்குப் பின்னாலேயே ஓடிவரும்.''

''நீ அதிகமாகப் பணம் கொடுத்தாயா?'' என்று ஒலேனின் கேட்டான்.

''நான் எண்ணிப் பார்க்கவில்லை'' என்று லுக்காஷ்கா புன்சிரிப்புடன் பதிலளித்தான். ''என்னுடைய நண்பன் கொடுத்தான்.''

''பிரமாதமான குதிரை! அழகான குதிரை! என்ன விலைக்குக் கொடுப்பாய்?'' என்று ஒலேனின் கேட்டான்.

''நூற்றைம்பது வெள்ளி ரூபிள்கள் மதிப்புள்ளது; ஆனால் உங்களுக்கு சும்மா கொடுப்பேன், இப்பொழுதே எடுத்துக்கொள்ளுங்கள்'' என்று லுக்காஷ்கா வேடிக்கையாகக் கூறினான். ''நீங்கள் வேண்டும் என்று சொன்னால் உடனே கொடுக்கிறேன். சேணத்தை எடுத்துவிட்டு உள்ளே கொண்டு போய்க் கட்டுங்கள். உங்களுக்குச் சேவை செய்வதற்கு ஒரு சந்தர்ப்பம் கொடுங்கள்.''

''இல்லை. நிச்சயமாக வேண்டாம்.''

''சரி. இதோ, உங்களுக்கு அன்பளிப்பாக இதைக் கொண்டு வந்திருக்கிறேன்'' என்று லுக்காஷ்கா தனது இடைவாரில் தொங்கிக் கொண்டிருந்த குத்துவாள்களில் ஒன்றை வெளியே எடுத்தான். ''ஆற்றின் அக்கரையில் இதை வாங்கினேன்.''

''மிகவும் நன்றி.''

''உங்களுக்கு திராட்சைப் பழங்கள் அனுப்புவதாக என் அம்மா சொல்லியிருக்கிறாள்.''

''வேண்டாம். அதற்கு அவசியமில்லை. அன்பளிப்பான இந்தக் குத்துவாளுக்கு நானும் பணம் கொடுக்க மாட்டேன்.''

''நானும் பணம் வாங்க மாட்டேன். நாம் நண்பர்கள்! கிரேய்-கான் அக்கரையில் தன் குடிசைக்கு என்னைக் கூட்டிக்கொண்டு போனார். 'உனக்குப் பிடித்தமானதை எடுத்துக்கொள்' என்று சொன்னார். நான் இந்த செர்கேஷியக் குத்துவாளை எடுத்துக் கொண்டேன். அது எங்கள் வழக்கம்.''

அவர்கள் அறைக்குள் சென்று ஒயின் குடித்தார்கள்.

''நீ இப்பொழுது கிராமத்தில் தங்கியிருக்கப் போகிறாயா?'' என்று ஒலேனின் கேட்டான்.

''இல்லை. நான் விடைபெற்றுப் போக வந்திருக்கிறேன். என்னைக் காவல் நிலையத்திலிருந்து தேரெக்கின் அக்கரையிலுள்ள குதிரைப்படைப் பிரிவுக்கு அனுப்பப் போகிறார்கள். என்னுடைய தோழன் நஸார்காவுடன் இன்று புறப்படப் போகிறேன்.''

''உன்னுடைய திருமணம் எப்பொழுது?''

''நான் சீக்கிரத்திலேயே திரும்புவேன். திருமண நிச்சயதார்த்தை முடித்துக்கொண்டு மறுபடியும் படைக்குத் திரும்புவேன்'' என்று லுக்காஷ்கா விருப்பமின்றிப் பேசினான்.

''உன்னுடைய மணப்பெண்ணைப் பார்க்கப் போக மாட்டாயா?''

''எதற்காக? நான் ஏன் அவளைப் பார்க்க வேண்டும்? நீங்கள் என் பிரிவிற்கு வரும்பொழுது 'அகன்ற முதுகு' லுக்காஷ்கா எங்கே என்று கேளுங்கள். அங்கே காட்டுப் பன்றிகள் ஏராளம்! நான் இரண்டைக் கொன்றேன். உங்களை வேட்டைக்குக் கூட்டிக்கொண்டு போகிறேன்.''

''சரி, போய்வா. கடவுள் உன்னைக் காப்பாற்றுவார்!''

லுக்காஷ்கா குதிரையின் மேல் ஏறி உட்கார்ந்தான், ஆனால் அவன் மார்யானாவைப் பார்க்கப் போகவில்லை. தெருவில் குதிரை மீது சவாரி செய்துகொண்டு நஸார்கா ஏற்கெனவே காத்துக் கொண்டிருந்த இடத்தை அடைந்தான்.

''அங்கே புறப்படலாமா?'' என்று நஸார்கா யாம்கா வசித்த திசையை நோக்கி கண்ணைச் சிமிட்டிக்கொண்டு கூறினான்.

''இதோ பார்! நீ என் குதிரையை அங்கே கொண்டு போ. நான் வருவதற்கு நேரமாகிவிட்டால் புல்லைக் கொடு. காலைக்குள் படைப்பிரிவுக்கு வந்துவிடுவேன்'' என்றான் லுக்காஷ்கா.

''அந்த யுங்கெர் உனக்கு வேறொன்றும் கொடுக்கவில்லையா?''

''இல்லை! நான் அவனுக்கு எனது குத்துவாளைக் கொடுத்தது நல்லதாகப் போயிற்று. இல்லையென்றால் இந்தக் குதிரையைக் கேட்டிருப்பான்'' என்று லுக்காஷ்

கா குதிரையிலிருந்து கீழே இறங்கிக்கொண்டு கூறினான். அவன் கடிவாளத்தை நஸார்காவிடம் கொடுத்தான்.

அவன் சுற்றுவட்டகையில் ஒலேனினுடைய சன்னலுக் குக் கீழே பதுங்கிப் போய் மார்யானாவின் சன்னலுக்குக் கீழே நின்றான். எங்கும் முழு இருட்டு. அந்த இளம் பெண் சட்டை மட்டும் அணிந்துகொண்டு தலை சீவிச் சடை பின்னிக் கொண்டிருந்தாள். அவள் தூங்குவதற் குத் தயாராகிக் கொண்டிருந்தாள்.

''நான் வந்திருக்கிறேன்'' என்று முணுமுணுத்தான் அந்தக் கஸாக்கு.

மார்யானாவின் கடுமையான முகத்தில் அலட்சியம் தெரிந்தது. ஆனால் அவளுடைய பெயர் உச்சரிக்கப் படுவதைக் கேட்டதும் திடீரென்று பிரகாசமாக மாறி யது. அவள் சன்னலைத் திறந்து பயமும் மகிழ்ச்சியும் நிறைந்தவளாகத் தலையை வெளியே நீட்டினாள்.

''என்ன? உனக்கு என்ன வேண்டும்?'' என்று அவள் கேட்டாள்.

''கதவைத் திற'' என்றான் லுக்காஷ்கா. ''என்னை ஒரு நிமிடத்துக்கு மட்டும் உள்ளே விடு. உன்னைப் பார்க் காமல் நான் அதிகமான தனிமையில் கஷ்டப்பட்டேன். ஓ! அது பயங்கரம்!''

அவன் அவள் தலையை இழுத்து முத்தமிட்டான்.

''என்னை உள்ளே விடு.''

''சீ! என்ன உளறல்! உன்னை உள்ளே விட மாட் டேன் என்று சொன்னேனே. நீ ரொம்ப நாள் தங்கி யிருக்கப் போகிறாயா?''

அவன் எதுவும் பேசாமல் அவளுக்கு முத்தத்தை பதி லாகக் கொடுத்தான். அவள் மேலும் விசாரிக்கவில்லை.

''சன்னல் வழியாக உன்னைக் கட்டிப்பிடிப்பது மிக வும் கஷ்டமாக இருக்கிறது, பார்'' என்று லுக்காஷ்கா புகார் செய்தான்.

''மார்யானா!'' என்று அந்தக் கிழவி கூப்பிடுவது கேட்டது. ''நீ யாருடன் பேசிக் கொண்டிருக்கிறாய்?''

லுக்காஷ்கா தன்னுடைய அடையாளம் தெரியக் கூடாது என்பதற்காகத் தொப்பியைக் கழற்றிவிட்டு சன் னலுக்குக் கீழே பதுங்கினான்.

''சீக்கிரமாகப் போ'' என்று அந்தப் பெண் முணு முணுத்தாள்.

''லுக்காஷ்கா வந்திருந்தான்'' என்று அவள் தன்னுடைய தாயாரின் கேள்விக்குப் பதிலளித்தாள். ''அப்பா இருக்கிறாரா என்று கேட்டான்.''

''அவனை இங்கே அனுப்பு.''

''அவன் போய்விட்டான். அவனுக்கு நேரமில்லை என்று சொன்னான்.''

உண்மை என்னவென்றால் லுக்காஷ்கா சன்னலுக்குக் கீழே பதுங்கிக்கொண்டு சுற்றுவட்டகையை வேகமாகக் கடந்து யாம்காவின் வீட்டுக்குப் போய்க் கொண்டிருந்தான். ஒலேனின் மட்டுமே அவனைப் பார்த்தான்.

அவனும் நஸார்காவும் இரண்டு கிண்ணங்களில் சிவப்பு ஒயினைக் குடித்த பிறகு குதிரை மீதேறி கிராமத்தை விட்டுப் புறப்பட்டார்கள். இரவு இளம் வெப்பமாக, இருட்டாக, அமைதியாக இருந்தது. அவர்கள் மௌனமாகக் குதிரை மீது போய்க் கொண்டிருந்தார்கள். குதிரைகளின் குளம்பொலி மட்டுமே அங்கே கேட்டது. கஸாக்கு மிங்காலைப் பற்றிய பாடலை லுக்காஷ்கா பாட ஆரம்பித்தான், ஆனால் தொகையறாவைப் பாடி முடிப்பதற்குள் அவன் பாட்டை நிறுத்திக்கொண்டு நஸார்காவை நோக்கித் திரும்பினான்.

''அவள் என்னை உள்ளே விட மாட்டேன் என்று சொல்லிவிட்டாள்'' என்றான்.

''ஓ! அவள் உன்னை உள்ளே விட மாட்டாள் என்று எனக்குத் தெரியும். அந்த யுங்கெர் அங்கே அடிக்கடி போகிறான் என்று யாம்கா என்னிடம் சொன்னாள். 'அவனுக்கும் மார்யானாவுக்கும் நெருக்கம் ஏற்படுத்தப் போகிறேன், எனக்கு ஒரு துப்பாக்கி தருவதாகச் சொல்லியிருக்கிறான்' என்று யெரோஷ்கா மாமா பீற்றிக்கொண்டாராம்'' என்றான் நஸார்கா.

''அந்தப் பிசாசு பொய் சொல்லி இருக்கிறான்!'' என்று லுக்காஷ்கா ஆத்திரத்தோடு கத்தினான். ''அவள் அப்படிப்பட்டவளல்ல. அந்தக் கிழட்டுப் பிசாசின் எலும்பை நொறுக்கப் போகிறேன்'' என்று சொல்லிவிட்டு

அவன் தனக்குப் பிரியமான பாடலை மறுபடியும் பாட ஆரம்பித்தான்:

இஸ்மாயி லவோ கிராமத்தின்
எழில் மிகு செல்வரின் தோட்டம் விட்டு
கூரிய பார்வை வல்லூறு ஒன்று
உயரப் பறந்தே வந்தது நன்று...

## 28

உலீத்கா பாட்டியும் அவள் கணவனும் தங்களுடைய திருமண நிச்சயதார்த்த நாளைக் கொண்டாடிக் கொண் டிருந்தார்கள். லுக்காஷ்கா கிராமத்துக்குத் திரும்பி வந் திருந்தான்; ஆனால் அவன் ஒலேனினைப் பார்க்க வர வில்லை. ஒலேனினைக் கொண்டாட்டத்தில் கலந்து கொள்ளுமாறு அழைத்திருந்தார்கள்; ஆனால் அவன் கலந்து கொள்ளவில்லை. அவன் இதயத்தில் உற்சாக மில்லை. அவன் அந்த கிராமத்துக்கு வந்தபிறகு ஒரு போதும் இவ்வளவு உற்சாகமின்றி இருக்கவில்லை. மாலை நேரத்துக்குச் சிறிது முன்பாக லுக்காஷ்கா சிறந்த உடைகளை அணிந்துகொண்டு தன்னுடைய தாயாருடன் துணை லெப்டினென்டின் வீட்டுக்குள் நுழைவதை அவன் பார்த்தான். லுக்காஷ்கா ஏன் தன்னிடம் அன்பு இன்றி நடந்து கொள்கிறான் என்ற கேள்வி அவனைத் துன் புறுத்தியது.

ஒலேனின் அறையில் தன்னை அடைத்துக்கொண்டு நாட்குறிப்பை எழுதத் தொடங்கினான்.

''நான் கடந்த சில நாட்களாக பல விஷயங்களையும் மறுபடியும் சிந்தித்தேன், பல மாற்றங்களையும் அனு பவித்தேன். அரிச்சுவடிப் புத்தகத்தில் சொல்லப்படுகின்ற கட்டத்துக்கு நான் வந்திருப்பதைக் காண்கிறேன். மகிழ்ச்சி அடைய வேண்டுமென்றால் ஒரே ஒரு விஷயம் இன்றியமையாததாக இருக்கிறது—நேசிக்க வேண்டும், தன்னை மறந்து அன்புடன் நேசிக்க வேண்டும், எல்லா மனிதர்களையும் எல்லாப் பொருட்களையும் நேசிக்க வேண்டும், அன்பு என்னும் சிலந்திவலையை எல்லாத் திசைகளிலும் விரிக்க வேண்டும், நாம் சந்திக்கின்ற எல்

லோரிடமும் அதைப் பிணைக்க வேண்டும். நான் வன்யூஷா, யெரோஷ்கா மாமா, லுக்காஷ்கா, மார்யானா ஆகியோரிடம் அந்த வலையை விரித்திருக்கிறேன்.''

ஒலேனின் இதை எழுதிக் கொண்டிருந்த பொழுது யெரோஷ்கா மாமா அவனைப் பார்க்க உள்ளே வந்தார்.

யெரோஷ்கா மிகவும் குதூகலமான மனநிலையில் இருந்தார். சில நாட்களுக்கு முன்பு ஒரு மாலை நேரத்தில் அவர் தன்னுடைய வீட்டின் சுற்றுவட்டகையில் பெருமிதமான, திருப்திகரமான முகத்துடன் உட்கார்ந்து ஒரு சிறிய கத்தியை உபயோகித்து ஒரு காட்டுப்பன்றியின் தோலைத் திறமையாக உரித்துக் கொண்டிருப்பதை ஒலேனின் பார்த்தான். அவருடைய நாய்கள்—அவருக்கு மிகவும் பிரியமான லியாம் உள்பட—அவருக்குப் பக்கத்தில் தரையில் படுத்துக்கொண்டு அவரைப் பார்த்தவாறு வால்களை ஆட்டிக் கொண்டிருந்தன. சில சிறுவர்கள் ஆர்வத்துடன் வேலியின் வழியாக அவரைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் வழக்கமான கேலிப் பேச்சுகளை நிறுத்தி வைத்திருந்தார்கள். அடுத்த வீடுகளில் வசித்த பெண்கள்—அவர்கள் பொதுவாக அவரை அதிகமாகப் பொருட்படுத்த மாட்டார்கள்—அவருக்கு முகமன் கூற வந்தார்கள்; ஒரு பெண் ஒரு சிறிய கூஜா நிறைய சிவப்பு ஒயினையும் இன்னொரு பெண் தயிரையும் மற்றொரு பெண் கொஞ்சம் மாவையும் கொண்டுவந்தார்கள்.

மறுநாள் காலையில் யெரோஷ்கா உடல் முழுவதும் இரத்தக் கறையுடன் கொட்டகையில் உட்கார்ந்திருந்தார். அவர் காட்டுப்பன்றிக் கறியை நிறுத்துப் பணம் அல்லது ஒயினுக்கு விற்பனை செய்து கொண்டிருந்தார். ''கடவுள் எனக்கு அதிர்ஷ்டத்தைக் கொடுத்தார், நான் ஒரு காட்டுப்பன்றியைக் கொன்றேன்; இப்பொழுது இந்தக் கிழவனால் உபயோகம் ஏற்படுகிறது!'' என்று அவர் முகத்தில் எழுதியிருந்தது. அதன் விளைவாக அவர் மிதமிஞ்சிக் குடித்தார் என்பது உண்மையே. அவர் கிராமத்தை விட்டுப் போகாமல் ஏற்கெனவே நான்கு நாட்கள் மயங்கிக் கிடந்தார். மேலும் அவர் அந்த நிச்சயதார்த்த விருந்திலும் குடித்திருந்தார்.



யெரோஷ்கா மாமா அந்த துணை லெப்டினென்டின் வீட்டிலிருந்து சிவப்பேறிய முகத்துடனும், கலைந்த தாடியுடனும் மயக்கத்தோடு வந்தார். ஆனால் அவர் ஜரிகை வைத்துத் தைக்கப்பட்டிருந்த சிவப்பு நிறக் கோட்டை அணிந்திருந்தார்; தேரெக்கின் அக்கரையில் அவர் வாங்கிய பலலாய்க்கா என்னும் மூன்று நரம்புகளைக் கொண்ட இசைக் கருவியைக் கையில் வைத்திருந்தார். கச்சேரி செய்வதாக ஒலேனினிடம் எப்பொழுதோ வாக்குக் கொடுத்திருந்தார். அவர் இப்பொழுது அதற்கேற்ற மனநிலையில் இருந்தார். ஒலேனின் எழுதிக் கொண்டிருப்பதைப் பார்த்தபொழுது அவருடைய முகத்தில் ஏமாற்றக்குறி தோன்றியது.

''எழுது, எழுது, அப்பனே!'' என்று அவர் தணிந்த குரலில் பேசினார். ஒலேனினுக்கும் அந்தக் காகிதத்துக்கும் இடையில் ஏதோ ஒரு ஆவி உட்கார்ந்திருக்கிறது, அதைக் கலைத்து விடக் கூடாது என்பதைப் போல அவர் அடிமேலடி வைத்து நடந்து ஓசையெழுப்பாமல் கீழே உட்கார்ந்தார். யெரோஷ்கா மாமா குடிவெறியில் இருக்கும்பொழுது அந்த நிலையில்தான் உட்காருவார். ஒலே

னின் தலையை உயர்த்தி அவரைப் பார்த்தான், அவருக்கு ஒயின் தருமாறு உத்தரவிட்டான், பிறகு தொடர்ந்து எழுதிக் கொண்டிருந்தான். அந்தக் கிழவருக்கு தனியாகக் குடிப்பதில் கிளர்ச்சியில்லை. அவர் பேச விரும்பினார்.

''நான் நிச்சயதார்த்த விருந்துக்குப் போயிருந்தேன். ஆனால் அந்தப் பன்றிகளைப் பற்றி எனக்கு அக்கறையில்லை! எனக்குப் பிடிக்கவில்லை! அதனால் உன்னைப் பார்க்க வந்திருக்கிறேன்.''

''இந்த பலலாய்க்காவை எங்கே வாங்கினீர்கள்?'' என்று ஒலேனின் தொடர்ந்து எழுதிக்கொண்டு கேட்டான்.

''ஆற்றைத் தாண்டிப் போயிருந்தேன், அப்பனே. இந்த வாத்தியத்தை அங்கேதான் வாங்கினேன்'' என்று அவர் தாழ்வான அதே குரலில் பேசினார். ''நான் இதை வாசிப்பதில் நிபுணன். தார்த்தாரிய, கஸாக்குப் பாடல்கள், கனவான்கள், படைவீரர்கள் பாடல்கள்—நீ விரும்புகின்ற எந்தப் பாட்டையும் நான் வாசிக்க முடியும்.''

ஒலேனின் மறுபடியும் அவரைப் பார்த்துவிட்டு லேசாகச் சிரித்தான், பிறகு தொடர்ந்து எழுதினான்.

அந்தப் புன்சிரிப்பு கிழவருக்கு உற்சாகமூட்டியது.

''நிறுத்து, அப்பனே! நிறுத்து!'' என்று அவர் திடீரென்று உறுதியாகக் கூறினார். ''அவர்கள் உன்னை அவமானப்படுத்தி விட்டார்களா—தூக்கியெறிந்துவிடு! அவர்கள் மீது காறித்துப்பு! நீ ஏன் இப்படி எழுதி, எழுதிக் கொண்டு இருக்கிறாய்? இதனால் என்ன பயன்?''

அவர் தளத்தில் தன்னுடைய மொத்தையான விரல்களால் எழுதுவதைப் போலக் காட்டி ஒலேனினைக் கேலி செய்தார், தன்னுடைய அகன்ற முகத்தைச் சுளித்து இகழ்ச்சி செய்தார்.

''இந்தப் புகாரை எதற்கு எழுதுகிறாய், அப்பனே? நன்றாகக் குடி, அப்பொழுது நீ வீரனாக இருப்பாய்!''

எழுதுவது என்பதே யாரையாவது அழிப்பதற்குச் செய்யப்படுகின்ற புகார் என்பதைத் தவிர வேறு எத்தகைய முறையிலும் அவரால் நினைக்க முடியவில்லை.

ஒலேனின் உற்சாகத்துடன் சிரித்தான். யெரோஷ்கா மாமா அவனுடன் சேர்ந்து சிரித்தார். அவர் தளத்திலிருந்து துள்ளியெழுந்தார். பலலாய்க்காவை வாசிப்பதி

லும் தார்த்தாரியப் பாட்டுக்களைப் பாடுவதிலும் தன்னுடைய திறமையைக் காட்ட ஆரம்பித்தார்.

''ஏன் இப்படி எழுதிக் கொண்டிருக்கிறாய், அப்பனே? நான் பாட்டுப் பாடுகிறேன். கேள். செத்த பிறகு இப்படிப் பாட்டைக் கேட்கப் போவதில்லை. என்னுடன் சேர்ந்து குடி!''

அவர் தன்னுடைய சொந்தப் பாடலைப் பாடிக் கொண்டு ஆடினார்:

ஆ, ஆ, டி-டி-லி
டி-டி-லி, ஆ, ஆ
அவர்கள் எங்கே அவனை
முதலில் பார்த்தார்கள்?
கொண்டையில் செருக
அன்று ஊசிகள் வாங்கத்
தேடிப் போனார்கள்
போன இடத்தில்
வாளிப்பான
அவனைப் பார்த்தார்கள்.

பிறகு அவர் தனது முன்னாளைய நண்பனான சார்ஜென்ட் கற்றுக் கொடுத்த பாட்டைப் பாடினார்:

திங்களில் காதலித்தேன்;
செவ்வாயில் பேதலித்தேன்;
பொங்கிடும் உணர்ச்சிகளைப்
பொன் புதனில் தெரிவித்தேன்;
வெங்கொடுமை அந்தோ
வியாழன் வரை காக்க விட்டாள்.
வெள்ளியன்று—
மங்கை யவள் தந்த
முடிவான பதிலாலே
பொங்குகிற வேதனையில்
பொசுங்கு விழுந்திட்டேன்.
மங்கு சனிப் போதில்
மாதவளைத் தேடினேன்
எங்குமவள் தென்படவே
இல்லை; அதனாலே
என் வாழ்வை முடித்துவிட
ஏற்ற வழி நாடினேன்.
வாழ்க்கை முடிந்துவிட்டால்
வருமோ ஒரு காதல்?
ஓ...

சிந்தித்தேன்... சிந்தித்தேன்.
சீக்கிரமே புத்திவர
சிரித்திட்டேன் ஞாயிறே.

மறுபடியும் பல்லவியைப் பாடினார்:

ஆ, ஆ, டி-டி-லி
டி-டி-லி, ஆ, ஆ
அவர்கள் எங்கே அவனை
முதலில் பார்த்தார்கள்?

அவர் மிகவும் உணர்ச்சி வசப்பட்டபடியால் மறுபடியும் இளைஞனாக மாறிவிட்டதைப் போல வாத்தியத்தை வாசித்துக்கொண்டு அறையில் நடனமாட ஆரம்பித்தார்.

'டி-டி-லி' பாட்டு மற்றும் அதைப் போன்ற கனவான்களுடைய பாட்டுக்களை அவர் பாடினார்; ஒலேனினுக்காக மட்டுமே அவற்றைப் பாடுவதாக அவர் தெரிவித்தார். பின்னர் இன்னும் மூன்று கிண்ணம் ஒயின் குடித்த பிறகு பழங்காலத்தை நினைவுபடுத்தி உண்மையான கஸாக்கு மற்றும் தார்த்தாரியப் பாடல்களைப் பாடினார். அவருக்கு மிகவும் பிடித்தமான ஒரு பாட்டைப் பாடிக் கொண்டிருக்கும் பொழுது அவருடைய குரல் திடீரென்று தளதளத்தது. அவரால் தொடர்ந்து பாட முடியவில்லை, பலலாய்க்காவின் நரம்புகளை மட்டும் மீட்டிக் கொண்டிருந்தார்.

''ஆ! என் அருமை நண்பனே!'' என்றார் அவர்.

அவருடைய குரலின் விசித்திரமான தொனி ஒலேனினுடைய கவனத்தை ஈர்த்தது. ஒலேனின் அவரை நோக்கித் திரும்பினான். அந்தக் கிழவர் அழுது கொண்டிருந்தார். அவருடைய கண்களில் கண்ணீர்த்துளிகள் திரண்டிருந்தன. ஒரு கண்ணீர்த்துளி கன்னத்தின் மீது வழிந்து கொண்டிருந்தது.

''ஓ! என் இளமைப் பருவமே! நீ இனி ஒருபோதும் திரும்பமாட்டாய்'' என்று அவர் கதறியழுதார். பிறகு அழுகையை நிறுத்தினார். ''குடி! நீ ஏன் குடிக்கவில்லை?'' என்று திடீரென்று உரத்த குரலில் அதட்டினார். முகத்தில் வழிந்து கொண்டிருந்த கண்ணீரை அவர் துடைக்கவில்லை.

ஒரு மலையகப் பாட்டு அவருக்கு அதிகமான வேதனையைக் கொடுத்தது. அந்தப் பாடலில் வார்த்தைகள் குறைவு. சோகம் நிறைந்த பல்லவியில் அதன் முழுக் கவர்ச்சியுமே இருந்தது. 'அய்-தாய்-தலலாய்!' யெரோஷ்கா அந்தப் பாட்டைப் பின்வருமாறு மொழிபெயர்த்துக் கூறினார்:

''ஓர் இளைஞன் தன்னுடைய மந்தையை கிராமத்திலிருந்து மலைக்கு ஓட்டிச் சென்றான். ருஷ்யர்கள் வந்தார்கள். அவர்கள் கிராமத்தைக் கொளுத்தினார்கள், எல்லா ஆண்களையும் கொன்றார்கள், எல்லாப் பெண்களையும் சிறைப்பிடித்தார்கள். அந்த இளைஞன் மலையிலிருந்து திரும்பினான். கிராமம் இருந்த இடத்தில் சாம்பல் இருந்தது. அவனுடைய தாயார் போய்விட்டாள், சகோதரர்கள் கொல்லப்பட்டிருந்தார்கள், அவனுடைய வீடு எரிக்கப்பட்டிருந்தது. அங்கே ஒரேயொரு மரம் நின்று கொண்டிருந்தது. அவன் மரத்துக்குக் கீழே உட்கார்ந்து அழுதான். 'உன்னைப் போல நானும் தனியே விடப்பட்டேன்.' அந்த இளைஞன் தன்னுடைய சோகப் பாடலைப் பாடத் தொடங்கினான்: 'அய்-தாய்-தலலாய்!' ''

அந்தச் சோகமான, இதயத்தைப் பிழிகின்ற பல்லவியை அந்தக் கிழவர் திரும்பத் திரும்பப் பாடினார்.

யெரோஷ்கா இந்தப் பாட்டைப் பாடி முடித்த பிறகு திடீரென்று சுவரில் தொங்கிக் கொண்டிருந்த துப்பாக்கியை எடுத்தார், சுற்றுவட்டகைக்குள் வேகமாக ஓடினார், வானத்தை நோக்கி இரண்டு துப்பாக்கிக் குழாய்களிலும் ஒரே சமயத்தில் சுட்டார். அவர் மறுபடியும் 'அய்-தாய்-தலலாய்' என்னும் சோகமான பல்லவியைப் பாடினார். பிறகு மௌனத்தில் மூழ்கினார்.

ஒலேனின் அவரைப் பின்தொடர்ந்து வெளி வராந்தாவுக்கு ஓடினான்; இருண்ட, நட்சத்திரங்கள் நிறைந்த வானத்தில் கிழவர் துப்பாக்கியினால் சுட்ட திசையை நோக்கி மௌனமாகப் பார்த்தான். துணை லெப்டினென்டினுடைய வீட்டின் சன்னல்களில் விளக்கின் வெளிச்சம் தெரிந்தது; குரல்கள் ஒலித்தன. வெளி வராந்தா மற்றும் சன்னல்களைச் சுற்றிலும் சுற்றுவட்டகையில் முழுவதிலும் இளம்பெண்கள் கூடி நின்றார்கள்; சில பெண்

கள் கொட்டகையிலிருந்து வீட்டுக்குள் ஓடினார்கள். சில கஸாக்குகள் வராந்தாவிலிருந்து வந்தார்கள். அவர்கள் தங்களைக் கட்டுப்படுத்த முடியாமல் ஆரவாரம் செய்தார்கள். யெரோஷ்கா மாமாவின் பாட்டுக்கும் துப்பாக்கி வேட்டுக்கும் பதிலளிப்பதைப் போலக் கூச்சல் போட்டார்கள்.

''நீங்கள் ஏன் நிச்சயதார்த்த விருந்திலிருந்து வந்து விட்டீர்கள்?'' என்று ஒலேனின் கேட்டான்.

''அவர்கள் கிடக்கிறார்கள்!'' என்று அந்தக் கிழவர் பதிலளித்தார். ஏதோ ஒரு விதத்தில் அவர் அவமானப் படுத்தப்பட்டு விட்டார் என்பது வெளிப்படையாகத் தெரிந்தது. ''எனக்கு அவர்களைப் பிடிக்கவில்லை! எனக்கு அவர்களைப் பிடிக்கவில்லை! என்னமாதிரி ஆட்கள்! நாம் அறைக்குள் போவோம். அவர்கள் அங்கே கொண்டாடட்டும். நாம் இங்கே கொண்டாடுவோம்.''

ஒலேனின் அறைக்குள் வந்தான்.

''லுக்காஷ்கா மகிழ்ச்சியாக இருக்கிறானா? அவன் என்னைப் பார்க்க வராதது ஏன்?'' என்று கேட்டான்.

''லுக்காஷ்காவா? அவர்கள் அவனிடம் பொய் சொல்லியிருக்கிறார்கள். நான் அந்தப் பெண்ணை உன்னிடம் நெருக்கம் ஏற்படுத்துவதாகச் சொல்லியிருக்கிறேனாம்'' என்று அவர் இரகசியமாகக் கூறினார். ''அந்தப் பெண்ணைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்? நாம் விரும்பினால் அவளை முடித்து விடலாம். இன்னும் கொஞ்சம் பணம் கொடு. அவள் நமக்குச் சொந்தமாகிவிடுவாள்! அவளை உனக்கு ஏற்பாடு செய்கிறேன். நிச்சயம் செய்கிறேன்.''

''வேண்டாம், மாமா. அவள் காதலிக்கவில்லை என்றால் பணம் என்ன செய்ய முடியும்? அதைப் பற்றிப் பேசாமலிருப்பதே நல்லது.''

''உன்னையும் என்னையும் அவர்களுக்குப் பிடிக்கவில்லை. நாம் அநாதைகள்'' என்று சொல்லி விட்டு யெரோஷ்கா மாமா திடீரென்று மறுபடியும் கண்ணீரைக் கொட்டி அழுதார்.

அந்தக் கிழவர் சொன்ன கதைகளைக் கேட்டுக் கொண்டிருந்த பொழுது ஒலேனின் வழக்கத்தைக் காட்டிலும் அதிகமாகக் குடித்தான். ''சரி. என்னுடைய லுக்

காஷ்கா இப்பொழுது மகிழ்ச்சி அடைந்திருப்பான்'' என்று அவன் தனக்குள் சொல்லிக்கொண்டான்; ஆனால் அவனுடைய இதயம் கனத்தது.

அந்தக் கிழவர் அன்று மாலையில் மிகவும் அதிகமாகக் குடித்துவிட்டு தளத்தில் படுத்துப் புரண்டார்; அவரை வெளியே தூக்கி வருவதற்கு வன்யூஷா சில படைவீரர் களின் உதவியைப் பெற வேண்டியிருந்தது. அந்தக் கிழ வர் மீது ஏற்பட்ட கோபத்தில் அவன் காரியுமிழ்ந்தான், வழக்கமாக பிரெஞ்சு மொழிச் சொற்களை உபயோகிப் பதைக் கூட மறந்துவிட்டான்.

## 29

ஆகஸ்ட் மாதம் வந்து விட்டது. தொடர்ந்தாற் போல் சில நாட்களாக வானத்தில் ஒரு மேகம் கூடத் தென்படவில்லை. சூரிய வெப்பம் தாங்க முடியாததாக இருந்தது. காலையிலிருந்து இரவுவரை வெப்பக் காற்று அடித்தது, மணற்குன்றுகளிலிருந்தும் சாலைகளிலிருந் தும் சூடான மணலை மேகங்களைப் போலத் திரட்டிச் சுழற்றி நாணற்புதர்கள், மரங்கள், கிராமங்களின் மீது வீசியது. புல்லின் மீதும் இலைகள் மீதும் தூசி அப்பி யிருந்தது. சாலைகளும் உப்பு நிலங்களும் காய்ந்து இறு கிப் போயிருந்தன. அவற்றின் மேல் நடக்கும்பொழுது டங்கென்று ஓசை கேட்டது. தேரெக்கில் தண்ணீர் முன் பே வற்றி விட்டது. வாய்கால்கள் காய்ந்து விட்டன. கிராமத்திலிருந்த குளத்தின் கரைகளில் கால்நடை மிதித்து சேறாக இருந்த பகுதிகள் ஈரத்தன்மையை இழந்திருந்தன. சிறுவர்களும் சிறுமிகளும் தண்ணீரில் நீந்திக்கொண்டு போடுகின்ற கூச்சல் நாள் முழுவதும் கேட்டது. ஸ்டெப்பி நிலத்தின் பள்ளங்களில் வளர்ந் திருந்த நாணற் செடிகள் கருகிவிட்டன. கால்நடை புல் லைத் தேடி அலைந்தது. காட்டு மிருகங்கள் - காட்டை ஒட்டியிருந்த நாணற் பகுதிகளுக்கும் தேரெக்குக்கு அப் பாலிருந்த மலைக்காடுகளுக்கும் ஓடிவிட்டன. சில்வண்டு களும் கொசுக்களும் தாழ்வான இடங்களிலும், கிரா மங்களுக்கு மேலேயும் கூட்டம் கூட்டமாகப் பறந்து கொண்டிருந்தன. பனிபடர்ந்த மலைகளை சாம்பல்நிற

மூடுபனி மறைத்தது. காற்றில் துர்நாற்றம் கலந்திருந்தது. அப்ரேக்குகள் ஆழமில்லாத ஆற்றைக் கடந்து விட்டதாகவும் ஆற்றின் இக்கரையில் சுற்றிக் கொண்டிருப்பதாகவும் செய்திகள் வந்தன. ஒவ்வொரு மாலை நேரத்திலும் சூரியன் எரிக்கின்ற, நெருப்புப் பிழம்பாக அஸ்தமித்தது.

அறுவடை நடைபெற்றுக் கொண்டிருந்தது. கிராம மக்கள் எல்லோரும் தார்ப்பூசணிப் பழ வயல்களிலும் திராட்சைத் தோட்டங்களிலும் திரண்டார்கள். தோட்டங்களில் இடையிடையில் கரும்பச்சை நிறச் செடிகள் வளர்ந்திருந்தன. அங்கே இனிமையான, அடர்த்தியான நிழல் இருந்தது. எங்கும் அகலமான, ஊடுருவிப் பார்க்கக் கூடிய இலைகளின் கீழ் பழுத்த திராட்சை குலைகுலையாகத் தொங்கின. தோட்டங்களிலிருந்து வெளியே செல்கின்ற தூசிநிறைந்த பாதையில் திராட்சைப் பழங்களை ஏற்றிக் கொண்டு வண்டிகள் மெதுவாக நகர்ந்தன. வண்டிச் சக்கரங்கள் மண் பாதையில் ஏறியிறங்கிய இடங்களில் வண்டியிலிருந்து சிதறி விழுந்த திராட்சைக் குலைகள் கிடந்தன. சிறுவர்கள், சிறுமிகளின் சட்டைகளில் திராட்சைச் சாற்றின் கறை இருக்கிறது. அவர்கள் கைகளிலும் வாய்களிலும் திராட்சைப் பழங்களை வைத்துக்கொண்டு தங்களுடைய தாயார்களுக்குப் பின்னால் போய்க் கொண்டிருக்கிறார்கள். அந்தச் சாலையில் எல்லா இடங்களிலும் கந்தையணிந்த தொழிலாளர்கள் தங்களுடைய உறுதியான தோள்களில் திராட்சைக் கூடைகளைத் தூக்கிச் செல்கிறார்கள். பெண்கள் தங்கள் முகத்தில் கண்களைத் தவிர மற்ற பகுதிகளைத் துணியால் மூடிவிட்டு திராட்சைப் பழங்களை ஏற்றி வந்த வண்டிகளில் பூட்டப்பட்டிருந்த மாடுகளுக்கு முன்னால் வழிகாட்டிக் கொண்டு நடந்தார்கள். படைவீரர்கள் கஸாக்குப் பெண்களிடம் திராட்சைப் பழம் கொடுக்குமாறு கேட்டார்கள். ஒரு பெண் வண்டியை நிறுத்தாமல் அதன் மீது தாவி ஏறி திராட்சைப் பழங்களை எடுத்து ஒரு படைவீரனிடம் கொடுத்தாள்.

சில வீடுகளில் திராட்சை ரசத்தைப் பிழிகின்ற வேலை ஏற்கெனவே ஆரம்பமாகிவிட்டது. காற்றில் புத்தம் புது திராட்சையின் நறுமணம் கலந்திருந்தது. கொட்

டகைகளில் இரத்தம் போன்று சிவப்புக் கறை படிந்த தொட்டிகள் வைக்கப்பட்டிருந்தன. நொகாய்த் தொழிலாளர்கள் கால்சட்டைகளை மேலே மடித்து விட்டுக் கொண்டு கெண்டைச் சதை நிறம் மாறிச் சுற்றுவட்டகைகளில் சுற்றிவருகிறார்கள். திராட்சைச் சக்கைகளைத் தின்று கொழுத்த பன்றிகள் உறுமிக்கொண்டு அதில் படுத்துப் புரளுகின்றன. கொட்டகையின் தட்டையான கூரைகள் நிறைய கறுப்பு, அம்பர் நிறத் திராட்சைக் குலைகள் வெய்யிலில் காய வைக்கப்பட்டிருக்கின்றன. காக்கைகள் திராட்சைகளைத் திருடித் தின்பதற்கு கூரைக்கு மேலாகப் பறந்து கொண்டிருக்கின்றன, ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்துக்குப் பறந்து போகின்றன.

அந்த ஆண்டின் உழைப்பின் பலன்கள் உற்சாகத்துடன் சேகரிக்கப்படுகின்றன. இந்த ஆண்டின் விளைச்சல் முந்திய ஆண்டுகளைக் காட்டிலும் வளமாக இருக்கிறது.

பசுமையான தோட்டத்தின் நிழல்களில் பெண்களின் சிரிப்பும், பாட்டுக்களும் குதூகலமான குரல்களும் எல்லாப் பக்கங்களிலும் கேட்கின்றன. பெண்களின் பல வர்ண உடைகள் தென்பட்டன.

நண்பகல் நேரத்தில் மார்யானா தன்னுடைய தோட்டத்தில் பீச் மரத்தின் நிழலில் தன்னுடைய குடும்பத்தினருக்குக் கொண்டுவந்த உணவை வண்டியிலிருந்து எடுத்துக் கொண்டிருந்தாள். அவளுக்கு முன்னால் தரையில் பரப்பப்பட்டிருந்த குதிரைப் போர்வையின் மேல் பள்ளிக்கூடத்திலிருந்து விடுமுறையில் வந்திருந்த துணை லெப்டினென்ட் உட்கார்ந்திருந்தார். அவர் சிறிய கூஜாவிலிருந்த தண்ணீரை ஊற்றிக் கைகளைக் கழுவிக் கொண்டிருந்தார். அப்பொழுதுதான் குளத்திலிருந்து வெளியே வந்த ஒரு சிறுவன்—அவளுடைய சகோதரன்—சட்டையினால் தன் உடலிலிருந்த ஈரத்தைத் துடைத்துக் கொண்டு சிரமத்துடன் மூச்சு விட்டுக் கொண்டிருந்தான். அவன் உணவை எதிர்பார்த்துத் தன்னுடைய சகோதரியையும் தாயாரையும் பொறுமையில்லாமல் பார்த்துக் கொண்டிருந்தான். அந்தக் கிழவி சட்டைக்கைகளை மேலே மடித்துவிட்டுக் கொண்டு சூரிய ஒளியில் கறுத்

திருந்த தன்னுடைய வலிமையான கரங்களினால் திராட்சை, கருவாடு, தயிர், ரொட்டி ஆகியவற்றை ஒரு சிறிய, தாழ்வான, வட்டமான தார்த்தாரிய மேசையின் மேல் வேகமாக எடுத்துவைத்துக் கொண்டிருந்தாள்.

அந்தத் துணை லெப்டினென்ட் கைகளைத் துடைத்த பிறகு தொப்பியைக் கழற்றி சிலுவை வைத்துக்கொண்டு அந்த மேசையின் அருகில் அமர்ந்தார். அந்தச் சிறுவன் சாடியை எடுத்து ஆர்வத்துடன் குடித்தான். தாயாரும் மகளும் தங்களுடைய கால்களை மடக்கிக் கொண்டு மேசைக்குப் பக்கத்தில் உட்கார்ந்தார்கள். அங்கே நிழல் இருந்தாலும் வெப்பம் தாங்க முடியாததாக இருந்தது. காற்று நாற்றமாகவும் புழுக்கமாகவும் இருந்தது. கிளைகளின் நடுவே வந்த உக்கிரமான, சூடான காற்று கிளர்ச்சியைத் தரவில்லை. அந்தத் தோட்டத்தில் வரிசையாக இருந்த பேரி மரங்கள், பீச் மரங்கள், முசுக்கட்டை மரங்களின் உச்சிக் கிளைகளை ஒரே மாதிரியாக ஆட்டியது.

அந்தத் துணை லெப்டினென்ட் மறுபடியும் ஒரு தோத்திரத்தை முணுமுணுத்துக் கொண்டு தனக்குப் பின்னாலிருந்து ஒரு கூஜாவை எடுத்தார். அதில் சிவப்பு ஒயின் திராட்சை இலையினால் மூடி வைக்கப்பட்டிருந்தது. அதன் வாயிலிருந்து ஊற்றிக் குடித்த பிறகு அதைத் தன்னுடைய மனைவியிடம் நீட்டினார். அந்தத் துணை லெப்டினென்ட் சட்டை மட்டும் அணிந்திருந்தார்; கழுத்தில் பொத்தான்களை மாட்டவில்லையென்பதால் அவருடைய சதைப் பிடிப்பான, மயிரடர்ந்த மார்பு வெளியில் தெரிந்தது. அவருடைய சாதுரியமான, மெலிதான முகம் உற்சாகமாக இருந்தது. அவருடைய நடவடிக்கைகளிலோ, பேச்சிலோ வழக்கமான பகட்டுத் தெரியவில்லை. அவர் ஆனந்தமாக, இயல்பாக இருந்தார்.

''சரி. மாலை நேரத்துக்குள் நாம் இந்தப் பக்கத்தையாவது முடித்துவிட முடியுமா?'' என்று அவர் ஈரமடைந்த தாடியைத் துடைத்துக்கொண்டு கேட்டார்.

''பருவநிலை நன்றாக இருந்தால் இந்நேரம் இந்தப் பக்கத்தை அறுவடை செய்திருக்க முடியும்'' என்று அந்தக் கிழவி பதிலளித்தாள். ''தியோம்கின் குடும்பத்தினர் பாதிக்கும் குறைவாகவே அறுவடை முடித்திருக்கிறார்கள். அவர்கள் குடும்பத்தில் உஸ்தென்கா மட்டும்தான்

வேலை செய்கிறாள். அவள் உயிரை விட்டுக் கொண்டு வேலை செய்கிறாள்.''

''பின்னே சும்மாவா? நீ வேறு எப்படி எதிர்பார்த்தாய்?'' என்று அந்தக் கிழவர் அகம்பாவத்துடன் கேட்டார்.

''மார்யானா, இந்தா, கொஞ்சம் குடி'' என்று சொல்லிக்கொண்டு பாட்டி உலீத்கா அந்தக் கூஜாவை மகளிடம் நீட்டினாள். ''கடவுள் அருளால் சிறப்பாகக் கல்யாணம் நடத்துவதற்குப் போதுமானது இருக்கிறது.''

''பிறகு பேசுவோம்'' என்று அந்தத் துணை லெப்டினென்ட் புருவங்களை லேசாகச் சுருக்கிக்கொண்டு கூறினார்.

அந்த இளம்பெண் தலையைக் கீழே குனிந்துகொண்டாள்.

''சொல்வதைக் கேளுங்கள்'' என்று அந்தக் கிழவி அதட்டினாள். ''எல்லாம் ஏற்கெனவே செய்தாகிவிட்டன. நேரம் வந்துவிட்டது.''

''அது கிடக்கட்டும். இப்பொழுது அறுவடை நேரம்'' என்றார் துணை லெப்டினென்ட்.

''லுக்காஷ்காவின் புதுக் குதிரையைப் பார்த்தீர்களா?'' என்று அந்தக் கிழவி கேட்டாள். ''எங்களுடைய குடியிருப்பாளர் அவனுக்குக் கொடுத்த குதிரையை அவன் வைத்திருக்கவில்லை. அதைக் கொடுத்து வேறு குதிரை வாங்கிவிட்டான்.''

''நான் புதுக் குதிரையைப் பார்க்கவில்லை. ஆனால் இன்று அவருடைய வேலைக்காரனுடன் பேசிக் கொண்டிருந்தேன். அவருக்கு இன்னும் ஆயிரம் ரூபிள் வந்திருப்பதாக அவன் சொன்னான்.''

''அவரைக் குபேரன் என்றுதான் சொல்ல வேண்டும்'' என்று அந்தக் கிழவி அர்த்தத்துடன் கூறினாள்.

அந்தக் குடும்பம் முழுவதுமே உற்சாகமாக, மனநிறைவாக இருந்தது.

வேலை வெற்றிகரமாக நடைபெற்றுக் கொண்டிருந்தது. திராட்சை விளைச்சல் அவர்களுடைய எதிர்பார்ப்புகளைக் காட்டிலும் கூடுதலாகவும் சிறப்பாகவும் இருந்தது.

மார்யானா உணவருந்திய பிறகு மாடுகளுக்குப் புல்

கொடுத்தாள். பிறகு தன்னுடைய பெஷ்மெத்தைத் தலையணையைப் போல மடித்து வைத்துக் கொண்டு வண்டியின் கீழ் மென்மையான, அடர்த்தியான புல்லின் மீது படுத்தாள். அவள் சிவப்பு நிறப் பட்டுத் துணியைத் தலையில் கட்டி, சாயம் போன நீல நிறக் கலிக்கோச் சட்டை மட்டும் அணிந்திருந்தாள். எனினும் அங்கே தாங்க முடியாத வெப்பம் இருப்பதாக அவளுக்குத் தோன்றியது. அவளுடைய முகம் மிகவும் சூடேறியிருந்தது, அவளுடைய கால்கள் துறுதுறுத்தன; அவளுடைய கண்கள் உறக்கமின்மையினாலும் களைப்பினாலும் கனத்தன; அவளுடைய உதடுகள் தாமாகவே திறந்தன; அவளுடைய மார்பு ஆழமாக மூச்சு விடுவதனால் விரிவுற்றெழுந்தது.

அத்தோட்டத்தில் பதினைந்து நாட்களாக அறுவடை நடைபெறுகிறது. அந்த இளம்பெண் இப்போது கடுமையாக, தொடர்ச்சியாக உழைத்துக் கொண்டிருக்கிறாள். அதிகாலையில் சூரியோதயத்தின் முதல் கதிர்களுடன் அவள் எழுந்து குளிர்ந்த நீரில் முகத்தைக் கழுவி, தலையில் துணியைக் கட்டி கொட்டிலுக்கு வெறுங்காலுடன் ஓடுவாள். அதன் பிறகு அவசரமாகக் காலணிகளையும் மேலங்கியையும் அணிந்து ரொட்டியை மூட்டையில் கட்டிக்கொண்டு மாடுகளை வண்டியில் பூட்டி அன்றைய வேலைக்குத் தோட்டத்துக்குப் புறப்படுவாள். அங்கே அவள் குறைந்த நேரமே ஓய்வெடுப்பாள். அங்கே அடர்த்தியாக வளர்ந்த திராட்சைக் குலைகளைக் கத்திரிப்பது, கூடைகளைத் தூக்கிவருவது முதலிய வேலைகளைச் செய்வாள். மாலை நேரத்தில் உற்சாகமாக, சோர்வில்லாமல் மாடுகளைக் கயிற்றைப் பிடித்து இழுத்துக்கொண்டு, நீண்ட மிலாறினால் அடித்து ஓட்டிக் கொண்டு கிராமத்துக்குத் திரும்புவாள்.

அந்தி நேரத்தில் கால்நடைகளின் பாலைக் கறந்து முடித்த பிறகு அவள் கொஞ்சம் விதைகளை எடுத்துக் கொண்டு மற்ற பெண்களுடன் சிரித்துப் பேசி வம்பளப்பதற்குத் தெருவிற்குச் செல்வாள். ஆனால் அந்தி மறைந்ததும் அவள் எப்பொழுதும் வீட்டுக்குத் திரும்புவாள். தன்னுடைய தகப்பனார், தாயார், தம்பியுடன் இரவு உணவருந்திய பிறகு எந்தக் கவலையுமில்லாமல் துடி

துடிப்புடன் அறைக்குச் சென்று அடுப்புக்குப் பக்கத்தில் உட்கார்ந்து ஒலேனின் பேசுவதைக் கேட்டாள். அவன் விடைபெற்றுச் சென்றவுடன் அவள் படுக்கையில் படுத்து மறுநாள் காலை வரையில் அமைதியாக, கனவுகள் துன் புறுத்தாமல் உறங்குவாள். மறுநாள் இதே கதை தொடங்கும். நிச்சயதார்த்த விருந்துக்குப் பிறகு அவள் லுக்காஷ்காவைப் பார்க்கவில்லை; அவள் தனக்கு எப் பொழுது திருமணம் நடைபெறும் என்று பொறுமை யோடு காத்துக் கொண்டிருந்தாள். இப்பொழுது அவள் அந்த யுங்கெருடன் நன்றாகப் பழகிவிட்டாள்; அவன் தன்னை உற்றுப் பார்க்கின்றபொழுது அவள் மகிழ்ச்சி யடைந்தாள்.

## 30

சூரிய வெப்பத்திலிருந்து தப்ப முடியாது என்ற நிலை யிலும், அந்த வண்டியின் நிழலில் கொசுக்கள் ஏராள மாக மொய்த்துக் கொண்டிருந்த நிலையிலும் அவளு டைய தம்பி அடிக்கடி புரண்டு படுத்து அவளை இடித் துக் கொண்டிருந்த நிலையிலும் மார்யானா தன்னுடைய முகத்தை ஒரு துணியால் மூடிக்கொண்டு அநேகமாகத் தூங்கிவிட்டாள். அப்பொழுது அவளுடைய தோழியான உஸ்தென்கா அங்கே ஓடிவந்து வண்டியின் அடியில் நுழைந்து அவள் பக்கத்தில் படுத்தாள்.

''சும்மா தூங்கு, பெண்ணே! தூங்கு!'' என்று வண்டி யின் கீழ் முதுகை வளைத்து நுழைந்து கொண்டு கூறி னாள். ''பாரு, இப்படித் தூங்கக் கூடாது'' என்று முதுகை நிமிர்த்திக்கொண்டு கூறினாள்.

அவள் துள்ளியோடிச் சென்று சில பச்சையான கிளை களைக் கொண்டுவந்தாள். வண்டியின் இரண்டு சக்கரங் களிலும் அவற்றைப் பின்னிக் கட்டித் தன்னுடைய பெஷ் மெத்தை அவற்றின் மீது பரப்பினாள்.

அவள் மறுபடியும் வண்டியின் கீழே நுழைந்தபொ ழுது ''இங்கிருந்து போ!'' என்று மார்யானாவின் தம் பிக்கு உத்தரவிட்டாள். ''கஸாக்குகள் பெண்களுடன் தங்க முடியாது. ஓடிப்போ!'' என்றாள்.

அவள் அந்த வண்டியின் கீழ் தன்னுடைய தோழி யுடன் தனியாக இருந்தபொழுது திடீரென்று அவளைத்

தன்னுடைய இரண்டு கைகளாலும் இழுத்துக்கொண்டு தன் மார்புடன் அணைத்து அவள் முகத்திலும் கழுத்திலும் முத்தமிட ஆரம்பித்தாள்.

''என் அன்பே!'' என்று அவள் கலீரென்று சிரித்துக் கொண்டு கூறினாள்.

''சீ! 'தாத்தா'விடமிருந்து இந்த வேலையைக் கற்றுக் கொண்டாயா?'' என்று மார்யானா அவளுடைய பிடியிலிருந்து தப்புவதற்கு முயற்சி செய்தவாறு கூறினாள். ''சீ! என்னை விடு!''

அவர்களிருவரும் மிகவும் உற்சாகமாகச் சிரித்தபடியால் அந்தக் கிழவி அவர்களை அதட்ட வேண்டியிருந்தது.

''உனக்குப் பொறாமையா?'' என்று கேட்டாள் உஸ்தென்கா.

''என்ன பிதற்றல்! என்னைத் தூங்கவிடு! இங்கே ஏன் வந்தாய்?''

ஆனால் உஸ்தென்காவை அடக்க முடியவில்லை. ''உன்னிடம் ஒரு விஷயம் சொல்ல வேண்டுமே.''

மார்யானா முழங்கையைத் தரையில் ஊன்றி தலையைத் தூக்கினாள், தன்னுடைய விலகிப் போன தலைத் துணியை சரி செய்துகொண்டாள். ''என்ன சொல்லப் போகிறாய்?''

''உன் வீட்டில் குடியிருப்பவரைப் பற்றி எனக்கு ஒரு விஷயம் தெரியும்.''

''தெரிவதற்கு ஒரு விஷயமும் இல்லையே'' என்று மார்யானா பேசினாள்.

''ஆ! நீ தந்திரக்காரி!'' என்று உஸ்தென்கா தன்னுடைய முழங்கையினால் அவளை இடித்துக்கொண்டும் சிரித்துக்கொண்டும் கூறினாள். ''நீ ஒன்றுமே சொல்வதில்லை. அவர் உன்னைப் பார்க்க வருகிறாரா, இல்லையா? அதைச் சொல்.''

''வருகிறார் என்றே வைத்துக்கொள். அது பெரிய விஷயமா?'' என்றாள் மார்யானா. அவள் முகத்தில் திடீரென்று சிவப்பேறியது.

''சரி. இங்கே பார். நான் ஒரு கபடமற்ற பெண். எல்லாரிடமும் சொல்லிவிடுகிறேன். நான் எதற்காக அதை மறைக்க வேண்டும்?'' என்றாள் உஸ்தென்கா. அவளு

டைய குதூகலமான, இளஞ்சிவப்பான முகம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தது. ''நான் யாருக்காவது தீமை செய்கிறேனா? நான் காதலிக்கிறேன். அவ்வளவுதான்.''

''யாரை? அந்தத் 'தாத்தா' வையா?''

''ஆமாம்!''

''ஆனால் அது தப்பு.''

''மார்யானா! ஒரு பெண் தன்னுடைய இளமையில் அனுபவிக்கவில்லை என்றால் பிறகு முடியுமா? எனக்குக் கல்யாணமாகிவிட்டால் அப்புறம் குழந்தைகளைப் பெற வேண்டும். அப்புறம் எல்லாக் கவலையும் வந்துவிடும். நீ லுக்காஷ்காவைக் கல்யாணம் செய்துகொள்ளப் போகிறாய். பிறகு சந்தோஷத்தை மறந்துவிட வேண்டியதுதான். அது வராது, குழந்தைகளும் உழைப்பும் வரும்.''

''அதனாலென்ன? கல்யாணமானவர்கள் சந்தோஷமாகத்தானே இருக்கிறார்கள். எல்லாம் ஒன்றுதான்!'' என்று மார்யானா அமைதியாக பதிலளித்தாள்.

''என்னிடம் ஒரே ஒரு தடவை சொல். உனக்கும் லுக்காஷ்காவுக்கும் எந்த அளவில் இருக்கிறது?''

''அவன் என்னைக் கல்யாணம் செய்ய விரும்புகிறான். அப்பா அதை ஒரு வருஷத்துக்கு ஒத்திப் போட்டார். இந்த இலையுதிர் பருவத்தில் கல்யாணத்தை வைத்துக் கொள்வதென்று இப்பொழுது முடிவு செய்திருக்கிறார்கள்.''

''அவன் உன்னிடம் என்ன சொன்னான்?''

மார்யானா லேசாகச் சிரித்தாள்.

''அவன் என்ன சொல்வான் என்று உனக்குத் தெரியாதா? உன்னைக் காதலிக்கிறேன் என்று அவன் சொன்னான். தோட்டத்துக்கு வா என்று என்னை அடிக்கடி கூப்பிட்டுக் கொண்டிருக்கிறான்.''

''அட கூமுட்டையே! அவன் கூப்பிட்டும் நீ போகவில்லையா? அவன் இப்பொழுது எவ்வளவு பெரிய வீரனாகிவிட்டான், தெரியுமா? நம்முடைய முதல் ஜிகித்! அந்தப் படைப்பிரிவில் அவன் உல்லாச வாழ்க்கை நடத்துகிறானாம். சமீபத்தில் எங்கள் கிர்க்கா வந்திருந்தான். லுக்காஷ்கா அருமையான குதிரை வைத்திருக்கிறான் என்று சொன்னான். நீ இல்லாமல் அவனுக்கு சுவாரசியமில்லையாம். அவன் வேறு என்ன சொன்னான்?''

''உன்னிடம் எல்லாவற்றையும் சொல்லிவிட வேண்டுமா?'' என்று மார்யானா சிரித்துக்கொண்டு கேட்டாள். ''ஒரு நாள் மாலையில் குதிரையில் வீட்டுக்கு வந்தான். சன்னலுக்குக் கீழே வந்து நின்றான். குடிமயக்கத்தில் இருந்தான். நான் அவனை வீட்டுக்குள் விட வேண்டும் என்றான்.''

''அவனை உள்ளே விட்டாயா?''

''எதற்காக? நான் ஒரு தடவை கொடுத்த வாக்கை நிறைவேற்றுவேன்! நான் மலையைப் போல உறுதியானவள்'' என்று மார்யானா கருத்தார்ந்த முறையில் கூறினாள்.

''அவன் எவ்வளவு பெரிய வீரன்! அவன் எங்கே போனாலும் எந்தப் பெண்ணும் எதையும் மறுக்கமாட்டாள்.''

''அப்படியானால் அவன் அவர்களிடம் போகட்டும்'' என்று மார்யானா கர்வத்துடன் கூறினாள்.

''நீ அவனுக்காக வருத்தப்படவில்லையா?''

''ஆம். ஆனால் அதற்காக முட்டாள்தனமாக எதையும் செய்ய மாட்டேன். அப்படிச் செய்வது தப்பு.''

உஸ்தென்கா திடீரென்று தன்னுடைய தோழியின் மார்பில் முகத்தைப் புதைத்துக் கொண்டு அவளை இரண்டு கைகளாலும் தழுவினாள். அடக்க முடியாத சிரிப்பினால் அவள் உடல் குலுங்கியது.

''அசடு, அசடு!'' என்று அவள் பேச முடியாமல் பேசினாள். ''உனக்கு சந்தோஷமாக இருக்கத் தெரியவில்லை'' என்று சொல்லிவிட்டு அவள் மார்யானாவுக்கு மறுபடியும் கிச்சு மூட்டத் தொடங்கினாள்.

''ஆ! நிறுத்து!'' என்று மார்யானா சிரிப்புக்கு நடுவே கூக்குரலிட்டாள்.

''சீ! பிசாசுகளா! பேச்சை நிறுத்தமாட்டீர்களா? உங்களுக்குக் களைப்பாக இல்லையா?'' என்று அந்தக் கிழவியின் தூக்கக் குரல் வண்டிக்குப் பக்கத்திலிருந்து கேட்டது.

''உனக்கு சந்தோஷமாக இருக்க விருப்பமில்லையா?'' என்று உஸ்தென்கா பாதி உட்கார்ந்துகொண்டு கிசுகிசுக் குரலில் பேசினாள். ''நீ உண்மையிலேயே அதிர்ஷ்டசாலி! இளைஞர்கள் உன்னைப் பார்த்துச் சொக்கிவிடு

*கிறார்கள். எல்லோரும் உன்னைக் காதலிக்கிறார்கள்! ம்! நான் உன்னுடைய இடத்திலிருந்தால் உன் வீட்டில் குடியிருப்பவரை இந்தச் சுண்டு விரலாலேயே ஆட்டுவேன்! அவர் என் வீட்டுக்கு வந்திருந்தபொழுது உன்னைத் தன் கண்களாலேயே விழுங்குவதைப் பார்த்தேன். என்னுடைய 'தாத்தா'—நான் எதைக் கேட்டாலும் அவர் கொடுப்பார்! ஆனால் உன்னுடையவர்—அவர் ருஷ்யர்களிலேயே பெரும் பணக்காரர்களில் ஒருவராம்! அவருக்கு சொந்தமாகப் பண்ணையடிமைகள் இருக்கிறார்கள் என்று அவருடைய வேலைக்காரன் கூறினானாம்.''*

*மார்யானா எழுந்து உட்கார்ந்தாள். அவள் மனத்திலேற்பட்ட சிந்தனைகளை நினைத்துச் சிரித்தாள்.*

*''என் வீட்டில் குடியிருப்பவர் ஒருநாள் என்ன சொன்னார், தெரியுமா?'' என்று அவள் ஒரு புல்லைக் கடித்துக் கொண்டு பேசினாள். '' 'கஸாக்கு லுக்காஷ்காவாக அல்லது உன்னுடைய சகோதரன் லகுத்காவாகப் பிறந்திருக்க வேண்டுமென்று விரும்புகிறேன்' என்று அவர் சொன்னார். அவர் ஏன் அப்படிப் பேசினார்?''*

*''ஓ! அது ஒன்றுமில்லை! அவர்கள் எல்லோருமே மனத்தில் பட்டதைச் சொல்லிவிடுகிறார்கள். என்னுடைய 'தாத்தா'வும் அப்படித்தான். எதையாவது சொல்வார்! சரியான பைத்தியம்!'' என்றாள் உஸ்தென்கா.*

*மார்யானா தன்னுடைய பெஷ்மெத்தில் தலையை வைத்துக்கொண்டு உஸ்தென்காவின் தோளைத் தன் கையால் அணைத்துக்கொண்டு கண்களை மூடினாள்.*

*''இன்று அவர் தோட்டத்துக்கு வந்து வேலை செய்ய விரும்பினார். அப்பா அவரை வரச் சொல்லியிருக்கிறார்'' என்றாள். சிறிது நேரத்தில் அவள் அயர்ந்து தூங்கிவிட்டாள்.*

## 31

*வண்டிக்கு நிழல் கொடுத்துக் கொண்டிருந்த பேரிமரத்துக்குப் பின்னாலிருந்த சூரியன் அந்த இடத்திலிருந்து நகர்ந்துவிட்டது. சூரியனிடமிருந்து சாய்வாக வந்த கதிர்கள் மரக் கிளைகளைக் கொண்டு உஸ்தென்கா உருவாக்கியிருந்த திரையை ஊடுருவித் தூங்கிக் கொண்டிருந்த இளம் பெண்களுடைய முகங்களைச் சுட்டன.*

மார்யானா விழித்துக்கொண்டு தலைத் துணியை சரி செய்ய ஆரம்பித்தாள். அவள் இங்குமங்கும் பார்த்த பொழுது தனது வீட்டில் குடியிருப்பவர் தோளில் துப் பாக்கியைத் தொங்கவிட்டுக் கொண்டு பேரி மரத்துக்குச் சற்று தள்ளி நின்றுகொண்டு தன்னுடைய தகப்பனா ருடன் பேசிக் கொண்டிருப்பதைக் கண்டாள். அவள் உஸ்தென்காவை இடித்தாள். எதுவும் பேசாமல் அவன் நின்று கொண்டிருப்பதைப் பார்க்குமாறு சிரித்தபடியே சுட்டிக்காட்டினாள்.

''நான் நேற்று வேட்டைக்குப் போயிருந்தேன். ஆனால் சிறிதும் அதிர்ஷ்டமில்லை'' என்று ஒலேனின் கூறி னான். அவன் கண்கள் சுற்றுமுற்றும் பார்த்தபோதிலும் கிளைகளினால் செய்யப்பட்ட மறைவுக்குப் பின்னா லிருந்த மார்யானாவை அவனால் பார்க்க முடியவில்லை.

''ஆனால் நீங்கள் இந்தத் திசையில் நேரே ஆற்றங் கரைக்குப் போய்விட வேண்டும். அங்கே ஒரு தோட் டம் சீர்குலைந்திருக்கிறது. நாங்கள் அந்த இடத்தைப் 'பாழ்நிலம்' என்று சொல்கிறோம். அங்கே எப்பொழு தும் காட்டு முயல்களைப் பார்க்க முடியும்'' என்று அந்தத் துணை லெப்டினென்ட் தன்னுடைய பேச்சின் பாணியை உடனடியாக மாற்றிக்கொண்டு கூறினார்.

''வேலை செய்ய வேண்டிய நேரத்தில் காட்டு முயல் களைத் தேடிப் போவது சோம்பேறிகள்தான்!'' என்று அந்தக் கிழவி கேலியாகப் பேசினாள். ''பதிலாக நீங்கள் இங்கே வந்து எங்களுக்கு உதவி செய்யலாமே. இந்தப் பெண்களுடன் வேலை செய்தால் நன்றாய் இருக்கும். பெண்களே, எழுந்து வெளியே வாங்க!'' என்று உரத்த குரலில் கூறினாள்.

மார்யுானாவும் உஸ்தென்காவும் மெல்லிய குரலில் இரகசியம் பேசிக் கொண்டிருந்தார்கள். வண்டியின் கீழே அமர்ந்திருந்த பெண்களால் சிரிப்பை அடக்க முடிய வில்லை.

ஒலேனின் லுக்காஷ்காவுக்கு ஐம்பது ரூபிள் மதிப்புள்ள குதிரையைக் கொடுத்ததை துணை லெப்டினென்டும் அவருடைய மனைவியும் அறிந்ததிலிருந்து அவர்கள் அவனிடம் அதிகமான பணிவுடன் நடந்துகொண்டார்கள். குறிப்பாகத் துணை லெப்டினென்ட் மார்யானாவுடன் அவ

னுடைய நட்பைப் பற்றி மகிழ்ச்சியடைவதைப் போலத் தோன்றினார்.

''ஆனால் எனக்கு இந்த வேலை தெரியாதே'' என்றான் ஒலேனின். அவன் வண்டி நிறுத்தப்பட்டிருந்த திசையில் பார்க்கக் கூடாது என்று தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டாலும் பசுங்கிளைகளின் மறைவில் மார்யானாவின் நீலச் சட்டையையும் அவள் தலையில் கட்டப்பட்டிருந்த சிவப்பு துணியையும் பார்த்தான்.

''இந்தப் பீச் பழங்களைச் சாப்பிடுங்கள்'' என்றாள் உலீத்கா பாட்டி.

''இது பழைய கஸாக்குகளின் பரம்பரையான விருந்தோம்பல் முறை. கிழவி அசட்டுத்தனமாகப் பேசுகிறாள்'' என்று அந்தத் துணை லெப்டினென்ட் உலீத்காவின் சொற்களை விளக்கியும் திருத்தியும் பேசினார். ''ருஷ்யாவில் நீங்கள் பீச் பழங்களை மட்டுமன்றி அன்னாசிப் பழ ஊறுகாயையும் சாப்பிடுகிறீர்கள் என்று நினைக்கிறேன், சரிதானா?''

''அந்தப் பாழடைந்த தோட்டத்தில் வேட்டை அகப்படுமா?'' என்று ஒலேனின் விசாரித்தான். ''நான் அங்கே போகிறேன்.'' அவன் அந்தப் பசுங்கிளைகளினால் செய்யப்பட்ட திரையைக் கண நேரம் பார்த்துவிட்டு தன்னுடைய தொப்பியை மேலே உயர்த்திக்கொண்டு நடந்தான். திராட்சைத் தோட்டத்தின் நேரான, பச்சை நிற வரிசைகள் மத்தியில் அவன் சீக்கிரத்தில் அவர்களுடைய பார்வையிலிருந்து மறைந்தான்.

சூரியன் தோட்ட வேலிகளுக்குப் பின்னால் ஏற்கெனவே மறைந்துவிட, அதன் சிதறிய ஒளிக்கதிர்கள் இலைகளின் வழியாகப் பிரகாசித்துக் கொண்டிருந்த பொழுது ஒலேனின் தன் வீட்டுக்காரருடைய தோட்டத்துக்குத் திரும்பினான். காற்று வீசி முடிந்துவிட்டது. இனிமையான குளிர்ச்சி அந்த திராட்சைத் தோட்டம் முழுவதும் பரவ ஆரம்பித்திருந்தது. ஒருவகையான இயல்புணர்ச்சியுடன் ஒலேனின் தூரத்தில் இருக்கின்ற பொழுதே திராட்சைக் கொடிகளின் வரிசைகளுக்கு நடுவில் மார்யானாவின் நீலநிறச் சட்டையைக் கண்டான். அவன் வழியிலிருந்த திராட்சைப் பழங்களைப் பிடுங்கியவாறு மார்யானாவை நோக்கி நடந்தான். மூச்சிறைக்க வந்து

கொண்டிருந்த அவனுடைய நாயும் தாழ்வாகத் தொங்கிக் கொண்டிருந்த திராட்சைக் குலைகளைத் தன்னுடைய எச்சில் வழிந்து கொண்டிருந்த வாயினால் எப்பொழுதாவது கவ்வியது. வெப்பத்தினால் முகம் முழுவதும் சிவந்திருந்த மார்யானா தனது சட்டைக்கைகளை மேலே சுருட்டிவிட்டுக் கொண்டு, முகவாய்க்குக் கீழே தலைத் துணி தொங்க, பழுத்த குலைகளை வேகமாக வெட்டித் தன்னுடைய கூடையில் வைத்துக் கொண்டிருந்தாள்.

அவள் தன் கையில் இழுத்துப் பிடித்து வைத்துக் கொண்டிருந்த கிளையை மேலே போகவிடாதபடி ஒரு கண நேரம் தயங்கி நின்று நேசத்துடன் அவனைப் பார்த்துச் சிரித்தாள். உடனே தன்னுடைய வேலையில் மறுபடியும் ஈடுபட்டாள். ஒலேனின் அவளருகில் சென்று தன்னுடைய கைகளை விடுவித்துக் கொள்வதற்காகத் துப்பாக்கியைத் தோளில் மாட்டிக்கொண்டான். ''கடவுள் உதவி செய்யட்டும்! உன் குடும்பத்தினர் எங்கே? நீ தனியாக இருக்கிறாயா?'' என்னும் வார்த்தைகள் அவன் உதட்டுக்கு வந்துவிட்டன; ஆனால் அவன் பேசவில்லை. தொப்பியை மட்டும் மேலே உயர்த்தினான். மார்யானாவுடன் தனியே இருப்பது அவனுக்குத் தர்ம சங்கடமாக இருந்தது. எனினும் தன்னைத் துன்புறுத்திக் கொள்ள விரும்புபவனைப் போல அவளை நெருங்கி வந்தான்.

''துப்பாக்கியை இப்படி நீட்டிக் கொண்டு வருகிறீர்களே! பெண்களில் யாரையாவது சுட்டுவிடப் போகிறீர்கள்'' என்றாள் மார்யானா.

''நான் யாரையும் சுடமாட்டேன்.''

பிறகு அவர்களிருவரும் மௌனமாக இருந்தார்கள்.

''நீங்கள் எங்களுக்கு உதவி செய்யலாமே!'' என்றாள் மார்யானா.

அவன் ஒரு சிறு கத்தியை எடுத்து திராட்சைக் குலைகளை மௌனமாக வெட்ட ஆரம்பித்தான். ஒரு கனமான குலையை மறைத்துக் கொண்டிருந்த இலைகளை விலக்கினான். அந்தக் குலை சுமார் மூன்று பவுண்டு எடை இருக்கும். அதில் திராட்சை பழங்கள் மிகவும் நெருக்கமாக ஒட்டிக்கொண்டு இடமில்லாமல் ஒன்றையொன்று

தட்டையாக வைத்திருந்தன. அந்தக் குலையை மார்யானாவிடம் காட்டினான்.

''நான் எல்லாக் குலைகளையும் வெட்டுகிறேனா? இது நன்றாகப் பழுத்து விட்டதா?''

''அதை என்னிடம் கொடுங்கள்.''

அவர்களுடைய கைகள் சந்தித்துக்கொண்டன. ஒலேனின் அவளுடைய கையைப் பற்றினான். அவள் புன்சிரிப்புடன் அவனைப் பார்த்தாள்.

''உன் கல்யாணம் சீக்கிரத்தில் நடைபெறப் போகிறதா?'' என்று அவன் கேட்டான்.

அவள் தன்னுடைய கடுகடுத்த, கறுநிறக் கண்களால் அவனைப் பார்த்துவிட்டு எதுவும் பேசாமல் முகத்தைத் திருப்பிக்கொண்டாள்.

''நீ லுக்காஷ்காவைக் காதலிக்கிறாயா?''

''அதைப் பற்றி உங்களுக்கென்ன?''

''எனக்கு அவன் மீது பொறாமை.''

''பேச்சைப் பார்.''

''உண்மையாகத் தான் சொல்கிறேன். நீ சிறந்த அழகி!''

என்ன பேசிவிட்டோம் என்பதை நினைத்து அவன் திடீரென்று மிகவும் வெட்கமடைந்தான். அவன் சொற்கள் மிகவும் கொச்சையாக ஒலிப்பதைப் போலக் கருதினான். அவன் முகம் சிவந்தது. தான் என்ன செய்யப் போகிறோம் என்பது அவனுக்குத் தெரியவில்லை. அவன் அவளுடைய இரண்டு கைகளையும் பற்றினான்.

''எப்படி இருந்தாலும் நான் உங்களுக்கு ஏற்றவள் அல்ல! ஏன் என்னைக் கேலி செய்கிறீர்கள்?'' என்றாள் மார்யானா. ஆனால் அவன் அவளைக் கேலி செய்யவில்லை என்று அவள் உறுதியாக நம்புவதை அவளுடைய கண்கள் அறிவித்தன.

''கேலியா? நீ மட்டும் அறிந்தால்...''

அவனுடைய சொற்கள் இன்னும் அதிக மட்டமானவையாக, அவனுடைய மெய்யான உணர்ச்சிக்கு இன்னும் அதிகமான அளவுக்குப் பொருத்தமில்லாதவையாக அவன் காதுகளில் ஒலித்தன; ஆனால் அவன் தொடர்ந்து பேசினான்.

''என்னால் உன்னிடம் எடுத்துச் சொல்ல முடிய



வில்லை. உனக்காக எதையும் செய்வதற்கு நான் தயார்...''

''என்னைப் போகவிடுங்கள், சீ!''

ஆனால் அவளுடைய முகம், பிரகாசமான கண்கள், விம்மியெழுந்த மார்பகம், அவளுடைய அழகுமிக்க கால்கள் எல்லாம் துல்லியமாக அதற்கு மாறாக அவனிடம் பேசின. அவன் அப்பொழுது பேசியவை எவ்வளவு சாதாரணமானவை என்பதை அவள் புரிந்து கொண்டாள், ஆனால் அவள் எதையும் பொருட்படுத்தவில்லை என்று அவனுக்குத் தோன்றியது; ஏனெனில் அவன் அவளிடம் சொல்ல விரும்பிய ஆனால் சொல்வதற்குத் துணியாத

எல்லாவற்றையும் அவள் நெடுங்காலமாகவே அறிந்திருந்தாள். அவன் அவற்றை எப்படிச் சொல்கிறான் என்பதை அவள் கேட்க விரும்பினாள் என்று அவனுக்குத் தோன்றியது. ''அவள் என்னவாக இருக்கிறாளோ, அது தானே நான் அவளிடம் சொல்ல விரும்பியது எல்லாம் என்பதை அவள் எப்படி அறியாமலிருக்க முடியும்? ஆனால் அவள் புரிந்து கொள்ள விரும்பவில்லை, பதிலளிக்க விரும்பவில்லை'' என்று அவன் தனக்குள் சொல்லிக்கொண்டான்.

''ஓ!'' சிறிது தூரத்தில் திராட்சைக் கொடிகளின் மத்தியிலிருந்து ஒரு குரல் கேட்டது. உஸ்தென்காவின் சன்னமான குரலும் கேலிச் சிரிப்பும் ஒலித்தன. ''திமீத்ரி அவர்களே, இங்கே வந்து எனக்கு உதவி செய்யுங்கள். நான் தனியாக இருக்கிறேன்!'' அவள் இலைகளை விலக்கித் தன்னுடைய உருண்டையான, குழந்தை மாதிரியான, சிறிய முகத்தைக் காட்டிக்கொண்டு ஒலேனினைக் கூப்பிட்டாள்.

ஒலேனின் பதிலளிக்கவில்லை; அந்த இடத்திலிருந்து அசையவில்லை.

மார்யானா தொடர்ந்து வேலை செய்து கொண்டிருந்தாள்; ஆனால் ஒலேனினை அவ்வப்பொழுது ஏறிட்டுப் பார்த்தாள். அவன் ஏதோ சொல்ல ஆரம்பித்தான்; ஆனால் நிறுத்திக்கொண்டு தோள்களைக் குலுக்கினான்; துப்பாக்கியை நேராகத் தொங்க விட்டுக் கொண்டு அந்த திராட்சைத் தோட்டத்திலிருந்து வேகமாக வெளியே சென்றான்.

## 32

அவன் ஒன்று அல்லது இரண்டு தடவை நின்று மார்யானாவும் உஸ்தென்காவும் கலீரென்று சிரிப்பதைக் கேட்டான். அந்தப் பெண்கள் உரத்த குரலில் ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள்.

அன்றைய பிற்பகல் முழுவதும் ஒலேனின் வேட்டைக்காகக் காட்டில் அலைந்தான்; ஆனால் அந்தி நேரத்தில் வீட்டுக்கு வெறுங்கையுடன் திரும்பினான். அவன் சுற்று வட்டகையில் நுழைந்த பொழுது கொட்டகைக் கதவு திறந்திருப்பதையும் ஒரு நீலச் சட்டை உள்ளே நடமாடிக்

கொண்டிருப்பதையும் பார்த்தான். அவன் திரும்பி வந்து விட்டதை அந்தக் குடும்பம் தெரிந்துகொள்ள வேண்டும் என்பதற்காக உரத்த குரலில் வன்யூஷாவைக் கூப்பிட்டான். பிறகு வெளி வராந்தாவில் வழக்கமான இடத்தில் உட்கார்ந்தான். மார்யானாவின் குடும்பத்தினர் ஏற்கெனவே தோட்டத்திலிருந்து திரும்பியிருந்தார்கள். அவர்கள் கொட்டகையிலிருந்து வெளியே வந்து வீட்டுக்குள் சென்றார்கள்; ஆனால் தங்களுடன் சேர்ந்துகொள்ளுமாறு அவனைக் கூப்பிடவில்லை. மார்யானா இரண்டு தடவை வெளியே வந்தாள். அப்பொழுது அந்தி நேரத்தின் இருட்டில் கூட அவள் தன்னை உற்றுப் பார்ப்பதாக அவனுக்குத் தோன்றியது. அவள் நடமாட்டத்தை அவன் ஆர்வத்துடன் கவனித்தான். ஆனால் அவளுக்கு அருகில் போக அவனுக்குத் துணிவு இல்லை. அவள் வீட்டுக்குள் நுழைந்ததும் அவன் வெளி வராந்தாவிலிருந்து கீழே இறங்கி சுற்றுவட்டகையில் முன்னும் பின்னும் நடக்க ஆரம்பித்தான். ஆனால் மார்யானா மறுபடியும் வெளியில் வரவில்லை.

ஒலேனின் அந்த இரவு முழுவதையும் சுற்றுவட்டகையில் உறக்கமில்லாமல் கழித்தான். சொந்தக்காரர்களுடைய வீட்டிலிருந்து வந்த ஒவ்வொரு சத்தத்தையும் உற்றுக் கேட்டுக் கொண்டிருந்தான். அவர்கள் இரவில் பேசிக் கொண்டிருப்பதை, உணவருந்துவதை, இறகு மெத்தைகளை விரித்து உறங்குவதற்குத் தயாரிப்பதைக் கேட்டான்; மார்யானா எதைப் பற்றியோ சிரிப்பதைக் கேட்டான்; பிறகு எல்லாம் படிப்படியாக அமைதியில் மூழ்குவதைக் கேட்டான். துணை லெப்டினென்ட் தன் மனைவியுடன் குசுகுசுவென்று பேசிக் கொண்டிருந்தார். யாரோ ஆழ்ந்து சுவாசிக்கின்ற சத்தம் கேட்டது. அவன் தன்னுடைய அறைக்குள் சென்றான். வன்யூஷா உடைகளை மாற்றாமல் ஆழ்ந்த நித்திரையில் இருந்தான். ஒலேனின் அவனைப் பொறாமையாகப் பார்த்தான். மறுபடியும் சுற்றுவட்டகைக்குப் போகுமாறு ஏதோ ஒரு உணர்ச்சி அவனைத் தூண்டியது. யாரோ வெளியில் வரக் கூடும் என்று அவன் அந்த நேரம் முழுவதும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். ஆனால் யாரும் வரவில்லை, எந்த நடமாட்டமும் இல்லை. மூன்று நபர்கள் அளவாக

சுவாசிக்கின்ற ஒரே சத்தம்தான் அவன் காதில் விழுந்தது. மார்யானா சுவாசிக்கின்ற சத்தத்தை அவன் இனம் கண்டான்; அந்த சுவாசத்தையும் தன்னுடைய இருதயத் துடிப்பையும் அவன் கேட்டுக் கொண்டிருந்தான்.

கிராமத்தில் எங்கும் அமைதி நிலவியது. சந்திரன் தாமதித்து மேலே எழுந்து கொண்டிருந்தது. கால்நடை உஸ்ஸ் என்று மூச்சு விட்டுக்கொண்டு தரையில் படுக்கின்ற அல்லது மெதுவாக எழுந்து நிற்கின்ற காட்சி முன்னைக் காட்டிலும் தெளிவாகத் தெரிந்தது.

''ஏன் இங்கே இருக்கிறேன்?'' என்று ஒலேனின் கோபத்துடன் தன்னையே கேட்டுக்கொண்டான். ஆனால் அந்த இரவு விழிப்பிலிருந்து தன்னைப் பிய்த்துக் கொண்டு போக அவனால் முடியவில்லை.

திடீரென்று யாரோ நடக்கின்ற ஓசையை, அந்த வீட்டின் மரக்கட்டைத் தளம் கிறீச்சிடுவதை அவன் கேட்டான். அவன் கதவை நோக்கி வேகமாகச் சென்றான். ஆனால் மறுபடியும் அளவான சுவாசத்தைத் தவிர வேறு எந்த ஓசையும் கேட்கவில்லை. பிறகு ஒரு பெண் எருமை கனத்த பெருமூச்சு விட்டுக்கொண்டு முழங்கால்களை ஊன்றி எழுந்து நின்றது. அது வாலைச் சுழற்றியது; அடுத்து சுற்றுவட்டகையின் காய்ந்த மண்ணின் மீது ஏதோ விழுகின்ற சத்தம் கேட்டது. பிறகு அந்தப் பெண் எருமை பெருமூச்சு விட்டுக்கொண்டு மூடுபனி கலந்த நிலவொளியில் மறுபடியும் படுத்தது...

''நான் என்ன செய்யப் போகிறேன்?'' என்று ஒலேனின் தன்னையே கேட்டுக்கொண்டான். இனி படுத்துத் தூங்க வேண்டும் என்று முடிவு செய்தான். ஆனால் மறுபடியும் அதே ஓசைகள் கேட்டன. அந்த இரவின் மங்கலான நிலா வெளிச்சத்தில் மார்யானா வெளியே வருவதாக அவன் கற்பனை செய்துகொண்டான். அவன் மறுபடியும் சன்னலுக்குப் பக்கத்தில் ஓடினான். மறுபடியும் காலடிச் சத்தங்கள் கேட்டன.

பொழுது புலர்வதற்குச் சிறிது முன்னால் இவன் சன்னலின் அருகில் சென்று அதில் லேசாகத் தட்டினான். பிறகு கதவை நோக்கி ஓடினான். இப்பொழுது மார்யானாவின் காலடிச் சத்தம் கேட்டது. அவன் கதவுத் தாழ்ப்பாளைப் பற்றிக் கதவைத் தட்டினான். காலணி

யில்லாத வெறும் பாதங்கள் மரப்பலகைகள் அதிகம் ஓசை யெழுப்பாதபடி கவனமாக நடந்து கதவுக்கு அருகில் வந்தன. கதவுத் தாழ்ப்பாள் அகற்றப்பட்டுக் கதவு திறக்கப்பட்டது, இனிமையான மலர்கள் மற்றும் பழங்களின் நறுமணம் முன்னே வர மார்யானாவின் உருவம் வாயிலில் தோன்றியது. அவன் நிலவின் ஒளியில் அவளை ஒரு விநாடி மட்டுமே பார்த்தான். அவள் கதவைச் சாத்தினாள், எதையோ முணுமுணுத்துக் கொண்டு காலடிகளை மென்மையாக வைத்துத் திரும்பி ஓடினாள். ஒலேனின் லேசாகத் தட்ட ஆரம்பித்தான். ஆனால் பதில் வரவில்லை. அவன் மறுபடியும் சன்னலுக்குச் சென்று உற்றுக் கேட்டுக் கொண்டிருந்தான்.

திடீரென்று ஒரு ஆணுடைய உரத்த கீச்சுக்குரல் கேட்டபொழுது அவன் திகைப்புற்றான்.

''ரொம்பப் பிரமாதம்!'' வெள்ளை நிறத் தொப்பியணிந்த ஒரு குட்டையான கஸாக்கு சுற்றுவட்டகையின் குறுக்கே வந்து ஒலேனினை நெருங்கினான். ''நான் எல்லாவற்றையுமே பார்த்தேன். ரொம்பப் பிரமாதம்'' என்று கூறினான்.

அவன் நஸார்கா என்பதை ஒலேனின் தெரிந்துகொண்டான். என்ன செய்வது அல்லது என்ன பேசுவது என்று தெரியாததால் அவன் பதிலளிக்கவில்லை.

''என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய்? நான் கிராமப் பஞ்சாயத்திடம் இப்பொழுதே போகிறேன். இங்கே நடந்த எல்லாவற்றையும் சொல்கிறேன். அவள் தகப்பனாரிடமும் சொல்கிறேன். அதிகாரியின் மகள் சரியான கள்ளி! அவளுக்கு ஒருத்தன் போதாது.''

''நீ என்ன பேசுகிறாய்? உனக்கு என்ன வேண்டும்?'' என்று ஒலேனின் கேட்டான்.

''ஒன்றுமில்லை. நான் கிராமப் பஞ்சாயத்தில் இதைப் பற்றி புகார் செய்யப் போகிறேன்.''

நஸார்கா உரத்த குரலில் பேசினான். அவன் ஏதோ ஒரு திட்டம் போட்டிருக்க வேண்டும்.

''தந்திரமான ஆள்!''

ஒலேனின் நடுங்கினான். அவன் முகம் வெளுத்துவிட்டது.

''இங்கே வா! இங்கே வா!'' ஒலேனின் அவன்

கையைப் பிடித்துக் கட்டாயமாகத் தன்னுடைய வீட்டுக்கு இழுத்துச் சென்றான்.

''ஒன்றுமே நடக்கவில்லை. அவள் என்னை வீட்டுக்குள் அனுமதிக்கவில்லை. நான் ஒன்றும் செய்யவில்லை. அவள் நேர்மையானவள்...''

''இந்த விளக்கம் தேவையில்லை...'' என்றான் நஸார்கா.

''உனக்குப் பணம் தருகிறேன்... இதோ, ஒரு நிமிஷம் பொறு!..''

நஸார்கா பதிலளிக்கவில்லை. ஒலேனின் அறைக்குள் சென்றான். அந்த கஸாக்கிடம் பத்து ரூபிள்களைக் கொடுத்தான்.

''ஒன்றுமே நடக்கவில்லை. ஆனால் நான் செய்தது தவறுதான். அதற்காக இந்தப் பணத்தை எடுத்துக்கொள். தயவுசெய்து இதை வெளிவிட்டு விடாதே. ஏனென்றால் ஒன்றுமே நடக்கவில்லை...''

''போய்வருகிறேன்'' என்று நஸார்கா சிரித்துக்கொண்டு கூறிவிட்டுப் புறப்பட்டான்.

அந்த இரவில் நஸார்கா கிராமத்துக்கு வந்திருந்தான். லுக்காஷ்கா திருடிய குதிரைக்கு இடம் பார்த்து வைக்கும்படி அவன் கேட்டுக் கொண்டதால் அதை ஏற்பாடு செய்துவிட்டுப் போகின்ற வழியில் அந்த வீட்டில் காலடிச் சத்தங்களைக் கேட்டான். அவன் மறுநாள் காலை தனது படைப்பிரிவுக்குப் போய்ச் சேர்ந்தான். சாமர்த்தியமாகப் பத்து ரூபிள் சம்பாதித்ததைப் பற்றி தன் நண்பனிடம் வேடிக்கையாக விவரித்தான்.

அன்று காலையில் ஒலேனின் அந்தக் குடும்பத்தைப் பார்த்தான். இரவில் நடைபெற்ற சம்பவங்கள் அவர்களுக்குத் தெரியவில்லை. அவன் மார்யானாவுடன் ஒரு வார்த்தையும் பேசவில்லை; அவள் அவனைப் பார்த்துப் புன்னகைச் செய்தாள். அவன் மறுநாள் இரவிலும் தூங்காமல் வீணாகச் சுற்றுவட்டகையில் அலைந்து கொண்டிருந்தான். மறுநாள் அவன் வேட்டைக்குச் சென்றான். மாலை நேரம் வந்ததும் தன்னுடைய குழப்பங்களைப் போக்கி நிம்மதி பெறுவதற்காக பெலேத்ஸ்கியைப் பார்க்கச் சென்றான். அவனுக்குத் தன்னைப் பற்றி பயமாக இருந்தது; இனிமேல் அந்தக் குடும்பத்ினரை சந்திப்ப

தில்லை என்று சபதம் செய்து கொண்டான். மறுநாள் இரவில் பிரிவின் சார்ஜென்ட் அவனைத் தூக்கத்திலிருந்து எழுப்பி அவனுடைய படைப்பிரிவு உடனே படையெடுப் பதற்குப் புறப்பட வேண்டும் என்னும் ஆணையைத் தெரி வித்தான். விடுதலை கிடைத்துவிட்டதைப் போல அவ னுக்கு மிதமிஞ்சிய மகிழ்ச்சி ஏற்பட்டது. இனி அந்த கிரா மத்துக்கு ஒருபோதும் திரும்பப் போவதில்லை என்று அவனுடைய உள்ளுணர்ச்சி கூறியது.

மலைப் பகுதிகளில் அந்தத் தாக்குதல் நாலு நாட் கள் நீடித்தது. ஒலேனினுடைய உறவினரான தலைமைத் தளகர்த்தர் அவனைப் பார்க்க விரும்பினார்; தன்னு டைய துணைவர் குழாத்தில் அவனைச் சேர்த்துக் கொள் வதாகக் கூறினார். ஒலேனின் மறுப்புக் கூறினான். தன் னுடைய கிராமத்திலிருந்து வெகு தூரம் தள்ளி இருக்க முடியாததால் திரும்பிச் செல்வதற்கு அனுமதி கேட் டான். படையெடுப்பில் அவனுடைய பங்குக்காக அவ னுக்குச் சிலுவைப் பதக்கம் அளிக்கப்பட்டது. முன்னர் இத் தகைய கௌரவத்தை அவன் அதிகமாக விரும்பியதுண்டு; ஆனால் இப்பொழுது அவன் அதை முற்றிலும் அலட்சிய மாகக் கருதினான். அவனுக்கு இன்னும் அளிக்கப்படாத இராணுவ அதிகாரி பதவி உயர்வைப் பற்றிக் கூட அவன் மேலும் அதிக அலட்சியமாகவே இருந்தான். அவன் மட் டும் வன்யூஷாவுடன் திரும்பிப் புறப்பட்டான். படைப் பிரிவு வருவதற்கு சில மணி நேரத்துக்கு முன்னர் கிரா மத்தை அடைந்தான். அன்று மாலை நேரம் முழுவதும் அவன் மார்யானாவைப் பார்த்துக் கொண்டு வெளி வராந்தாவில் உட்கார்ந்திருந்தான். மறுபடியும் இரவு முழுவதும் சுற்றுவட்டகையில் நோக்கமில்லாமல், சிந்தனை யில்லாமல் அலைந்து கொண்டிருந்தான்.

## 33

மறுநாள் காலையில் ஒலேனின் தாமதமாகத் தூங்கி யெழுந்தான். அந்தக் குடும்பத்தில் எல்லோரும் தோட் டத்தில் வேலை செய்வதற்குப் போய்விட்டார்கள். அவன் வேட்டைக்குப் புறப்படவில்லை. சிறிது நேரம் புத்தகத் தைப் படித்தான், சிறிது நேரம் வெளி வராந்தாவில் உட்

கார்ந்திருந்தான். பிறகு மறுபடியும் அறைக்குள் சென்று படுக்கையில் விழுந்தான். அவனுக்கு உடல் நலமில்லையோ என்று வன்யூஷா நினைத்தான். மாலை நேரம் வருவதற்கு முன்னர் அவன் திடீர்த் தீர்மானத்துடன் துள்ளியெழுந்தான், எழுத உட்கார்ந்தான், இரவில் நெடுநேரம் வரை எழுதிக் கொண்டிருந்தான். அவன் ஒரு கடிதம் எழுதினான்; ஆனால் அதை அனுப்பவில்லை. ஏனென்றால் அவன் என்ன எழுதியிருக்கிறான் என்று யாருக்குமே புரியாது என்று கருதினான், அவனைத் தவிர வேறு யாரேனும் அதைப் புரிந்து கொள்வதற்குக் காரணமும் இல்லை.

அவன் பின்வருமாறு எழுதியிருந்தான்:

''ருஷ்யாவிலிருந்து எனக்கு அனுதாபக் கடிதங்கள் வந்திருக்கின்றன. இந்தக் கானகத்தில் என்னைப் புதைத்துக் கொள்வதன் மூலம் என்னை அழித்துக் கொண்டு விடுவேனோ என்று அவர்கள் அஞ்சுகிறார்கள். 'அவன் முரட்டுத்தனமுடையவனாக மாறிவிடுவான், எல்லா அக்கறைகளும் போய்விடும்; அளவு மீறிக் குடிப்பான். அதைக் காட்டிலும் மோசம் என்னவென்றால் கஸாக்குப் பெண்ணைக் கல்யாணம் செய்துகொள்வான்' என்று அவர்கள் என்னைப் பற்றிப் பேசுகிறார்கள். 'காகசசில் எந்த நபராவது பத்து ஆண்டுகள் வசித்தால் அவன் குடித்தே செத்து விடுவான் அல்லது ஒரு விபசாரியைக் கல்யாணம் செய்துகொள்வான்' என்று ஜெனரல் யெர்மோலவ் கூறியது முற்றிலும் சரி என்று அவர்கள் பேசிக் கொள்கிறார்கள்.

''என்ன பயங்கரம்! நான் அழிந்து போகக் கூடாது என்பது நல்லதே. நான் உயர் குடும்பத்தைச் சேர்ந்தவள் பி...யைத் திருமணம் செய்து கொண்டால் அல்லது ஜாரின் அரசவைப் பதவி வகித்தால் அல்லது பிரபுக்கள் தலைவரானால் நான் மிகவும் மகிழ்ச்சி அடைவேன் என்று நீங்கள் கற்பனை செய்கிறீர்கள். நீங்கள் எல்லோரும் எவ்வளவு தாழ்ந்தவர்கள், வெறுக்கத்தக்கவர்கள், தெரியுமா? மகிழ்ச்சி என்றால் என்ன, வாழ்க்கை என்றால் என்ன என்பது உங்களுக்குத் தெரியாது! வாழ்க்கையை ஒப்பனை செய்யப்படாத முழு அழகில் நீங்கள் ஒரு முறையாவது அனுபவிக்க வேண்டும். ஒவ்வொரு நாளும்

என் கண்களுக்கு முன்னால் என்ன இருக்கிறது என்பதை நீங்கள் பார்க்க வேண்டும், உணர வேண்டும்: அழிவில்லாத, மனிதன் நெருங்க முடியாத பனி மூடிய மலைகள், கடவுள் படைத்த முதல் பெண்ணின் இயற்கை அழகைக் கொண்டிருக்கின்ற கம்பீரமான பெண். இப்பொழுது என்னுடைய கேள்விக்கு பதில் சொல்லுங்கள். அழிந்துகொண்டிருப்பது யார், உண்மையாக அல்லது போலியாக வாழ்வது யார்—நீங்களா, நானா?

''உங்களுடைய சொந்த பிரமைகளில் மூழ்கிப்போன நீங்கள் எவ்வளவு அற்பமானவர்கள், வெறுக்கத்தக்கவர்கள் என்பதை நீங்கள் அறிய முடிந்தால். என்னுடைய கற்பனையில் என் குடிசை, என் காடு மற்றும் என் காதலிக்குப் பதிலாக உங்களுடைய வரவேற்பறைகள், பொய் முடி வைத்து சிகையலங்காரம் செய்யப்பட்ட உங்கள் சீமாட்டிகள், அவர்களது செயற்கையாகப் பேசும் உதடுகள், முழுமையாக மறைக்கப்பட்டு பலவீனமாக இருக்கின்ற அவர்களுடைய கை,கால்கள், உரையாடுதல் என்னும் பெயருக்குத் தகுதியில்லாதபடி உரையாடுவதைப் போல நடிக்கின்ற நாகரிகமான உதடசைப்பு ஆகியவை தோன்றுகின்ற தருணத்தில், அவை எனக்குத் தாங்க முடியாத வேதனையை அளிக்கின்றன. அந்த முட்டாள்தனமான முகங்களை, திருமண வயதை அடைந்த செல்வக் குமரிகளை—அவர்களுடைய முகங்கள் 'நான் பணக்கார இளம்பெண், நீ விரும்பினால் என்னிடம் வா' என்று அழைப்பதைப் போன்று இருக்கின்றன—உட்காருவதையும் இடங்களை மாற்றிக் கொள்வதையும், மரியாதையில்லாமல், வெட்கமில்லாமல் ஆண்களும் பெண்களும் ஜோடி சேருவதை, முடிவில்லாத வம்பளப்பை, பாசாங்கை, நீங்கள் யாருடன் கைகுலுக்க வேண்டும், யாரைக் குனிந்து வணங்க வேண்டும், யாருடன் பேசவேண்டும் என்னும் விதிகளையும் வரிசை முறைகளையும், கடைசியில் உடன்பிறந்த தலைமுறைக்குத் தலைமுறை அது தவிர்க்கமுடியாதது என்று உணர்வுடன் கூட கைமாற்றித் தரப்படுகின்ற நிரந்தரமான அலுப்பை நினைத்தவுடன் நான் வேதனைப்படுகிறேன்.

''இந்த ஒன்றைப் புரிந்துகொள்ளுங்கள் அல்லது நம்புங்கள். சத்தியம், அழகு ஆகியவற்றை நீங்கள் பார்க்க

வேண்டும், புரிந்துகொள்ள வேண்டும்; பிறகு நீங்கள் பேசுகின்ற, சிந்திக்கின்ற எல்லாமே வெறுமையானதாக மாறிவிடும். நானும் நீங்களும் மகிழ்ச்சியுடன் இருக்க வேண்டும் என்னும் உங்களுடைய விருப்பங்களும் அப்படியே வெறுமையாகிவிடும். இயற்கையுடன் இருப்பது, அதைப் பார்ப்பது, அதனுடன் உரையாடுவது தான் பேரானந்தம்.

'' 'அட ஆண்டவனே, அவன் ஒரு சாதாரண கஸாக்குப் பெண்ணைத் திருமணம் செய்துகொண்டால் அவனால் பிரபுக்கள் சமூகத்திற்குள்ளாக இனி நுழைய முடியாது.' அவர்கள் என்னைப் பற்றி உண்மையான இரக்கத்துடன் இப்படி பேசிக் கொண்டிருப்பதைக் கற்பனை செய்து பார்க்கிறேன். ஆனால் எனக்கு இந்த ஓர் ஆசை தான் இருக்கிறது. அது நீங்கள் சொல்கின்ற முழுமையான அழிவு. இந்தச் சாதாரண கஸாக்குப் பெண்ணைத் திருமணம் செய்துகொள்ள நான் விரும்புகிறேன். அந்த மேன்மையான இன்பத்துக்கு நான் தகுதியில்லாதவன் என்பதால் அதைச் செய்வதற்குத் தயங்குகிறேன்.

''நான் கஸாக்கு இளம்பெண் மார்யானாவை மூன்று மாதங்களுக்கு முன்பு முதல் தடவையாகப் பார்த்தேன். நான் எந்த சமூகத்தைச் சேர்ந்தவனோ, அந்த சமூகத்தின் கருத்துகளும் தப்பெண்ணங்களும் இன்னும் என்னிடம் இருந்தன. அந்தப் பெண்ணை நான் காதலிக்க முடியாது என்று அந்தச் சமயத்தில் நினைத்தேன். மலைகளின் அழகை, வானத்தின் அழகை நான் பாராட்டியதைப் போல அந்தப் பெண்ணையும் பாராட்டாதிருக்க முடியவில்லை. ஏனென்றால் அந்தப் பெண் மலைகளையும் வானத்தையும் போலவே அழகாக இருந்தாள். பின்னர் அந்த அழகைப் பார்ப்பது என்னுடைய வாழ்க்கையின் தேவையாக மாறிக் கொண்டிருப்பதை உணர்ந்தேன். 'நான் அவளைக் காதலிக்கிறேனா?' என்று என்னையே கேட்டுக்கொள்ளத் தொடங்கினேன். ஆனால் காதலைப் பற்றி நான் இதுவரை எப்படிக் கற்பனை செய்திருக்கிறேனோ, அந்த உணர்ச்சி என்னிடம் இல்லாதிருப்பதைக் கண்டேன். அது நான் அனுபவித்திருந்த தனிமையின் துன்பத்திலிருந்து, திருமண ஆசையிலிருந்து அல்லது

கருத்தியலான பாசத்திலிருந்து, உடலின் பத்திலிருந்தும் முற்றிலும் வேறுவிதமாக இருந்தது.

''அவளைப் பார்க்க வேண்டும், அவள் குரலைக் கேட்க வேண்டும், அவள் என் அருகிலிருப்பதாக உணர வேண்டும் என்னும் இன்றியமையாமையை உணர்ந்தேன். நான் ஆனந்தமடையவில்லை, ஆனால் மனநிறைவு பெற்றேன். உஸ்தென்கா வீட்டு மாலை நிகழ்ச்சியின் போது அவளுடன் மாலை நேரத்தைக் கழித்தேன், அவளைத் தொட்டேன். எனக்கும் இந்தப் பெண்ணுக்கும் கண்ணுக்குத் தெரியாத, ஆனால் பிரிக்கப்பட முடியாத பிணைப்பு இருக்கிறது, அதை எதிர்த்துப் போராட முடியாது என்று அப்பொழுது உணர்ந்தேன். ஆனால் நான் மேலும் போராடினேன். 'என்னுடைய வாழ்க்கையின் அறிவு சார்ந்த அக்கறைகளை ஒருபோதும் புரிந்துகொள்ள முடியாத இந்தப் பெண்ணை நான் காதலிக்க முடியுமா? ஒரு பெண்ணை அவளுடைய அழகுக்காக மட்டும் காதலிக்க முடியுமா? ஒரு அழகிய சிலையைக் காதலிக்க முடியுமா?' என்று என்னையே கேட்டுக்கொண்டேன். இந்தக் கேள்வியைக் கேட்டுக் கொண்ட போதிலும் என்னுடைய சொந்த உணர்ச்சியில் எனக்கு நம்பிக்கை இல்லை என்பதை மீறி அவளை நான் காதலித்தேன்.

''அவளிடம் நான் முதல் தடவையாகப் பேசிய அந்த மாலை நேர விருந்துக்குப் பிறகு எங்களுடைய உறவுகள் மாற்றமடைந்தன. இதுவரை அவள் எனக்கு வெளிப்புற இயற்கையின் விசித்திரமான, ஆனால் கம்பீரமான காட்சியாக இருந்தாள்; அந்த விருந்துக்குப் பிறகு அவள் மனிதப் பிறவியாகத் தோன்றினாள். நான் அவளை சந்திப்பதற்கு, பேசுவதற்கு, அவள் திராட்சைத் தோட்டத்தில் வேலை செய்வதைப் பார்ப்பதற்கு, மாலை நேரங்கள் முழுவதையும் அவர்களுடைய வீட்டில் கழிப்பதற்கு ஆரம்பித்தேன். இப்படி அவளுடன் நெருக்கமாகப் பழகினேன்; எனினும் அவள் இன்னும் எப்பொழுதும் போல பரிசுத்தமானவளாக, அணுக முடியாதவளாக, கம்பீரமானவளாக இருந்தாள். அவள் எப்பொழுதும் எளிமையாக, அமைதியாக, அலட்சியம் கலந்த பெருமிதத்துடன் பதிலளித்தாள். சில சமயங்களில் அவள் அன்புடன் நடந்து கொண்டாள். ஆனால் அவளுடைய ஒவ்வொரு பார்வை

யும் சொல்லும் அசைவும் அழுத்துகின்ற, மனத்தைக் கவர் கின்ற அலட்சியத்தை வெளிப்படுத்தின.

''நான் ஒவ்வொரு நாளும், உதடுகளில் செயற்கை யான சிரிப்புடன் என்னுடைய மெய்யான உணர்ச்சிகளை மறைப்பதற்குப் பாடுபட்டேன்; என்னுடைய இதயத்தில் உணர்ச்சியும் ஆசையும் கொந்தளிக்கின்ற பொழுது அவ ளுடன் அற்பமான விஷயங்களைப் பற்றிப் பேசினேன். நான் பாசாங்கு செய்வதை அவள் பார்த்தாள், ஆனால் அவள் கண்கள் சாதாரண முறையில், நேரடியாக, குதூ கலமாக என் கண்களை ஊடுருவிப் பார்த்தன. இந்த நிலைமை சகித்துக்கொள்ள முடியாததாக மாற ஆரம் பித்தது. நான் அவளிடம் நேர்மையாக நடந்துகொள்ள விரும்பினேன். நான் நினைத்த, உணர்ந்த எல்லாவற் றையும் அவளிடம் சொல்ல விரும்பினேன். அந்த திராட் சைத் தோட்டத்தில் நான் மிகவும் உணர்ச்சி வசப்பட்டு விட்டேன். நான் அவளிடம் என்னுடைய காதலைத் தெரி விக்க ஆரம்பித்தேன். நான் உபயோகித்த சொற்களை இப்பொழுது நினைத்துப் பார்த்தால் நான் வெட்க மடைகிறேன். ஆம், வெட்கமடைகிறேன். ஏனென்றால் அவள் அவ்விதமான சொற்கள், அந்த சொற்களின் மூல மாக நான் தெரிவிக்க விரும்பிய உணர்ச்சியிலிருந்து அளந்து பார்க்க முடியாத அளவுக்கு உயர்ந்து நின்றாள். நான் நிறுத்திக்கொண்டேன். அன்று முதல் என்னுடைய நிலை பரிதாபகரமாயிற்று. அவளுடன் என்னுடைய முந் திய அற்பமான உறவுகளை இன்னும் நீடிப்பதன் மூலம் என்னைத் தாழ்த்திக்கொள்ள நான் விரும்பவில்லை. எளி மையான, நேரடியான உறவுகளுக்கு நான் ஏற்றவனாக இருக்கவில்லை என்று உணர்ந்தேன்.

'' 'இனிமேல் என்ன செய்வது?' என்று மனமுறிந்து போய் என்னையே நான் கேட்டுக்கொண்டேன். என்னு டைய அசட்டுத்தனமான கனவுகளில் இந்தப் பெண்ணை ஒரு சமயத்தில் என்னுடைய காமப்பெண்ணாக, மறு சமயத்தில் என்னுடைய மனைவியாக நான் கற்பனை செய்தேன். இரண்டு கற்பனைகளுமே எனக்கு அருவருப் பைக் கொடுத்தன. அவளை என்னுடைய காமக்கிழத்தி யாக்குவது பயங்கரமானது, அது அவளைக் கொல்வதற் குச் சமம். அவளை என்னுடைய மனைவியாக்குவது,

சீமாட்டியாக்குவது—நம்முடைய அதிகாரிகளில் ஒருவர் கஸாக்குப் பெண்ணைத் திருமணம் செய்திருக்கிறார்— இன்னும் மோசமானதாகும். நான் லுக்காஷ்காவைப் போல ஒரு கஸாக்கு ஆக முடியுமானால், என்ன செய்து கொண்டிருக்கிறேன், ஏன் அப்படிச் செய்கிறேன் என் பதைப் பற்றிச் சிறிது கூட சிந்தனையில்லாமல் குதிரை களைத் திருடி, சிவப்பு ஒயினைக் குடித்து மயக்கமடைந்து, கேலிப் பாடல்களைப் பாடி, மனிதர்களைச் சுட்டுத் தள்ளி, அவள் இருக்கின்ற அறையின் சன்னல் வழியாக நுழைய முடியமென்றால், அப்பொழுது தான் நாங்கள் ஒருவரை யொருவர் புரிந்துகொள்ள முடியும், நான் மகிழ்ச்சியடைய முடியும்.

''அப்படிப்பட்ட வாழ்க்கையைப் பின்பற்றுவது என்று நான் முடிவு செய்தேன். ஆனால் என்னுடைய பலவீனத் தையும் திறமையின்மையையும் இன்னும் அதிகமாக உணர்ந்தேன். என்னால் என்னையும் என்னுடைய சிக்க லான, அருவருப்பான, தவறான கடந்தகால வாழ்க்கை யையும் மறக்க முடியவில்லை. என்னுடைய எதிர்கால மோ, இன்னும் நம்பிக்கையற்றதாகத் தோன்றியது. ஒவ் வொரு நாளும் வெகு தொலைவிலுள்ள பனிபடர்ந்த மலைகளோடு இந்த கம்பீரமான, குதூகலமான பெண்ணும் தோன்றினாள். இந்த உலகத்தில் எனக்கு எட்டமுடி யாத மகிழ்ச்சி அளிக்கக்கூடிய ஒரே பெண் எனக்குக் கிடைக்க முடியாதவளாக இருக்கிறாள்! நான் அவளைப் புரிந்துகொள்ள முடிகிறது, ஆனால் அவள் என்னை ஒரு போதும் புரிந்துகொள்ள முடியாது என்னும் எண்ணம் ஆக பயங்கரமானதாகவும் இனிமையானதாகவும் எனக்கு இருந்தது. அவள் என்னை விட அறிவில் குறைந்தவளாக இருப்பதனால் என்னைப் புரிந்துகொள்ள முடியவில்லை, நிச்சயமாக அப்படியல்ல. அவள் என்னைப் புரிந்துகொள் வது இயற்கைக்கு முரணானது. அவள் குதூகலமானவள். அவள் இயற்கையைப் போலவே அமைதியானவள், சலன மில்லாதவள், தன்னில் முழுமை உடையவள். ஆனால் அரைகுறையான, பலவீனமான பிறவியாகிய நான் என் னுடைய அவலட்சனத்தையும் வேதனையையும் அவள் புரிந்துகொள்ள வேண்டுமென்று விரும்புகிறேன்.

''என்னால் இரவுகளில் தூங்க முடியவில்லை. எந்த



நோக்கமும் இல்லாமல் அவள் சன்னலுக்குக் கீழே நின்று கொண்டிருந்தேன். ஆனால் நான் எதைத் தேடுகிறேன் என்பதை எனக்கு விளக்குவதற்கே என்னால் முடிய வில்லை.

''பதினெட்டாம் தேதியன்று என்னுடைய படைப் பிரிவு மலைப் பகுதிகளின் மீது படையெடுத்துச் சென் றது. நான் மூன்று நாட்கள் கிராமத்தைவிட்டு வெளியே சென்றிருந்தேன். என்னுடைய இதயம் கனத்திருந்தது; எல்லாமே எனக்கு ஒன்றாக இருந்தன. அதிகாரிகள் பாட் டுப் பாடுவதிலும் சீட்டாடுவதிலும் மிதமிஞ்சிக் குடிப் பதிலும் பதவி உயர்வுகளைப் பற்றி வம்பளப்பதிலும் ஈடுபட்டிருந்தார்கள். நான் முன்னெப்போதையும் காட் டிலும் அதிகமான அளவுக்கு அவற்றை வெறுத்தேன். நான் இன்று திரும்பினேன். நான் அவளை, என்னுடைய குடிசையை, யெரோஷ்கா மாமாவை, என்னுடைய வெளி வராந்தாவிலிருந்து தெரிகின்ற பனி படர்ந்த மலை களைப் பார்த்தேன். மிகவும் வலிமையான, புதுமையான பேரானந்தம் எனக்கு ஏற்பட்டது. ஏனென்றால் எல் லாமே எனக்குப் புரிந்துவிட்டது. இந்தப் பெண்ணை நான் உண்மையாகவே காதலிக்கிறேன்; என்னுடைய வாழ்க்கையில் முதல் தடவையாக, ஒரேயொரு தடவை யாகக் காதலிக்கிறேன். என்னுடைய இதயம் என்ன சொல்கிறது என்பது எனக்குத் தெரியும். இந்த உணர்ச்சி யினால் என்னைத் தாழ்த்திக் கொள்வேனோ என்று

நான் அஞ்சவில்லை. என்னுடைய காதலைப் பற்றி நான் வெட்கப்படவில்லை. அதைப் பற்றி நான் பெருமைப்படு கிறேன்.

''நான் காதல் வயப்பட்டதற்கு என்னைக் குறை சொல்ல முடியாது. என்னுடைய சித்தத்துக்கு விரோத மாக அது நடந்துவிட்டது. அதிலிருந்து ஆன்ம தியாகத் தின் மூலம் தப்புவதற்கு நான் முயற்சி செய்தேன். கஸாக்கு லுக்காஷ்கா மார்யானா மீது வைத்திருக்கின்ற காதல் எனக்கு மகிழ்ச்சியளிப்பதாக நான் கற்பனை செய்து கொண்டேன்; ஆனால் அது என்னுடைய காதலையும் பொறாமையையுமே தூண்டியது. இது முன்பு நான் அனு பவித்ததைப் போன்று கருத்தியலான, மிகவும் மேன் மையான என்று சொல்லப்படுகின்ற காதல் அல்ல. இது காதலியை நோக்கி ஈர்க்கப்படுகின்ற கவர்ச்சியும் அல்ல. அப்பொழுது உங்களுடைய அன்பின் ஊற்றை உங்களு டைய இதயத்திலேயே நீங்கள் பார்க்கிறீர்கள். எல்லாமே உங்களுடைய கட்டுப்பாட்டில் இருக்கிறது. இதையும் கூட நான் அனுபவித்திருக்கிறேன். அது புலனுணர்வு மகிழ்ச்சிக்கான ஆர்வம் அல்ல. அது முற்றிலும் வேறுவித மான ஏதோ ஒன்று.

''ஒருவேளை நான் அவளிடத்தில் இயற்கையை, இயற்கையின் அழகுமிக்க எல்லாவற்றின் உருவகத்தைக் காதலிக்கிறேன். ஆனால் நான் என்னுடைய மன உறுதி யை இழந்து விட்டேன். இயற்கைச் சக்தி, கடவுள் படைத்த இந்தப் பிரபஞ்சம் அவள் மீது கொண்டிருக் கின்ற காதலின் கருவியாகிவிட்டேன். இயற்கை இந்தக் காதலை என்னுடைய ஆன்மாவில் விதைக்கிறது, 'காதல் செய்' என்று என்னைப் பணிக்கிறது. நான் அவளை என் னுடைய அறிவினால், என்னுடைய கற்பனையினால் காதலிக்கவில்லை; என்னுடைய மொத்த ஜீவனாலும் காதலிக்கிறேன். அவளைக் காதலிப்பதன் மூலம் கடவுள் படைத்த இன்பமயமான உலகத்தின் பிரிக்க முடியாத பகுதியாக என்னை உணர்கிறேன்.

''என்னுடைய புதிய நம்பிக்கைகளைப் பற்றி முன் னர் உங்களுக்கு எழுதினேன். அவை என்னுடைய தனி மையான வாழ்க்கையின் விளைவு; ஆனால் எவ்வளவு கஷ் டத்துடன் அவற்றைத் தயாரித்தேன், எவ்வளவு மகிழ்ச்சி

யுடன் அவற்றுக்கு அடிபணிந்தேன், எனக்கு முன்னால் தோன்றிய புதிய வாழ்க்கைப் பாதையை அங்கீகரித்தேன் என்பதை யாரும் அறிய முடியாது. எனக்கு இந்த நம்பிக்கைகளைக் காட்டிலும் நெருக்கமானவை வேறு இருந்திருக்க முடியாது... சரி... காதல் வந்தது. அந்த நம்பிக்கைகள் எங்கே? அவற்றைப் பற்றிய விசாரங்கள் கூட இப்பொழுது என்னிடம் இல்லை. அப்படிப்பட்ட ஒரு தரப்பான, அறிவுபூர்வமான மனோ நிலையை நான் மதிக்க முடிந்தது என்பதைப் புரிந்து கொள்வது கூட இப்பொழுது கடினமாக இருக்கிறது. அழகு எனக்கு முன்னால் வந்தது. நான் அரும்பாடுபட்டுக் கட்டிய மாளிகை நொறுங்கி விழுந்தது. என்னுடைய ஏமாற்றத்தைப் பற்றி நான் வருந்தவில்லை! சுயமறுப்பு என்பது குப்பை, முட்டாள்தனம். அது முற்றிலும் அகந்தை, நியாயமாக அனுபவிக்க வேண்டிய துன்பத்திலிருந்து புகலிடம் தேடுதல், அடுத்தவருடைய மகிழ்ச்சியைப் பற்றிப் பொறாமைப்படுவதிலிருந்து மீட்சியடைதல். மற்றவர்களுக்காக வாழ வேண்டும்! நன்மை செய்ய வேண்டும்! ஏன்? என்னுடைய ஆன்மாவில் என் மீது அன்பும் அவளைக் காதலிக்க வேண்டும், அவளுடன் வசிக்க வேண்டும், அவளுடைய வாழ்க்கையை வாழ வேண்டும் என்னும் ஒரே விருப்பமும் நிறைந்திருக்கின்ற பொழுதா? நான் தற்பொழுது மகிழ்ச்சியை நாடுவது மற்றவர்களுக்காக அல்ல, லுக்காஷ்காவுக்காக அல்ல. நான் தற்பொழுது இந்த மற்றவர்களை நேசிக்கவில்லை. இது தவறானது என்று நானே முன்னர் கூறியிருக்க முடியும். அவளுக்கு என்ன ஆகும், எனக்கு, லுக்காஷ்காவுக்கு என்ன ஏற்படும் என்ற கேள்விகளைக் கேட்டு என்னைச் சித்திரவதை செய்து கொண்டிருப்பேன். இப்பொழுது அது எனக்கு முக்கியமல்ல. நான் என்னுடைய சுயபலத்தில் வாழவில்லை. என்னைக் காட்டிலும் வலிமையான சக்தி என்னை இயக்குகிறது. நான் சித்திரவதை செய்யப்படுகிறேன். ஆனால் முன்னர் நான் செத்தவனாக இருந்தேன், இப்பொழுது நான் உயிரோடிருக்கிறேன். இன்று நான் அவளை சந்திக்கப் போகிறேன், அவளிடம் எல்லாவற்றையும் கூறுவேன்.''

## 34

ஒலேனின் இந்தக் கடிதத்தை எழுதி முடித்த பிறகு இரவு நேரமாகிவிட்ட போதிலும் மார்யானாவின் பெற்றோர்களுடைய வீட்டுக்குச் சென்றான். கிழவி கணப்புக்குப் பின்னாலிருந்த பெஞ்சில் உட்கார்ந்துகொண்டு பட்டுப் பூச்சிகூடுகளை நூற்றுக் கொண்டிருந்தாள். மார்யானா தலையை மூடிக்கொள்ளாமல் மெழுகுவத்தியின் வெளிச்சத்தில் தைத்துக் கொண்டிருந்தாள். அவள் ஒலேனினைப் பார்த்ததும் எழுந்து தலைத் துணியை எடுத்துக்கொண்டு கணப்புக்குப் பக்கத்தில் சென்றாள்.

''மார்யானா, இங்கேயே உட்கார்'' என்றாள் உலீத்கா பாட்டி.

''இல்லை. நான் தலைத் துணியைக் கட்டவில்லை.''

அவள் கணப்பின் மீது ஏறி உட்கார்ந்தாள்.

ஒலேனினால் அவளுடைய முழங்காலையும் கீழே தொங்கிக் கொண்டிருந்த அழகான காலையும் பார்க்காதிருக்க முடியவில்லை. அவன் உலீத்கா பாட்டிக்குத் தேநீர் அளித்தான். அவள் அவனுக்குப் பதில் மரியாதையாகத் தயிரைத் தர எண்ணி அதை எடுத்துவருமாறு மார்யானாவை அனுப்பினாள். அவள் குவளையை மேசை மீது வைத்துவிட்டு மறுபடியும் கணப்பின் மீது ஏறி உட்கார்ந்தாள். ஒலேனின் அவளுடைய கண்களை மட்டுமே உணர்ந்தான். அவர்கள் பண்ணை நிர்வாகத்தைப் பற்றிப் பேசினார்கள். பாட்டி உலீத்கா அவனை உற்சாகத்துடன் வரவேற்றவாறு இருந்தாள். அவள் ஒலேனினுக்கு திராட்சை ஊறுகாய், திராட்சை கேக்குகள், மிகச் சிறந்த முறையில் தானே தயாரித்த ஒயின் ஆகியவற்றைக் கொண்டுவந்தாள். கடுமையாகப் பாடுபட்டு வாழ்க்கை நடத்துகின்ற சாதாரண மக்களுக்கே உரித்தான கண்டிப்பும் பெருமையும் கலந்த உபசரிப்புடன் அவன் அவற்றைச் சாப்பிட வேண்டும் என்று வற்புறுத்தினாள். முதலில் தன்னுடைய முரட்டுத்தனத்தினால் ஒலேனினை மிகவும் பயமுறுத்திய அந்தக் கிழவி தன்னுடைய மகளிடம் நேர்மையான பாசத்துடன் நடந்துகொள்வது இப்பொழுது அவனை அடிக்கடி நெகிழ வைத்தது.

''கடவுள் கொடுத்ததுதான் நமக்குக் கிடைக்கும். கடவுள் புண்ணியத்தினால் எங்களிடம் எல்லாமே இருக்கிறது. ஒயின் தயாரித்து திராட்சையை ஊறப்போட்டிருக்கிறோம். மூன்று பீப்பாய்களை விற்பனை செய்தாலும் குடிப்பதற்குப் போதுமானது எங்களிடம் இருக்கும். அதற்குள் புறப்பட வேண்டாம். சீக்கிரமே மார்யானாவின் திருமண விழாவைச் சிறப்பாக நடத்துவோம்.''

''கல்யாணம் எப்பொழுது வைத்திருக்கிறீர்கள்?'' என்று ஒலேனின் கேட்டான். அவன் உடலிலிருந்த இரத்தம் முழுவதும் முகத்திலேறியதை உணர்ந்தான். அவன் இருதயம் முறைப்படியாக இல்லாமலும் வேதனை தருகின்ற முறையிலும் துடித்தது.

கணப்பின் மீதிருந்து சலசலப்பும் விதைகளைக் கொறிக்கின்ற சத்தமும் கேட்டன.

''இன்னும் எதற்காகத் தள்ளிப்போட வேண்டும்? அடுத்த வாரம் நடத்தினால் சிறப்பாக இருக்கும். நாங்கள் தயார்'' என்று அந்தக் கிழவி சாதாரணமாகவும் அமைதியாகவும் ஒலேனின் என்னும் நபர் உலகத்தில் இல்லாததைப் போலவும் பதிலளித்தாள். ''மார்யானாவுக்கு கொடுப்பதற்கு எல்லா சாமான்களும் தயாராக வைத்திருக்கிறேன். அவளை நல்ல முறையில் அனுப்பி வைப்போம். ஒரு விஷயம்தான் எனக்கு இன்னும் முழுத் திருப்தி ஏற்படவில்லை. லுக்காஷ்கா சமீப காலமாகவே மிகவும் கட்டுப்பாடில்லாமல் இருக்கிறான். எப்பொழுதும் குடிக்கிறான். சேட்டைகள் வேறு. அன்றைக்கு அவனது படைப்பிரிவைச் சேர்ந்த ஓர் ஆள் வந்தான். லுக்காஷ்கா நொகாய்ப் பிரதேசத்துக்குப் போயிருப்பதாக அவன் சொன்னான்.''

''அங்கே அவன் ஜாக்கிரதையாக நடந்துகொள்ள வேண்டும்'' என்றான் ஒலேனின்.

'' 'லுக்காஷ்கா, ஆபத்துகளில் தலையிடாதே! நீ இளைஞன். எல்லோரும் உன்னை மெச்ச வேண்டும் என்று நீ விரும்புகிறாய். ஆனால் எதற்கும் ஓர் எல்லை உண்டு. நீ சண்டை போட்டிருக்கிறாய், ஒரு அப்ரேக்கைக் கொன்றிருக்கிறாய், நீ ஒரு ஜிகித். ஆனால் இப்பொழுது நிதானமாக நடந்து கொள்ள வேண்டும்' என்று நான் அவ

னிடம் சொல்கிறேன். ஆனால் அவன் மிகவும் மோசமாக நடந்துகொள்கிறான்.''

''ஆம். அவனைப் படைப்பிரிவில் இரண்டு தடவை பார்த்தேன். எப்பொழுதும் குடித்துக்கொண்டே இருக்கிறான். இப்பொழுது இன்னொரு குதிரையை விற்பனை செய்திருக்கிறான்'' என்று ஒலேனின் கணப்பைப் பார்த்துக்கொண்டு கூறினான்.

இரண்டு நீளமான, கறுப்பு நிறக் கண்கள் அவனைக் கடுமையாக, நட்புணர்ச்சி இல்லாமல் பார்த்தன. அவன் தன்னுடைய பேச்சைப் பற்றி வெட்கப்படுவதற்கு ஆரம்பித்தான்.

''சரி. அவன் எவருக்கும் எந்தத் தீமையும் ஒரு போதும் செய்யவில்லையே'' என்று மார்யானா திடீரென்று பேசினாள். ''அவன் சொந்தப் பணத்தில்தானே குடிக்கிறான், குடித்து விட்டுப் போகட்டுமே'' என்று சொல்லிவிட்டு கணப்பிலிருந்து கீழே குதித்துக் கதவைப் படீரென்று சாத்திக்கொண்டு வெளியே சென்றாள்.

ஒலேனின் அவளது செயல்களைப் பார்த்தான். அவள் வெளியே போன பிறகு கதவைப் பார்த்தபடியே சிறிது நேரம் பேசாமல் இருந்தான். அவன் பாட்டி உலீத்காவின் பேச்சையும் கவனிக்கவில்லை. சிறிது நேரத்துக்குப் பிறகு சில விருந்தினர்கள், பாட்டி உலீத்காவின் சகோதரனான ஒரு கிழவர், யெரோஷ்கா மாமா, அவர்களுக்குப் பின்னால் மார்யானாவும் உஸ்தென்காவும் வந்தார்கள்.

''நலமாக இருக்கிறீர்களா? எப்பொழுதுமே உல்லாசமும் கொண்டாட்டமும் தானா?'' என்று உஸ்தென்கா ஒலேனினிடம் கேட்டாள்.

''ஆமாம். எப்பொழுதும் உல்லாசம் தான்'' என்று அவன் பதிலளித்தான். ஆனால் என்ன காரணத்தினாலோ சங்கடத்தையும் வெட்கப்படுவதையும் உணர்ந்தான்.

அவன் அங்கிருந்து எழுந்து போக விரும்பினான், ஆனால் அவனால் முடியவில்லை. அங்கே உட்கார்ந்து கொண்டு ஒன்றும் பேசாமலிருப்பதும் அவனுக்கு இயலாததாகத் தோன்றியது. அந்தக் கிழவர் அவனுக்கு உதவி செய்கின்ற முறையில் தன்னுடன் மதுவருந்தக் கூப்பிட்டார். அவர்கள் மதுவருந்தினார்கள். ஒலேனின் யெரோஷ்கா மாமாவுடனும் அதன் பிறகு அந்த வயதான கஸாக்

குடனும் மறுபடியும் யெரோஷ்கா மாமாவுடனும் மது வருந்தினான். அவன் எவ்வளவு அதிகமாகக் குடித்தானோ, அவ்வளவு அவனுடைய இதயம் கனத்தது. ஆனால் அந்தக் கிழவர்கள் உற்சாகத்துடன் குடித்துக் கொண்டிருந்தார்கள். இரண்டு பெண்களும் கணப்பின் மேல் ஏறி உட்கார்ந்து கொண்டு அவர்கள் குடிப்பதைப் பார்த்தவாறு குசுகுசுவெனப் பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் மாலை நேரம் வரை குடித்துக் கொண்டிருந்தார்கள். ஒலேனின் பேசவில்லை; ஆனால் மற்ற எல்லோரையும் காட்டிலும் மிகவும் அதிகமாகக் குடித்தான். அந்த இரண்டு கஸாக்குக் கிழவர்கள் கூச்சலிடத் தொடங்கினார்கள். பாட்டி உலீத்கா அவர்களை விரட்டினாள்; இனிமேல் அவர்கள் குடிப்பதற்கு சிவப்பு ஒயின் தர மாட்டேன் என்றாள். பெண்கள் யெரோஷ்கா மாமாவைப் பார்த்துச் சிரித்தார்கள். அவர்கள் எல்லோரும் வெளி வராந்தாவுக்குச் சென்றபொழுது ஏற்கெனவே பத்து மணியாகியிருந்து. கஸாக்குக் கிழவர்கள் ஒலேனினுடைய வீட்டிற்குக் குடிப்பதற்கு அழையாமலே வந்தார்கள். உஸ்தென்கா வீட்டுக்குப் புறப்பட்டுப் போனாள். யெரோஷ்காவும் பாட்டி உலீத்காவின் சகோதரனும் வன்யூஷாவைத் தேடிச் சென்றார்கள். கொட்டகையைப் பெருக்குவதற்காகப் பாட்டி உலீத்கா சென்று மறைந்துவிட்டாள். மார்யானா அறையில் தனியே இருந்தாள்.

ஒலேனின் அப்பொழுது தான் தூங்கியெழுந்ததைப் போல புத்துணர்வையும் ஆரோக்கியத்தையும் உணர்ந்தான். அவன் எல்லாவற்றையும் கவனித்தான். அந்தக் கிழவர்களிடமிருந்து தப்பி பாட்டி உலீத்காவின் வீட்டுக்குச் சென்றான். மார்யானா படுக்கையில் உட்கார்ந்திருந்தாள். அவன் அவளருகில் சென்று ஏதோ சொல்வதற்கு முயற்சி செய்தான்; ஆனால் அவனால் பேச முடியவில்லை. மார்யானா அவனிடமிருந்து இயன்ற அளவுக்கு தள்ளிப் படுக்கையில் கால்களை மடக்கிக்கொண்டு உட்கார்ந்தாள். அவள் கலவரத்துடன், பீதியுடன் அவனைப் பார்த்துக் கொண்டு மௌனமாக உட்கார்ந்திருந்தாள். அவள் அவனைக் கண்டு மிகவும் பயந்தது போலத் தெரிந்தது. ஒலேனின் அதை உணர்ந்தான். அவன் தன்னைப் பற்றி அருவருப்பும் வெட்கமும் அடைந்தான். அதே சம

யத்தில் அவளிடம் இந்த உணர்ச்சியை மட்டுமாவது தூண்டியதற்கு ஒருவகையில் பெருமையும் திருப்தியும் அடைந்தான்.

''மார்யானா! நீ என்மேல் ஒருபோதும் இரக்கப்படமாட்டாயா? நான் எந்த அளவுக்கு உன்னைக் காதலிக்கிறேன் என்பது உனக்குத் தெரியாது.''

மார்யானா படுக்கையில் சற்றுத் தள்ளி உட்கார்ந்தாள்.

''நீங்கள் பேசவில்லை. நீங்கள் குடித்திருக்கும் ஒயின் பேசுகிறது. நீங்கள் என்னிடம் எதையும் எதிர்பார்க்க வேண்டாம்.''

''ஒயின் பேசவில்லை. நீ லுக்காஷ்காவை மறந்துவிடு. நான் உன்னைக் கல்யாணம் செய்து கொள்கிறேன்'' என்றான். ''நான் என்ன சொன்னேன்? நாளைக்கு இதே வார்த்தைகளைச் சொல்வேனா?'' என்று அந்த வார்த்தைகளைப் பேசிய அதே சமயத்தில் ஒலேனின் தன்னையே கேட்டுக் கொண்டான். ''ஆம், நாளைக்குச் சொல்வேன், நிச்சயமாக இதையே சொல்வேன். இப்பொழுது கூடத் திரும்பச் சொல்வேன்'' என்று மனத்திற்குள் ஒரு குரல் பதிலளிப்பதாகத் தோன்றியது.

''நீ என்னை மணந்து கொள்வாயா?''

அவள் அவனை அக்கறையுடன் பார்த்தாள். அவளுடைய அச்சம் அவளை விட்டுப் பிரிவதைப் போலத் தோன்றியது.

''மார்யானா! எனக்குப் பைத்தியம் பிடிக்கிறது. என்னால் தாங்க முடியவில்லை! என்னைக் கட்டுப்படுத்துகின்ற சக்தி எனக்கு இல்லை. நீ என்ன சொன்னாலும் நான் அதை நிறைவேற்றுவேன்.'' தெளிவில்லாத, பாசமான காதற் சொற்கள் தாமாகவே அருவியைப் போலப் பிரவாகமெடுத்தன.

''நிறுத்துங்கள்! இது என்ன உளறல்!'' என்று அவள் குறுக்கிட்டுக் கூறினாள். அவளை நோக்கி அவன் நீட்டிய கையைத் திடீரென்று பிடித்துக் கொண்டாள். ஆனால் அவள் அவன் கையைத் தள்ளவில்லை. அதற்கு மாறாக, அதைத் தன்னுடைய வலிமையான, கெட்டியான விரல்களுக்கு இடையில் வைத்து உறுதியாக அழுத்தினாள்.

''பிரபுக்கள் கஸாக்குப் பெண்களைக் கல்யாணம் செய்து கொள்வார்களா? போய்விடுங்கள்!''

''நீ என்னை மணம் செய்துகொள்வாயா? நான் எப் பொழுதும்...''

''அப்படியானால் லுக்காஷ்காவை என்ன செய்வது?'' என்று அவள் புன்சிரிப்புடன் கேட்டாள்.

அவள் இன்னும் பிடித்துக் கொண்டிருந்த கரத்தை அவன் பறித்துக் கொண்டான், அவளுடைய இளம் உடலை இறுகத் தழுவினான். ஆனால் அவள் அவன் கரங்களிலிருந்து மானைப் போலத் துள்ளிக் கீழே குதித் தாள், வெறுங்காலுடன் வெளி வராந்தாவுக்கு ஓடினாள். ஒலேனினுக்கு உணர்வு ஏற்பட்டது. தன்னைப் பற்றி அவன் அருவருப்படைந்தான். அவளுடன் ஒப்பிடுகின்ற பொழுது தான் சொல்ல முடியாத அளவுக்கு மட்ட மானவன் என்று மறுபடியும் அவனுக்குத் தோன்றியது. ஆனால் மார்யானாவிடம் தன்னுடைய காதலை வெளி யிட்டதைப் பற்றிக் கண நேரம் வருத்தப்படாமல் அவன் தன்னுடைய வீட்டுக்குத் திரும்பினான். அங்கே அந்த கஸாக்குக் கிழவர்கள் குடித்துக் கொண்டிருப்பதைப் பார்க்காமல் படுக்கையின் மீது விழுந்தான். கடந்த பல இரவுகளில் இல்லாதபடி ஆழ்ந்த அமைதியுடன் தூங்கி னான்.

## 35

மறுநாள் திருவிழா நாள். பிற்பகலில் கிராம மக்கள் எல்லோரும் தெருவில் நடமாடிக் கொண்டிருந்தார்கள்; அவர்கள் திருவிழாவை முன்னிட்டு அணிந்திருந்த புத் தாடைகள் மாலைச் சூரியனின் பிரகாசமான கதிர்களில் எடுப்பாகத் தெரிந்தன. அந்த ஆண்டில் வழக்கத்தைக் காட்டிலும் அதிகமாக ஒயின் பிழியப்பட்டிருந்தது. கிராம மக்களின் உழைப்பு முடிந்துவிட்டது. இன்னும் ஒரு மாத காலத்தில் கஸாக்குகள் படையெடுப்புக்குப் புறப்பட்டு விடுவார்கள்; இதற்கிடையில் பல குடும்பங்கள் திரு மணங்களைக் கொண்டாடுவதற்குத் தயாராகிக் கொண் டிருந்தன.

கிராமச் சதுக்கத்தில், கிராம மன்றத்திற்கும் இரண்டு கடைகளுக்கும் முன்னால் ஏராளமான மக்கள் குழுமி

யிருந்தார்கள். ஒரு கடையில் இனிப்புப் பண்டங்களும் பூசணி விதைகளும் விற்கப்பட்டன; அடுத்த கடையில் துணிகள் விற்பனை செய்யப்பட்டன. கிராம மன்றத்தின் திண்ணையில் ஜரிகை வைத்துத் தைக்கப்படாத, சாம்பல் நிறத்திலும் கறுப்பு நிறத்திலும் மேல்கோட்டுகள் அணிந்த கிழவர்கள் உட்கார்ந்து கொண்டும் நின்று கொண்டும் இருந்தார்கள். அவர்கள் நிதானமாக, அளவான குரல்களில் விளைச்சலைப் பற்றி, 'பசங்களை'ப் பற்றி, கிராம விவகாரங்கள் மற்றும் பழைய காலத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள்; இளைய தலைமுறையினரை கம்பீரமாகவும் அலட்சியமாகவும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். கிராமப் பெண்களும் இளம்பெண்களும் அவர்களைக் கடந்து போகின்றபொழுது தயங்கி தலைகளைக் குனிந்துகொண்டார்கள். இளம் கஸாக்குகள் அங்கே வந்தவுடன் மரியாதையாக, மெதுவாக நடந்தார்கள், தங்களுடைய தொப்பிகளைக் கையிலெடுத்துத் தலைகளுக்கு மேலே தூக்கினார்கள். முதியவர்கள் பேச்சை நிறுத்திக்கொண்டு சிலர் கடுமையாகவும் சிலர் பிரியமாகவும் நடந்து போய்க் கொண்டிருந்தவர்களைப் பார்த்து, தொப்பிகளை மெதுவாகத் தூக்கி மறுபடியும் அணிந்துகொண்டார்கள்.

கஸாக்கு இளம்பெண்கள் எல்லோரும் எதிர்பார்த்துக் கொண்டிருந்த கும்மி ஆட்டத்தை இன்னும் ஆரம்பிக்கவில்லை. அவர்கள் பல நிறங்களில் மேலங்கிகள் அணிந்துகொண்டு, தலையில் வெள்ளை நிறத் துணிகளைக் கட்டிக்கொண்டு கூட்டம் கூட்டமாகப் புல்தரையிலும் திண்ணைகளிலும் சூரியனுடைய சாய்வான கதிர்கள் மேலே விழாதபடி உட்கார்ந்திருந்தார்கள். அவர்கள் சிரித்துக்கொண்டும் கிண்டலான குரல்களில் அரட்டையடித்துக் கொண்டும் இருந்தார்கள்.

சிறுவர்களும் சிறுமிகளும் லாப்டா என்ற விளையாட்டில் ஈடுபட்டு இருந்தார்கள். அவர்கள் மேகமில்லாத வானத்தில் பந்தை உயரமாகத் தூக்கியெறிந்து கூச்சலும் கூக்குரலுமாக அந்தச் சதுக்கத்தில் ஓடி விளையாடிக் கொண்டிருந்தார்கள். சதுக்கத்தின் ஒரு மூலையில் பதிமூன்று, பதினான்கு வயதான சிறுமிகள் கும்மியாட்டத்தைத் தொடங்கிக்கொண்டும் உறுதியற்ற, கிறீச்சென்ற

குரல்களில் பாடல்களைப் பாடிக் கொண்டுமிருந்தார்கள். கஸாக்கு எழுத்தர்களும் படையிலிருந்து திருவிழாவுக்கு விடுமுறை பெற்று வந்த இளைஞர்களும் ஜரிகை வைத்துத் தைக்கப்பட்ட வெள்ளை மற்றும் சிவப்பு நிறங்களிலான புது மேல்கோட்டுகளை அணிந்து ஆனந்தம் பிரகாசிக்கின்ற முகங்களுடன் சுற்றிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் இரண்டு, மூன்று பேர்களடங்கிய குழுக்களாகக் கைகோர்த்துக் கொண்டு பெண்களும் இளம்பெண்களும் அடங்கிய ஒரு கோஷ்டியிலிருந்து மற்றொரு கோஷ்டிக்குப் போவதும் அங்கே சிறிது நேரம் இருப்பதும் அவர்களுடன் வேடிக்கையாகப் பேசிப் பொழுது போக்குவதுமாக இருந்தார்கள்.

அர்மீனியக் கடைக்காரர் அருமையான துணியில் ஜரிகை வைத்துத் தைக்கப்பட்ட நீல நிற மேல்கோட் அணிந்து கொண்டு தன்னுடைய கடையின் திறந்திருந்த கதவுக்குப் பக்கத்தில் நின்று கொண்டிருந்தார். அங்கே பிரகாசமான பல நிறங்களில் துணிகள் வரிசையாக வைக்கப்பட்டிருந்தன. அந்த வர்த்தகர் கீழ்த்திசை வர்த்தகருடைய பெருமிதமான தோற்றத்துடனும் தன்னுடைய முக்கியத்துவத்தைப் பற்றிய உணர்ச்சியுடனும் கடைக்கு வருபவர்களை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்தார். அந்தத் திருவிழாவைப் பார்ப்பதற்கு தேரெக்கின் அக்கரையிலிருந்து இரண்டு செச்சென்கள் வந்திருந்தார்கள். அவர்கள் சிவப்பு நிற தாடிகளும் வெறுங்கால்களுமாகத் தங்களுடைய நண்பரின் வீட்டு வாயிலில் உட்கார்ந்திருந்தார்கள். அவர்கள் அலட்சியமாக சிறு புகைக் குழாய்களில் புகை பிடித்துக்கொண்டு எச்சிலைத் துப்பிக்கொண்டு, கஸாக்குகளைக் கவனித்தபடி சொற்களைப் பரிமாறிக் கொண்டிருந்தார்கள். சதுக்கத்தின் குறுக்கே அங்குமிங்கும் திருவிழா உடையணியாத ஒரு படைவீரன் தன்னுடைய பழைய மேல்கோட்டில், பிரகாசமான வர்ண உடைகளணிந்த கோஷ்டிகளுக்கு மத்தியில் சில சமயங்களில் செல்வான்.

குடிமயக்கத்திலிருந்த கஸாக்குகளின் பாட்டுக்கள் ஏற்கெனவே சில இடங்களில் கேட்கத் தொடங்கியிருந்தன. எல்லாக் குடிசைகளும் மூடப்பட்டிருந்தன, வீட்டு வெளி வராந்தாக்கள் முந்திய நாள் மாலையிலேயே சுத்தமாகத்

கழுவப்பட்டிருந்தன. கிழவிகள் கூட வெளியேதான் இருந்தார்கள். காய்ந்த, தூசி நிறைந்த தெருக்களில் முலாம் பழ மற்றும் பூசணி விதைகளின் மேல் ஓடுகள் சிதறிக் கிடந்தன. காற்று வெதுவெதுப்பாகவும் அமைதியாகவும் இருந்தது. மேகங்கள் இல்லாத வானம் நீல நிறத்தில் ஊடுருவிப் பார்க்கக் கூடியதாக இருந்தது. கூரைகளுக்கு மேலே தெரிந்த மலைகளின் மங்கலான, வெள்ளை நிறச் சிகரங்கள் கைக்கெட்டிய தூரத்தில் இருப்பதைப் போலத் தோன்றின, அவை அஸ்தமன சூரியனின் கதிர்கள் பட்டு இளஞ்சிவப்பாக மாறிக் கொண்டிருந்தன. ஆற்றின் எதிர்த்திசையில் தொலைவிலிருந்து பீரங்கியின் வேட்டுச் சத்தம் எப்பொழுதாவது எதிரொலித்தது. ஆனால் கிராமத்தில் ஒரு குதூகலமான திருவிழாவின் பல்விதமான ஓசைகள் ஒன்று சேர்ந்திருக்கின்ற சத்தம் மட்டுமே கேட்டது.

ஒலேனின் மார்யானாவைப் பார்க்க முடியும் என்ற நம்பிக்கையில் காலை முழுவதும் சுற்றுவட்டகையில் நடந்து கொண்டிருந்தான். ஆனால் அவள் புத்தாடையணிந்து தொழுகைக்காக மாதாகோயிலுக்குப் போயிருந்தாள். அதற்குப் பிறகு மற்ற இளம் பெண்களுடன் சேர்ந்து திண்ணையில் உட்கார்ந்து விதைகளைக் கொறித்துக் கொண்டிருந்த பிறகு தன்னுடைய தோழிகள் சிலருடன் வீட்டுக்குத் திரும்பினாள். அப்பொழுது ஒலேனினை மகிழ்ச்சியாகவும் பிரியமாகவும் பார்த்தாள். அவளிடம் கேலியாகப் பேசுவதற்கு, குறிப்பாக மற்ற பெண்களுக்கு முன்னால் பேசுவதற்கு ஒலேனின் அஞ்சினான். அவன் முந்திய நாள் இரவில் நடைபெற்ற சம்பவத்தைப் பற்றி அவளுடன் பேச விரும்பினான், அவளுடைய முடிவான பதிலைத் தெரிந்துகொள்ள விரும்பினான். முந்திய நாளிரவில் அவனுக்குக் கிடைத்ததைப் போல இன்னொரு தருணம் கிடைக்குமென்று காத்திருந்தான். ஆனால் அந்தத் தருணம் வரவில்லை. இப்படி நிச்சயமற்ற நிலையில் இருப்பதை அவனால் தாங்கிக்கொள்ள முடியாது என்று கருதினான். மார்யானா மறுபடியும் தெருவுக்குச் சென்றாள். சிறிது நேரத்துக்குப் பிறகு அவன் அவளைப் பின்தொடர்ந்தான். எங்கே போய்க் கொண்டிருக்கிறான் என்பது அவனுக்குத் தெரியாது. அவள் நீல நிற ஸாடின்



மேலங்கி அணிந்து உட்கார்ந்து கொண்டிருந்த தெரு மூலையைக் கடந்தான். பின்னால் அவள் சிரிப்பதைக் கேட்டபொழுது அவன் இதயம் வேதனையினால் நிறைந் தது. பெலேத்ஸ்கியின் வீடு அந்தச் சதுக்கத்தில் இருந்தது. ஒலேனின் அந்த வழியாகப் போனபொழுது பெருமகன் அவனை உள்ளே வருமாறு கூப்பிடுவதைக் கேட்டான். அவன் வீட்டிற்குள் சென்றான்.

அவர்கள் இருவரும் சன்னலுக்கு அருகில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். சிறிது நேரத்தில் புதிய கோட் அணிந்திருந்த யெரோஷ்கா மாமா உள்ளே வந் தார். அவர் அவர்களுக்குப் பக்கத்தில் தளத்தின் மீது உட்கார்ந்தார்.

''அது பணக்காரக் கும்பல்'' என்று பெலேத்ஸ்கி வர்ண உடைகளணிந்த ஒரு கோஷ்டியைத் தன்னுடைய சிகரெட்டினால் சுட்டிக்காட்டிக் கொண்டு சிரித்தபடியே கூறினார். ''அதோ! என்னுடைய காதலி! உங்களுக்குத் தெரிகிறதா? சிவப்பு நிற மேலங்கி. புதிய உடை. நீங்கள் நடனமாடப் போகிறீர்களா?'' என்று அந்த இளைஞர் வெளியே தலையை நீட்டிக் கத்தினார். ''இருட்டுகின்ற வரை பொறுத்திருங்கள். பிறகு நாம் அவர்களுடன் சேர்ந்துகொள்வோம். பிறகு நாம் அவர்களை உஸ்தென் காவின் வீட்டுக்குக் கூட்டிப் போவோம். நாம் அவர் களுக்கு விருந்தளிக்க வேண்டும்.''

''உஸ்தென்காவின் வீட்டுக்கு நானும் வருகிறேன்'' என்று ஒலேனின் உறுதியாகக் கூறினான். ''மார்யானா வும் அங்கே இருப்பாளா?''

''நிச்சயமாக இருப்பாள். நீங்கள் அவசியம் வரவேண் டும்!'' என்று பெலேத்ஸ்கி சிறிதும் வியப்படையாமல் கூறினார். ''ஓவியத்தைப் போல அழகாக இருக்கிறதல் லவா?'' என்று அவர் பலநிற உடைகளணிந்த பெண் களைச் சுட்டிக்காட்டிக் கொண்டு கேட்டார்.

''ஆமாம், மிகவும் அழகாக இருக்கிறது'' என்று தன் னுடைய படபடப்பை அடக்கிக்கொண்டு ஒலேனின் கூறி னான். ''இப்படிப்பட்ட விழாக்களில் ஒரு விஷயம் எனக்கு எப்பொழுதுமே ஆச்சரியமாக இருக்கிறது. ஒரு மாதத் தில் குறிப்பிட்ட நாளன்று, உதாரணமாக, இன்றைய தினத்தைப் போல பதினைந்தாம் தேதியன்று, எல்லா மக்களுக்கும் திடீரென்று குதூகலமும் மனநிறைவும் ஏற் படுவது எப்படி? இன்றைக்குத் திருவிழா என்று ஒவ் வொன்றுமே—கண்கள், முகங்கள், குரல்கள், செயல்கள், உடைகள் மற்றும் காற்றும் சூரியனும்—பேசுகிறதே. ஆனால் எங்களுக்கு எந்த விழா இருக்கிறது?''

''ஆமாம்'' என்றார் பெலேத்ஸ்கி. அவருக்கு இப் படிப்பட்ட தத்துவார்த்தமான விஷயங்களைப் பிடிக் காது. ''கிழவரே, நீங்கள் குடிக்கலாமே'' என்று யெ ரோஷ்காவைப் பார்த்துக்கொண்டு கூறினார்.

யெரோஷ்கா ஒலேனினைப் பார்த்துக் கண்ணைச் சிமிட்டி பெலேத்ஸ்கியைச் சுட்டிக்காட்டினார்.

''உன்னுடைய நண்பர் மிகவும் கௌரவமானவர்.''

பெலேத்ஸ்கி தன்னுடைய டம்ளரை உயர்த்தினார். ''கடவுள் அருளினால்!'' என்று சொல்லிவிட்டு டம்ளரி லிருந்து மதுவை மடக்கென்று குடித்தார்.

''உங்கள் நலத்துக்காக'' என்று யெரோஷ்கா மாமா சிரித்துக்கொண்டு சொல்லிவிட்டு டம்ளரைக் காலி செய் தார்.

''இதைத் திருவிழா என்று நீ சொல்கிறாயா?'' என்று அவர் எழுந்து நின்று சன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டு ஒலேனினிடம் கூறினார். ''இதைத் திருவிழா என்று சொல்லலாமா? பழைய காலத்தில் எப்படி திரு விழாக் கொண்டாடினார்கள் என்பதை நீ பார்த்திருக்க

வேண்டும்! பெண்கள் ஜரிகை வைத்துத் தைக்கப்பட்ட ஸராஃபான்களை அணிந்து வருவார்கள். தங்க நாண யங்களைச் சங்கிலியாகக் கோர்த்து இரண்டு வடமாக மார்பில் அணிந்திருப்பார்கள். தலையில் தங்க நூலுடன் அழகு செய்யப்பட்ட தொப்பிகளை அணிந்திருப்பார்கள். அவர்கள் நடந்து போகும் பொழுது 'பர், பர்' என்று ஓசை கேட்கும். ஒவ்வொரு பெண்ணும் ஒரு இளவரசியைப் போல இருப்பாள். அவர்கள் பாட்டுப் பாடிக்கொண்டு கூட்டம் கூட்டமாக வருவார்கள். எங்கு பார்த்தாலும் ஒரே பாட்டு மயமாகவே இருக்கும். இரவு முழுவதும் கும்மியாடுவார்கள். கஸாக்குகள் தங்களுடைய வீடுகளுக்கு முன்னால் ஒயின் பீப்பாய்களை வைத்து அங்கேயே உட்கார்ந்து மறு நாள் பொழுது விடிகிற வரை குடிப்பார்கள். பிறகு தம்முடைய கைகளைச் சங்கிலியாகக் கோர்த்துக் கொண்டு தெருவில் வருவார்கள். கிராமத்தின் கடைசி வரை போவார்கள். அவர்கள் சந்திப்பவர்களையெல்லாம் சேர்த்துக்கொண்டு போவார்கள். அவர்கள் செல்லும் இடமெல்லாம் இடைவிடாது மதுவருந்துவார்கள். சில சமயங்களில் மூன்று நாள் வரை குடித்துக் கும்மாளம் போடுவார்கள். என் தகப்பனார் எப்படி வீட்டுக்குத் திரும்புவார் என்பது எனக்கு நினைவிருக்கிறது. அவர் முகம் சிவந்து போய் வீங்கியிருக்கும், தொப்பியில்லாமல் தட்டுத்தடுமாறி வந்து சேர்ந்து படுக்கையில் விழுவார். அவரை எப்படிச் சமாளிப்பதென்று என் தாயாருக்குத் தெரியும். அவருக்கு மீன் முட்டைகளும் சிவப்பு ஒயினும் கொடுத்து களைப்பைப் போக்குவாள். பிறகு அவருடைய தொப்பியைத் தேடி கிராமத்துக்குள் அங்குமிங்கும் போவாள். அவர் இரண்டு பகலும் இரவும் விடாமல் தூங்குவார்! அந்தக் காலத்து மனிதர்கள் அப்படிப்பட்டவர்கள்! இப்பொழுது தான் உனக்கே தெரியுமே!''

''ஸராஃபான் அணிந்திருந்த அந்தப் பெண்கள் எப்படி இருப்பார்கள்? அவர்கள் தனிமையிலா உல்லாசம் காண்பார்கள்?'' என்று பெலேத்ஸ்கி கேட்டார்.

''அடப்போ! தனிமையிலா? கஸாக்குகள் அங்கே வருவார்கள் அல்லது குதிரைகளில் வேகமாக வந்து அவர்களுடைய நடனங்களைக் கலைக்க முயற்சி செய்வார்கள். ஆனால் அப்பெண்கள் குறுந்தடிகளை எடுத்துக்கொண்டு

சண்டை போடுவார்கள். ஒரு இளம் வீரன் குதிரைச் சவாரி செய்துகொண்டு அவர்களிடம் வருவான். அவர்கள் அவனை எதிர்த்துச் சண்டை போடுவார்கள். அவன் குதிரையையும் அவனையும் அடிப்பார்கள். பிறகு அந்த வாலிபன் அவர்களது தொடர்களை உடைத்து தான் காதலித்த பெண்ணைத் தூக்கிக் கொண்டு போய்விடுவான். அவர்கள் காதல் அப்படிப்பட்டது! ஓ! அந்தப் பெண்களும் அப்படிப்பட்டவர்கள்! ராணிகள்தான்!''

## 36

அந்த நேரத்தில் இரண்டு நபர்கள் குதிரை மீது சவாரி செய்துகொண்டு பக்கத்துத் தெருவிலிருந்து சதுக்கத்துக்குள் வந்தார்கள். அவர்களில் ஒருவன் நஸார்கா, அடுத்தவன் லுக்காஷ்கா. லுக்காஷ்கா தன்னுடைய கொழுத்த கபர்தா குதிரை மீது சர்வசாதாரணமாக உட்கார்ந்திருந்தான். சூடு பறந்த அத்தெருவில் அந்தக் குதிரை அமைதியாக வந்தது, பிரகாசமான பட்டுக்குஞ்சத்தைப் போன்ற பிடரிமயிர் தொங்கிய அழகான தலையை ஆட்டிக்கொண்டு வந்தது. லுக்காஷ்காவின் முதுகில் உறையில் வைக்கப்பட்டிருந்த துப்பாக்கி தொங்கிக் கொண்டிருந்தது. இடுப்பில் கைத்துப்பாக்கி, காகேஷிய மென்மயிர் மேல்கோட்டு சுருட்டப்பட்டு சேணத்துக்குப் பின்னால் கட்டி வைக்கப்பட்டிருந்தது லுக்காஷ்கா எங்கோ வெகு தூரத்திலிருந்து, அமைதியற்ற இடத்திலிருந்து வந்து கொண்டிருக்கிறான் என்பதை எடுத்துக் காட்டியது. அவன் தன்னுடைய குதிரை மீது ஆடம்பரமாக உட்கார்ந்திருந்த முறை, குதிரையின் அடிவயிற்றைத் தன்னுடைய சவுக்கினால் லேசாகத் தட்டியபொழுது அவனுடைய கையின் அலட்சியமான அசைவு, எல்லாவற்றுக்கும் மேலாக, இறுமாப்புடன் சுற்றுமுற்றும் பார்த்த அவனுடைய பிரகாசமான, கறுப்பு நிறக் கண்கள் இளமையின் வலிமைக்கும் சுய நம்பிக்கைக்கும் சான்றாக இருந்தன.

அவன் கண்கள் ஒரு பக்கத்திலிருந்து மறு பக்கத்தைப் பார்த்தபொழுது ''நான் எவ்வளவு பெரிய வீரன் என்று தெரிகிறதா?'' என்று கேட்பதைப் போலத் தோன்றி

யது. அணிமணிகளும் ஆயுதங்களும் வெள்ளி முலாம் பூசப்பட்டிருந்தன. அந்த எடுப்பான குதிரைமீது சவாரி செய்த அந்த அழகான கஸாக்கு கதுக்கத்தில் திரண்டிருந்த மக்களுடைய கவனத்தை ஈர்த்தான். ஒல்லியாகவும் குட்டையாகவும் இருந்த நஸார்கா தன்னுடைய நண்பனைப் போல அழகாக உடையணிந்திருக்கவில்லை. முதியவர்கள் நின்று கொண்டிருந்த இடத்தின் வழியாக அவர்கள் போனபொழுது லுக்காஷ்கா குதிரையின் கடிவாளத்தை இழுத்தான், வெள்ளை நிறத் தொப்பியைத் தன்னுடைய குட்டையாகக் கத்தரித்து விடப்பட்ட கறுப்புத் தலைக்கு மேலே தூக்கி மரியாதை செலுத்தினான்.

''சரி, நொகாய்ப் பிரதேசத்திலிருந்து பல குதிரைகளை ஓட்டி வந்திருக்கிறாயா?'' என்று ஒரு மெலிந்த கிழவர் தன்னுடைய முகத்தைச் சுளித்துக்கொண்டு கேட்டார்.

''தாத்தா! என்ன குதிரைகளைப் பற்றி என்னிடம் கேட்கிறீர்கள்?'' என்று லுக்காஷ்கா அவருடைய கேள்விக்குப் பதில் சொல்லாமல் மழுப்பிவிட்டு அவரிடமிருந்து விலகிச் சென்றான்.

''அப்படியா? அவனை உன்னுடன் கூட்டிக்கொண்டு போவதால் பலனிருக்காது'' என்று அந்தக் கிழவர் கவலைபடர்ந்த முகத்துடன் கூறினார்.

''இந்தக் கிழட்டு சைத்தானுக்கு எல்லா விஷயமும் தெரியுமென்று தோன்றுகிறது'' என்று லுக்காஷ்கா மனத்தில் சொல்லிக்கொண்டான். அவன் முகத்தில் கவலைக் குறிபடர்ந்தது. ஆனால் கஸாக்குப் பெண்கள் கூட்டமாக நின்று கொண்டிருப்பதைப் பார்த்ததும் அவன் தன்னுடைய குதிரையை அவர்களை நோக்கி ஓட்டினான்.

''மாலை, வணக்கம், பெண்களே!'' என்று அவன் தன்னுடைய குதிரையின் கடிவாளத்தை திடீரென்று இழுத்துக்கொண்டு உறுதியான, உற்சாகமான குரலில் கூறினான். ''பிசாசுகளே! என்னைப் பார்க்காமல் நீங்கள் தவிக்கிறீர்களா?'' என்று சொல்லிவிட்டுத் தன்னுடைய கேலியைப் பற்றி அவனே சிரித்துக்கொண்டான்.

''வணக்கம், லுக்காஷ்கா! வணக்கம், பையனே!'' என்று பல குதூகலமான குரல்கள் ஒரே சமயத்தில் கேட்டன. ''நிறையப் பணம் கொண்டு வந்தாயா? எங்களுக்கு

நல்ல தின்பண்டங்கள் வாங்கித் தா. இங்கே அதிக நாள் இருப்பாயா? உன்னைப் பார்த்து ஒரு யுகமாகிவிட்டது.''

''நஸார்காவும் நானும் காலைவரை இருப்போம். நாங்கள் உல்லாசமாக இருக்கப் போகிறோம்'' என்று பதிலளித்த லுக்காஷ்கா குதிரைக்கு மேலே சவுக்கைச் சொடுக்கி அந்தப் பெண்கள் கூட்டத்துக்கு நடுவே செலுத்தினான்.

''இதோ, உன் மார்யானா. அவள் உன்னை முற்றிலும் மறந்து விட்டாள்'' என்று உஸ்தென்கா கூறிவிட்டு மார்யானாவைத் தன்னுடைய முழங்கையினால் இடித்துக்கொண்டு கீச்சொலியுடன் சிரித்தாள்.

மார்யானா குதிரை தன் மீது மோதாதபடி விலகி நின்று கொண்டாள்; தலையைப் பின்னால் சாய்த்துக் கொண்டு அந்த கஸாக்கைத் தன்னுடைய நீளமான, பிரகாசமான கண்களால் நேராகப் பார்த்தாள்.

''நீ இங்கே வந்து நெடுங்காலமாகி விட்டதே! எங்களை மிதித்து நசுக்கும்படி உன் குதிரையை ஏன் ஏவுகிறாய்?'' என்று அவள் கோபத்துடன் கேட்டுவிட்டு முகத்தைத் திருப்பிக்கொண்டாள்.

லுக்காஷ்கா மிகவும் உல்லாசமாக இருப்பதைப் போலத் தோன்றியது. அவன் முகத்தில் துணிவும் மகிழ்ச்சியும் பிரகாசித்தன. மார்யானாவின் பராமுகமான பதில் அவனைச் சீண்டியிருக்க வேண்டும். அவன் திடீரென்று முகத்தைச் சுழித்தான்.

''அங்கப்படியில் காலை வைத்து ஏறு, பெண்ணே! நான் உன்னை மலைக்குத் தூக்கிக்கொண்டு போகிறேன்!'' என்று தீய எண்ணங்களை விரட்டுவதைப் போல திடீரென்று கூறினான். அவன் அங்கிருந்த பெண்களுக்கு மத்தியில் குதிரை மீது இங்குமங்கும் சென்றான். அவன் மார்யானாவை நோக்கிக் கீழே குனிந்தான். ''நான் உன்னை முத்தமிடுவேன், முத்தமிடுவேன்'' என்றான்.

மார்யானாவின் கண்கள் அவனுடைய கண்களைச் சந்தித்தன. அவள் முகம் திடீரென்று சிவந்தது. அவள் அவன் பாதையிலிருந்து விலகிக்கொண்டாள்.

''கவனமாகப் போ! என் காலில் மிதித்து விடாதே'' என்று சொல்லிவிட்டு அவள் தலையைக் குனிந்து தன்னுடைய அழகான கால்களில் அணிந்திருந்த நீல நிறக்

காலுறைகளையும் ஜரிகை வைத்துத் தைக்கப்பட்ட புதிய சிவப்புக் காலணிகளையும் பார்த்தாள்.

லுக்காஷ்கா உஸ்தென்காவை நோக்கித் திரும்பிப் பேசினான்; மார்யானா கையில் குழந்தையை வைத்திருந்த இளம் கஸாக்குப் பெண்ணின் அருகில் உட்கார்ந்தாள். குழந்தை மார்யானாவின் நீல நிற மேலங்கியின் மீது தொங்கிய கழுத்து மாலையைப் பறிப்பதற்குத் தன்னுடைய மொத்தையான கைகளை நீட்டியது. மார்யானா குழந்தையை நோக்கிக் குனிந்தாள். அதே சமயத்தில் தன்னுடைய கண்களின் ஓரத்தினால் லுக்காஷ்காவைப் பார்த்தாள். அந்த விநாடியில் அவன் தன்னுடைய கோட்டுப் பையிலிருந்து மிட்டாய்களும் விதைகளும் அடங்கிய பொட்டலத்தை எடுத்தான்.

''பெண்களே, எல்லாம் உங்களுக்குத் தான்'' என்று சொல்லிக்கொண்டு அவன் அந்தப் பொட்டலத்தை உஸ்தென்காவிடம் கொடுத்துவிட்டு மார்யானாவைப் பார்த்துச் சிரித்தான்.

மார்யானாவின் முகத்தில் குழப்பத்தின் அறிகுறி மறுபடியும் தோன்றியது. அவளுடைய அழகிய கண்களில் மேகம் போன்ற படலம் தோன்றியது. அவள் தலைத் துணியை உதட்டுக்குக் கீழே இழுத்தாள்; இன்னும் கழுத்து மாலையைப் பிடித்து கொண்டிருந்த குழந்தையின் வெளுத்த முகத்தில் தன்னுடைய உதடுகளை வைத்து உணர்ச்சியுடன் முத்தமிட ஆரம்பித்தாள். குழந்தை அவளுடைய மார்பில் கைகளை வைத்து அமுத்தி அழத் தொடங்கியது; வாயைத் திறந்து, பற்களில்லாத ஈறுகளைக் காட்டியது.

''விடு! குழந்தைக்கு மூச்சடைக்கப் போகிறது'' என்று அந்தக் குழந்தையின் தாயார் அதட்டினாள். அவள் குழந்தையை இறுக அணைத்து உள்சட்டையைத் திறந்து குழந்தை பால்குடிப்பதற்கு மார்பைக் கொடுத்தாள். ''நீ அந்த இளைஞனுடன் பேசிக்கொள்வது நல்லது'' என்றாள்.

''வீட்டுக்குப் போய் குதிரையைக் கட்டிவிட்டு திரும்பி வருவோம். நஸார்காவும் நானும் இரவு முழுவதும் உல்லாசமாக இருப்போம்'' என்று கூறிய லுக்காஷ்கா தன்னுடைய சவுக்கினால் குதிரையை அடித்து அந்தப் பெண்களை விட்டு சரேலென்று குதிரையில் சென்றான்.

லுக்காஷ்காவும் நஸார்காவும் பக்கத்துத் தெருவழி யாகத் திரும்பி அக்கம்பக்கமாக இருந்த இரண்டு குடிசை களுக்குச் சென்றார்கள்.

''நண்பனே, நாம் ஆரம்பிக்கலாம். சீக்கிரமாக வா!'' என்று லுக்காஷ்கா நஸார்காவைப் பார்த்துக் கத்தினான். அவன் தன்னுடைய வீட்டு வெளி வாசலில் குதிரையி லிருந்து கீழே இறங்கி தன்னுடைய சுற்றுவட்டகையின் இரட்டைக் கதவுகள் வழியாக முழு கவனத்துடன் குதி ரையை உள்ளே கொண்டு சென்றான்.

''ஸ்தெப்கா!'' என்று தன் ஊமைச் சகோதரியைக் கூப்பிட்டான். திருவிழா உடை அணிந்திருந்த அந்தப் பெண் குதிரையைக் கொண்டு போவதற்கு வந்தாள். ''குதிரையைக் கொட்டிலில் கட்டு, ஆனால் குதிரைச் சேணத்தைக் கழற்றாதே'' என்று அவன் அவளிடம் சைகை களினால் தெரிவித்தான்.

அந்த ஊமைப் பெண் நாக்கை மிழற்றி விசித்திரமான ஓசை செய்துவிட்டு குதிரையின் மூக்கில் முத்தமிட்டாள். அவளுக்கு அந்தக் குதிரையைப் பிடித்திருந்தது, அது நல்ல குதிரை என்பது அவளுடைய செயலுக்கு அர்த்தம்.

''வணக்கம், அம்மா! என்ன, இன்னும் வெளியே புறப்படவில்லையா?'' என்று உரக்கக் கேட்டவாறு லுக் காஷ்கா துப்பாக்கியைப் பிடித்துக்கொண்டு படிகளில் ஏறினான்.

அவனுடைய வயோதிகத் தாயார் கதவைத் திறந் தாள்.

''நீ திருவிழாவுக்கு வருவாய் என்று நான் எதிர்பார்க்க வில்லை; நீ வரமாட்டாய் என்று கிர்க்கா சொன்னானே'' என்றாள் அவள்.

''ஒயின் கொண்டுவா, அம்மா. நஸார்காவை வரச் சொல்லியிருக்கிறேன். நாங்கள் திருவிழாக் கொண்டாடப் போகிறோம்.''

''இதோ கொண்டுவருகிறேன், மகனே'' என்று அந் தக் கிழவி கூறினாள். ''பெண்கள் எல்லோரும் திருவிழா வில் கலந்து கொள்ளப் போய் விட்டார்கள். ஊமைப் பெண்ணும் இப்பொழுது புறப்படப் போகிறாள் என்று நினைக்கிறேன்.''

அவள் சாவிகளை எடுத்துக்கொண்டு கொட்டகைக்குச் சென்றாள்.

நஸார்கா குதிரையைக் கட்டிவிட்டு, துப்பாக்கியை எடுத்து வைத்துவிட்டு லுக்காஷ்காவின் வீட்டுக்குச் சென்றான்.

## 37

''உன்னுடைய நலத்துக்காக!'' என்று லுக்காஷ்கா தன்னுடைய தாயார் கையிலிருந்து விளிம்புவரை சிவப்பு ஒயின் ஊற்றப்பட்டிருந்த கோப்பையை வாங்கி அதை கவனமாகத் தன்னுடைய உதடுகளுக்கு உயர்த்திக்கொண்டு கூறினான். நஸார்கா சொன்னான்:

'' 'பல குதிரைகளை ஓட்டி வந்திருக்கிறாயா?' என்று அந்தக் கிழவன் கேட்டான். விஷயம் எப்படிப் போகிறது பார்: அவனுக்கு அரைகுறையாகத் தெரிந்திருக்கிறது.''

''சூனியக்காரன்!'' என்று லுக்காஷ்கா கூறினான். ''அதனாலென்ன?'' என்று தலையை ஆட்டினான். ''குதிரைகள் இப்பொழுது ஆற்றைக் கடந்திருக்கும். யாரால் கண்டுபிடிக்க முடியும்?''

''இது ரொம்பத் தப்பு.''

''எது தப்பு? நாளைக் காலையில் அவனுக்கு சிவப்பு ஒயின் கொண்டு போய்க் கொடு. அதைச் செய். பிறகு ஒன்றும் பேசமாட்டான். நாம் இப்பொழுது கொண்டாடுவோம். குடி!'' என்று லுக்காஷ்கா யெரோஷ்கா மாமாவைப் போல உரத்த குரலில் கூறினான். ''வா, தெருவுக்குப் போய் பெண்களுடன் உல்லாசமாகத் திருவிழாவைக் கொண்டாடுவோம். நீ போய் தேன் வாங்கிவா. அல்லது நான் ஸ்தெப்காவை அனுப்பட்டுமா? பொழுது விடிகின்ற வரை கொண்டாடுவோம்.''

நஸார்கா சிரித்தான்.

''நாம் எவ்வளவு நேரம் இங்கே இருக்கப் போகிறோம்?'' என்று அவன் கேட்டான்.

''நாம் திருவிழாவைக் கொண்டாடுவோம். நீ ஓடிப் போய் வோட்கா வாங்கிவா! நில், இந்தா பணம்!''

நஸார்கா அவன் கட்டளைக்குப் பணிந்து யாம்காவின் வீட்டுக்குச் சென்றான்.

யெரோஷ்கா மாமாவும் யெர்குஷோவும் கழுகுகளைப்

போன்றவர்கள், எங்கே குடியாட்டம் நடக்கிறது என்பதை அவர்கள் மோப்பம் பிடித்துவிடக் கூடியவர்கள். அவர்கள் ஒருவர்பின் ஒருவராக அந்தக் குடிசைக்கு வந்தார்கள். இருவருமே நன்றாகக் குடித்திருந்தார்கள்.

அவர்கள் உள்ளே நுழைந்து முகமன் கூறியவுடன் ''அம்மா! இன்னொரு அரைவாளி கொடுத்தனுப்பு!'' என்று லுக்காஷ்கா பலமாகக் கூறினான்.

''எங்களிடம் இப்பொழுது சொல்: அவற்றை எங்கே திருடினாய்?'' என்று அந்தக் கிழவர் கேட்டார். ''நீ ஒரு வீரன்டா! எனக்கு உன்னை மிகவும் பிடிக்கிறது!''

''அப்படியா! 'எனக்கு உன்னை மிகவும் பிடிக்கிறது!' ஆனால் அந்த யுங்கெருக்கு மாமா வேலை பார்க்கிறீர்கள். எப்படிப்பட்ட ஆளு நீங்கள்!'' என்று லுக்காஷ்கா சிரித்துக்கொண்டு கூறினான்.

''பொய்! ஆமாம், இது சுத்தப்பொய்! ஆ, மார்க்கா!'' அந்தக் கிழவர் படீரென்று சிரித்தார். ''அந்தப் பிசாசு எனக்கு லஞ்சம் கொடுக்க முயற்சி செய்தான்! 'அவளை எனக்கு ஏற்பாடு செய்யுங்கள்' என்றான். எனக்கு ஒரு துப்பாக்கி கொடுத்தான். நான் வாங்கவில்லை, அந்த காரியம் செய்ய மறுத்தேன். நான் அதைச் செய்திருப்பேன், ஆனால் உன்னை நினைக்கையில் பாவமாக இருந்தது. சரி, நீ எங்கே போயிருந்தாய் என்று சொல்.'' அந்தக் கிழவர் தார்த்தாரிய மொழியில் பேச ஆரம்பித்தார்.

லுக்காஷ்கா உற்சாகத்துடன் வர்ணிக்க ஆரம்பித்தான்.

யெர்குஷோவுக்கு தார்த்தாரிய மொழி நன்றாகத் தெரியாததால் சில சமயங்களில் ருஷ்யச் சொற்களையும் கலந்து பேசினான்.

''நீ குதிரைகளைத் திருடுவதில் ஈடுபட்டிருக்கிறாய் என்று நான் சொல்கிறேன். எனக்கு அது முற்றிலும் நிச்சயம்'' என்றான் யெர்குஷோவ்.

''கிரேய்க்காவும் நானும் போயிருந்தோம்'' என்று ஆரம்பித்தான் லுக்காஷ்கா. அவன் கிரேய்-கான் என்னும் பெயரைப் பிரியமான முறையில் சுருக்கிச் சொன்னான். ஒருவரோடொருவர் தங்களுடைய நெருங்கிய நட்பைக் காட்டிக்கொள்வதற்கு கஸாக்குகள் பயன்படுத்துகின்ற வழக்கமான முறை இது. ''ஆற்றின் அக்கரையி



லுள்ள ஸ்டெப்பி நிலம் முழுவதையும் தனக்கு நன்றாகத் தெரியும், குறிப்பாக எந்த இடத்துக்கும் நேராகப் போக முடியும் என்று அவன் எப்பொழுதும் பீற்றிக் கொண்டிருப்பான். நாங்கள் குதிரை மீதேறிச் சென்றோம். எங்கும் கறுப்பான இருட்டு. கிரேய்க்கா பாதையிலிருந்து விலகிவிட்டான். வழிதெரியாது இங்குமங்கும் போக ஆரம்பித்தான். ஆனால் அதில் பயனில்லை. சுற்றுவட்டாரத்தில் ஒரு கிராமமும் தென்படவில்லை. என்ன செய்வதென்று தெரியவில்லை. வலது பக்கத்தில் திரும்பி வெகு தூரம் போயிருக்க வேண்டும் என்று தெரிந்தது. அநேகமாக நடுநிசி வரை தேடினோம். பிறகு திடீரென்று நாய்கள் குரைக்கின்ற சத்தம் கேட்டது.''

''முட்டாப் பசங்கள்'' என்று யெரோஷ்கா மாமா

கூறினார். ''நாங்களும் இப்படித்தான் இரவு நேரத்தில் பாதை தவறிவிடுவோம். பிசாசு வேலை. அந்நேரத்தில் நான் குதிரைச் சவாரி செய்துகொண்டு ஒரு குன்றுக்குப் போய்ச் சேருவேன். பிறகு இப்படிச் செய்வேன்'' என்று சொல்லிவிட்டு அவர் கைகளை வாயின் மீது வைத்து ஓநாய்க் கூட்டம் ஊளையிடுவதைப் போல ஒலி எழுப் பினார். ''நாய்கள் உடனே குரைக்கும். சரி, கதையை முடி. குதிரைகளைக் கண்டுபிடிக்க முடிந்ததா?''

''ஆம். அவற்றை விரைந்து திருடி ஓட்டினோம். நொகாய்ப் பெண்கள் நஸார்காவை அநேகமாக பிடிக்க இருந்தார்கள்.''

''யாரை? என்னையா அநேகமாகப் பிடிக்க இருந்தார் கள்?'' என்று நஸார்கா ஆத்திரமாகக் கூறினான்.

''நாங்கள் குதிரை மேலேறித் திரும்பிப் புறப்பட் டோம்; மறுபடியும் கிரேய்க்கா பாதை தவறிவிட்டான். மணற்குன்றுகளில் பாதையை விட்டு முற்றிலும் விலகி விட்டான். ஆற்றை நோக்கிப் போகிறோம் என்று அவன் சொன்னான். ஆனால் உண்மையில் நாங்கள் வேறு திசை யில் போய்க் கொண்டிருந்தோம்.''

''நீ நட்சத்திரங்களைப் பார்த்துக்கொண்டு போயி ருக்க வேண்டும்'' என்றார் யெரோஷ்கா மாமா.

''அப்படித்தான் எனக்கும் தோன்றுகிறது'' என்றான் யெர்குஷோவ்.

''அதெல்லாம் சரிதான். ஆனால் வானம் முழுவதும் மேகங்கள் இருந்தன. நான் சுற்றி வந்தேன், சுற்றிச் சுற்றி வந்தேன்! நான் ஒரு பெண் குதிரையைப் பிடித்து அதன் மீது ஒரு இடைவாரைக் கட்டினேன். பிறகு என் னுடைய குதிரையை முன்னே விருப்பம் போலப் போகு மாறு செய்தேன். அதனால் வழி காட்ட முடியும் என்று கருதினேன். அது கனைத்தவாறு பூமியில் மூக்கை நீட் டிக்கொண்டு முன்னே சென்றது. அதைப் பின்தொடர்ந்து கிராமத்துக்குள் நுழைந்து திரும்பினோம். துரதிர்ஷ்ட வசமாக நேரத்தில் வந்துசேர்ந்தோம். ஏனெனில் வெளிச் சம் ஏற்கெனவே வந்துவிட்டது. குதிரைகளைக் காட்டுக் குள் விரட்டி அங்கே அவற்றை மறைத்து வைப்பதற்கு மட்டுமே நேரம் இருந்தது. நகீம் ஆற்றங்கரையிலிருந்து வந்து அவற்றை வாங்கிக்கொண்டான்.''

யெர்குஷோவ் தலையை ஆட்டினான். ''பலே ஆசாமிகள்! நிறையக் குதிரைகளா?''

''எல்லாக் குதிரைகளும் இங்கே இருக்கின்றன'' என்று லுக்காஷ்கா சட்டைப்பையைத் தடவிக்கொண்டு கூறினான்.

அந்தத் தருணத்தில் லுக்காஷ்காவின் தாயார் குடிசைக்குள் நுழைந்தாள். அவன் உடனே பேச்சை நிறுத்திக் கொண்டான்.

''குடியுங்கள்!'' என்றான்.

''நானும் கிர்ச்சிக்கும் ஒரு தடவை அப்படித்தான் செய்தோம்...'' என்று யெரோஷ்கா மாமா ஆரம்பித்தார்.

''அந்தக் கதையைக் கேட்க நேரமில்லை'' என்றான் லுக்காஷ்கா. ''நான் புறப்படுகிறேன்'' என்று சொல்லிவிட்டுக் கோப்பையிலிருந்த ஒயினை மடக்கென்று குடித்தான். பிறகு இடைவாரை இறுக்கிக்கொண்டு வெளியே வந்து தெருவில் நடந்தான்.

## 38

லுக்காஷ்கா தெருவுக்குள் சென்றபொழுது ஏற்கெனவே இருட்டியிருந்தது. இலையுதிர் கால இரவு குளிர்ச்சியாகவும் காற்றடிக்காமலும் இருந்தது. அந்தச் சதுக்கத்தின் ஒரு பக்கத்தில் வளர்ந்திருந்த போப்லார் மரங்கள் பின்னாலிருந்து முழுநிலவின் தங்க வளையம் மிதந்து வந்தது. புகைபோக்கிகளிலிருந்து புகை வெளியேறி மாலை நேர மூடுபனியுடன் கலந்து கிராமத்துக்கு மேலே மிதந்தது. இங்குமங்கும் சன்னல்கள் வழியாக வெளிச்சம் தெரிந்தது. நெருப்பில் எரிந்து கொண்டிருக்கின்ற எருவின் நெடியும் புதிய திராட்சைச் சாற்றின் வாசனையும் ஈரப்பதமும் காற்றில் கலந்திருந்தன. பகலில் இருந்ததைப் போலவே பேச்சும் சிரிப்பும் பாட்டும் விதைகளைக் கொறிக்கும் சத்தமும் அங்கே பேரோசையாக இருந்தன; ஆனால் இப்பொழுது ஓசைகள் இன்னும் தெளிவாகக் கேட்டன. வேலிகள் மற்றும் வீடுகளுக்கு அருகில் நின்று கொண்டிருந்த கூட்டங்களில் வெள்ளை நிறத் தலைத் துணிகளும் தொப்பிகளும் தெரிந்தன.

சதுக்கத்தில் திறந்து வைக்கப் பட்டு விளக்குகள் எரிந்து கொண்டிருந்த கடைக்கு முன்னால் பல வண்ண உடைகளணிந்த கஸாக்கு இளைஞர்களும் இளம்பெண் களும் நின்று கொண்டிருந்தார்கள். உரத்த குரலில் பாட் டுக்களும் சிரிப்பும் அரட்டையும் கேட்டன. இளம்பெண் கள் கைகளைக் கோர்த்துக்கொண்டு வட்டமாகச் சுற்றி அந்தப் புழுதிபடிந்த சதுக்கத்தில் அழகாகக் கும்மியடித் தார்கள். அங்கேயிருந்த கவர்ச்சியற்ற ஓர் ஒல்லியான இளம்பெண் பாடினாள்:

அந்த இருள்சேர் அடவியிலிருந்து
வளமை நிறைந்த வனத்தில் இருந்து
இளமை ததும்பும் இரண்டு வீரர்கள்,
வலிமை மிக்க வாலிபத் தோழர்கள்
வெளியே வந்தனர்; தெருவில் நின்றனர்;
அடிதடிச் சண்டையில் அந்தோ இறங்கினர்.
அந்த நேரம் அந்த வழியே
கன்னி ஒருத்தி கடந்து சென்றாள்.
''வீரம் மிக்க உங்களில் ஒருவரை
ஆரத்தழுவி சேரத்துடிக்கிறேன்''
என்று சொன்னாள், நின்று பார்த்தாள்.
மாநிறத் தோலும் சணல் நிறத்தில்
சுருட்டை முடியும் உள்ள வீரனை
விரும்பித் தேர்ந்தாள்; நெருங்கி நின்றாள்.
இளைஞன் அவனோ வலக்கரம் நீட்டி
வளைத்துப் பிடித்தான்; வனிதை அவளைக்
கூட்டத் திடையே கூட்டிச் சென்றான்.

முதிய பெண்கள் அங்கே சுற்றி நின்று பாட்டைக் கேட்டுக்கொண்டும் நடனத்தைப் பார்த்துக் கொண்டு மிருந்தார்கள். சிறுவர்களும் சிறுமிகளும் இருட்டில் ஓடிப் பிடித்து விளையாடிக் கொண்டிருந்தார்கள். கஸாக்குகள் அங்கே நின்றுகொண்டு அந்த வழியாகப் போன இளம் பெண்களைக் கேலி செய்தார்கள். எப்பொழுதாவது அந்த வளையத்திற்குள் குதித்து நடனத்தில் பங்கெடுத் தார்கள். பெலேத்ஸ்கியும் ஒலேனினும் காகேஷிய உடை யணிந்து கதவுக்கு வெளியே இருட்டில் நின்று கொண் டிருந்தார்கள். அவர்கள் தெளிவாகக் கேட்கும்படி பேசி அங்கிருந்தவர்களுடைய கவனத்தை ஈர்த்தார்கள். சிவப்பு மேலங்கி அணிந்த தடிமனான உஸ்தென்காவும் புதிய

உடையணிந்து கம்பீரமாகத் தோன்றிய மார்யானாவும் கைகோர்த்துக் கொண்டு நடனமாடினார்கள்.

அந்த இரண்டு பெண்களையும் கும்மியாட்டத்திலிருந்து எப்படிப் பிரித்துக்கொண்டு வருவது என்று ஒலேனினும் பெலேத்ஸ்கியும் தமக்குள் கலந்து கொண்டார்கள். ஒலேனின் தன்னுடைய சிற்றின்பத்துக்காக அவளைச் சந்திக்க விரும்புவதாக பெலேத்ஸ்கி நினைத்தார், ஆனால் ஒலேனின் அவளுடைய முடிவை அவள் வாயிலிருந்தே தெரிந்து கொள்ள விரும்பினான். அவளை இயன்ற அளவுக்குச் சீக்கிரமாகத் தனியே சந்திக்க வேண்டும், எல்லாவற்றையும் அவளிடம் பேசவேண்டும், அவள் தன்னுடைய மனைவியாக இசைவாளா, அது முடியுமா என்று அவளிடம் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற விருப்பம் அவனிடம் மிகவும் அதிகமாக இருந்தது. இந்தக் கேள்விக்கு எதிர்மறையான பதிலை அவனே நெடுங் காலத்துக்கு முன்னரே முடிவு செய்துவிட்ட போதிலும் அவளிடம் தன்னுடைய இதயத்தின் உணர்ச்சிகளைக் கொட்டுகின்ற அளவுக்குத் தனக்கு வலிமை இருக்கும், அவள் தன்னைப் புரிந்துகொள்ள முடியும் என்று அவன் இன்னும் நம்பினான்.

''நீங்கள் முன்பே என்னிடம் சொல்லாதது ஏன்?'' என்று பெலேத்ஸ்கி கேட்டார். ''நான் உஸ்தென்கா மூலம் அதை ஏற்பாடு செய்திருப்பேனே! நீங்கள் மிகவும் விசித்திரமான ஆள்!''

''என்ன செய்வது? ஒரு நாள், சீக்கிரமாகவே உங்களிடம் எல்லாவற்றையும் சொல்கிறேன். இப்பொழுது நீங்கள் செய்ய வேண்டியது இதுதான்—அவளைத் தயவு செய்து உஸ்தென்காவின் வீட்டுக்கு வரச் செய்யுங்கள்!''

''சரி. அது சுலபமானதுதான்... மார்யானா, நீ சணல் நிறத்தில் சுருட்டை முடி வீரனை விரும்புகிறாயா? லுக்காஷ்கா வேண்டாமா?'' என்று பெலேத்ஸ்கி ஒரு பேச்சுக்காக முதலில் மார்யானாவிடம் பேசிவிட்டு அவளுடைய பதிலுக்குக் காத்திராமல் உஸ்தென்காவிடம் சென்று மார்யானாவைக் கூட்டிக் கொண்டு வருமாறு அவளை வற்புறுத்தத் தொடங்கினார். பேசி முடிப்பதற்குள் அந்த அவலட்சணமான பெண் இன்னொரு

பாட்டைப் பாட ஆரம்பித்துவிட்டாள். அங்கிருந்த இளம் பெண்கள் மறுபடியும் வட்டமாகப் போய்க் கொண்டு பாட ஆரம்பித்தார்கள். அவர்கள் பின்வரும் பாடலைப் பாடினார்கள்:

தோட்டப் புறத்தின் ஓரம் இருந்து
வாட்ட சாட்டமான அவ் விளைஞன்
தெருவில் இறங்கி நடந்து வந்தான்;
திரும்பி வந்தவன் கடைசி வரைக்கும்
தெருவை அளந்து கடந்து சென்றான்.
ஆங்கே நின்றவளை அவனும் நெருங்கி
கண்ணைச் சிமிட்டிக் கையை ஆட்டினான்,
பலமுறை வந்தே வலமது சென்றான்
பின்னரும் நெருங்கிப் பேசினான் இப்படி:
''கண்ணே! பெண்ணே! உன்னைக் காண
எப்படி நானும் ஏங்கினேன் தெரியுமா?
அப்படி இருந்தும் உன்மேல் எனக்கு
நிறைய நிறைய வருத்தம் உண்டு.
என்னுடன் சேர்ந்து உலவிட மறுக்கிறாய்.
நெஞ்சின் அழுத்தம் கொஞ்சம் கொஞ்சமாய்
நெகிழும் அழியும்; நிசமாய் உன்னைப்
பெண்கேட்டு என்றன் ஆட்களை அனுப்புவேன்,
உண்மை நீதான் என்றன் மணமகள்;
பொய்யாய்ப் பிணங்கிய செயலுக்காய் உந்தன்
மைவிழி அப்போது மடைநீர் கொட்டும்.''

லுக்காஷ்காவும் நஸார்காவும் அந்த வட்டத்துக்குள் நுழைந்து அந்த இளம் பெண்களுடன் சேர்ந்து சுழன்று ஆடத் தொடங்கினார்கள். லுக்காஷ்கா கரகரப்பான, இனிமையில்லாத குரலில் பாடிக்கொண்டு கைகளை ஆட்டிக்கொண்டு அந்த வளையத்தின் மையத்தில் ஆடினான். ''யாராவது ஒருத்தி வரலாம்!'' என்றான். அங்கிருந்த பெண்கள் மார்யானாவை முன்னே தள்ளினார்கள்; ஆனால் அவள் போகவில்லை. பாட்டின் பின்னணியில் குதூகல மான சிரிப்பு, அன்போடு அடித்துக் கொள்ளும் ஓசை, முத்தமிட்டும் ஒலி, முணுமுணுப்புக்கள் ஆகியன கேட்டன.

லுக்காஷ்கா ஒலேனினைக் கடந்து சென்ற பொழுது அவனை அன்புடன் பார்த்துத் தலையை அசைத்தான்.

''வேடிக்கை பார்க்க நீங்களும் வந்திருக்கிறீர்களா?'' என்று கேட்டான்.

''ஆமாம்! வேடிக்கை பார்க்க வந்திருக்கிறேன்'' என்று ஒலேனின் நறுக்கென்று பதிலளித்தான்.

பெலேத்ஸ்கி குனிந்து உஸ்தென்காவின் காதில் ரகசியமாக ஏதோ சொன்னார். அவள் பதிலளிப்பதற்குள் பெண்கள் கூட்டம் அவளை இழுத்துக்கொண்டு சுற்றி வந்தது. மறுபடியும் அவனிடம் வந்த பொழுது அவள் கூறினாள்:

''சரி. நாங்கள் வருகிறோம்.''

''மார்யானாவையும் கூட்டி வரலாமா?''

ஒலேனின் மார்யானாவை நோக்கிக் குனிந்தான். ''நீ வருவாயல்லவா? தயவுசெய்து வா, ஒரு விநாடி நேரத்துக்காவது வா. நான் உன்னுடன் பேச வேண்டும்.''

''எல்லாப் பெண்களும் வந்தால் நானும் வருகிறேன்.''

''நான் உன்னிடம் கேட்ட விஷயத்தைப் பற்றி நீ பதிலளிப்பாயா?'' என்று அவன் இரண்டாவது தடவையாக அவளை நோக்கிக் குனிந்துகொண்டு கேட்டான். ''நீ இன்று நல்ல மனநிலையில் இருக்கிறாய்.''

அவள் அதற்குள் சுற்றிக்கொண்டு போய்விட்டாள்; ஆனால் அவன் அவளைப் பின்தொடர்ந்து சென்றான். ''எனக்கு பதிலளிப்பாயா?''

''எதைப் பற்றி?''

''நேற்றைக்கு முந்திய நாளிரவில் நான் உன்னிடம் கேட்டேனே'' என்று ஒலேனின் அவள் காதில் ரகசியமாகக் கூறினான். ''நீ என்னைத் திருமணம் செய்து கொள்வாயா?''

மார்யானா ஒரு கண நேரம் தயங்கினாள்.

''நான் உங்களிடம் சொல்கிறேன்'' என்றாள் அவள். ''இன்றிரவில் உங்களிடம் சொல்கிறேன்.''

அந்த இருட்டில் அவள் ஒலேனினை குதூகலமாகவும் அன்பாகவும் பார்த்தாள்.

அவன் மேலும் அவளைப் பின்தொடர்ந்தான். இயன்ற அளவுக்கு அவளுக்குப் பக்கத்தில் இருப்பது அவனுக்கு இன்பமளித்தது.

ஆனால் லுக்காஷ்கா அவளை வளையத்திலிருந்து மையத்துக்குத் தரதரவென்று இழுத்துக்கொண்டு சென்

றான். ஒலேனின் ''உஸ்தென்காவின் வீட்டுக்கு வா'' என்று அவள் காதிற்குள் கிசுகிசுப்பதற்கு மட்டுமே நேரமிருந்தது. அவன் அப்படிச் சொல்லிவிட்டுத் தன்னுடைய நண்பருடன் சேர்ந்துகொண்டான். பாட்டு முடிவடைந்தது. லுக்காஷ்கா உதடுகளைத் துடைத்துக் கொண்டான். மார்யானாவும் அதையே செய்தாள். அவர்களிருவரும் ஒருவரையொருவர் முத்தமிட்டார்கள். ''ஒரு தடவை பத்தாது, ஐந்து தடவைகள்'' என்றான் அவன். ஒரேசீரான நடன அசைவுக்கு, ஒத்திசைவான இசைக்கு மாறாக பேச்சும் கேலியும் பரபரப்பும் ஏற்பட்டன. லுக்காஷ்காவுக்கு இப்பொழுது போதை அதிகரித்திருந்தது. அவன் கை நிறைய மிட்டாய்களை அள்ளி அங்கிருந்த பெண்களிடம் விநியோகித்தான். ''உங்களுக்கு என்னுடைய விருந்து'' என்று பெருமிதமான, கோமாளித்தனமான, அரைப் பரிதாபகரமான சுய உணர்வுடன் அவன் கூறினான்.

''ஆனால் படைவீரர்களுடன் சுற்றித்திரிபவர்கள் வளையத்திலிருந்து போய்விடுங்கள்'' என்று அவன் திடீரென்று கூறிக் கொண்டு ஒலேனினை ஆத்திரமாகப் பார்த்தான்.

இப்பெண்கள் அவனிடமிருந்து மிட்டாய்களைப் பறித்ததுடன் தங்களில் ஒருத்தியிடமிருந்து ஒருத்தி பறிப்பதற்கும் முயற்சி செய்தார்கள். பெலேத்ஸ்கியும் ஒலேனினும் அப்பால் ஒதுங்கி நின்றார்கள்.

லுக்காஷ்கா தன்னுடைய பரோபகாரச் செயலைப் பற்றி வெட்கப்பட்டவனைப் போல தொப்பியை மேலே தூக்கி, சட்டைக்கை நுனியினால் நெற்றியைத் துடைத்துக்கொண்டு மார்யானா, உஸ்தென்காவுடன் சேர்ந்து நின்றான்.

''என்னுடன் சேர்ந்து உலவிட மறுக்கிறாய்!'' என்று அந்தப் பெண்கள் பாடிக் கொண்டிருந்த பாட்டிலிருந்து ஒரு அடியை எடுத்து மார்யானாவைப் பார்த்துப் பாடினான். ''என்னுடன் சேர்ந்து உலவிட மறுக்கிறாய்!'' என்று அவன் கோபத்துடன் திரும்பிச் சொன்னான். ''பொய்யாய்ப் பிணங்கிய செயலுக்காய் உந்தன் மைவிழி அப்போது மடைநீர் கொட்டும்'' என்று அவன் மேலும்

பாடினான். இரண்டு பெண்களையும் ஒரே சமயத்தில் கட்டியணைத்தான்.

உஸ்தென்கா அவனுடைய பிடியிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு கையைப் பின்னால் தூக்கி அவன் முதுகில் ஓங்கி அறைந்தபொழுது அவள் கைதான் வலித்தது.

''இன்னொரு தடவை நடனமாடப் போகிறீர்களா?'' என்று அவன் கேட்டான்.

''பெண்கள் விரும்பினால் நடனமாடட்டும்'' என்றாள் உஸ்தென்கா. ''ஆனால் நான் வீட்டுக்குப் போகிறேன். மார்யானாவும் வருவதாகச் சொன்னாள்.''

அந்த இளம் கஸாக்கு மார்யானாவை இன்னும் கட்டியணைத்தபடியே அந்தக் கூட்டத்திலிருந்து அவளைப் பிரித்து அந்த வீட்டின் இருண்ட மூலைக்குக் கூட்டிச் சென்றான்.

''மார்யானா, போகாதே'' என்றான் அவன். ''கடைசியாக ஒரு தடவை இன்பமாக இருப்போம். நீ உன் வீட்டுக்குப் போ. நான் அங்கே வருகிறேன்.''

''நான் எதற்கு வீட்டுக்குப் போக வேண்டும்? இன்றைக்குத் திருவிழா. நான் முழுமையாக அனுபவிக்கப் போகிறேன். நான் உஸ்தென்காவின் வீட்டுக்குப் போகிறேன்'' என்றாள் மார்யானா.

''என் பேச்சைக் கேட்கமாட்டாய். எப்படி இருந்தாலும் உன்னைக் கல்யாணம் செய்து கொள்கிறேன்.''

''ரொம்ப சரி. அதைப் பிறகு பார்த்துக்கொள்ளலாம்'' என்றாள் மார்யானா.

''கண்டிப்பாக உஸ்தென்கா வீட்டுக்குப் போகிறாயா?'' என்று கேட்ட லுக்காஷ்கா அவளை இறுக்கமாக அணைத்து அவள் கன்னத்தில் முத்தமிட்டான்.

''என்னை விடு! ஏன் இப்படித் தொல்லை கொடுக்கிறாய்?'' மார்யானா அவன் கைகளிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு தப்பியோடினாள்.

''ஆ! பெண்ணே!.. நீ செய்வது சரியல்ல'' என்று லுக்காஷ்கா அவளைக் கடிந்து கொள்கின்ற தொனியில் தலையை ஆட்டிக் கொண்டு கூறினான். ''**மைவிழி அப்போது மடைநீர் கொட்டும்.**'' அவளிடமிருந்து திரும்பி மற்ற பெண்களைப் பார்த்துக் கொண்டு கூறினான்: ''ஏதாவது பாடுங்கள்! பாடமாட்டீர்களா?''

மார்யானா ஓரளவுக்கு அச்சமடைந்ததாகவும் அதே சமயத்தில் அவன் பேச்சினால் கோபமடைந்ததாகவும் தோன்றியது. அவள் சட்டென்று நின்றாள்.

''எது சரியில்லை?''

''நீ செய்வது.''

''நான் என்ன செய்கிறேன்?''

''நீ உன் வீட்டில் தங்கியிருக்கும் அந்த யுங்கெருடன் சுற்றுகிறாய்; ஆனால் என்னை அலட்சியம் செய்கிறாய்.''

''உன்னைக் காதலிப்பதைப் பற்றி என் விருப்பப்படி நடந்துகொள்வேன். நீ என்னுடைய அப்பா அல்ல, என் அம்மாவும் அல்ல. நீ என்ன சொல்வது? நான் விரும்பு கிறவனைக் காதலிப்பேன்.''

''ரொம்ப சரி! ஆனால் மறந்துவிடாதே'' என்றான் லுக்காஷ்கா.

அவன் கடைக்குச் சென்றான். ''பெண்களே! ஏன் சும்மா நிற்கிறீர்கள்? இன்னொரு நடனம் ஆடுங்கள். நஸார்கா! ஓடிப்போய் சிவப்பு ஒயின் கொண்டுவா.''

''என்ன, அவர்கள் வருகிறார்களா?'' என்று ஒலே னின் பெலேத்ஸ்கியைக் கேட்டான்.

''அவர்கள் இன்னும் ஒரு நிமிடத்தில் வந்துவிடுவார் கள்'' என்று பெலேத்ஸ்கி பதிலளித்தார். ''வாருங்கள்! நாம் போய் விருந்துக்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.''

## 39

ஒலேனின் பெலேத்ஸ்கியின் வீட்டிலிருந்து புறப்பட்டு அந்த இரண்டு பெண்களையும் தொடர்ந்த பொழுது இரவு வெகு நேரமாயிருந்தது. இருண்டிருந்த தெருவில் மார்யானாவின் வெள்ளைத் தலைக் துணி பளிச்செனத் தெரிந்தது. தங்க நிலா ஸ்டெப்பி நிலங்களை நோக்கிக் கீழே இறங்கிக் கொண்டிருந்தது. கிராமத்தின் மீது வெள்ளி யைப் போன்ற மூடுபனி மிதந்தது. எங்கும் நிசப்தம்; சன்னல்களில் விளக்குகள் தெரியவில்லை. வேகமாகப் போய்க் கொண்டிருந்த பெண்களின் காலடிச் சத்தம் மட்டுமே கேட்டது.

ஒலேனினுடைய இதயம் வேகமாகத் துடித்தது. அவ னுடைய சூடேறிய முகத்தில் அடித்த காற்று குளிர்ச்சி யாகவும் ஈரமானதாகவும் இருந்தது. அவன் வானத்தைப்



பார்த்தான், தான் புறப்பட்டு வந்த குடிசையைத் திரும்பிப் பார்த்தான். மெழுகுவத்தி விளக்கு அப்பொழுதுதான் ஊதியணைக்கப்பட்டு இருந்தது. வேகமாகப் போய்க் கொண்டிருந்த அந்த இளம்பெண்கள் மறுபடியும் அவனுடைய கவனத்தை ஈர்த்தார்கள். வெள்ளைத் தலைத் துணி மூடுபனியில் மறைந்துவிட்டது. தனியாக இருப்பது அவனுக்குக் கஷ்டமாக இருந்தது. அவன் மிகவும் மகிழ்ச்சியாக இருந்தான்! அவன் படிகளிலிருந்து துள்ளிக் குதித்து அந்தப் பெண்களை நோக்கி ஓடினான்.

''ஓ! நீங்கள்தானா? யாராவது உங்களைப் பார்க்கப் போகிறார்கள்!'' என்றாள் உஸ்தென்கா.

''அதற்கென்ன?''

ஒலேனின் மார்யானாவிடம் சென்று அவளை அணைத்தான். அவள் அவனைத் தடுக்கவில்லை.

''முத்தம் கொடுக்காதீர்கள். முதலில் கல்யாணம், அதற்குப் பிறகு முத்தம். இப்பொழுது நிதானமாக நடந்து கொள்ளுங்கள்'' என்றாள் உஸ்தென்கா.

''போய்வா, மார்யானா! நான் உன்னுடைய தகப்பனாரை நாளைக்குப் பார்க்கிறேன். அவரிடம் எல்லாவற்றையும் சொல்வேன். நீ மூச்சுவிட வேண்டாம்.''

''நான் ஏன் சொல்ல வேண்டும்?'' என்று பதிலளித்தாள் மார்யானா.

இரண்டு பெண்களும் வேகமாக நடந்து சென்றார்கள்.

ஒலேனின் தனியாக நடந்த பொழுது நடைபெற்ற எல்லாவற்றையும் மறுபடியும் நினைத்துப் பார்த்தான். அவன் அந்த இரவுப் பொழுது முழுவதும் கணப்புக்குப் பக்கத்திலிருந்த மூலையில் அவளுடன் தனியாக இருந்தான். உஸ்தென்கா, பெலேத்ஸ்கி மற்றும் இதரப் பெண்கள் கும்மாளம் போட்டுக் கொண்டிருந்தார்கள். உஸ்தென்கா அந்த அறையை விட்டு ஒரு தடவை கூட வெளியே வரவில்லை. ஒலேனினும் மார்யானாவும் மெல்லிய குரலில் பேசிக் கொண்டிருந்தார்கள்.

''நீ என் மனைவியாகத் தயாரா?'' என்று அவன் மார்யானாவிடம் கேட்டான்.

''நீங்கள் தான் தள்ளிப்போகிறீர்கள், நீங்கள் என்னை மணக்க மாட்டீர்கள்'' என்று அவள் கிண்டலான குரலில் அமைதியாகப் பதிலளித்தாள்.

''நீ என்னைக் காதலிக்கிறாயா? அதைச் சொல்.''

''நான் உங்களைக் காதலிக்கமாட்டேனா, ஏன்? நீங்கள் என்ன ஒற்றைக் கண்ணனா?'' என்று அவள் சிரித்தவாறு கேட்டாள். அவனுடைய கைகளைத் தன்னுடைய காய்த்துப் போன கைகளுக்கு இடையில் வைத்து அழுத்திக்கொண்டு, ''உங்கள் கைகள் எவ்வளவு வெ-ள்-ளை-யாக, வெ-ள்-ளை-யாக இருக்கின்றன, தயிர் மாதிரி மென்மையாக இருக்கின்றன'' என்றாள்.

''நான் வேடிக்கையாகப் பேசவில்லை. சொல், நீ என் மனைவியாகத் தயாரா?''

''ஏன் கூடாது? என் தகப்பனார் அனுமதிக்க வேண்டும்.''

''கேள்! நீ உண்மையைச் சொல்லாவிட்டால் எனக்குப் பைத்தியம் பிடித்துவிடும். நாளைக்கு உன் அப்பா, அம்மாவிடம் நான் சொல்வேன், எல்லா விஷயங்களையும் சொல்வேன்.''

மார்யானா திடீரென்று உற்சாகமாகச் சிரித்தாள்.

''ஏன் சிரிக்கிறாய்?''

''ஓ! அது மிகவும் வேடிக்கையானது!''

''உண்மையாகச் சொல்கிறேன்! நான் ஒரு தோட்டம், வீடு வாங்கிவிடுகிறேன். கஸாக்குகளுடன் சேர்ந்து கொள்கிறேன்...'' என்றான் ஒலேனின்.

''இங்கே பாருங்கள். நீங்கள் மற்ற பெண்களுக்குப்

பின்னால் போகக் கூடாது! அப்படிப் போனால் நான் கோபித்துக்கொள்வேன்.''

இந்த உரையாடலை நினைத்துப்பார்க்கும் பொழுது ஒலேனினுக்கு அதிகமான மகிழ்ச்சி ஏற்பட்டது. அதை நினைத்தபொழுது சில சமயங்களில் அவனுடைய இதயத்தில் வேதனை ஏற்பட்டது, பிறகு மறுபடியும் மகிழ்ச்சி ஏற்பட்டது. அவனுடன் பேசிக் கொண்டிருந்த நேரம் முழுவதும் அவள் சாந்தமாக இருந்ததை நினைத்து அவன் வேதனையடைந்தான். இந்தப் புதிய நிலைமையினால் அவள் சிறிதும் பாதிக்கப்படாததைப் போல அவனுக்குத் தோன்றியது. அவள் அவனுடைய வார்த்தைகளைச் சிறிதும் நம்பவில்லை, எதிர்காலத்தைப் பற்றிச் சிந்திக்கவில்லை என்றே தெரிந்தது. தற்போது அவனைக் காதலித்தாளே தவிர எதிர்காலத்தைப் பற்றிய அவளுடைய சிந்தனைகளில் அவனுக்கு இடமில்லை என்று நினைத்தான். ஆனால் அவள் வார்த்தைகள் எல்லாமே அவனுக்கு உண்மையாகத் தோன்றின, அவள் அவனுக்கு மனைவியாவதற்கு இசைந்துவிட்டாள் என்பதை நினைத்தபொழுது அவனுக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது.

''ஆம். அவள் முற்றிலும் என்னுடையவளாக இருக்கும் பொழுது மட்டுமே நாங்கள் ஒருவரையொருவர் புரிந்துகொள்ள முடியும். அத்தகைய காதலுக்கு வார்த்தைகள் அவசியமல்ல; ஆனால் வாழ்க்கை, முழு வாழ்க்கை அவசியம். நாளைக்கு எல்லாமே தெளிவாகிவிடும். இதே மாதிரி நான் இனிமேல் வாழ முடியாது. நான் நாளைக்கு எல்லாவற்றையுமே அவள் தகப்பனாரிடமும், பெலேத்ஸ்கியிடமும், கிராம மக்கள் எல்லோரிடமும் சொல்லப் போகிறேன்...''

தூக்கமின்றி இரண்டு இரவுகளைக் கழித்த லுக்காஷ்கா மிகச் சிறப்பாகத் திருவிழாக் கொண்டாடிய பிறகு தன்னுடைய வாழ்க்கையில் முதல் தடவையாக உண்மையாகவே குடியினால் மயக்கமடைந்தான். அவன் யாம்காவின் வீட்டில் தூங்கி மயக்கத்தைப் போக்கினான்.

## 40

மறுநாள் ஒலேனின் வழக்கத்தைக் காட்டிலும் சீக்கிரமாகவே விழித்துக் கொண்டான். அடுத்துத் தனக்கு

என்ன கிடைக்கப் போகிறது என்பதுதான் விழித்துக் கொண்டவுடன் அவனுடைய முதல் சிந்தனையாக இருந்தது. அவன் மார்யானாவின் முத்தங்களை, அவளுடைய கரடுமுரடான கைகளின் அழுத்தத்தை, 'உங்கள் கைகள் எவ்வளவு வெள்ளையாக இருக்கின்றன' என்னும் அவளுடைய வார்த்தைகளைப் பெருமகிழ்ச்சியுடன் நினைவு கூர்ந்தான். உடனே அவளுடைய பெற்றோர்களைப் பார்க்க வேண்டும், மார்யானாவைத் திருமணம் செய்து கொள்கின்ற விருப்பத்தைத் தெரிவிக்க வேண்டும் என்ற உத்தேசத்துடன் அவன் துள்ளியெழுந்தான்.

அப்பொழுது சூரியன் இன்னும் உதிக்கவில்லை. தெருவில் அசாதாரணமான பரபரப்பு நிலவியது. ஆட்கள் ஓடிக்கொண்டும் குதிரைச் சவாரி செய்துகொண்டும் கூச்சல் போட்டுக் கொண்டும் இருந்தார்கள். ஒலேனின் தன்னுடைய மேல்கோட்டை மாட்டிக்கொண்டு வெளி வராந்தாவுக்கு ஓடினான். துணை லெப்டினென்டின் குடும்பம் இன்னும் எழுந்திருக்கவில்லை. ஐந்து கஸாக்குகள் குதிரைச் சவாரி செய்துகொண்டு தெருவில் போய்க் கொண்டிருந்தார்கள். அவர்கள் உரத்த குரலில் பேசிக் கொண்டிருந்தார்கள். லுக்காஷ்கா தன்னுடைய பெரிய கபர்தா குதிரை மீது உட்கார்ந்துகொண்டு அவர்களுக்குத் தலைமை தாங்கிப் போய்க் கொண்டிருந்தான். கஸாக்குகள் எல்லோரும் உச்ச ஸ்தாயியில் பேசிக் கூச்சலிட்டுக் கொண்டிருந்தார்கள். அங்கே என்ன விவகாரம் என்பதைக் கண்டுபிடிக்க முடியவில்லை.

''நீ அடுத்த காவல் நிலையத்துக்குப் போ!'' என்று கத்தினான் ஒருவன்.

''குதிரை மீது சேணத்தை மாட்டி எங்களுடன் புறப்படு'' என்றான் இரண்டாமவன்.

''அந்த வெளிவாயிலிலிருந்து போவதே குறுக்கு வழி.''

''வேண்டாம்! நாம் நடு வெளிவாயிலிலிருந்து புறப்படவேண்டும்'' என்று லுக்காஷ்கா உரத்த குரலில் கூறினான்.

''ஆமாம். இந்த வழியில் இன்னும் சீக்கிரமாகப் போய்ச் சேர முடியும்'' என்று மற்றொரு கஸாக்கு கூறினான். அவனுடைய உடல் முழுவதும் தூசி படிந்திருந்

தது; அவன் வியர்வை வழிந்து கொண்டிருந்த குதிரை மீது உட்கார்ந்திருந்தான்.

முந்திய இரவில் அதிகமாகக் குடித்ததனால் லுக்காஷ்காவின் முகம் சிவந்து வீங்கியிருந்தது. அவனுடைய தொப்பி அவனுடைய தலைக்குப் பின்புறத்தில் தொங்கியது. அவன் தளபதியைப் போல அதிகாரத் தோரணையில் உத்தரவிட்டுக் கொண்டிருந்தான்.

''என்ன விஷயம்? நீங்கள் எங்கே போகிறீர்கள்?'' என்று ஒலேனின் கேட்டான். கஸாக்குகளின் கவனத்தை ஈர்ப்பது அவனுக்குக் கடினமாக இருந்தது.

''நாங்கள் சில அப்ரேக்குகளைப் பிடிக்கப் போகிறோம். அவர்கள் மணற்குன்றுக்குப் பின்னால் ஒளிந்திருக்கிறார்கள். நாங்கள் இப்பொழுதே போகிறோம்; ஆனால் ஆட்கள் குறைவாக இருக்கிறோம்.''

கஸாக்குகள் மேலும் கூச்சல் போட்டுப் புதிய நபர்களைத் திரட்டிக் கொண்டு தெருவில் சவாரி செய்து கொண்டிருந்தார்கள். தான் மட்டும் பின்னால் தங்கியிருப்பது நன்றாக இருக்காது என்று ஒலேனினுக்குத் தோன்றியது. எனினும் சீக்கிரமாகத் திரும்பிவிட வேண்டும் என்று அவன் முடிவு செய்து கொண்டான். அவன் உடையணிந்து, துப்பாக்கியில் குண்டு வைத்து, வன்யூஷா அவசரமாகச் சேணத்தை மாட்டிக்கொண்டு வந்த குதிரையின் மீது ஏறினான். கஸாக்குகள் கிராமத்தை விட்டு வெளியே போய்க் கொண்டிருந்தபொழுது அவர்களுடன் சேர்ந்துகொண்டான். மிகவும் அவசரமாகப் புறப்பட்ட கஸாக்குகள் அங்கே குதிரைகளை விட்டுக் கீழே இறங்கி வட்டமாக நின்று தாங்கள் சிறிய பீப்பாயில் கொண்டு வந்திருந்த சிவப்பு ஒயினை மரக் கோப்பையில் ஊற்றிக் குடித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் மரக் கோப்பையைக் கைமாற்றிக் கொடுத்து படையெடுப்பில் தங்களது வெற்றிக்காகக் குடித்தார்கள்.

அந்த கிராமத்துக்குத் தற்செயலாக வந்திருந்த பகட்டான இளம் அதிகாரி ஒருவர் அவர்கள் மத்தியில் நின்று கொண்டிருந்தார். அவர் அந்த ஒன்பது கஸாக்குகளுக்குத் தலைமை யேற்றிருந்தார். அவர்களில் யாரும் அதிகாரிகள் இல்லை. அந்த அதிகாரி தலைவரின் தோரணையுடன் நடந்து கொண்டபோதிலும் அவர்கள் லுக்காஷ்

காவின் ஆணைகளைத்தான் எதிர்நோக்கினார்கள். அவர்கள் ஒலேனினைச் சிறிதும் கவனிக்கவில்லை. எல்லோரும் மறுபடியும் குதிரைகளில் ஏறிக்கொண்டு புறப்பட்ட பொழுது ஒலேனின் அந்த இளம் அதிகாரியை நெருங்கி, ''நீங்கள் எந்த விவகாரத்தை முன்னிட்டுப் போகிறீர்கள்?'' என்று கேட்டான். வழக்கமாக அன்பு காட்டுகிற அந்த அதிகாரி இப்பொழுது அவனிடம் மிகவும் கம்பீரமாக நடந்து கொண்டிருந்தார். அவர்கள் எதற்காகப் போய்க் கொண்டிருக்கிறார்கள் என்பதைப் பற்றி அவரிடமிருந்து தகவல் பெறுவதற்கு ஒலேனின் மிகவும் கஷ்டப்பட வேண்டியிருந்தது.

அப்ரேக்குகளைத் தேடுவதற்கு அனுப்பப்பட்ட குதிரை ரோந்துப்படையினர் கிராமத்திலிருந்து சுமார் எட்டு வெர்ஸ்டா தூரத்தில் மலை வாசிகள் சிலர் மணற்குன்றுக்குப் பின்னால் ஒளிந்து கொண்டிருப்பதை அறிந்தனர். அப்ரேக்குகளைச் சுற்றி வளைத்தபொழுது அவர்கள் ஒரு பள்ளத்தில் பதுங்கிக்கொண்டு துப்பாக்கிகளால் சுட்டார்களாம், ஒருபோதும் உயிருடன் சரணடைய மாட்டோம் என்று பயமுறுத்தினார்களாம். இரண்டு நபர்களையும் ஒரு சார்ஜென்டையும் கொண்ட ரோந்துப் படை அவர்களைக் காவல் காக்க அங்கேயே தங்கிவிட்டது. கிராமத்தில் தகவலைத் தெரிவித்து அதிகமான வீரர்களைத் திரட்டிக் கொண்டுவருமாறு ஒரு கஸாக்கை அந்த சார்ஜென்ட் அனுப்பினார்.

சூரியன் அப்பொழுதுதான் உதித்துக் கொண்டிருந்தது. அவர்கள் கிராமத்திலிருந்து மூன்று வெர்ஸ்டாக்கள் தூரம் போன பிறகு எங்குமே ஸ்டெப்பி நிலம் இருந்தது. சலிப்பூட்டுகின்ற மணற்பரப்பைத் தவிர வேறு எதையுமே பார்க்க முடியவில்லை. மணலில் கால்நடைச் சுவடுகள் தெரிந்தன; பள்ளங்களில் கருகிப்போன புல் மற்றும் தாழ்வாக இருந்த நாணல்கள் இருந்தன. எப்பொழுதாவது சில பாதைகள் தென்படும், ஆனால் அவற்றைப் பின்பற்றிப் போவது கடினம். நெடுந்தொலைவில் இருந்த அடிவானத்தின் பின்னணியில் நொகாய் குடியிருப்புகள் தெரிந்தன. அங்கே நிழலிடம் என்பதே இல்லை. அந்தப் பிரதேசம் முழுவதும் எதுவும் முளைக்காமல் வறண்டு காணப்பட்டது.

ஸ்டெப்பியில் சூரியன் எப்பொழுதுமே செந்நிற ஒளியில் உதிக்கும், மறையும். காற்று அடிக்கும் பொழுது மணலை அப்படியே வாரிக் கொண்டு வரும். அன்று காலையில் இருந்ததைப் போல அமைதியாக இருக்கும் பொழுது ஏதாவதொரு அசைவு அல்லது ஒலியினால் கலைக்கப்படாத அந்த நிசப்தம் வியப்பூட்டுவதாக இருக்கும். இன்று காலையில் சூரியன் உதித்த பிறகு கூட ஸ்டெப்பி அரையிருட்டாக இருந்தது. அங்கே வெறுமையும் அசைவின்மையும் குடிகொண்டிருந்தன. அங்கே சிறு மூச்சுக் காற்றுகூட இல்லை. குதிரைகளின் குளம்பொலியும் செருமல்களும் தான் அங்கே கேட்ட ஓசைகள். ஆனால் இவைகூடக் காற்றில் அதிர்வை ஏற்படுத்தவில்லை, வேகமாகத் தேய்ந்துமறைந்தன.

கஸாக்குகள் பெரும் பகுதி நேரம் மௌனமாகவே சவாரி செய்து கொண்டிருந்தார்கள். ஆயுதங்களை ஓசை ஏற்படுத்தாதபடி எடுத்துச் செல்வது எப்பொழுதுமே கஸாக்குகளுடைய பழக்கம். ஆயுதங்கள் கடகடப்பது கஸாக்குகளுக்கு மிகவும் பெரிய அவமானமாகும். கிராமத்திலிருந்து இரண்டு கஸாக்குகள் குதிரை மீது வேகமாக வந்தார்கள்; அவர்களுடன் இரண்டு அல்லது மூன்று சொற்கள் மட்டுமே பேசிக்கொள்ளப்பட்டன.

லுக்காஷ்காவின் குதிரை புல்லில் இடறவோ சிக்கவோ செய்த போது தடுமாறியது. கஸாக்குகள் அதைக் கெட்ட சகுனம் என்று கருதினார்கள். அவர்கள் அவனைப் பாத்ததுமே திரும்பிகொண்டார்கள். அந்தச் சமயத்தில் பிரத்யேகமான முக்கியத்துவத்தைக் கொண்டிருந்த சகுனத் தடைகளைப் பற்றிக் கவலைப்படாதிருக்க முயற்சி செய்தார்கள். லுக்காஷ்கா கடிவாளத்தைச் சுண்டியிழுத்து கோபத்துடன் முகத்தைச் சுளித்து பற்களைக் கடித்துக் கொண்டு தன் தலைக்கு மேலே சாட்டையைச் சொடுக்கினான். அவனுடைய அழகான கபர்தா குதிரை வானத்தில் பறந்து போவதற்கு இறக்கைகள் வேண்டும் என்று கேட்பதைப் போல திடீரென்று நான்கு கால்களிலும் நடனமாடியது. அதற்கு எந்தக் காலைத் தூக்கி வைப்பதென்று தெரியவில்லை. ஆனால் லுக்காஷ்கா அதன் கொழுத்த விலாவில் சாட்டையினால் ஒரு தடவை அடித்தான், இரண்டாவது தடவை அடித்தான், பிறகு மூன்



றாவது தடவை. அந்தக் கபர்தா குதிரை பற்களைக் காட்டி வாலைச் சுழற்றிச் செருமி, முன் கால்களை நிமிர்த்தி பின் துள்ளிப் பாய்ந்தது.

''ஆகா! அருமையான குதிரை!'' என்று அந்த இளம் அதிகாரி வியந்தார்.

''சிங்கம்'' என்றான் அங்கிருந்த முதிய கஸாக்குகளில் ஒருவன்.

கஸாக்குகள் குதிரைகள் மீது அமைதியாக, சில சமயங்களில் மெதுவாகவும் சில சமயங்களில் வேகமாகவும் போய்க் கொண்டிருந்தார்கள். அந்தப் போக்கு மட்டுமே அவர்களுடைய இயக்கங்களின் அமைதியையும் வீறார்ந்த தன்மையையும் ஒரு கண நேரம் கலைத்தது.

ஸ்டெப்பியின் மொத்தப் பிரதேசத்தில், எட்டு வெர்ஸ்டாக்களில் அவர்கள் சந்தித்த ஒரேயொரு உயிருள்ள பொருள் என்று ஒரு நாடோடிக் கூடாரத்தையே சொல்ல வேண்டும். இரண்டு சக்கர வண்டியின் மீது ஏற்றப்பட்டிருந்த அந்தக் கூடாரம் ஒரு வெர்ஸ்டா தூரத்தில்

ஸ்டெப்பியில் மெதுவாகப் போய்க் கொண்டிருந்தது. ஒரு நொகாய்க்காரன் தன் குடும்பத்துடன் ஒரு குடியிருப்பிலிருந்து மற்றொரு குடியிருப்புக்குப் போய்க் கொண்டிருந்தான். கஸாக்குகள் ஒரு பள்ளத்தில் கந்தலுடையணிந்த இரண்டு நொகாய்ப் பெண்களைப் பார்த்தார்கள். அவர்களுடைய கன்ன எலும்புகள் துருத்திக் கொண்டிருந்தன. அவர்கள் முதுகில் கூடைகளைக் கட்டிக்கொண்டு ஸ்டெப்பியில் திரிந்து கொண்டிருந்த கால்நடைகளின் சாணத்தைச் சேகரித்துக் கொண்டிருந்தார்கள். அந்த இளம் அதிகாரி அவர்களுடைய மொழியில் அரைகுறையாகப் பேசக் கூடியவர் என்பதால் அந்தப் பெண்களிடம் பேசித் தகவலைப் பெறுவதற்கு முயற்சி செய்தார். ஆனால் அவருடைய பேச்சு அவர்களுக்குப் புரியாததால் குழப்பமுற்று பார்வைகளைப் பரிமாறிக் கொண்டார்கள்.

லுக்காஷ்கா அங்கே வந்து குதிரையின் கடிவாளத்தைப் பிடித்திழுத்து நிறுத்தி, நொகாய் மக்களின் வழக்கமான முகமனை உற்சாகமான குரலில் கூறினான். நொகாய்ப் பெண்கள் தமக்கேற்பட்ட மகிழ்ச்சியை மறைக்காமல் தங்கள் சகோதரனிடம் பேசுவதைப் போல அவனுடன் சுதந்திரமாக உரையாடினார்கள்.

''அய், அய், கொப் அப்ரேக்!'' என்று அவர்கள் அழுகுரலில் கூறி கஸாக்குகள் போய்க் கொண்டிருந்த திசையில் தங்களுடைய கைகளை நீட்டிக் காட்டினார்கள். ''பல அப்ரேக்குகள் இருக்கிறார்கள்'' என்று அவர்கள் கூறியதைப் புரிந்துகொள்வதற்குப் போதிய அறிவு ஒலேனினுக்கு இருந்தது.

ஒலேனின் இப்படிப்பட்ட நடவடிக்கையைப் பற்றி யெரோஷ்கா மாமாவின் கதைகளின் மூலம் ஓரளவுக்கு அறிந்திருந்தாலும் அதை ஒருபோதும் பார்த்ததில்லை. எனவே அவன் கஸாக்குகளுடன் சென்று எல்லாவற்றையும் பார்க்கவேண்டும் என்று மிகவும் அக்கறையுடனிருந்தான். அவன் கஸாக்குகளை மெச்சினான்; கண்களை அகலமாகத் திறந்து காதுகளையும் கவனமாக வைத்துக் கொண்டான், எல்லாவற்றையும் நுட்பமாக கவனித்தான். அவன் தன்னுடைய வாளையும் தோட்டா போடப்பட்ட துப்பாக்கியையும் கொண்டு வந்திருந்தான்

என்றாலும் கஸாக்குகள் அவனிடமிருந்து ஒதுங்கியிருப்பதை கவனித்தபடியால் இந்த நடவடிக்கையில் பங்கெடுக்க வேண்டாம் என்று முடிவு செய்தான். அந்த முடிவில் அவனுக்குத் திருப்தி ஏற்பட்டது; ஏனென்றால் எல்லைப் புறப் படையெடுப்பில் அவன் ஏற்கெனவே தன்னுடைய வீரத்தைப் போதுமான அளவுக்கு நிரூபித்திருக்கிறான்; அத்துடன் அவன் இப்பொழுது மிகவும் மகிழ்ச்சியடைந்தவனாக இருந்ததும் ஒரு முக்கியமான காரணம்.

திடீரென்று வெகு தூரத்தில் ஒரு துப்பாக்கி வேட்டுச் சத்தம் கேட்டது.

அந்த இளம் அதிகாரி பரபரப்படைந்து உடனேயே கஸாக்குகளுக்கு உத்தர விட ஆரம்பித்தார். அவர்கள் எப்படிப் பிரிந்து எந்தப் பக்கத்தின் வழியாக முன்னேற வேண்டும் என்று கட்டளையிட்டார். ஆனால் கஸாக்குகளுக்கு அவருடைய உத்தரவுகளை நிறைவேற்றுகின்ற எண்ணம் இல்லை. அவர்கள் லுக்காஷ்கா சொல்வதை மட்டுமே கேட்டார்கள், அவனையே தளபதியாகக் கருதினார்கள். லுக்காஷ்காவின் முகமும் உடலும் அமைதியாக, வெற்றிக்குறியுடன் இருந்தன. அவன் தன்னுடைய கபர்தா குதிரை மீது சவாரி செய்துகொண்டு தலைமை தாங்கிச் சென்றான். கபர்தா குதிரையை ஒட்டிவருவதற்கு மற்ற குதிரைகளால் முடியவில்லை. அவன் கண்களைச் சுருக்கிக்கொண்டு முன்னே உற்றுப் பார்த்துக் கொண்டு சென்றான்.

''அதோ! ஒருவன் குதிரை மீது போகிறான்'' என்று சொல்லிவிட்டு லுக்காஷ்கா குதிரையின் கடிவாளத்தை இழுத்து நின்று பின்னால் வந்தவர்களுடன் சேர்ந்து கொண்டான்.

ஒலேனின் கண்களைக் கசக்கிக்கொண்டு பார்த்தான். ஆனால் அவனுக்கு ஒன்றுமே தெரியவில்லை. இரண்டு குதிரைவீரர்கள் போவதைக் கண்டதுமே கஸாக்குகள் நேரே அவர்களை நோக்கிச் சென்றார்கள்.

''அவர்கள் அப்ரேக்குகளா?'' என்று ஒலேனின் கேட்டான்.

கஸாக்குகள் பதிலளிக்கவில்லை. அது அசட்டுத்தனமான கேள்வி என்று அவர்கள் கருதினார்கள். அப்ரேக்கு

கள் முட்டாள்களாக இருந்தால்தான் இந்தப் பக்கத்தில் குதிரை மேலேறி வருவார்கள்.

''அங்கே கையைக் காட்டிக் கூப்பிடுவது எங்களுடைய சார்ஜென்ட் என்று நினைக்கிறேன்'' என்று இரண்டு குதிரைவீரர்களையும் சுட்டிக்காட்டினான் லுக்காஷ்கா. இப்பொழுது இரண்டு குதிரைவீரர்களையும் நன்றாகப் பார்க்க முடிந்தது. ''இதோ! அவர் நம்மை நோக்கி வருகிறார்.''

அந்தக் குதிரைவீரர்கள் கஸாக்கு ரோந்துப் படையினர் என்று சில விநாடிகளில் தெரிந்துவிட்டது. சார்ஜென்ட் லுக்காவை நோக்கி வந்தான்.

## 41

''இன்னும் அதிக தூரமா?'' என்று லுக்காஷ்கா சுருக்கமாகக் கேட்டான்.

அந்த நேரத்தில், சுமார் முப்பது காலடிகள் தூரத்தில் துப்பாக்கி வேட்டுச் சத்தம் கேட்டது. ''நம்முடைய குர்க்கா அவர்களைத் துளைக்கிறான்'' என்று வேட்டுச் சத்தம் வந்த திசையில் தலையை ஆட்டிக்கொண்டு கூறினார் அந்த சார்ஜென்ட்.

அவர்கள் இன்னும் சில அடிகளைக் கடந்தபிறகு ஒரு மணற்குன்றுக்குப் பின்னால் உட்கார்ந்து துப்பாக்கியைக் கெட்டித்துக் கொண்டிருந்த குர்க்காவைப் பார்த்தார்கள். குர்க்கா சும்மாவே உட்கார்ந்து அலுத்துப் போய் மற்றொரு மணற்குன்றுக்குப் பின்னால் மறைந்து கொண்டிருந்த அப்ரேக்குகளை நோக்கிச் சுட்டிருக்கிறான். அந்தத் திசையிலிருந்து ஒரு தோட்டா பறந்து வந்தது.

அந்த அதிகாரி வெளிறிப்போய்த் தடுமாறினார். லுக்காஷ்கா குதிரையை விட்டுக் கீழே இறங்கி ஒரு கஸாக்கிடம் கடிவாளத்தைக் கொடுத்துவிட்டு குர்க்காவிடம் சென்றான். ஒலேனின் அவனைப் பின்பற்றினான். அவன் கீழே குனிந்து லுக்காஷ்காவுடன் சேர்ந்து கொண்டான். அவர்கள் குர்க்கா இருந்த மணற்குன்றை அடைந்தபொழுது அவர்களுடைய தலைகளுக்கு மேலே சில தோட்டாக்கள் பறந்தன. லுக்காஷ்கா ஒலேனினைப் பார்த்துச் சிரித்துவிட்டுக் குனிந்தான்.

''அவர்கள் உங்களைச் சுட்டு விட்டால், நீங்கள் உடனே போய்விடுவது நல்லது. இது உங்களுக்கேற்ற இடமல்ல.''

ஆனால் ஒலேனின் அப்ரேக்குகளைப் பார்க்க வேண்டுமென்ற அக்கறை கொண்டான்.

இருநூறு எட்டுகளுக்கு அப்பால் ஒரு மணற்குன்றுக்குப் பின்னால் அவன் தொப்பிகளையும் துப்பாக்கிகளையும் பார்த்தான். திடீரென்று அங்கே புகை தோன்றியது; ஒரு தோட்டா பறந்து வந்தது.

அப்ரேக்குகள் அந்தக் குன்றின் கீழே இருந்த பள்ளத்தில் இருந்தார்கள். அவர்கள் இருந்த அந்த இடம் ஒலேனினுக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தது. அது ஸ்டெப்பியின் மற்ற பகுதிகளைப் போன்று தான் இருந்தது. ஆனால் அப்ரேக்குகள் அங்கே பதுங்கியிருந்தது அதை மற்ற இடங்களிலிருந்து வேறுபடுத்திக் காட்டியதுடன் அதற்கு ஒரு பிரத்யேகமான சிறப்பையும் கொடுத்தது. துல்லியமாக அந்த இடத்தில் தான் அப்ரேக்குகள் பதுங்கியிருக்க வேண்டும் என்று கூட அவனுக்குத் தோன்றியது.

லுக்காஷ்கா தன்னுடைய குதிரையை நோக்கித் திரும்பினான். ஒலேனின் அவனைப் பின்தொடர்ந்தான்.

''உலர்ந்த புல் ஏற்றிய வண்டி நமக்கு வேண்டும். இல்லையென்றால் நம்மைக் கொன்று விடுவார்கள். அதோ, அந்தக் குன்றுக்குப் பின்னால் நொகாய்க்காரனின் வண்டி இருக்கிறது'' என்றான் லுக்காஷ்கா.

அவன் பேச்சை அதிகாரி கேட்டுக் கொண்டிருந்தார்; சார்ஜென்ட் அதை ஆமோதித்தார். அந்த வண்டியை அங்கே கொண்டுவந்தார்கள்; கஸாக்குகள் அந்த வண்டிக்குப் பின்னால் மறைந்துகொண்டு அதை முன்னால் தள்ளிக் கொண்டு வரத் தொடங்கினார்கள்.

ஒலேனின் ஒரு குன்றை நோக்கிச் சென்றான். அதன் உச்சியிலிருந்து பார்த்தால் அங்கேயுள்ள எல்லாமே நன்றாகத் தெரியும். உலர்ந்த புல் ஏற்றிய வண்டி முன்னேறிச் சென்றது. கஸாக்குகள் அந்த வண்டிக்குப் பின்னால் பதுங்கிக்கொண்டு செச்சென்களை நோக்கி வண்டியை முன்னே தள்ளினார்கள். அங்கே ஒன்பது செச்சென்கள் நெருக்கி உட்கார்ந்துகொண்டு சுட வேண்டிய தீர்மான

கரமான விநாடியை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள்.

எங்கும் முழு அமைதி. செச்சென்களிருந்த பக்கத்திலிருந்து திடீரென்று ஒரு சோகப்பாடல்—யெரோஷ்கா மாமா பாடிய 'ஆய்-தாய்-தலலாய்' பாட்டைப் போன்றது—கேட்டது. தாங்கள் தப்ப முடியாது என்பது மலைவாசிகளுக்குத் தெரியும்; தப்புவதைப் பற்றிய எல்லா எண்ணங்களையும் விரட்டுவதற்காக அவர்கள் தங்களுடைய முழங்கால்களைக் கயிற்றினால் சேர்த்துக்கட்டித் துப்பாக்கிகளைத் தயாராக வைத்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் தங்களுடைய மரண நேரப் பாடலைப் பாடிக் கொண்டிருந்தார்கள்.

கஸாக்குகள் உலர்ந்த புல் ஏற்றிய வண்டியைத் தள்ளிக்கொண்டு அவர்களை மேன்மேலும் நெருங்கிக் கொண்டிருந்தார்கள். எந்த நேரத்திலும் துப்பாக்கி வேட்டுச் சத்தம் கேட்பதை ஒலேனின் எதிர்பார்த்தான். ஆனால் அப்ரேக்குகளின் பாடல் மட்டுமே அங்கிருந்த நிசப்தத்தைக் குலைத்தது. திடீரென்று பாட்டுச் சத்தம் நின்றது. சட்டென்று துப்பாக்கி வேட்டுச் சத்தம் கேட்டது. வண்டியின் கம்பில் ஒரு குண்டு பாய்ந்தது. செச்சென்களுடைய வசவுகளும் கூக்குரல்களும் கேட்டன. துப்பாக்கி வேட்டுகள் அடுத்தடுத்துக் கேட்டன, குண்டுகள் அடுத்தடுத்து உலர்ந்த புல்லுக்குள் பாய்ந்தன. கஸாக்குகள் இன்னும் திருப்பிச் சுடவில்லை. அவர்களுக்கும் மலைவாசிகளுக்கும் இடையில் ஐந்து தப்படி தூரம் மட்டுமே இருந்தது.

இன்னொரு விநாடி கழிந்தது; கஸாக்குகள் பெரும் கூக்குரலுடன் வண்டியின் இரண்டு பக்கங்களிலிருந்தும் ஓடி வந்தார்கள். லுக்காஷ்கா அவர்களுக்குத் தலைமை தாங்கி ஓடிவந்தான். துப்பாக்கி வேட்டுச் சத்தங்களும் கூச்சல்களும் வலியினால் ஏற்படுகின்ற கதறல்களும் அடங்கிய குழப்பமான பேரோசை மட்டுமே ஒலேனினுக்குக் கேட்டது. அவன் புகையைப் பார்த்தான், இரத்தத்தைப் பார்த்ததாகவும் அவனுக்குத் தோன்றியது. அவன் குதிரையை அங்கேயே விட்டுவிட்டுப் பைத்தியம் பிடித்தவனைப் போல கஸாக்குகளை நோக்கி ஓடினான். அச்சம் அவன் கண்களை மறைத்தது. அங்கே நடந்ததை அவன் சரியாகப் புரிந்துகொள்வதற்கு முன்பே எல்லாம்

முடிந்துவிட்டதென்பது தெளிவாகப் புலப்பட்டது. லுக்காஷ்கா வெளிறிப் போய்க் காயமடைந்திருந்த செச்செனுடைய கைகளை இறுக்கிப் பிடித்துக்கொண்டு, ''அவனைக் கொல்ல வேண்டாம், கொல்ல வேண்டாம்! நான் அவனை உயிருடன் பிடித்துவிட்டேன்!'' என்று கத்திக் கொண்டிருந்தான்.

முன்னர் லுக்காஷ்கா கொன்ற அப்ரேக்கின் உடலை வாங்குவதற்கு வந்த அதே செம்பட்டை முடி செச்சென் அவன். லுக்காஷ்கா அவன் கைகளை முறுக்கிக் கொண்டிருந்தான். திடீரென்று அந்த செச்சென் லுக்காஷ்காவின் பிடியிலிருந்து விலகி தன்னுடைய கைத்துப்பாக்கியினால் சுட்டான். லுக்காஷ்கா கீழே விழுந்தான். அவன் வயிற்றிலிருந்து ரத்தம் பீறிட்டது. அவன் துள்ளினான், ஆனால் இரண்டாவது தடவையாகக் கீழே விழுந்தான். அவன் ருஷ்ய மொழியிலும் தார்த்தாரிய மொழியிலும் திட்டினான். அவன் உடல் மீதும் அவன் உடலின் கீழும் அதிகமாக ரத்தம் வழிந்தது. கஸாக்குகள் அவனுக்கு உதவி செய்வதற்கு ஓடிவந்தார்கள்; அவன் இடுப்பிலிருந்த வாரைக் கழற்றத் தொடங்கினார்கள். அவர்களில் ஒருவனான நஸார்கா மற்றவர்களுடன் சேரும் முன்னர் தன்னுடைய வாளை உறையில் வைப்பதற்கு மிகவும் சிரமப்பட்டான். அந்த வாளின் முனையிலிருந்து ரத்தம் கொட்டிக் கொண்டிருந்தது.

செம்பட்டை முடியும் ஒழுங்காக நறுக்கப்பட்ட மீசையும் கொண்ட மலைவாசிகள் கொல்லப்பட்டு, வெட்டப்பட்டு அங்கே கிடந்தார்கள். அவர்களில் லுக்காஷ்காவைச் சுட்டவன் மட்டுமே மோசமாகக் காயமடைந்திருந்தாலும் உயிரோடிருந்தான். அவன் காயமடைந்த பருந்தைப் போல உடலில் ரத்தம் வழிய (அவனுடைய வலது கண்ணுக்குக் கீழேயிருந்து ரத்தம் வழிந்து கொண்டிருந்தது), பற்களை நறநறவென்று கடித்துக்கொண்டு, முகம் வெளுத்திருக்க, எதற்கும் துணிந்தவனாக தன்னைச் சுற்றிலும் இருப்பவற்றைப் பெரிய, கோபம் நிறைந்த கண்களால் பார்த்துக்கொண்டு குத்துக்காலிட்டு உட்கார்ந்திருந்தான். அவன் இறுதி வரை தன்னைத் தற்காத்துக் கொள்வதற்குத் தயாராக குத்துவாளைக் கையில் பிடித்திருந்தான். அந்த இளம் அதிகாரி அவனைக் கடந்து

போவதைப் போல பக்கத்தில் சென்று சட்டென்று தன்னுடைய கைத்துப்பாக்கியினால் அவன் காதில் சுட்டான். அந்த செச்சென் துள்ளிக்குதிப்பதற்கு முயற்சி செய்தான், ஆனால் அது மிகவும் தாமதமாகிவிட்டது. அவன் கீழே விழுந்தான்.

கஸாக்குகள்—அவர்கள் எல்லோரும் மூச்சிறைத்துக் கொண்டிருந்தனர்—பிணங்களைஇழுத்துக் கொண்டு வந்து போட்டு அவற்றிலிருந்த ஆயுதங்களைச் சேகரித்தார்கள். ஒவ்வொரு செம்பட்டை முடி மலைவாசியும் மனிதனாக இருந்தான்; ஒவ்வொருவனுக்கும் பிரத்யேகமான பாவம் இருந்தது. கஸாக்குகள் லுக்காஷ்காவை வண்டிக்குத் தூக்கிச் சென்றார்கள். அவன் ருஷ்ய மொழியிலும் தார்த்தாரிய மொழியிலும் திட்டிக் கொண்டிருந்தான்.

''ஏய், பிசாசே! உன் கழுத்தை நெறிப்பேன்! என் பிடியிலிருந்து நீ தப்ப முடியாது!..'' என்று அவன் இன்னும் முயன்றவாறு கத்தினான். ஆனால் உடல் பலவீனம் அவனைப் பேசாமலிருக்கும்படி நிர்ப்பந்திப்பதற்கு அதிக நேரமாகவில்லை.

ஒலேனின் குதிரையை ஓட்டிக்கொண்டு வீட்டுக்குத் திரும்பினான். லுக்காஷ்கா செத்துக் கொண்டிருக்கிறான், ஆனால் ஆற்றின் அக்கரையைச் சேர்ந்த ஒரு மருத்துவர் மூலிகைகளைக் கொண்டு அவனைக் குணப்படுத்துவதற்கு ஒத்துக் கொண்டிருக்கிறார் என்று மாலை நேரத்தில் அவனுக்குச் செய்தி கிடைத்தது.

பிணங்கள் கிராம மன்றத்துக்குத் தூக்கிக் கொண்டு வரப்பட்டன. அவற்றைப் பார்ப்பதற்குப் பெண்களும் குழந்தைகளும் கூட்டம் கூட்டமாக விரைந்து வந்துகொண்டிருந்தார்கள்.

ஒலேனின் அந்தி நேரத்தில் திரும்பினான். அன்று அவன் கண்ட காட்சிகள் மனத்திரையில் நெடுநேரம் ஓடின. ஆனால் மாலை வாக்கில் முந்திய மாலைப் பொழுதின் நினைவு அவன் மனத்தில் வெள்ளத்தைப் போலப் பொங்கியெழுந்தது. அவன் சன்னல் வழியாக வெளியே பார்த்தான். அப்பொழுது மார்யானா தன்னுடைய வேலைகளை முடிப்பதற்கு வீட்டிலிருந்து கொட்டகைக்குப் போய்க் கொண்டிருந்தாள். அவளுடைய தாயார் திராட்சைத் தோட்டத்துக்குப் போயிருந்தாள்.

தகப்பனார் கிராம மன்றத்துக்குப் போயிருந்தார். அவள் எல்லா வேலைகளையும் முடிக்கட்டும் என்று ஒலேனின் காத்திருக்கவில்லை; அவளைப் பார்ப்பதற்கு அவள் இருந்த இடத்துக்கே போனான். அவனுக்கு முதுகைக் காட்டியவாறு அவள் வீட்டில் நின்று கொண்டிருந்தாள். அவள் நாணத்தினால் அப்படி நிற்பதாக ஒலேனின் நினைத்துக்கொண்டான்.

''மார்யானா! ஏய், மார்யானா! நான் உள்ளே வரலாமா?''

அவள் திடீரென்று திரும்பினாள். அவளுடைய கண்களில் கண்ணீர் வழிந்த தடங்கள் இருந்தன. அவள் முகத்தில் வசீகரமான சோகம் தெரிந்தது. அவள் அவனை அமைதியாக, வீறார்ந்த முறையில் பார்த்தாள்.

ஒலேனின் மீண்டும் பேசினான்:

''மார்யானா! நான்...''

''நிறுத்து!'' என்றாள் அவள். அவளுடைய முகம் மாறவில்லை. ஆனால் அவளுடைய கண்களில் நீர்த்துளிகள் திரண்டன.

''நீ ஏன் அழுகிறாய்? என்ன விஷயம்?''

''உனக்குத் தெரியாதா?'' என்று அவள் உடைந்த, சோகமான குரலில் பேசினாள். ''கஸாக்குகள் கொல்லப்பட்டு விட்டார்கள். அதுதான் விஷயம்.''

''லுக்காஷ்கா?'' என்று ஒலேனின் கேட்டான்.

''சீ! போய்விடு! உனக்கு என்ன வேண்டும்?''

''மார்யானா!'' என்று ஒலேனின் அவள் பக்கத்தில் வந்து அன்புடன் கூறினான்.

''இந்த உலகத்தில் உன்னுடன் எவ்விதமான தொடர்பையும் நான் ஒருபோதும் விரும்பமாட்டேன்.''

''மார்யானா, அப்படிச் சொல்லாதே'' என்று கெஞ்சினான் ஒலேனின்.

''சீ! போ! வெட்கமில்லாத மிருகமே!'' என்று அவள் காலை ஓங்கி மிதித்து அவனை விரட்ட வருவதைப் போல முன்னே வந்தாள். அவள் முகத்தில் அதிகமான அருவருப்பும் இகழ்ச்சியும் கடுங்கோபமும் வெளிப்பட்டதைப் பார்த்த ஒலேனின் இனி தனக்கு நம்பிக்கை கிடையாது, தனக்கும் இந்தப் பெண்ணுக்கும் இடையிலுள்ள தூரத்தைப் பற்றிக் கடந்து போன நாட்களில் தான்

என்ன நினைத்தானோ, அது உறுதியான உண்மை என்பதை திடீரென்று உணர்ந்தான்.

அவன் பதில் கூறாமல் வெளியேறினான்.

## 42

ஒலேனின் தன்னுடைய அறைக்குத் திரும்பிய பிறகு படுக்கையில் இரண்டு மணி நேரம் அசையாமல் படுத்திருந்தான். பிறகு அவன் படைப்பிரிவின் தலைவரைச் சந்தித்து துணைவர் குழாத்தில் சேருவதற்கு அனுமதி கேட்டான். அவன் யாரையும் சந்தித்து விடைபெற்றுக் கொள்ளவில்லை; வன்யூஷா மூலம் துணை லெப்டினென்டிடம் கணக்கை முடித்துக்கொண்டு ரெஜிமென்ட் முகாமிட்டிருந்த கோட்டைக்குப் போவதற்குத் தயாரிப்புகளைச் செய்தான்.

அவனை வழியனுப்புவதற்கு வந்த ஒரே நபர் யெரோஷ்கா மாமா மட்டுமே. அவர்கள் அறைக்குள் சென்றார்கள், சேர்ந்து குடித்தார்கள், மறுபடியும் சேர்ந்து குடித்தார்கள். அவன் மாஸ்கோவிலிருந்து புறப்பட்ட மாதிரியே கதவுக்கு வெளியே மூன்று குதிரைகள் பூட்டிய வண்டி நிறுத்தப்பட்டிருந்தது. ஆனால் ஒலேனின் அன்று போல இன்று தன்னைப் பற்றி மானசீகமாகத் தொகுத்துரைக்கவில்லை, தன்னுடைய எண்ணங்கள், செயல்கள் எல்லாமே தவறானவை என்று முடிவு செய்யவில்லை. இப்பொழுது அவனுக்கு முன்னால் புதிய வாழ்க்கையின் நம்பிக்கை தோன்றவில்லை. அவன் மார்யானாவை முன்னெப்போதையும் காட்டிலும் அதிகமாகக் காதலித்தான்; ஆனால் அவள் தன்னைக் காதலிப்பது ஒருபோதும் சாத்தியமல்ல என்பதை அவன் இப்பொழுது அறிந்துவிட்டான்.

''சரி, போய்வா, அப்பனே!'' என்றார் யெரோஷ்கா மாமா. ''நீ படையெடுப்பின் பொழுது அறிவுடன் நடந்துகொள். இந்தக் கிழவனின் புத்திமதியைக் கேள். ஒரு தாக்குதல் அல்லது அந்த மாதிரியான ஒன்றில் நீ பங்கெடுக்கும் பொழுது—இங்கே பார், நான் ஒரு—கிழட்டு நரி, எல்லாவற்றையும் பார்த்தவன் துப்பாக்கியினால் தொடர்ந்து சுடுகிறார்கள் என்றால் பல நபர்

கள் இருக்கின்ற கும்பலுக்குப் பக்கத்தில் போகாதே. எப்பொழுதும் அப்படியே நடக்கிறது. உன்னுடைய ஆட்களுக்கு பீதியேற்பட்டால் அவர்கள் ஒன்றாகக் கூடி நிற்கிறார்கள். கும்பலாக இருப்பது பாதுகாப்பு என்று அவர்கள் நினைக்கிறார்கள். ஆனால் அதுதான் எல்லாவற்றிலும் மோசமான வழி. அவர்கள் எப்பொழுதும் கும்பலைப் பார்த்துத்தான் சுடுவார்கள். நான் எப்பொழுதும் முடிந்தவரை மற்றவர்களிடமிருந்து தள்ளிப் போய் விடுவேன். தனியாகப் போய்விடுவேன். அதனால்தான் அவர்கள் ஒருபோதும் என்னைக் காயப்படுத்தவில்லை. என் வாழ்க்கையில் நான் ஏராளமாகப் பார்த்துவிட்டேன்.''

''ஆனால் உங்கள் முதுகில் குண்டைச் சுமக்கவில்லையா?'' என்று அந்த அறையில் சாமான்களைக் கட்டிக் கொண்டிருந்த வன்யூஷா கிண்டலாகக் கேட்டான்.

''அது கஸாக்குகள் செய்த குறும்பினால் ஏற்பட்டது'' என்றார் யெரோஷ்கா.

''கஸாக்குகளா? எப்படி?''

''சொல்கிறேன். நாங்கள் குடித்துக் கொண்டிருந்தோம். வான்கா சித்கின் என்று ஒரு கஸாக்கு. அவன் அதிகமாகக் குடித்து விட்டான். திடீரென்று தன்னுடைய கைத் துப்பாக்கியை எடுத்துச் சுட்டுவிட்டான். குண்டு என் முதுகில் தான் பட்டது.''

''அதிகமாக வலித்ததா?'' என்று ஒலேனின் கேட்டான். ''வன்யூஷா! எல்லாம் தயாராகிவிட்டதா?''

''ஏன் இவ்வளவு அவசரப்படுகிறாய்? இதைக் கொஞ்சம் கேள்... அவன் என்னைச் சுட்ட பொழுது குண்டு எலும்பை நொறுக்கவில்லை, அங்கேயே தங்கிவிட்டது. 'பிசாசே, என்னைக் கொன்றுவிட்டாயே. உனக்குத் தெரியுமா? நீ என்னை என்ன செய்துவிட்டாய்? நான் இந்த முறையில் உன்னிடமிருந்து விடைபெற்றுக்கொள்ளமாட்டேன். ஒரு வாளி ஒயின் கொண்டுவரச் சொல்.'''

''அதிகமாக வலித்ததா?'' என்று ஒலேனின் அவர் சொன்ன கதையைக் காதில் வாங்கிக் கொள்ளாமலேயே இரண்டாவது முறையாகக் கேட்டான்.

''நான் சொல்கிறேன். அவன் ஒரு வாளி ஒயின் கொடுத்தான். நாங்கள் குடித்தோம். இரத்தம் போய்க்

கொண்டே இருந்தது. அந்த அறை முழுவதும் என் ரத்தம். புர்லாக் தாத்தா சொன்னார்: 'அந்த இளைஞனுடைய கதை முடிந்துவிட்டது. அவனுக்கு வோட்கா கொடு. இல்லை என்றால் உனக்குத் தண்டனை அளிப்பதென்று முடிவு செய்வோம்.' அவர்கள் வோட்கா கொண்டு வந்தார்கள். நாங்கள் குடித்தோம், குடித்தோம்...''

''சரி. அதிகமாக வலித்ததா?'' என்று ஒலேனின் மூன்றாவது முறையாகக் கேட்டான்.

''அது கிடக்கட்டும். நீ குறுக்கே பேசாதே. எனக்கு அது பிடிக்காது. நான் கதையை முடிக்கவேண்டும். நாங்கள் குடித்தோம், குடித்தோம். காலை வரை குடித்தோம். பிறகு நான் கட்டை மாதிரித்தான் கணப்பின் மீது விழுந்து தூங்கினேன். மறுநாள் நான் விழித்துக் கொண்ட பொழுது என்னால் நேராக நிற்க முடியவில்லை.''

''ரொம்பவும் வலியாக இருந்ததா?'' என்று ஒலேனின் வற்புறுத்திக் கேட்டான். தான் பல முறை கேட்ட கேள்விக்குக் கடைசியிலாவது பதில் கிடைக்கும் என்று இப்பொழுது நினைத்தான்.

''வலி ஏற்பட்டது என்று நான் சொல்கிறேனே? எனக்கு வலிக்கவில்லை, ஆனால் என்னால் நேராக நிற்க முடியவில்லை, நடக்க முடியவில்லை.''

''அதைத் தாங்கிக்கொண்டு காலத்தை ஓட்டிவிட்டீர்கள், அப்படித்தானே?'' என்று ஒலேனின் சிரிக்காமல் கேட்டான்; அவனுடைய இதயம் அந்த அளவுக்கு கனத்திருந்தது.

''ஆம், அதைத் தாங்கிக்கொண்டு வாழ்ந்து விட்டேன். அந்தக் குண்டு அதே இடத்தில் இன்றுகூட இருக்கிறது. தொட்டுப்பார்.'' அவர் சட்டையை மேலே தூக்கி தன்னுடைய உறுதியான முதுகை, முதுகெலும்புக்குப் பக்கத்தில் குண்டு துளைத்த காயத்தின் வடுவைக் காட்டினார்.

''அது எப்படி அசைகிறது, பார்'' என்றார் அவர். ஒரு விளையாட்டுச் சாமானைப் போல அந்தக் குண்டு அவருக்கு வேடிக்கையாக இருந்தது வெளிப்படையாகத் தெரிந்தது. ''இப்பொழுது அது என்னுடைய பிருஷ்டத்தை நோக்கிக் கீழே இறங்குகிறது, பார்.''

''சரி, லுக்காஷ்கா பிழைத்துக்கொள்வானா?''

''கடவுளுக்குத் தான் தெரியும். மருத்துவருக்குச் சொல்லி அனுப்பியிருக்கிறார்கள். இன்னும் வரவில்லை.''

''எங்கேயிருந்து வரவேண்டும்? கிரோஸ்னயாவிலிருந் தா?''

''இல்லை, அப்பனே. நான் ஜாராக இருந்திருந்தால் உன் ருஷ்ய மருத்துவர்கள் எல்லோரையும் நெடுங்காலத் துக்கு முன்பே தூக்கில் போட்டிருப்பேன். அவர்களுக்கு வெட்டத் தான் தெரியும். அவர்கள் அப்படித் தான் கஸாக்கு பக்லாஷெவின் காலை வெட்டி விட்டார்கள். அவர்கள் முட்டாள்கள். பக்லாஷெவ் இப்பொழுது எதற்கு லாயக்கு? அப்படி இல்லை, அப்பனே! ஆனால் மலைகளில் மருத்துவர்கள் இருக்கிறார்கள். அவர்கள்தான் மருத்து வர்கள். என்னுடைய நண்பன் கிர்ச்சிக் விவகாரம் அப் படித்தான். ஒரு படையெடுப்பின் போது அவனுக்கு மார் பில் காயமேற்பட்டது. உன்னுடைய மருத்துவர்கள் கையை விரித்துவிட்டார்கள்; ஆனால் மலையிலிருந்து சாயபு அவனை குணப்படுத்திவிட்டான். மூலிகை எல் லாம் செய்யும், அப்பனே.''

''இது வெறும் பிதற்றல்'' என்றான் ஒலேனின். ''துணைவர் குழாத்திலிருந்து ஒரு மருத்துவரை அனுப்பி வைக்கட்டுமா?''

''பிதற்றல்!'' என்று கிழவர் அவன் குரலைக் கேலி செய்து பேசினார். ''முட்டாள்! முட்டாள்! பிதற்றல்! மருத்துவரை அனுப்புகிறானாம்! உன்னுடைய மருத்து வர்கள் எக்காலத்திலாவது குணப்படுத்தி யிருந்தால் கஸாக்குகள், செச்சென்கள் கூட மருந்து போட்டுக் கொள்ள உங்களிடமல்லவா வந்திருப்பார்கள். அவர்கள் வருவதில்லையே! உங்களுடைய அதிகாரிகளும் கர்னல் களும் மலைகளிலிருக்கும் மருத்துவர்களுக்குச் சொல்லி விடுகிறார்களே! உங்கள் விஞ்ஞானம் எல்லாமே போலி. உங்கள் சம்பந்தப்பட்ட எல்லாமே போலி.''

ஒலேனின் அவருக்கு பதிலளிக்க முயற்சி செய்யவில் லை. தான் ஒருகாலத்தில் வாழ்ந்த இப்பொழுது திரும் பிக் கொண்டிருக்கின்ற உலகத்தில் எல்லாமே. போலி யாக இருக்கிறது என்னும் அவனுடைய கருத்துடன் அது மிகவும் பொருந்தியிருந்தது.

''சரி. லுக்காஷ்கா எப்படி இருக்கிறான்? அவனைப் போய்ப் பார்த்தீர்களா?'' என்று அவன் கேட்டான்.

''அவன் செத்தவனைப் போலக் கிடக்கிறான். சாப்பாடு, தண்ணி இறங்கவில்லை. வோட்காவை மட்டும் தான் அவன் வாந்தியெடுக்கவில்லை. சரி, அவன் வோட்கா குடிக்க முடிந்தால் ஆபத்தில்லை. ஆனால் அந்தப் பையனுக்காக நான் வருத்தப்படுகிறேன். அவன் நல்ல இளைஞன், ஒரு ஜிகித். என்னைப் போலத்தான். நானும் ஒரு தடவை சாகக் கிடந்தேன். கிழவிகள் எல்லோரும் அழுது புலம்பினார்கள். என் தலை நெருப்பாகச் சுட்டது. அவர்கள் என்னை தெய்வ வடிவங்களுக்குக் கீழே கிடத்தினார்கள். நான் அங்கே கிடந்தபொழுது ஏராளமான முரசடிப்பவர்கள் என் மண்டையில் முரசடிப்பது போல எனக்குத் தோன்றியது. நான் கூச்சல் போடுகிறேன். ஆனால் அவர்கள் இன்னும் வேகமாக அடிக்கிறார்கள்'' என்று சொல்லிக் கிழவர் சிரித்தார். ''பெண்கள் மதகுருவைக் கூட்டிக்கொண்டு வந்தார்கள். அவர்கள் என்னைப் புதைக்க விரும்பினார்கள். 'அவர் சமயநம்பிக்கை இல்லாதவர்களுடன் நெருங்கிப் பழகினார், பெண்களுடன் உறவு வைத்திருந்தார், மற்றவர்களுடைய ஆன்மாக்களைக் கெடுத்துவிட்டார், நோன்புக் காலத்தில் இறைச்சி உண்டார், பலலாய்க்கா வாசிப்பார். அவருக்குப் பாவமன்னிப்பு அருளுங்கள்' என்றார்கள். என்னுடைய பாவச் செயல்களை அவரிடம் சொல்ல ஆரம்பித்தேன். 'நான் ஒரு பாவி' என்றேன். மதகுரு என்னுடைய பாவச் செயல்களைப் பற்றிக் கேட்டார். நான் மறுபடியும் சொன்னேன்: 'நான் ஒரு பாவி'. அவர் பலலாய்க்கவைப் பற்றி என்னிடம் கேட்க ஆரம்பித்தார். 'அந்தக் கெட்ட வாத்தியத்தை எங்கே வைத்திருக்கிறாய்?' என்று அவர் கேட்டார். 'என்னிடம் சொல்லிவிட்டு அதை உடைத்துவிடு' என்றார். 'என்னிடம் இல்லை' என்று பதிலளித்தேன். கொட்டகையில் உள்ள வலைக்குள் அதை ஒளித்து வைத்திருந்தேன். அவர்களால் அதைக் கண்டுபிடிக்க முடியாது என்பது எனக்குத் தெரியும். ஆகவே அவர்கள் என்னைக் கைவிட்டார்கள். எப்படியோ சமாளித்தேன். அந்த பலலாய்க்காவில் எப்படி வாசிப்பேன், தெரியுமா?.. நான் இப்பொழுது சொல்லு

கின்ற...'' அவர் மேலும் பேசினார். ''என்னுடைய வார்த்தைகளை கவனமாகக் கேள். கும்பலை விட்டு எவ்வளவு போக முடியுமோ அவ்வளவு போய்விடு, இல் லையென்றால் அவர்கள் உன்னைச் சுடுவது சாத்தியமே. நான் உனக்காக வருத்தப்படுகிறேன், இது உண்மை. நீ நன்றாகக் குடிக்கிறாய், எனக்கு உன்மீது பிரியம். உன்னுடைய ஆட்கள் எப்பொழுதும் குன்றின் மீது குதிரைச் சவாரி செய்ய விரும்புகிறார்கள். ஒருசமயம் ருஷ்யாவிலிருந்து வந்த ஒருவன் இங்கே இருந்தான். எப்பொழுதும் குதிரைச் சவாரி செய்து குன்றுக்குப் போய்க் கொண்டிருப்பான். ஒரு குன்றைப் பார்த்ததுமே அதன் உச்சிக்குப் போவான்; அங்கே போனதுமே எவ் வளவு மகிழ்ச்சி அடைவான், தெரியுமா? ஆனால் ஒரு தடவை செச்சென் அவனைப் பார்த்தான், அவனைக் குறிபார்த்து சுட்டுக்கொன்றான். துப்பாக்கியை நிலை காலில் நிறுத்திச் சுடுகின்ற பொழுது செச்சென்களின் குறி தப்பாது! என்னைக் காட்டிலும் சிறந்த திறமை உடை யவர்கள். அப்படி மட்டமாக அவனைக் கொன்றது மிக வும் மோசம். நான் உன்னுடைய ஆட்களைப் பார்த்து ஆச்சரியப்படுவேன். என்ன முட்டாள்தனம்!'' என்று அந் தக் கிழவர் தலையை ஆட்டிக்கொண்டு கூறினார். ''ஆக, ஒரு பக்கமாகப் போய்த் தனியாக நின்று கொள்ள வேண் டும். சத்தியமாக, அதுதான் சரி. எதிரி உன்னைக் கவ னிக்க மாட்டான். ஆக, நீ நிச்சயமாக அப்படி நடந்து கொள்.''

''மிகவும் நன்றி. நான் போய்வருகிறேன், மாமா! கடவுள் விரும்பினால் நாம் மறுபடியும் சந்திப்போம்'' என்றான் ஒலேனின். அவன் எழுந்து நின்று வாயிலுக்குப் புறப்பட்டான்.

அந்தக் கிழவர் இன்னும் தளத்தின் மீது உட்கார்ந் திருந்தார்.

''நீ விடைபெற்றுக் கொள்கின்ற முறையா இது? முட் டாள்! முட்டாள்!'' என்றார். ''ஆ! நீங்களெல்லாம் என்ன மனுசங்களய்யா! இரண்டு பேரும் ஒரு வருஷம் முழுவதும் பழகியிருக்கிறோம். 'போய்வருகிறேன்' என் கிறாய். அத்துடன் முடிந்துவிட்டதா! எனக்கு உன்மீது

மிகவும் பிரியம். உனக்காக எவ்வளவு வருத்தப்படுகிறேன் என்று தெரியுமா? நீ தனிமரம், தனிமரம்! உன்னை இவர்களுக்குப் பிடிக்காது. உன்னை நினைத்துக்கொண்டு நான் தூக்கமில்லாமல் தவிப்பேன், நான் உனக்காக வருத்தப்படுகிறேன்.

அன்புச் சகோதரனே!
அந்நிய நாட்டில்
வாழ்க்கை நடத்துவது
மெத்தக் கடினம்

என்பது பாட்டு. உன் நிலையும் அது தான்.''

''சரி, போய்வருகிறேன்'' என்றான் ஒலேனின் மறுபடியும்.

அந்தக் கிழவர் எழுந்து அவனிடம் கையை நீட்டினார். அவன் அவருடைய கையைப் பிடித்துக் குலுக்கப் போகின்ற சமயத்தில்.

''உன் முகம், உன் முகத்தைக் காட்டு'' என்றார் யெரோஷ்கா.

அந்தக் கிழவர் தன்னுடைய தடிமனான கைகளினால் அவன் தலையைப் பிடித்துத் தன்னுடைய ஈர உதடுகளால் மீசை உரச, அவனை மூன்று முறை முத்தமிட்டார். அவர் கண்களிலிருந்து கண்ணீர்த் துளிகள் விழுந்தன.

''எனக்கு உன்னைப் பிடிக்கிறது. போய்வா!''

ஒலேனின் வண்டியில் ஏறி உட்கார்ந்தான்.

''என்ன இது? இப்படிப் புறப்படலாமா? உன்னை நினைவு வைத்துக் கொள்வதற்கு எனக்கு ஏதாவது கொடுத்துவிட்டுப் போ, அப்பனே. உன் துப்பாக்கியை எனக்குக் கொடு. உன்னிடம்தான் இரண்டு துப்பாக்கிகள் இருக்கின்றனவே'' என்று சொல்லிவிட்டு அந்தக் கிழவர் உண்மையாகவே குலுங்கி அழுதார்.

ஒலேனின் ஒரு துப்பாக்கியை எடுத்து அவரிடம் கொடுத்தான்.

''இந்தக் கிழவனுக்கு எவ்வளவு சாமான்கள் கொடுத்திருக்கிறீர்கள்?'' என்று வன்யூஷா முணுமுணுத்தான். ''இன்னும் அவனுக்குப் போதவில்லையாக்கும். கிழட்டுப் பிச்சைக்காரன்! இவர்களை நம்ப முடியாது'' என்று

சொல்லியபடியே அவன் மேல்கோட்டினால் தன் உடலைப் போர்த்திக் கொண்டு வண்டியின் முன்பகுதியில் உட்கார்ந்தான்.

''ஏ, பன்றி! நீ பேசாமலிரு!'' என்று அந்தக் கிழர்வர் சிரித்துக்கொண்டு கூறினார். ''நீ ஒரு கஞ்சன்!''

மார்யானா கொட்டகையிலிருந்து வெளியே வந்தாள். அவள் மூன்று குதிரைகள் பூட்டிய வண்டியை அலட்சியமாகப் பார்த்தாள். அவர்களை நோக்கி வணங்கிவிட்டு அவள் வீட்டுக்குள் சென்றாள்.

''அழகான பெண்!'' என்று வன்யூஷா கண்ணைச் சிமிட்டிக்கொண்டு பிரெஞ்சு மொழியில் கூறினான். பிறகு அவன் அசட்டுத்தனமாகச் சிரித்தான்.

''வண்டியை ஓட்டு!'' என்று ஒலேனின் கோபத்துடன் கூறினான்.

''போய்வா, அப்பனே! போய்வா! உன்னை நான் மறக்கமாட்டேன்!'' என்று யெரோஷ்கா உரக்கக் கத்தினார்.

ஒலேனின் பின்னால் திரும்பிப் பார்த்தான். யெரோஷ்கா மாமா மார்யானாவுடன் பேசிக் கொண்டிருந்தார். அவர் அநேகமாக அவருடைய விவகாரங்களைப் பற்றிப் பேசியிருக்கலாம். அவர்கள் அவன் சென்ற திசையில் திரும்பிப் பார்க்கவில்லை.

***1853—1863***



## வாசக நண்பர்களுக்கு

*இந்தப் புத்தகத்தைப் பற்றியும் இதன் தயாரிப்பைப் பற்றியும் தங்கள் கருத்தை அறியவும், அடுத்துவரும் வெளியீடுகள் சம்பந்தமாகத் தங்கள் ஆலோசனைகளை வரவேற்கவும்* ராதுகா பதிப்பகம் *மகிழ்வுடன் காத்திருக்கிறது. கடிதங்களைத் தயை செய்து கீழ்வரும் முகவரிக்கு அனுப்புங்கள்:* Raduga Publishers, 17, Zubovsky Boulevard, Moscow, 119859, USSR.

**விற்பனையாளர்கள்**
**நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்**

**தலைமை அலுவலகம்**
*41, பி.சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், சென்னை—600098*

**ஷோ-ரூம்**
*136, மவுண்ட் ரோடு, சென்னை—600002*

**கிளைகள்**
*80, மேலக் கோபுர வீதி, மதுரை—625001*
*87/89, ஒப்பணக்கார தெரு, கோயம்பத்தூர்—641001*
*சிங்காரத் தோப்பு, திருச்சிராப்பள்ளி—620008*
*செர்ரி ரோடு, சேலம்—636001*
*1, ஏ. திருவனந்தபுரம் சாலை,*
*வண்ணாரப்பேட்டை, திருநெல்வேலி—627003*

**விற்பனை நிலையம்**
*66, கீழராஜ வீதி, தஞ்சாவூர்*

# லேவ் தல்ஸ்தோய்



# கஸாக்குகள்

மாபெரும் ருஷ்ய எழுத்தாளரான லேவ் தல்ஸ்தோய் (1828—1910) காகசசில் நடைபெற்ற இராணுவ நடவடிக்கையில் பங்கெடுத்தார். அந்த அனுபவம் 'கஸாக்குகள்' (1853—1863) என்னும் இந்த நாவலில் பிரதிபலிக்கிறது. ஒரு மனிதனின் உண்மையான மதிப்பு, சாதாரண மக்களுடைய வாழ்க்கையில் காணப்படுகின்ற அழகும் தூய்மையும், பிரபுத்துவ சமூகத்தின் போலித் தன்மையும் இரட்டைவேடமும் — இந்த நாவலின் கதாநாயகனான ஒலேனின் அவற்றைக் கைவிடுகிறான்—பற்றித் தன்னுடைய உள்ளார்ந்த கருத்துக்களை தல்ஸ்தோய் வாசகர்களுடன் பகிர்ந்துகொள்கிறார்.

ISBN 5-05-002330-0